# புதுயுகம்

அனைத்து இந்தியத்
தமிழ் எழுத்தாளர்கள் சங்க
உறுப்பினர்களின் சிறுகதைகள்
தொகுதி – 1

அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கம்,
வளர்ச்சி நிதிக்காக

**வெளியிட்டவர்:**
**மகாகவி பதிப்பகம்**
3, ஜெயசங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை—600 033.



# புதுயுகம்

(அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்க
உறுப்பினர்களின் சிறுகதைகள்)

## தொகுதி-1

தொகுப்பு, தயாரிப்பு :

**கலைமாமணி விக்கிரமன்**

மகாகலை
பதிப்பகம்

3, ஜெய்சங்கர் தெரு,
மேற்கு மாம்பலம் ❑ சென்னை - 600 033.

# நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | புது யுகம்<br>(சிறுகதைத் தொகுப்பு) |
| ஆசிரியர் பெயர் | : | 31 சிறுகதைகளின் தொகுப்பு |
| தயாரிப்பு | : | கலைமாமணி விக்கிரமன் |
| மொழி | : | தமிழ் |
| முதற்பதிப்பு | : | 2001 |
| பக்கங்கள் | : | 378 + 28 |
| வெளியீடு | : | மகாகவி பதிப்பகம்<br>3, ஜெய்சங்கர் தெரு<br>மேற்கு மாம்பலம்<br>சென்னை - 600033 |
| தாள் | : | 15.5 kg மேப் லித்தோ |
| மேலட்டை ஓவியம் | : | வே. கருணாநிதி |
| நூலின் அளவு | : | கிரவுன் 1X 8 |
| பைண்டிங் | : | சாதா பைண்டு |

## விலை : ரூ. 100.00

| | | |
|---|---|---|
| ஒளியச்சுக் கோப்பு | : | ஸ்கில் கம்ப்யூட்டர்ஸ்<br>எல்டாம்ஸ் ரோடு,<br>சென்னை - 600 018. |
| அச்சு | : | சரவணன் ஆப்செட்<br>பிரிண்டர்ஸ்<br>சென்னை - 600 081. |

# புதுயுகம்

## பொருளடக்கம்

❑ ❑ ❑

# முதல் மரியாதை

-மகேந்திரன்

திரைப்பட இயக்குநர்

'புதுயுகம்' முதற் பதிப்பின் 31 சிறுகதைகளின் எழுத்தாண்மை கொண்ட எனது மதிப்பிற்குரிய எழுத்து உளிகளின் கைகளுக்கும், சிந்தனை வார்ப்புக்கும் - இந்த எளிய வாசகனின் முதல் மரியாதையை அர்ப்பணிக்கிறேன்.

அனைத்து இந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கத்தின் தலைவர் மேன்மைக்குரிய திரு. விக்கிரமன் அவர்களுக்கு- என் தனிப்பட்ட வாத்சல்யத்துடன் கூடிய நன்றி... காரணம்?

'கூத்தாடி' என்று வர்ணிக்கப்படும் சினிமாச் சந்தையில் உலவும் எனக்கு ''புதுயுகம்'' சிறுகதைத் தொகுப்பைப் பற்றி உங்கள் உணர்வுகளைச் சொல்லுங்கள்'' என்று இனிமைத் தமிழாய் என்னைக் கேட்டுக்கொண்டார்... இது எனக்குக் கிடைத்த மிகப்பெரிய தமிழின் ஆசீர்வாதம். திரு. விக்கிரமன் அவர்களின் வேண்டுகோள். ஒரு மாதத்தின் தேதிகள் 31 போல- இந்த மாதத்தின் ஒவ்வொரு நாளையும் நேசிக்கிற மனிதனாய் இந்த 31 சிறுகதைகளையும் மனதாரச் சுவாசித்தேன். எனக்கு 'வாசகன்' என்ற சராசரி அந்தஸ்தை வைத்து 31 கதைகளைப் பற்றியும் விளாவரியாக என் ரசனைக்கேற்ப எழுத ஆசை முந்துகிறது... ஆனால் தனித்தனியாய் ஒவ்வொரு கதைகளின் கூர்மைச் சிறப்பு குறித்து எழுதுவது இயலாது (பக்கங்கள் அதிகமாகும்) என்று நான் நினைப்பதை மன்னியுங்கள்...

இந்தச் சிறுகதைத் தொகுப்பில் பெரும்பான்மையான கதைகள் நம் குடும்பத்தின் முதியோர் பற்றிய பலவிதமான

எண்ண வர்ணனைகள் - நாளைக்கு நடக்கப்போகும் இன்றைய இனிய தலைமுறைக்கு ஓர் உள்ளார்ந்த வெளிப்பாடு; உன்னத வெளிச்சம்.

இந்தத் தொகுப்பின் கதைகளை- கதைகளின் உணர்வுகளை- நாடி நரம்புகளை - நான் உள்வாங்கி சந்தோஷித்ததை ஓர் எளிமையான உதாரணம் மூலம் உங்களிடம் பங்கிட்டுக் கொள்ள அனுமதியுங்கள்...

'சென்னை' என்ற தொழிற்சாலை இறுக்கத்திலிருந்து விடுபட்டு சில நாள்கள் காவேரித்தாய் தாலாட்டும் என் சொந்த கிராமத்திற்குச் சென்று... அந்தக் காவேரியில் மனமும் உடம்பும் குளிரக் குளிரக் குளித்து தலை துவட்டும் சம்பிரதாயத்தையும் மறந்தவனாய்- ஆற்றோர மணலில் 'க்குச்' 'க்குச்' என்று தடம் பதித்துச் சென்று அடுக்களையில் என் தாயானவள் எனக்கு எடுத்து வைக்கும் பதார்த்தங்களைப் புசித்து மகிழ்ந்து சாப்பிடும் தருணங்கள் போலத்தான் இந்த முப்பத்தொரு சிறுகதை களையும் படித்துச சுவைத்தபோது சிலிர்த்தேன்...

இந்தக் கதைகளில் முக்கியச் சிறப்பு முத்தாய்ப்பான மகுடம் எது?

எந்த எழுத்தாளரும் "வார்த்தைச் செலவாளிகள்" அல்ல என்பது உண்மைதான்.. இந்தக் கதைகளை எழுதியுள்ள எல்லாரும் வயசு வித்தியாசம் கொண்டவர்களாய் இருக்கலாம். ஆனால், அர்த்தமுள்ள சமூக சிந்தனையோடு அவர்கள் ஒருமித்த கருத்துடையவர்களாய் இருக்கின்றனர். அதிலும் யதார்த்தம். எல்லாக் கதைகளிலும் முழு வீச்சில் இருக்கிறது. இப்படி எழுதும் போது இந்தத் தொகுதியின் சிறுகதைகளைப் படிக்கப் போகின்ற உங்களுக்கு முன் கூட்டியே கதைகளின் வடிவங்களைச் சொல்லிவிட்டால் கதைகள் பற்றிய உங்கள் எதிர்பார்ப்பை நான் சிதறடித்து விடுவேன் என்ற அச்சம்.

அதே வேளையில் - இந்தக் கதைகளில் நான் படித்து

மாய்ந்து போன சில வாக்கியங்களை - கருத்துகளை மட்டும் என்னால் சொல்லாமல் இருக்க முடியவில்லை. அந்த அற்புத சொல்லாட்சி மிக்க சொற்றொடர்களுக்குச் சொந்தமானவர்கள் யார்? என்பதை நீங்கள் படிக்கும்போது தெரிந்து கொள்ளுங்கள். இதோ சில உதாரணங்கள் மட்டும்.

*"யாருக்கு வாசிக்கிறேன்னு தெரியலை... வாசித்தால் கேக்குறதுக்கும் ஆளில்லை... வித்தைக்கு விளக்கு ஏத்தணும்னு வர்றவனுக்கும் மனசு சுத்தம் இல்லை. வருமானம், விளம்பரம், கார்...பங்களான்னு நாய்ப்பறப்பு... கேக்குறவ னுக்கும் புத்தி சுத்தமில்லை. கள்ள நெருப்பை சூர்யப் பிரகாசம்னு பூதக்கண்ணாடி விளம்பரம்"* இப்படியொரு *சுத்திகரிக்கப்பட்ட ஓர் ஆத்மாவின் மெய்யான கண்ணீர்.*

"உள்ளே வித்தை நிறைந்து தளும்புகிறது. வெளிப்போக்கின்றி புழுங்கி அதுவே சுமையாக அழுந்திக் கொண்டிருக்கிறது. அதற்கு மரியாதை இல்லை... காமா சோமா என்று ராகத்தை ஒப்பேற்றி மக்களுக்குப் பிரியமான சில குட்டிக்கரணங்கள் போட்டுவிட்டால் அவன் மகா வித்வான். ஓர் எல்லைக்கு மேல் புகழ் போய்விட்டால் அதைத் தலை கிறுகிறுக்குமளவு உயர உயர நான் முந்தி நீ முந்தி என்ற பட்டம் பறக்க விடுவதுதான் ஒரு மரபாகப் போய்விட்டது"

இதுவும் அந்த எழுத்தாள ஆத்மாவின் ஆதங்கம்தான்.

சரி...

இங்கே இந்த முதியவரின் இதய அன்பைப் பாருங்கள். அன்பு மனைவியிடம் சொல்கிறார்...

"இனி உனக்கு நான் எந்தத் தொல்லையும் தரமாட்டேன் ஜானு!... உனக்கு ஒய்வு பெறுகிற வயசாயிடுச்சு... அந்த வயதை மீறி நாம் பகிர்ந்து கொள்கிற ஒரே விஷயம் அன்பாகத்தான் இருக்கணும் முதலில் உன்னைப் புரிஞ்சிக்கிறேன்... பிறகு மற்றவற்றைப் புரிஞ்சுக்க முயற்சி பண்றேன்"

முதிர் வயதில் கணவன் மனைவியின் இந்தப் புரிதல் ஒவ்வொரு குடும்பத்து வாசகனுக்கும் இளைஞனுக்கும் ஒரு மந்திரம்... ஞானப்பாடம்!

இன்னொரு கதையின் ஆசிரியர்,

''நாம் நமது பிள்ளைகளுக்கு 'இ' ஆங்கிலத்தில் 'I' (i for indian) என்று பெயருக்கு முன்னால் இனிஷியல் போட்டுக் கொள்ள வேண்டும் என்று குமுறித் தவிக்கிறார். தேசப்பற்றை உணர்த்த. அடுத்து - ஜாங்கிரியின் சுவையில் எத்தனை மனிதம் பூத்துக் குலுங்குகிறது! அநாதை உள்ளத்தின் அற்புதச் சித்திரம்.

அடுத்து வருகிறது ஓர் ஆன்மப் புயல்- தமிழ்ச் சூறாவளி. ''திருவள்ளுவர் தரும் வாழ்க்கை விளக்கம் எழுதிய சங்குப்புலவர் தூணின் மீது சாய்ந்தபடி இருந்தார். அவர் கண்களிலிருந்து அருவிபோல நீர்...'' அது சங்குப்புலவரின் கண்ணீர் மட்டுமில்லை. தமிழைத் தாய்ப்பாலாகக் கொண்ட அத்தனை பேருடைய கண்ணீரும்தான்... தமிழ் சுவையா? எழுதும் முறை சுவையா?- அவரைத் தமிழ் வாழ்த்தும்.

மரியாதைக்குரியவர்களை மதிப்பது மனித நாகரிகம். அதற்குச் சாட்சியாக இதில் வரும் சிறுகதையின் ஆசிரியர் ஞானத்தில் தாண்டவமாடும் பெரியவர் சொன்னதை, தன் கதைக் கருவுக்கு ஏற்ற வகையில் மேற்கோள் காட்டுகிறார். இப்படி!

''மரமே அறிவும் இலைகளில் எவ்வெவ் இலைகளை உதிர்க்கலாம் அன்றைக்கென்று.''

இதில் வாசகன் என்ற முறையிலே எனக்குப் புரியாத ஒரு சந்தேகம் வந்தது. ''இலை உதிர்வதை இலை தீர்மானிக்கிறதா? மரம் தீர்மானிக்கிறதா? காலம் நிச்சயிக்கிறதா? விளையாடும் குழந்தையின் கைகள் தீர்மானிக்கிறதா? நான் மாணவ வாசகன் சந்தேகம் கேட்பது தவறில்லையே?

ஒரு கதையின் உள்ளடக்கம் - கதைக் கருத்தின் மதிப்பீடு எழுத்தாளனின் வார்த்தை ஜாலங்களால் மட்டுமே நியாயப் படுத்தும் விதம்- ''கற்பை விற்பது கூட நியாயமே'' என்று கூறுவது மனசைச் சஞ்சலப்படுத்துகிறது. ''இல்லை இதுதான் தாம்பத்திய வாழ்க்கை பற்றிய என் மதிப்பீடு'' என அந்தக் கதையின் ஆசிரியர் பதில் சொல்ல முனைந்தால் ஆட்சேபிக்க எனக்குத் தகுதி இல்லை; உரிமையும் இல்லை.

அதே சமயம் ஒரு கதையில்-

''நான் அவ தம்பி'' என்றான் மாது உணர்ச்சியோடு.''என்று முடிகிறது. அதைப்படித்தபோது நான் கலங்கிவிட்டேன்... அப்பேர்ப்பட்ட பெண்களுக்கு நாம் எல்லாம் தம்பியாய் அண்ணனாய் இருக்கக் கூடாதா? என்ற தவிப்பு ஏற்படுவதைத் தவிர்க்க முடியவில்லை. ஒரு கதையில் வளைந்த மூங்கில் பற்றிய சிந்தனை யோசிக்க வேண்டியதுதான்... ஆனால் ஏற்றுக் கொள்ளும் மனோபாவம் வாசகனுக்கு வாசகன் வேறுபடும்.

''சரயுவின் வெள்ளம்'' காவு வாங்கிய மகாபுருஷனையும் அவளது இளவலையும் தனக்குள் வாங்கிய கதை படித்தபோது சிலிர்த்தது. இப்படியொரு இராமாயண முடிவும் இதிகாசத்தின் இன்னொரு வார்ப்பில் சொல்லப்பட்டிருக்கிறதா? என்று பலரையும் கேட்டு விசாரித்து அறிந்தபொழுது திகைத்து விட்டேன். இராமபிரானின் மேன்மையான சிந்தனை- இராமாயணத்தையும் வென்றுவிடுகிறது. அடுத்து -பழமுதிர் சோலையை முதிர்பழச் சோலையாக வளர்த்திருக்கிறார், இன்னோர் ஆசிரியர். ***''இளைய தலைமுறையினர் இன்றைக்கே முதியவர்கள் இல்லத்தில் சேர்க்கப்படும் சட்டம் வந்தால் -ஜாதி மதம் எல்லாமே நிலைகுலைந்து நீர்த்துப் போகும்.''*** என்பதை சாட்டை அடியாய்த் தந்திருக்கிறார்... இளைஞர்களே... இன்றே முதியோர் இல்லத்திலோ முதியோர் உள்ளத்திலோ சேர்ந்து விடுங்கள். அதுதான் தர்மம்!

***"தீபாவளி... பொங்கல், என்று விசேடமான நாளைக் கொண்டாடுகிறவர்கள் நல்லவர்களைக் கொண்டாடு வதில்லை"*** என்று ஒரு சிறுகதையில் அதன் ஆசிரியர் சொல்லியிருப்பது இந்த நாட்டுக்கு மட்டுமன்று. எல்லா நாடுகளுக்கும் சொல்லியிருக்கிற ஒரு தமிழனின் தனி ஆவர்த்தனம்... தனித்துவம்!

இந்தச் சிறுகதை எழுத்தாளர்கள் வெறும் வார்த்தைச் செலவாளிகள் அல்லர் என்று தொடக்கத்தில் குறிப்பிட்டே நான் அவர்களைப் பற்றி இவ்வளவு எழுதிவிட்டேன். இன்னும் எழுதலாமே என்று பேராசை இருக்கிறது. ஆனால் மேற்கொண்டு கதைகளில் படிக்கப் போகும் உங்களைத் தாமதப்படுத்தவோ தர்மசங்கடப்படுத்தவோ நான் தயாராக இல்லை.

'கலைமாமணி விக்கிரமன்' அவர்கள் கதை மாமணி என்பது தமிழ் உலகம் அறிந்த ஒன்று.. இந்த மாமனிதர் தன் தமிழின் பிள்ளைகளை நேசிப்பது போல, பேரப்பிள்ளைகளைக் கொஞ்சுவது போல தமிழைச் சுவாசிப்பதுபோல பலதரப்பட்ட தமிழ்ச்சிறுகதைஎழுத்தாளர்களையும் இங்கே நம்மிடம் புதுயுகம் மூலமாக அறிமுகம் செய்திருக்கிறார். அடுத்த சிறுகதைத் தொகுதி மூலமாக இந்த மகாமனிதர் இன்னும் எத்தனை எத்தனை தமிழ் எழுத்தாளர்களை நமக்கு அறிமுகம் செய்விக்கப் போகிறார் என்ற ஆவலுடன் தமிழ் அறிந்த அனைவருமே காத்திருக் கிறோம். அதே பொழுது என் ஏக்கம் ஒன்று - 'இந்தக் கதைகளைப் படித்துப் பாராட்ட நம் அருமை புதுமைப்பித்தன் இன்று நம்மிடம் இல்லையே. ***அவரது ஆத்மா இவர்களை வாழ்த்தும் என்று பாமரனாய் யாசிக்கிறேன். பிராத்திக்கிறேன்.***

***மீண்டும் என் முதல் மரியாதையுடன் என்பதுதான்.***

வாசகன்

மகேந்திரன்

# கதைகளுடன் ஒரு பார்வை...

இராம.குருநாதன்,
பச்சையப்பன் கல்லூரி, சென்னை

நேர்த்தியான கலை வடிவம் சிறுகதை. சமுதாய நிகழ்வுகளைச் செம்மையாகச் செதுக்கும் எழுத்தே இலக்கியமாகிறது. சிறுகதை என்ற இலக்கிய வடிவத்தை அழகுறச் சிற்பமாகக் காட்டும் படைப்பாளர்கள், கைதேர்ந்தவர்கள்.

இத்தொகுதியில் அடங்கியுள்ள கதைகளை எழுதியவர்கள் நன்றாகக் கதை சொல்லத் தெரிந்தவர்கள். கதைகள் படிப்பதற்கேற்றதாக இருக்க வேண்டும் என்பதோடு, புரிவதற்கும் எளிமையாக இருக்க வேண்டும் என்றெண்ணிச் சிரத்தையோடு செயல்பட்டுள்ளனர். பெரும்பாலான கதைகள் குடும்பப் பாங்குடையனவாய் உள்ளன. தனி மனிதன், குடும்பம் ஆகிய ஈரெல்லைகளுக்கு உட்பட்ட சமுதாயக் களங்களை மையமாக வைத்து எழுதப்பட்ட கதைகள் இவை. அன்றாட நிகழ்ச்சிகளை ஆழமாக அறிந்து அவற்றை உள்வாங்கிச் சிறுகதை என்னும் வடிவச் சிமிழுக்குள் அடக்கியுள்ள படைப்பாளர் ஒவ்வொருவரும் தத்தமது கோணத்தில் கருத்துகளை வெளிப்படுத்தியுள்ளனர்.

வயோதிகம், பெண்ணியம் சார்ந்த கதைகள் இந்நூலில் கூடுதலாகவுள்ளன. கிரிக்கெட்டில் ஒரு கார்கில், முதிர் பழச்சோலை, மகாமனிதரின் கதை, நான் மரம், நீ இலை, புது வெளிச்சம் முதலியன வயோதிக உணர்வுகளின் எதிரொலியாக விளங்குவன.

மூத்தமகன் கார்கில் எல்லையில் போர் புரியவும், இளையவன் கிரிக்கெட் வீரனாகப் போட்டியில் கலந்து கொள்ளவும் இருக்கும்படியான சூழ்நிலையில், பன்னிரண்டு மணி நேரத்தில் உயிருக்குக் கெடு விதிக்கப்பட்ட தந்தையின் மனநிலை அவரவர் கடமையில் அவரவர் சரிவர இருக்க வேண்டும் என்பதை வெளிப்படுத்தல்; (கிரிக்கெட்டில் ஒரு கார்கில்) தனக்கு நேரமின்மையால், தன் குழந்தையை வளர்க்கத் தன்னை வளர்த்து நல்லபடியாக்கிய தன்னுடைய தாத்தாவைப் போல், முதியவர் ஒருவரைத் தத்தெடுக்க எண்ணும் மனோஜ், முதியோர் இல்லத்தில் ஆறுமுகம் என்பவரைத் தெரிவு செய்கிறான். அவர் தன் மறுப்பை ஓர் உரையாடல் வழியே தம் நண்பனுக்கு உணர்த்துகிறார். ஆறுமுகம் சொன்ன வார்த்தைகளை ஒற்றுக் கேட்ட மனோஜ் உண்மை உணர்தல் (முதிர்பழச் சோலை); தொண்ணூறு வயதைக் கடந்த நிலையில் அமரராகிவிட்டவர், தம் தந்தையின் கொடுமையால், கற்பகத்திற்கு தான் இழைத்த பாவத்தைப் பாவ மன்னிப்புக் கடிதம் மூலம் குடும்பம் உணரும் நிலை (மகாமனிதரின் கதை); இளைஞனாகிய டாக்டர் நிரஞ்சன் தன் மறுமணத்துக்கு உடன்படும் நிலையில் சிங்கப்பூரில் எதிர்பாராமல் மரணம் அடைகிறான்; இளைஞனின் ஆராய்ச்சித் தலைப்பே, வயதானவர்களின் மரணத்தைப் பற்றியதுதான். அவன் தந்தை இதனை எண்ணும் நிலை. மரம் நிற்பதும் இலை உதிர்வதும் முரண்பாடான முடிவுகள் அல்லவா? (நான் மரம், நீ இலை); எங்குப் போனாலும் வயோதிகன் என்று கூறி ஒதுக்கிவிடும் சூழ்நிலையில், வீட்டிலும் வெளியிலுமாக வயோதிகர்க்குக் கட்டுப்பாடு விதிக்கப் படுகிறது. இருட்டில் இருப்பது போன்ற உணர்வு. அதிலிருந்து மீள்வதற்கு வழி கிடைக்கிறது

அவருக்கு. குருடான கல்லூரி மாணவர்களுக்கு அவர்களின் பாடத்தைப் படித்துக் காட்டுவதில் அவருக்குப் புது வெளிச்சம் கிடைத்தல் (புது வெளிச்சம்).

- இவ்வாறு சூழ்நிலைகளைத் தேர்ந்து கொண்டு அதற் காகக் கதைக் களங்களில் உலா வந்துள்ளனர் படைப் பாளர்கள். இன்றைய நடுத்தர வர்க்கங்களில் காணப்படும் போக்குகளில் வயோதிகம் ஒரு சிக்கலாகி இருப்பதை அறிவதற்கு இவை போன்ற கதைகள் உறுதுணையாவன.

பெண்ணியம் பற்றிய கதைக் களங்களில் பழமையும் புதுமையும் பளிச்சிடுகின்றன. கவரிமான் கணவரே, சரயு, பார்வையின் மறுபக்கம், மகளே மகளே, துணையா? மதர்ஸ் டே, அவளுக்கும் உரிமை உண்டு, ஊருக்கெல்லாம் ஒரு பெண், சுந்தரர்... சுந்தரி முதலியவை இத்தகையன. நோயில் படுத்த கணவனைக் காப்பாற்றிய சாந்தி, அதற்கு விலையாக டாக்டரிடம் தன் கற்பைப் பறிகொடுத்தாள். இதனைக் கணவனிடம் கூறப்போய் மானங்கெட்ட பின்பு அவள் உயிர்வாழ வேண்டுமா என்கிறான். அவளோ, மானத்தை விற்றுப் பெற்ற பணத்திலே கணவன் உயிர் வாழ்வது பெரிய மானங்கெட்ட செயல் என்று கூறிக் கணவனுக்கு மூட்டைப்பூச்சி மருந்தைத் தருமளவுக்குச் சென்றுவிடுவது தீவிரப் பெண்ணியம்! (கவரிமான் கணவரே); சரயு நதி இராமனை நோக்கி ஆன்ம விசாரணை நடத்துகிறது. புதுமைப் பித்தனைப் போலச் சாப விமோசனம் இங்கு இல்லை. இது இராம விமோசனம்! இராம நாமத்தால் சரயு நதி தன் சீற்றத்தைத் தணித்து அமைதி அடைகிறது! (சரயு); நித்யா வீட்டை விட்டு வெளியேறிய போது அவளது அம்மா கற்பகம் முழுகாமல் உள்ளாள். மகப்பேறு நேர்ந்த

சூழ்நிலையில் இருவருமே மருத்துவமனையில் உள்ளனர். கர்ப்பப்பைக் கோளாறு காரணமாக நித்யா குழந்தை இறக்கிறது; கற்பகமோ தனக்குப் பிறந்த ஆண்குழந்தையை மகளுக்குச் சீதனமாக அளிக்கிறாள் (மகளே மகளே).

இவ்வாறு பெண்ணியம் தொடர்பான கதைகளில் குடும்பங்களின் இறுக்கமும் நெகிழ்வும் வெளிப்படுத்தப் படுகின்றன. பெண்ணிற்குப் பெண்ணே தடையாக உள்ளாள் என்பதறிந்து, தமக்கு வயதானாலும் தன் ஆசைகளை நிறைவேற்றும் சிவகாமி புதியதொரு வார்ப்பு! (துணையா?); விலைமகளாக இருந்தாலும், தத்தமது அளவில் இரக்கமும் மானிட நேயமும் கொண்ட பெண்களை மையமாகக் கொண்ட கதைகள் ஊருக்கெல்லாம் ஒரு பெண், சுந்தரர் ... சுந்தரி ஆகியவை. பெண்களை மையப்படுத்தும் கதைகள் யாவும் இயல்பானவை; உணர்ச்சி நிறைந்தவை; வாழ்வின் பாதிப்பை ஏதாவதொரு கோணத்தில் உணர்த்தி நிற்பவை.

ஏனைய கதைகளும் கூறவரும் கருவாலும் சூழலாலும் சிறந்தவை; ஞானத்தாய் மூலம் அறிவுக்கண் பெற்ற சாணக்கியன், சிறுவன் உணர்த்திய மூங்கில் தத்துவத்தால் புதிய சபதம் ஏற்றல் (மூங்கில்) படிப்பவரையும் 'அல்சர்' நோயாளியாக்கிவிடும் அளவிற்கு மருத்துவ உலகின் யதார்த்தங்களை வெளிப்படுத்தும் குருநந்தன் (நம்மில் ஒருவர்); தாயைவிட, மனைவியைவிட அதிகமாக நாயிடம் அன்பைப் பொழியும் உத்தண்ட ராமன் (அம்மாவும் புஸ்ஸி குட்டியும்); நாய் மாமா என்று பிறர் கூப்பிடும் அளவிற்கு நாயோடு ஒன்றிவிட்ட சடகோபன் (வையாபுரி); தன் மருமகனை நல்வழிப்படுத்த நன்மை கருதிப் பொய் கூறும் தங்கம்மா (பொய்மையும்) தான் எழுதிய நூலை எப்படியாவது விற்றுத்தன் ஏழைமையைப் போக்க

நினைக்கும் சங்குப்புலவர் (இலக்கியத்தின் விலை) இவ்வாறாக, ஒவ்வொரு கதையுள்ளும் உணர்வுச் சுழிகளாய் வெளிப்படும் மாந்தரின் செயல்கள் எண்ணிப் பார்க்கத் தக்கன.

இங்குச் சுட்டப்படாத கதைகளும் குறிப்பிடத்தக்கனவே. அவை ஒவ்வொன்றிலும் காணப்படும் படைப்பாளியின் ஆளுமை வெளிப்பாடு பாராட்டத் தக்கது.

சிறுகதை படிப்பதற்கு மட்டுமின்றிப் பயனுடையதாகவும் இருக்க வேண்டும் என்றெண்ணிச் செயல்பட்டிருப்பதனை இத்தொகுதியில் காணலாம். தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகளாகிய இவை, பொழுதுபோக்குத் தளத்திலிருந்து மாறுபடாமல், நல்ல படிப்பினைகளைத் தருவதாக இருத்தல் வேண்டும் என்ற சீரிய சிந்தனையை எழுப்புவன.



# பதிப்புரை

'சிறுகதை எழுதுவது எப்படி?' என்று கேட்பவர்கள் இருக்கிறார்கள். சிறுகதையின் வடிவம், நோக்கம், உத்தி போன்ற இலக்கணங்களைச் சொல்லும்போது சில சிறுகதைகளை மேற்கோளாகக் காட்டலாம். அவ்வளவுதான் இயலும். சிறுகதையின் மூலாதாரமான 'கரு'வைச் சுட்டிக் காட்ட முடியுமா? அதற்கு வழிகாட்ட முடியுமா? அது இயற்கையாகவே கைவரப் பெறுவது.

ஒவ்வொருவரிடமும் கற்பனை ஆற்றல் இயற்கையாக உருப்பெற்றிருக்கும். சிலரது கற்பனைக் கொடி துளிர்விட்டுப் படரும். கொழு கொம்பு எனும் நடை, எழுதும் முறையைத் தேடி அலையும். சிறு அகல் விளக்கிலிருந்து, அகண்ட தீபத்தை ஏற்றுவதுபோல் கதைப் பாத்திரங்கள், சம்பவங்கள் மளமளவென வந்து கண்முன் நிற்கும். வரிவடிவில் ஆக்கக் கரங்கள் துடிக்கும். இங்குதான் இயற்கையான ஆற்றல் துணை நிற்கும். சிறுகதைகளில் சொல்லும் முறைகள் எதிரே வந்து நிற்கும். அவற்றுள் ஒன்றைச் சிக்கெனப் பிடித்து எழுத வேண்டியதுதான்.

இலட்சிய நோக்கமுடையவர்கள் எழுதும்போது சமூக நலன் கதைகளில் ஊடுருவும் கதாபாத்திரங்கள் வாயிலாக, சமுதாயத்துக்குப் பயன்படும் கருத்துகளைச் சொல்லும் தன்மை இயற்கையாக அமைந்துவிடும். இந்தக் கதைச் சம்பவங்கள் எங்கோ கேட்டவை போல் உள்ளனவோ என்றும், நடந்தவை போல் இருக்கின்றன என்றும் படிப்பவர்களுக்குத்தோன்றினால்,கதை எழுதியவருக்கு வெற்றிதான்.

படைப்பிலக்கிய வரிசையில், சிறுகதை எழுதுவது, கவிதைக்கு அடுத்தபடி நிற்கிறது. புதினம் எழுதி விடலாம்; சிறுகதை எழுதுவது கடினம்.

சிறுகதை இலக்கியம் மேல் நாட்டினின்று குதித்தது என்று சொல்வார்கள். அதைத் திடமாக மறுப்பவர்கள் புராண, இதிகாசங்களில் பின்னிக் கிடக்கும் சிறு சிறு சம்பவங்களைச் சுட்டிக் காட்டுவர். சங்க இலக்கியங்களில் நிறைந்திருக்கும் சிறு சம்பவங்களைச் சுட்டிக் காட்டுவார்கள். சம்பவங்களே இல்லாமல், சிறு நிகழ்ச்சிகளை விவரிப்பனவற்றை மேற்கோளாக எடுத்துக் கூறுவார்கள்.

காதலன் ஓர் அழகிய பெண்ணைக் காதலித்து வந்தான். அவன் காதலி வீட்டு வழியே நாள்தோறும் செல்வான். சில நாள்கள் அவள் தெரு வாசலில் நிற்பதைக் காண்பான். விழிகள் சந்திக்கும். விழியின் மொழி மற்றவருக்குப் புலப்படாது. அது இதய ஒலி. அந்த ஒலியின் அழுத்தம் காதலை வளர்க்கும். சில நேரங்களில் வெறுப்பையும், ஏமாற்றத்தையும் தரும். பேச்சே இல்லாமலும் காதல் வளரும் உளர்ச்சி போதுமே. எவ்வளவு நாள்கள் அப்படியே இருக்க முடியும்? அந்த மங்கைக்கும் விருப்பம்தான்; அவன் வரும் வேளை அறிந்து வாசலுக்கு வந்து நிற்பது, விழியின் மூலம் காதல் மொழியைத் தெரிவிப்பது என்று காதல் எல்லை யில்லாமல் பயணமாகிறது. விழி நோக்கும், இமைகள் படபடப்பும் மெல்லிய புன்முறுவலும், சட்டென்று நாணமுற்று மறைவதும் காதலை உறுதி செய்தன.

ஒருநாள், காதலன் துணிந்து விட்டான், அவன் விரும்பும் பெண்ணோடு ஒரு வார்த்தையாவது பேசி விடுவதென்று. அவன் வரும் வேளையில் வீதியில் நடமாட்டமில்லை. அண்டை அயலார் இல்லை. சட்டென்று, அவள் வீட்டுப்

படிக்கட்டுகளில் ஏறி, திண்ணையில் வலுவான தூண்களைப் பற்றியபடி தன் வருகையை எதிர்பார்த்து நிற்கும் நங்கையை நெருங்கினான். மின் வெட்டினைப் போல் பார்வையால் ஆயிரம் உரையாடல்கள் ஏதாவது பேச வேண்டும்.

''தாகமாக இருக்கிறது; குடிக்கத் தண்ணீர் வேண்டும்'' என்றான்.

நங்கை திடுக்கிட்டாள். நாணத்தால் முகம் சிவந்தது. இனிய சொல் தேனாக இனித்தது. உள்ளே விரைந்தாள். குவளையில் நீர் கொணர்ந்தாள். குவளையைப் பெற நீட்டிய கரத்தால், அவன் அவள் கரங்களைப் பற்றினான். எதிர் பாராத நிகழ்ச்சி. பிற ஆடவர் தீண்டியறியாதவள் 'ஐயோ' என்று குரல் கொடுத்து விட்டாள்.

உள்ளே இருந்த தாயின் செவியில் மகளின் ஒரு குரல் கேட்கவே, என்னவோ ஏதோ என்று விரைந்து வந்தாள்.

இங்குதான் கதை அல்லது சம்பவத் திருப்பம். கணம் திடுக்கிட்ட பெண், ''அம்மா! இவர் தாகம் என்றார். தண்ணீர் கொண்டு வந்தேன். ஒரு வாய் பருகுவதற்குள், தொண்டை யில் அடைத்தது போலும். விக்கினார். நான் பயந்து ஐயோ என்றலறி விட்டேன்'' என்று கூறி நிலைமையை ஒப்பேற்றினாள்.

இது, சங்க இலக்கியத்தில் வரும் ஒரு பாடலில் சிறு சம்பவம். நாடக உத்தியோடு சிறுகதைக் கூறுகளும் நிறைந்துள்ளன.

சிறுகதை லட்சணங்கள் என்றும், இலக்கணம் என்றும் இன்று பலவிதங்களில் வகுத்துள்ளார்கள். சிறுகதை என்றால் ஓர் ஆரம்பம், (தொடக்கம்) உச்சநிலை, முடிவு இருக்க வேண்டும் என்று சொல்வார்கள். ஒரு சிறுகதையில் பிரசாரம் இருக்கக் கூடாது என்றும், பொழுது போவதற்காகப்

படிப்பதில் கட்டு திட்டங்கள் இருக்கக் கூடாது என்றும் கூறுவார்கள்.

மேலே குறிப்பிட்ட சங்கப் பாடல் கதையை எந்த இலக்கண வரம்பிற்குள் அளந்து அடைக்கலாம் என்று ஆலோசிப்பதைவிட, படிக்கும்போது படிப்பவர் கண் எதிரே அந்த நிகழ்ச்சி படம்போல் தோன்ற வேண்டும். அடுத்து என்ன என்ற ஆவலைத் தூண்ட வேண்டும்.

சம்பவங்கள் அதிகம் இருக்கக் கூடாது. சமுதாய முன்னேற்றத்தை வெளிப்படையாகப் பேச வேண்டும். திடீர் திருப்பங்கள் இருக்கக் கூடாது என்றும் சொல்வார்கள்.

வர்ணனைகளே இருக்கக் கூடாது. கதை மாந்தர் அதிகம் பேசக் கூடாது. அதிகமான கதாபாத்திரங்களை, கதைகளில் கொண்டு நிறுத்தக் கூடாது என்றும் சொல்வார்கள். மேலே கூறியவற்றிற்கு எதிர்மறையாகவும் சொல்வார்கள்.

கதைப் பாத்திரமே கதையைச் சொல்வதுபோல், கதாசிரியரே கதையைச் சொல்வதுபோல், கதையில் வரும் பாத்திரங்கள் நடந்தவற்றை ஒருவர் மாற்றி ஒருவர் விவரிப்பதுபோல், தற்கால நிகழ்ச்சியில் கதையைத் தொடங்கி பல ஆண்டுகளுக்கு முன்பு நடந்தவற்றை விவரிப்பதுபோல், கதையின் முடிவைக் கூறி பிறகு கதையைச் சொல்வதுபோல், கதையை சுபமாகவோ, துன்பமாகவோ முடிக்காமல் முடிவை வாசகர்களிடம் விடுவதுபோல் - பல பாணிகளில் சிறுகதைகள் எழுதப்படுகின்றன.

கதையில் சம்பவங்கள் இல்லாமல் வெறும் வர்ணனைகள் கதைப் பாத்திர உருவகங்கள் மட்டும் சொல்வதும் இப்போது சிறுகதை இலக்கணத்தில் அங்கம் வகிக்கிறது.

இலக்கணம் எப்படியாவது அமையட்டும். எழுது பவர்களின் எண்ணங்கள் அதிகம் பரவ வேண்டும். முதல் சிறுகதை எழுதியவர் மகரிஷி வ.வே.சு. அய்யர் என்றால், இல்லை இல்லை பாரதியார் தான் என்றும், மாற்று விமர்சனங்களில் நாம் நேரத்தைச் செலவிடாமல் சமுதாய உயர்வுக்கு, பண்பாட்டுச் சிதைவைத் தவிர்ப்பதற்கு சிறுகதை இலக்கியத்தைப் பயன்படுத்த வேண்டும்.

அமரர்களாகிவிட்ட கல்கியும், புதுமைப்பித்தனும் நூற்றுக்கணக்கான எழுத்தாளர்களின் வழிகாட்டிகளாகத் திகழ்கிறார்கள். சிறுகதை எழுதுவது எப்படி என்று கேட்பவர்கள் இரண்டு இரத்தினங்களின் அழியா ஒளியில் நிற்கட்டும்.

அனைத்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்க உறுப்பினர் களில் பல துறைகளில் சிறந்த படைப்பாளிகள் இருக்கிறார்கள். அவர்கள் ஒன்று சேர்ந்து தமிழ் வளர்க்க முன் வந்ததே ஒரு நல்ல சகுனம். அ.இ. எழுத்தாளர்கள் சங்க உறுப்பினர்களில் பலர் சிறுகதை எழுதுவதில் தேர்ந்தவர்கள். பழைமைக்கும், புதுமைக்கும் பாலமாக அமைபவர்கள் நூற்றுக்கணக்கில் சங்க உறுப்பினர்களாக இருக்கிறார்கள்.

சென்ற ஆண்டில், சிறுகதைத் தொகுதியைப்பற்றி உறுப்பினர்களுக்கு வேண்டுகோள் கடிதம் அனுப்பினோம். எழுத்தாளர்கள் சங்க உறுப்பினர்களின் கதைகளை மட்டுமே தொகுக்க வேண்டும் என்ற குறிக்கோளுடன் செயல் பட்டோம்.

பலர் கதைகளை அனுப்பினார்கள். சங்க உறுப்பினர்கள் என்பதாலேயே எல்லாக் கதைகளையும் வெளியிட முடியுமா? தேர்ந்தெடுக்கக் குழு அமைத்து 31 எழுத் தாளர்களின் கதைகளைத் தொகுத்து 'புது யுகம்' என்ற

பெயரில் சிறுகதைத் தொகுதியாக சங்கத்தின் சார்பில் மகாகவி பதிப்பக வெளியீடாக வெளியிட்டுள்ளோம்.

இந்தத் தொகுதிக்கு, சிறந்த இயக்குநர் சிறுகதை, புதினங்களில் மிக்க ஈடுபாடுடையவராகவும், தாமே நல்ல படைப்புகளை வெளியிடக் கூடியவராகவும் திகழும் மகேந்திரன், என் வேண்டுகோளை உடனே ஏற்று நல்லதோர் அணிந்துரையை வழங்கியுள்ளார்.

பச்சையப்பன் கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் இராம. குருநாதன் முன்னுரை வழங்கியுள்ளார்.

படைப்பாளர்களைப் பற்றிய சிறு குறிப்பு இந்தத் தொகுதியில் சேர்க்கப் பட்டிருக்கிறது. இன்னும் பல எழுத்தாளர்களின் கதைகள் வெளியிட ஆயத்த நிலையில் உள்ளன. இது முதல் தொகுதி.

ஏறத்தாழ முப்பத்தைந்தாயிரம் ரூபாய் செலவு செய்து, தொகுப்பை வெளியிட்டதன் நோக்கமே, இந்தத் தொகுப்பின் நிகர இலாபத்தை அ.இ. எழுத்தாளர்கள் சங்கத்திற்கு அளித்துவிட வேண்டும் என்பதே.

எழுத்தாளர்கள், வாசகர்கள் இந்த நூலை வாங்கி ஆதரித்து நல்ல நிகழ்ச்சிகளுக்குப் பரிசளிக்கப் பயன்படுத்தி, அடுத்த தொகுதி வெளிவர உதவ வேண்டும்.

அகர வரிசைப்படி சிறுகதைகளைப் பிரசுரித்துள்ளோம். மூத்த எழுத்தாளர் ஆர்வி முதல், புதிதாக எழுதத் தொடங்கிய ஜூலியட்ராஜ் வரை பழைமைக்கும் புதுமைக்கும் பாலமாக இந்தத் தொகுதி அமைந்துள்ளது. புது யுகம் உறுதியாக மலரும் என்பதற்குச் சான்று.

- கலைமாமணி விக்கிரமன்

# இந்நூலில் எழுதியுள்ள சிறுகதைப் படைப்பாளர்களைப் பற்றிய சிறுகுறிப்புகள்

**அய்க்கண்:** பிறந்த நாள் 1.9.1935. எழுதத் தொடங்கிய ஆண்டு 1956. இதுவரை 17 சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன. இவரது சிறுகதைகள் இந்தியில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. ஆங்கிலம், இந்தி, வங்காளி, மலையாளம், கன்னடம், தெலுங்கு, ஒரியா மொழிகளில் இவருடைய கதைகள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

**'ஆர்வி' (ஆர்.வேங்கடராமன்)** : 14 சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன. இவருடைய சிறுகதைகள் இந்தி, கன்னடம், தெலுங்கு, மலையாளம், குஜராத்தி ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. தனிநபர் சத்தியாகிரகப் போராட்டத்தில் சிறை சென்றவர். 'குங்குமச் சிமிழ்' என்ற சிறுகதைத் தொகுப்பு தமிழக அரசின் பரிசு பெற்றது. இவர் பிறந்த நாள் : 6.12.1918

**ஆர்னிகா நாசர்** : பிறந்த நாள் 13.11.1960. 1986ஆம் ஆண்டு முதல் எழுதி வருகிறார். வகிதா, ஜாஸ்மின், நிலாமகன் ஆகியன இவரது புனைபெயர்கள். ஏறத்தாழ 650 சிறுகதைகள் எழுதியுள்ளார். 5 சிறுகதைத் தொகுப்புகள் வெளிவந்துள்ளன.

**ஏர்வாடி எஸ்.இராதாகிருஷ்ணன்:** 5 சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன. ஏறத்தாழ 35 ஆண்டுகளுக்கு

மேலாக எழுதி வருகிறார். இயல் இசை நாடக மன்றம் கலைமாமணி விருதை இவருக்கு வழங்கியுள்ளது. தமிழ் வளர்ச்சித் துறையின் பரிசு இவருடைய சிறுகதைத் தொகுதிக்குக் கிடைத்துள்ளது. அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்க மாநிலச் செயலாளர்.

குன்றக்குடி பெரியபெருமாள் : 26.11.1932இல் பிறந்தார். 30 ஆண்டுகளாக எழுதி வருகிறார். முப்பது சிறுகதைகள் இதுவரை பிரசுரமாகியுள்ளன. இவருடைய கட்டுரை நூலொன்று தமிழக அரசு முதற்பரிசு பெற்றுள்ளது. டாக்டர் ராஜா சர் அண்ணாமலை செட்டியார் விருதும் பெற்றவர்.

கோவி மணிசேகரன் : பிறந்த நாள் 2.5.1927. 1945ஆம் ஆண்டிலிருந்து எழுதி வருகிறார். ஏறத்தாழ 700 சிறுகதைகள் (வரலாறு - சமூகக் கதைகள்) எழுதியுள்ளார். சாகித்ய அகாதமி விருது உட்பட பல விருதுகளையும், பெற்றவர். இந்தி, கன்னடம், மகாராஷ்ட்டிரம், உருது ஆகிய மொழிகளில் இவர் கதைகள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

பா.சத்தியமோகன் : 15.5.1964இல் பிறந்தவர். 1977 முதல் எழுதி வருகிறார். 48 சிறுகதைகள் வெளிவந்துள்ளன.

சரயு (திருமதி.எஸ்.சுபலட்சுமி) : 2.7.1929இல் பிறந்தவர். 1992இல் சந்தனக் காவியம் என்ற சிறுகதைத் தொகுப்புடன் எழுத்துலகப் பிரவேசம். 1994இல் தமிழ் வளர்ச்சித்துறைப் பரிசு பெற்றுள்ளார். இரண்டு சிறுகதை தொகுப்புகள் வெளி வந்துள்ளன.

**திருமதி.சாதனா ராதாகிருஷ்ணன் :** பிறந்த நாள் 9.6.1968. எழுதத் தொடங்கிய ஆண்டு 1999. 'எல்லாரும் பெண்களே' என்ற சிறுகதைத் தொகுதி வெளிவந்திருக்கிறது.

**நளினி சாஸ்திரி (ஆர்.சேகர்):** 19.1.1957இல் பிறந்தவர். எழுதத் தொடங்கிய ஆண்டு1978. சிறுகதைத் தொகுதி ஒன்று வெளிவந்திருக்கிறது. 70 சிறு கதைகள் எழுதியுள்ளார். நெய்வேலி லிக்னைட் நிறுவனத்தில் உதவி மேலாளராகப் பணியாற்றி வருகிறார்.

**நாகராஜ குமார் :** பிறந்த நாள் 21.1.1962. எழுதத் தொடங்கிய ஆண்டு 1987. 130 சிறுகதைகள் இதுவரை வெளிவந்துள்ளன. இரண்டு சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன.

**'நீலவன்' (வ.முருகேசன்) :** 3.6.1946இல் பிறந்தவர். 30 ஆண்டுகளாக எழுதி வருகிறார். 10 சிறுகதைத் தொகுதிகள் இதுவரை வெளிவந்துள்ளன. ஆங்கிலத்திலும் இந்தியிலும் இவருடைய சிறுகதைகள் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் மாநிலத் துணைத் தலைவர். வேலூர் மாவட்டக் கிளையின் தலைவர்.

**திருமதி.பத்மினி பட்டாபிராமன் :** 1980இல் எழுதத் தொடங்கினார். வானொலி, தொலைக்காட்சி உட்பட இவருடைய சிறுகதைகள் பல வெளி வந்துள்ளன. இந்தியத் தூதரகம் வெளியிட்ட

'இந்தியா வியூ' பத்திரிகையில் தொடர்ந்து ஆங்கிலக் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

**பால்யூ (என்.பாலசுப்பிரமணியம்)** : 19.10.1926இல் பிறந்தவர். 'ஜடாதரன்' என்ற புனைபெயரில் 50 சிறுகதைகள் எழுதியுள்ளார். 1948 ஆம் ஆண்டில் எழுதத் தொடங்கினார். குமுதம் பத்திரிகையில் 1966 முதல் 'பால்யூ' என்ற பெயரில் தலைமை நிருபராகப் பணியாற்றியவர்.

**பூவண்ணன் (வே.தா.கோபாலகிருஷ்ணன்)** : பிறந்த நாள் 9.9.1932. 1949ஆம் ஆண்டு முதல் எழுதி வருகிறார். எம்.ஏ. பிஎச்.டி.(டாக்டர்) பட்டம் பெற்றவர். 3 சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன.

**மன்னார்குடி விசுவநாதன்** : 9.9.1941இல் பிறந்தார். 1961ஆம் ஆண்டிலிருந்து எழுதி வருகிறார். 9 சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன. மத்திய அரசின் பரிசுபெற்ற முதியவர்களுக்கான இரண்டு சிறுகதைத் தொகுப்புகள் வெளி வந்துள்ளன.

**மாலா உத்தண்டராமன் (ப.உத்தண்டராமன்)** : 21.12.1958 இல் பிறந்தவர். 1980இல் முதல் படைப்பு வெளிவந்தது. 209 சிறுகதைகளுக்கு மேல் வெளி வந்துள்ளன. நெய்வேலி நிறுவனத் தலைமை அலுவலகத்தில் துணைக் கண்காணிப்புப் பொறியாளர்.

**திருமதி.மேகலா சித்ரவேல்:** பிறந்த நாள் 6.4.1952. எழுதத் தொடங்கிய ஆண்டு 1988. வெளிவந்துள்ள நூல்கள் 2.

**திருமதி.ரத்னமாலா** : பிறந்த நாள் 30.12.1960. எழுதத் தொடங்கிய ஆண்டு 1994. 200க்கு மேற்பட்ட சிறுகதைகள் எழுதியுள்ளார். தெலுங்கு, இந்தி ஆகிய மொழிகளையும் அறிந்தவர்.

**நா.ராமச்சந்திரன்:** 1925இல் பிறந்தவர். 1942 முதல் சிறுகதைகள் எழுதி வருகிறார். புனைபெயர்கள் நாரசன், லெமன், சுருதி. வெளிவந்த சிறுகதைத் தொகுதிகள் 5. சில கதைகள் இந்தியிலும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன.

**'ராஜ்' (ஏ.வி.ராஜகோபாலன்)** : பிறந்த நாள் 26.10.1938. எழுதத் தொடங்கிய ஆண்டு 1988. வெளி வந்துள்ள சிறுகதைத் தொகுதிகள் 13. எழுதப் பட்ட சிறுகதைகள் 270. இவற்றுள் பல கன்னடத்திலும், தெலுங்கிலும் இந்தியிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. மாநில அரசின் பரிசுகளைப் பெற்றுள்ளார். 'பார்வை நேரம்' எனும் சிறுகதைத் தொகுப்பு கன்னடத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

**திருமதி.லக்ஷ்மி ரமணன்** : 16.4.1940இல் பிறந்தார். 1959இல் எழுதத் தொடங்கினார். நான்கு சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன. இந்தி, ஆங்கிலம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளில் இவருடைய சிறுகதைகள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

**திருமதி விமலாரமணி** : பி.ஏ.பட்டதாரியான இவர் 40 ஆண்டுகளாக எழுதி வருகிறார். ஆயிரம் சிறுகதைகளுக்கு மேல் எழுதியுள்ளார். கன்னடம், மலையாளம் மொழிகளில் இவர் கதைகள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

**விக்கிரமன் (சு.வேம்பு)** : விசித்திரச் சித்தன், சானவி போன்ற பல புனைபெயர்கள். 19.3.1928 பிறந்த நாள். 1942 ஆம் ஆண்டு முதல் எழுதி வருகிறார். ஆறு சிறுகதைத் தொகுப்புகள் வெளிவந்துள்ளன. அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர்கள் சங்கத் தலைவர். இயல் இசை நாடக மன்றத்தின் கலைமாமணி விருது போன்ற பல விருதுகள் பெற்றவர்.

**வாதூலன் (ஈ.லட்சுமணன்)** : 1939ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் பிறந்தவர். 'ஈஸ்வர் குமார்' என்னும் புனைபெயரிலும் எழுதியுள்ளார். 1957 ஆம் ஆண்டு முதல் எழுதி வருகிறார். 200க்கும் மேற்பட்ட சிறுகதைகளை எழுதியுள்ளார்.

**ரா.வேங்கடசாமி** : 6.1.1929இல் பிறந்தார். 1947ஆம் ஆண்டு முதல் எழுதி வருகிறார். மூன்று சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன. அறிந்த பிற மொழிகள் ஆங்கிலம், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகியன. தெலுங்கு. கன்னடம், மலையாளம் மொழிகளில் இவருடைய கதைகள் மொழி பெயர்க்கப் பட்டுள்ளன.

**புஷ்பா தங்கதுரை (ஸ்ரீவேணுகோபாலன்)** : புஷ்பா தங்கதுரை புனைபெயர். ஆயிரம் சிறுகதைகளுக்கு மேல் எழுதியுள்ளார். 1948இல் எழுதத் தொடங்கினார். ஆங்கிலம், பிரெஞ்சு, மலையாளம், சம்ஸ்கிருதம் ஆகிய மொழிகள் அறிந்தவர்.

**ஜூலியட்ராஜ் (ஈ.ஈஸ்டர் செல்வி)**: 29.3.1964இல் பிறந்துள்ளார். கடந்த ஆறு ஆண்டுகளாக எழுதி வருகிறார். 22 சிறுகதைகள் வெளி வந்துள்ளன.

**'ஜெயரதன்' (சோ.வேங்கட சுப்பிரமணியன்)** : 28.1.1941இல் பிறந்தார். 1960இல் எழுதத் தொடங்கினார். சுமார் 200 சிறுகதைகள் எழுதியுள்ளார். இவற்றுள் சில கதைகள் தெலுங்கு, மலையாளம், இந்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் மொழி பெயர்ப்பாகி உள்ளன. ஜவஹர்லால் நேருவின் 'டிஸ்கவரி ஆப் இந்தியா', 'சுயசரிதம்' ஆகிய இரண்ட நூல்களையும் தமிழாக்கம் செய்துள்ளார்.

**'ஜெயா வேங்கடராமன்' (டி.எஸ்.வெங்கடராமன்)**: 12.1.1945 பிறந்த நாள். 1965 ஆம் ஆண்டிலிருந்து எழுதி வருகிறார். 50 சிறுகதைகளுக்கு மேல் எழுதியுள்ளார். 'விலை' என்ற சிறுகதைத் தொகுதி வெளிவந்துள்ளது. இந்தியில் பல சிறு கதைகள் மொழி பெயர்க்கப் பட்டுள்ளன. பெங்களூரில் பாதுகாப்புத் துறையில் பணியாற்றுகிறார்.

**ஜோதிர்லதா கிரிஜா (ஜோதிர்லதா முக்தா கிரிஜா)**: பிறந்த தேதி 27.5.1936. ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளாக எழுதி வருகிறார். 7 சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன. ஆங்கிலத்தில் இவருடைய 28 சிறுகதைகள் மொழி பெயர்க்கப் பட்டுள்ளன.





கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி



புதுமைப்பித்தன்

# புதுயுகம்

அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்க
உறுப்பினர்கள் எழுதிய சிறுகதைகள்
முதல் தொகுதி வெளிவர உதவியவர்கள்.

ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிட்,
சென்னை-600 002.

திரு.லேனா தமிழ்வாணன், எம்.ஏ., டிப்.இன்.ஜர்னலிசம்

திரு. எம்.எஸ்.உதயமூர்த்தி

டாக்டர் இ.எஸ்.ஹரிஹரன் (ரேவதி)

திரு.ஜெயரதன்

திரு. 'பால்யூ'

சிறுகதைத் தொகுதி சிறப்பாக உருவாக
ஆலோசனை வழங்கியவர்கள்:

திரு.ஸ்ரீவேணுகோபாலன் (புஷ்பாதங்கதுரை)

திரு.சுப்ரபாலன்

திரு.ஜெயரதன்

கலைமாமணி ஏர்வாடி இராதாகிருஷ்ணன்

பாரதி பணிச்செல்வர் நீலவன்

புலவர் வரத கோவிந்தராசன்

குன்றக்குடி பெரியபெருமாள்

திரு.ஏ.வி.ராஜகோபால்

திரு.கு.சண்முகசுந்தரம்

# புதுயுகம்
## (சிறுகதைகள்)

## கிரிக்கெட்டில் ஒரு கார்கில்...

அய்க்கண்

வெஸ்ட் கோஸ்ட் ஹோட்டலில் தங்கியிருந்த இந்திய அணியின் வீரர்கள் எல்லாரும் அந்தச் செய்தியைக் கேட்டு அதிர்ந்துபோய் விட்டார்கள்.

இன்னும் சிறிது நேரத்தில், 'மேட்ச்' ஆட மைதானத் திற்குக் கிளம்பிக்கொண்டிருந்தபோது அந்தச் செய்தி அவர்களை நிலைகுலைய வைத்துவிட்டது.

இந்திய அணியின் ஸ்டார் பேட்ஸ்மன் சுரேஷ் ஊருக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறான்.

சில நிமிடங்களுக்கு முன்பு, இந்தியாவிலிருந்து சுரேஷுக்கு ஒரு 'போன்' வந்தது. அவனுடைய தாய் மீனா பேசினாள்:

சுரேஷின் அப்பா மரணப்படுக்கையில் கிடக்கிறாராம்: 'பெரி அனூரிஸம் சிம்ப்டம்ஸ்' டெவலப் ஆகிவிட்டதால், இன்னும் பன்னிரண்டு மணி நேரம்தான் என்று டாக்டர் கெடு வைத்துவிட்டாராம்...

தாயோடு போனில் பேசியதுமே, சுரேஷ் கிளம்பி விட்டான்.

சுரேஷைப் பொறுத்த வரையில், அவனுடைய அப்பா சுதாகர், வெறும் தந்தை மட்டுமல்லர். அவனைக் கிரிக்கெட் வீரனாக உருவாக்கியவர் அவர்தான் என்பது எல்லாருக்கும் தெரியும்.

சுரேஷ் ''அப்பாவைப் பார்க்கப் புறப்படுகிறேன்'.' என்று கிளம்பியதும், அணியின் காப்டனும் மேனேஜரும், ஏதும் சொல்லமுடியாமல் தவித்தனர்.

சுரேஷ் சாதாரண விளையாட்டாளனா?... இந்தியாவில் மட்டுமன்று - உலகத்திலேயே பெரும் புகழ்பெற்ற வீரனாயிற்றே?.. அவனைத் தடுத்து நிறுத்த மேனேஜராலோ, காப்டனாலோ முடியுமா?...

தர்மசங்கடத்தில் இருவரும் நெளிந்து கொண்டிருந் தார்கள்.

பலநாட்டுக் கிரிக்கெட் அணிகள் பங்கெடுத்துக் கொள்ளும் 'சாம்பியன்' கோப்பைக்காக அமெரிக்கா வந்த இந்திய அணி, முதல் ஆட்டத்தில் எதிர்பாராத வகையில் தோற்றுவிட்டது. சுரேஷ் 'செஞ்சுரி' அடித்தும், இரண்டு 'விக்கெட்'களை வீழ்த்தியும் பயனில்லாமல் போய் விட்டது.

இப்போது ஆடப்போகும் இரண்டாவது 'மேட்ச்' இந்தியாவுக்கு மிகவும் முக்கியமான - க்ரூஷியல் - மேட்ச். இதில் வெற்றி பெற்றால்தான், ஸெமிஃபைனல் ரவுண்டை எட்டிப் பிடிக்கமுடியும். இல்லாவிட்டால், அடுத்த விமானத்தைப் பிடித்து ஊருக்குத் திரும்ப வேண்டியது தான்!

இப்போது ஆடப்போகும் ஆட்டத்தில், ஜார்ஜியா நாட்டின் ஃபாஸ்ட் பௌலர் ராபர்ட்ஸின் ராட்சஸப் பந்து வீச்சை, சுரேஷ்தான் சமாளிக்க முடியும், அவன் சமாளித்து முதல் பத்து ஓவர்கள் நிலைத்து நின்றுவிட்டால், மற்ற இந்திய அணி வீரர்கள் தைரியமாக நின்று, கௌரவமான ரன் எண்ணிக்கையை எட்டிவிடுவார்கள்: ரன் எடுப்பது மட்டு மன்று - இந்தியாவின் ரெகுலர் பௌலர்கள், நாற்பது ஓவர்கள் வீசி முடித்ததும், கடைசிப் பத்து ஓவர்களில் ஜார்ஜியா நாட்டு பேட்ஸ்மன்கள், கணிசமான ரன்கள் எடுத்து விடாமல், நாசூக்காக, நுட்பமாக பௌலிங் செய்து அவர்களைக் கட்டுப்படுத்தியும் விடுவான் சுரேஷ் -

இப்படியெல்லாம் கணக்குப்போட்டு, இரண்டாவது 'மேட்ச்'சுக்கு இந்திய அணிவீரர்கள் தயாராகிக் கொண் டிருந்தபோது, சுரேஷ் புறப்பட்டுப் போவது, அவர்களின் மூச்சை உறைய வைத்துவிட்டது.

ஹோட்டலில் இந்திய வீரர்களிடையே எழும்பிய பரபரப்பின் ஆரவாரம் கேட்டு, வெளியே வந்த ஓர் ஐரோப் பிய 'கோச்', இந்திய மேனேஜர் நரேந்தரிடம் விசாரித்தார்.

நரேந்தர் விஷயத்தைச் சொன்னதும், 'கோச்' மேக் மில்லன், புருவத்தைச் சுளித்தார்.

''மிஸ்டர் நரேந்தர்! இந்தியர்களிடம் எல்லாத் திறமையும் வலிமையும் இருக்கிறது. ஆனால், போராடும் குணம் - கில்லர் இன்ஸ்டிங்ட் - ஒன்று மட்டும்தான் இல்லை. உங்கள் அண்டை நாட்டு வீரர் ஒருத்தர், 'மைதானத்தில் என் எதிரே நிற்பவர்கள் ஒவ்வொருவரும், விளையாட்டாளராக எனக்குத் தெரியவில்லை: எனது பகைநாட்டானாகவே தெரிகிறான். அதனால் தான் எனக்குள் ஒரு வேகம், ஒரு வெறி ஏற்படுகிறது' என்று என்னிடம் சொன்னார்... இட் ஈஸ்

த ஃபைட்டிங் ஸ்பிரிட்...'' என்று அழுத்தமாக மேக்மில்லன் சொன்னதன் அர்த்தம், சரியாக விளங்கவில்லை மேனேஜருக்கு!

'வாட் டு யூ மீன்?' என்று அவரிடம் கேட்டு, அவர் பேச்சின் அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளவோ, அல்லது அவர் எந்த அர்த்தத்தில் அப்படிச் சொல்கிறார் என்று யோசித்துப் பார்க்கவோ, நரேந்தருக்கு நேரம் இல்லை.

அதிர்ச்சியில் கலகலத்துப் போயிருந்த வீரர்களைச் சேர்த்துக்கொண்டு, மைதானத்திற்குக் கிளம்பத்தான் அவருக்கு நேரம் சரியாக இருந்தது...

டெல்லியில் - பேராசிரியர் சுதாகர், படுக்கையில் ஏதோ படித்தபடி இருந்தார். படுக்கையின் இருபுறங்களிலும் மனைவி மீனாவும், மருமகள் நிஷாவும் கவலைபடிந்த முகத்தோடு உட்கார்ந்திருந்தார்கள்.

இன்னும் பன்னிரண்டு மணி நேரத்தில் சாவை எதிர்கொள்ளப்போகிற மனிதராக, அவரைப் பார்த்தால் தெரியவில்லை. யமனைப் பார்த்ததும் 'ஓ.கே... நான் ரெடி... புறப்படலாமா?' என்று கேட்பவர்போல் இருந்தார் அவர்.

'சரியான வாழ்க்கை வாழ்ந்தவனுக்கு, மரணத்தைப் பற்றிய பயம் இருக்காது. கொடுத்த ஓவர்ஸ் முடிந்ததும், ஆட்டத்தை முடித்துக்கொள்ள வேண்டியதுதானே?' என்று அடிக்கடி சொல்வார் அவர். மரணத்தின் விளிம்பிலும் இப்படி துளும்பாமல் இருக்க அவரால்தான் முடியும்..

கடந்த ஒரு மாதமாக நோய்ப்படுக்கையில் கிடந்த அவரைப் பார்க்காத டாக்டர்களே இல்லை; அவர் சாப்பிடாத மருந்துகளே இல்லை...

'இட்ஸ் பெரி அனூரிஸம்... இன்னும் பன்னிரண்டு மணி நேரம்தான் சொல்லமுடியும்...' என்று குடும்ப டாக்டர் கெடு விதித்துவிட்டுச் சென்றுவிட்டார்.

டாக்டரின் வார்த்தைகள், மீனாவின் தலையில் இடியாக விழுந்தன. உறவினர்களிடமும் நண்பர்களிடமும் செய்தியைச் சொல்லுமுன், அமெரிக்காவிலிருக்கும் சுரேஷுக்குப் போன் செய்தாள். அடுத்து, அவரை உயிருக்குயிராக நேசிக்கும் சுந்தருக்கும் தகவல் தெரிவித்தாள்...

''மீனா!... டி.வி.யைப் போடு... என் மகன் விளையாடும் மேட்ச்சைப் பார்க்கணும்...'' என்று சட்டென்று நினைவு வந்தவராய்க் கட்டளையிட்டார் சுதாகர்.

திடுக்கிட்டவளாய் ''என்ன சொல்றீங்க?... இந்த நேரத்திலா?'' என்று மெல்ல முணுமுணுத்தாள் மீனா.

''என்ன நேரம்?... கடைசி நேரம் - அதுதானே?'' என்ற கணவனைச் சட்டென்று இடைமறித்தாள் மனைவி.

''நோ... நோ..'' என்று பதற்றத்துடன் அவர் வாயை மெல்ல மூட நகர்ந்தாள் அவள்.

''எஸ்... ஐ நோ... எனக்குத் தெரியும், மீனா! எனக்கு என்ன நோய், எனக்கு எவ்வளவு நேரம் டாக்டர் கொடுத்திருக்கார், எல்லாம் தெரியும், மீனா!... கடைசி நேரத்தில் என் மகன் இந்தியாவுக்காக விளையாடுவதைப் பார்க்க வேண்டும். நான் எவ்வளவு அதிர்ஷ்டக்காரன் பார்!... என் மகன் ஆடுகிற ஆட்டத்தைப் பார்த்தபடியே சாகிற வாய்ப்பு எனக்குக் கிடைச்சிருக்கு, பார்!... மீனா!... டி.வி.யைப் போடு... மேட்ச் தொடங்கப் போகுது!... என்ன யோசிக்கிறே?... நிஷா!... நீ டி.வி.யைப் போடும்மா!'' மருமகள்

பக்கம் திரும்பிய அவருடைய இடுங்கிய விழிகளில் திடீர் ஒளி மின்னியது.

நிஷா, தொலைக்காட்சிப் பெட்டியின் பொத்தானை அழுத்தினாள்.

சின்னத்திரையில், அமெரிக்காவின் பசுமையான கிரிக்கெட் மைதானம், மெல்லப் பரவி ஒளியலைகளை எழுப்பியது...

படுக்கையில் சுதாகரின் பக்கம் நெருங்கி உட்கார்ந்தாள் மீனா:

''என்னங்க... இந்த மேட்ச்சில் நம்ம மகன் விளையாட லைங்க... அவன் உங்களைப் பார்க்க விமானத்தில் வந்து கிட்டிருக்கான்...'' என்று மீனா மெல்லச் சொன்னதும், திடுக்கிட்டுத் திரும்பி அவளை வெறித்துப் பார்த்தார் அவர்.

''வாட்?... வாட் நான்ஸென்ஸ் யூ ஆர் டாக்கிங்?... இன்னிக்கி, இந்தியாவுக்கு மேட்ச் இருக்குது. அவன் எப்படி விமானத்தில் வருவான்?... இட் இஸ் இன்க்ரெடிபிள்...''

''உங்களுக்கு ரொம்ப சீரியஸ். பன்னிரண்டு மணி நேரம் கெடு என்கிறதை போனில் சொன்னேன். உடனே உங்களைப் பார்க்கப் புறப்பட்டுட்டான் உங்க மகன்.''

''நோ... நோ... அவன் என் மகன் என்கிறது பிறகுதான். முதலிலே அவன் இந்தியன்: இந்திய அணியின் வீரன்: அவன் கண்டிப்பாக இந்த 'மேட்ச்' அங்கே ஆடணும். மீனா!... இந்த விளையாட்டும், ஒரு போர்முனை மாதிரி தான்!... ஒரு நாட்டுக்கு, எதிரிநாட்டோட எல்லைப் புறத்தில் மட்டும் போர் முனை இல்லை. இன்னும் எத்தனையோ போர்முனைகள் இருக்கு. மற்ற நாடுகளோடே போட்டி போடுகிற பொருளாதார முனை, தொழில் முனை, ஏற்றுமதி

- இறக்குமதி வியாபார முனை, டெக்னாலஜி ஃப்ரண்ட், கல்ச்சர் ஃப்ரண்ட் - இப்படி எத்தனையோ போர் முனைகள்... அதிலே விளையாட்டும் ஒரு போர் முனை மாதிரிதான்!!... விளையாடற ஒவ்வொரு ப்ளேயரும், ஸோல்ஜர் மாதிரிதான் - அவனுக்குத் தாய், தந்தை குடும்பத்தை விட, நாடுதான் முக்கியம்!...'' என்று உணர்ச்சி வயப்பட்டுப் பேசிக் கொண்டிருந்தார் பேராசிரியர் சுதாகர்.

எப்போதும்போல, தெளிவான, அழுத்தமான, அறிவு பூர்வமான சிந்தனையின் வெளிப்பாடாகவே சொற்கள் பிரவகித்துக் கொண்டிருந்தன.

''அதெப்படிங்க, உங்க உயிர் ஊசலாடிக்கிட்டிருக்குனு தெரிஞ்ச பிறகும், உங்க மகன் அங்கே விளையாடிக் கிட்டிருக்க முடியுமா?''

''அவன் இங்கே வந்து என்ன செய்யப் போகிறான்? எனக்கு ரத்தம் கொடுத்துக் காப்பாத்தப் போகிறானா?.. அல்லது, அவன் என் நோயைக் குணப்படுத்தக்கூடிய பெரிய ஸ்பெஷலிஸ்ட் டாக்டரா?... அல்லது, என் எதிரிலே வர்ற யம தருமனை 'பௌல்' பண்ணி 'அவுட்' டாக்கி அனுப்பிடப் போறானா?... மீனா! இன்னிக்கோ நாளைக்கோ, சாகப் போகிறவன்தானே நான்?... நான் செத்துட்டால்தான் என்ன?... மேட்ச் நடக்கிறது. எட்டு மணி நேரம்தானே? - அதை முடிச்சிட்டுப் புறப்பட்டு வந்து எனக்கு ஈமச்சடங்கு செய்யலாமே?'' என்று உணர்வு பொங்கும் குரலில் படபடத்தார் பேராசிரியர் சுதாகர்.

வண்ணத்திரையிலே, அமெரிக்க மைதானத்தின் நடுவிலே, ஜார்ஜியா நாட்டு வீரர்கள் இருவர், 'பேட்' செய்து கொண்டிருந்தார்கள். மைதானம் முழுவதும் பரவி, இந்திய அணியினர் ஃபீல்டிங் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களிலே சுரேஷைக் காணவில்லை.

தொலைக்காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த மாமாவின் முகம் முழுவதிலும் பரவியிருந்த அதிருப்தியைக் கவனித்தாள் நிஷா.

''மாமா! அவர் நிலையிலிருந்து நீங்க நினைச்சுப் பாருங்க... அவரை நீங்க வெறும் மகனாக மட்டுமா வளர்த் தீங்க?... இன்னிக்கு உலகமெல்லாம் பாராட்டுகிற அளவுக்கு ஒரு கிரிக்கெட் ஸ்டாராக உருவாக்கிய நீங்க, சாகக்கிடக்கிற போது -'' என்று மருமகள் மெல்லப் பேசத் தொடங்கியதும், சட்டென்று அவளைத் திரும்பிப் பார்த்தார் அவர்:

''ஆம்... அவனை உருவாக்கினேன். எதற்காக? என் மரணப்படுக்கையிலே, என் பக்கத்திலே உட்கார்ந்துக் கிட் டிருக்கவா? இல்லை... என் இந்திய நாட்டுக்காக விளையாடி வெற்றி தேடித் தரத்தானே? அதை விட்டுட்டு இப்போ ஏன் இங்கே வர்றான்?'' என்று ஓங்கிய குரலில் கேட்ட சுதாகர், மனைவியின் பக்கம் பார்த்தார்.

''மீனா! நீ தவறு செய்துட்டே... நீ அவனுக்குப் போன் செஞ்சிருக்கக் கூடாது. ஆனா, நீ ஒரு பெண்; ஒரு மனைவி; ஒரு தாய். உன்னாலே சோகத்தைத் தாங்கிக்க முடியலை. ஆனா, அவன் - அந்த ப்ளேயர் - எப்படிப் புறப்பட்டான்? மேட்ச் விளையாடாம எப்படிப் புறப்பட்டான்?'' என்ற சுதாகர், மெல்லக் குரலைத் தாழ்த்திக்கொண்டு, தலை குனிந்தபடி, ''இது என் தவறும்தான்... என் மகனுக்கு கிரிக்கெட் சொல்லிக் கொடுத்தேன். டாக்டிக்ஸ் சொல்லிக் கொடுத்தேன். ஆனால், நாடு, நாட்டுப்பற்று, நாட்டுக்காக நாம் நடத்த வேண்டிய தியாகங்கள் - இதெல்லாம் சொல்லிக் கொடுக்கலை...'' என்று மெதுவாகத் தனக்குத்தானே சொல்லிக்கொள்வது போல் நொந்த குரலில் பேசிக் கொண்டிருந்தார்.

''மாமா! அவர் ஒருத்தர் இல்லைன்னா என்ன? இந்தியா வுக்காக ஆட மற்றவங்க இருக்காங்க, இல்லையா?... ஒருத்தரையே ஒரு நாடு நம்பிக்கிட்டிருக்கலாமா?'' என்று குறுக்கிட்டுக் கேட்டாள் நிஷா.

''ஒருத்தனையே நம்பி இருக்கக்கூடாதுதான்; அப்படி ஒருத்தனையே நம்பிக்கிட்டிருக்கிறது, ஒரு நாட்டுக்குக் கேவலம்தான். ஆனா, அது, அந்த ஒருத்தனுக்குப் பெருமை தானே, நிஷா? அந்தப் பெருமையைக் கொடுத்திருக்கிற நாட்டுக்கு அந்த ஒருத்தன் எவ்வளவு கடமைப்பட்டிருக் கான்?... அந்தக் கடமையைச் செஞ்சு முடிச்சானா? அப்படியே, நட்டாற்றில் விட்டுவிட்டு வந்துட்டானே?'' என்று குமுறினார் அவர்.

''ஏன், அவர் அங்கே இருந்து ஆடினாலும், இந்தியா தோற்கலாம்தானே?'' என்று தொடர்ந்து வாதிட்டாள் மருமகள்.

''தோற்கலாம்தான்; தோற்றிருக்கிறதுதான்... ஆனா, அது வேறு விஷயம் - இந்தியா தோற்கிறதோ, ஜெயிக்கிறதோ, என் மகன் அங்கே இருந்திருக்க வேண்டும் - அதைத்தான் சொல்கிறேன், நிஷா!... என் மகன் அங்கே இருந்திருப்பான். ஆனா, என் மனைவிதான் தவறு பண்ணிட்டா...'' என்று மீனாவைப் பார்த்தும் பார்க்காததுமாய் அரற்றிக் கொண்டிருந்தார் சுதாகர்.

சட்டென்று மீனாவுக்கு ஓர் எண்ணம் பளிச்சிட்டது:

இவ்வளவு தூரம் அவருடைய கண்டனத்திற்கு உள்ளாகி விட்டபோது, இன்னொரு விஷயத்தையும் வெளியிட்டு விடலாம் என்று தீர்மானித்தாள் அவள்.

''நான் சுரேஷுக்கு போன் செய்தது தவறுன்னா, இன்னொரு தவறும் பண்ணிட்டேங்க...'' என்று மெல்ல அவரை நிமிர்ந்து பார்த்தாள் மீனா.

சின்னத்திரையிலிருந்து விழிகளைத் திருப்பி, தன் மனைவியைப் பார்த்தார் சுதாகர்.

''உங்க உடல்நிலை இப்படி என்றால், சுந்தர் தாங்க மாட்டான்னு எனக்குத் தெரியும்... அதனாலே... அவனுக்கும்... காஷ்மீருக்கு... போன் செய்து உங்க நிலைமையைச் சொல்லிட்டேன்...'' என்று தயங்கித் தயங்கி அவள் சொல்லி முடித்தாள்.

ஆனால், அவள் எதிர்பார்த்ததுபோல், அவர் கோபத்தில் சீறிப்பொங்கி விடவில்லை.

ஒருவேளை போர், போர்முனை, போர்வீரன் என்று இவ்வளவு நேரம் சொல்லிக் கொண்டிருந்ததால், அவருடைய உள்ளத்திற்குள்ளே ஏதேனும் சலனம் ஏற்பட்டிருக்குமோ, என்னவோ?...

ஜன்னல் வழியே, விழிகளைத் திருப்பி, நெடுந் தொலைவில் பார்வையை நிலைகுத்திக் கொண்டிருந்தார் அவர்...

அந்த நீண்ட நெடிய வெளியிலே, தன் மூத்த மகனின் உருவத்தை நினைவுபடுத்தி நிறுத்திக் கொண்டிருப்பவர் போலிருந்தது...

கடந்த பத்தாண்டுகளாக, 'சுந்தர்' என்ற பெயரே அந்த வீட்டுக்குள் ஒலித்ததில்லை. சுதாகரின் மூத்த மகனான சுந்தர், எந்த அளவு தந்தையை நேசித்தானோ, அந்த அளவு ரேகாவைக் காதலித்தது, அவருக்குத் தவறாகத் தோன்றியது. தன் விருப்பத்திற்கு மாறாக, ஒரு பெண்ணைக் காதலித்த மகனை அவர் மன்னிக்கத் தயாராக இல்லை.

'நீ என் மகனும் இல்லை நான் உன் அப்பாவும் இல்லை' என்று தலைமுழுகிவிட்ட பேராசிரியர், சுந்தர் என்று தனக்கு ஒரு மகன் இருந்ததையே மறந்துவிட்டார். அப்படி ஒரு மகன் இருந்ததற்கான அடையாளமே இல்லாமல், வீட்டிலிருந்த அவனுடைய படங்கள், பொருள்கள் எல்லாவற்றையும் அகற்றிவிட்டார். சுரேஷை, தன் மகன் என்று சொல்லிப் பெருமைப்பட்ட அவர், யாரிடமும் தனக்கு சுந்தர் என்ற மகன் இருக்கிறான் என்று சொன்னதே இல்லை.

தந்தையால் விரட்டப்பட்ட சுந்தர், பஞ்சாபுக்குப் போய், அங்கே எல்லைப் பாதுகாப்புப் படையில் சேர்ந்து பணியாற்றிக் கொண்டிருந்தான்.

தந்தையின் நினைவிலிருந்து தூக்கியெறியப் பட்டாலும், சுந்தருக்குத் தாயின் உள்ளம் எப்போதும் திறந்தேயிருந்தது. அப்பா இல்லாத சமயமாகப் பார்த்து, ஐந்து, ஆறு முறை அவன், அம்மாவோடு தொலைபேசியில் பேசியிருக்கிறான்.

இந்த முறை அவளே போன் செய்து, அந்தச் செய்தியைச் சொன்னதும், அவன் அதிர்ந்துபோய்விட்டான்:

''அம்மா!... அப்பாவை உடனே பார்க்கணும்னு துடிக்கிறேன், அம்மா! ஆனா, இன்னிக்கு எனக்கு ஒரு முக்கியமான கடமை இருக்கு... கார்கில், தரஸ் செக்டாரில், பாகிஸ்தானியப் படைகளின் துணையோடு, தீவிரவாதிகள் காஷ்மீருக்குள் நுழைய முயற்சி செஞ்சுக்கிட்டிருக்காங்க... அதைத் தடுக்க, நாங்கள் ஹெலிகாப்டரிலே அங்கே போகிறோம்.. அந்த செக்டாரின் ஜியாக்ரஃபி எல்லாம் நன்றாகத் தெரிஞ்சவன் நான்தான். அதனால் நான் கண்டிப்பாக அங்கே போயாகணும்... இன்னும் மூணு மணி நேரத்திற்குள்ளே அந்தச் சண்டை முடிஞ்சிடும், அம்மா!...

சண்டை முடிஞ்சதும் உடனே நான் புறப்பட்டு டில்லி வந்துடறேன்.'' என்று உடைந்த குரலில் பாசம் பொங்கப் பேசினான் சுந்தர்...

அவனுடைய துடிப்பையும், பாசத்தையும் மீனா சொல்லிக் கொண்டிருக்கும்போது, எவ்விதக் குறுக்கீடும் இல்லாமல், கணவன் கேட்டுக் கொண்டிருந்தது, அவளுக்கே வியப்பாக இருந்தது...

வாழ்க்கையின் கடைசி மணிகளில், பழைய கோபத்தை யெல்லாம் தலைமுழுகிவிட்டு, மூத்த மகனைப் பார்க்க அவருடைய உள்ளம் ஏங்குகிற ஆதங்கம், அவரது முகத்தில் படர்வதுபோல் அவளுக்குத் தோன்றியது...

சின்னத்திரையில் இந்தியா - ஜார்ஜியா ஆட்டம் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

ஜார்ஜியா நாட்டு வீரர்கள், இந்தியப் பந்து வீச்சாளர்களின் சாகஸங்களையெல்லாம் மீறி, கணிசமாக ஓட்டங்களைக் குவித்துக் கொண்டிருந்தார்கள். அதிலும் கடைசிப் பத்து ஓவர்களில், பலவீனமான பௌலர்களை அடித்து நொறுக்கி, தொண்ணூறு ரன்களுக்கு மேல் சேர்த்து, மொத்தத்தில் இருநூற்றி இருபத்தைந்து ரன்கள் எடுத்துவிட்டார்கள்.

அடுத்து, இந்தியா 'பேட்' செய்யத் தொடங்கியது.

எதிர்பார்த்ததுபோலவே, ஜார்ஜியாவின் ராபர்ட்ஸ் வீசிய பயங்கர வேகப்பந்துகள், இந்திய பாட்ஸ்மன்களைத் திணற அடித்துக் கொண்டிருந்தன. அவருடைய வீச்சில், புயல்முன் நிற்கும் வாழைமரங்கள் போல், ஐந்து விக்கெட்கள் மடமட என்று சரிந்துவிட்டன.

இருப்பினும் இந்திய வீரர்கள் தொய்வடையாமல் தொடர்ந்து போராடிக் கொண்டிருந்தார்கள். 'ரன் அவுட்' ஆக்க, ஒரு ஜார்ஜியா ஃபீல்டர் எறிந்த பந்து, அழகப்பன் என்கிற இந்திய 'பாட்ஸ்மன்'னின் முதுகில் பட்டுத் தெறிக்க, அந்த முதுகுவலியைப் பொறுத்துக் கொண்டு, தொடர்ந்து 'பாட்' செய்து கொண்டிருந்தான். அவனுடைய தளராத வீரம், பேராசிரியரின் நெஞ்சத்தை நெகிழச் செய்தது.

''சபாஷ்! அந்தத் தமிழ்நாட்டுப் பையன் எப்படி ஆக்ரோஷத்தோடு ஆடுகிறான், பார்! அவன்தான் சுத்த வீரன்: இந்திய வீரன்... அப்படித்தான் என் மகனும் அங்கே ஆடி யிருக்க வேண்டும்...'' என்று பொருமினார் அவர்.

அடுத்து, ஒரு 'பாட்ஸ்மன்' கீழே விழுந்து முழங்காலில் பலத்த அடி இருப்பினும் மனம் தளராமல் 'பேட்' செய்து கொண்டிருந்தான்...

பரபரப்பின் உச்சக்கட்டத்தில் - எவ்வளவோ நம்பிக்கை யோடும் முயற்சியோடும் விளையாடியும், இந்தியா இரண்டு ரன்களில் தோற்றுப்போய்விட்டது.

அதைப் பார்த்ததும் சுதாகர் மேலும் துடித்துப் பொருமத் தொடங்கினார்.

''பார்த்தியா, மீனா!... சுரேஷ் இருந்திருந்தால், இந்தத் தடவை இந்தியா தோற்றிருக்காது... நிச்சயம் ஜெயித்திருக் கும் - இது என்னோட நினைவு மட்டுமில்லை மீனா!... இப்போ டி.விக்கு முன்னாலே உட்கார்ந்து பார்த்தாங்களே, கோடிக் கணக்கான இந்தியர்கள் - அவங்க எல்லாரும் இந்தியாவின் தோல்வியைப் பார்த்து எவ்வளவு வேதனைப் பட்டிருப்பாங்க?... வேதனைக்குப் பிறகு, சுரேஷை நினைச்சுப்பார்க்க மாட்டாங்களா?... மீனா! நம்ம சுரேஷை 'ரோல் மாடலாக', ஆதர்ஸமாக, நினைச்சுப் போற்றிப்

பாராட்டிக்கிட்டிருக்கிற லட்சக்கணக்கான இளைஞர்களை, அவன் ஏமாத்திட்டான்...'' என்று துயரம் தோய்ந்த குரலில் முணுமுணுத்தார் அவர்...

''மாமா!... உங்க மகன் இந்த 'மேட்ச்'சிலே கட்டாயம் விளையாடியிருக்கணும்னு நீங்க நினைக்கிறீங்களே - அப்படி மற்றவங்க நினைக்கலையே?'' என்று, தன் கணவனுக்காக வாதாடத் தொடங்கினாள் நிஷா.

''மற்றவங்க நினைக்கமாட்டாங்கதான், நிஷா...! ஏன்னா, நம்ம இந்தியாவிலே சிந்திக்காத ஆட்டு மந்தைகள்தாம் அதிகம்... பெர்னார்ட் ஷா சொன்னாரே, பதினோராயிரம் முட்டாள்கள்னு அந்த முட்டாள்கள் இவ்வளவு தூரம் நினைச்சுப் பார்க்கமாட்டாங்கதான்... ஆனா, நான் சிந்திக்கத் தெரிந்தவன்; நான் இதைச் சிந்திச்சுப் பார்க்கிறேன் -'' என்று அவர் படபட என்று பேசிக் கொண்டிருக்கும்போது, டெலிபோன் மணி ஒலித்தது.

நிஷா, போனை எடுத்துப் பேசினாள்.

அதில் வந்த செய்தி, அவளை நிலைகுலைய வைத்தது. கண்களில் நீர் கொப்புளிக்க, முகமெல்லாம் வேதனை படர, போனை வைத்தாள்.

திடுக்கிட்ட மீனா, ''என்ன நிஷா! என்ன செய்தி? யார் பேசினது?'' என்று படபடப்புடன் கேட்டாள்.

''அத்தை!... உங்க மூத்த மகன்... சுந்தர்... காஷ்மீரிலே... சண்டையிலே... கொல்லப்பட்டார்னு... செய்தி -'' என்று அவள் முடிக்கும் முன்பே, ''சுந்தர்!'' என்று கதறியழுதபடி கீழே சரிந்து விழுந்தாள் தாய்.

ஒளிமங்கிக் கொண்டிருக்கும் விழிகளில் கண்ணீர் கசிய, மெல்ல நிமிர்ந்து சுற்றிலும் பார்த்த சுதாகர், தன் மனைவியின் முகத்தில், பார்வையை நிலைநிறுத்தினார்:

''மீனா!... மீனா!... அவன்தான்... அவன்தான்.. சுந்தர் தான் என் மகன்... நாட்டுக்காகத் தன் உயிரைத் தியாகம் செய்த அந்த சோல்ஜர்தான் என் மகன்... அந்தச் சிப்பாயை மகனாகப் பெற்றதற்கு நான் பெருமைப்படறேன்... எஸ்... ஐயாம் ப்ரவ்டு ஆஃப் ஹிம்... மீனா!... நிஷா! அவனுடைய போட்டோவைக் கொண்டு வாங்க... சீக்கிரம்!... நான் அவனைப் பார்க்கணும்... நான் சாவதற்கு முன்பு அவனைப் பார்க்க வேணும்...'' என்று இதயம் படபடக்க. உதடுகள் துடிக்கப் பேசினார் சுதாகர்.

மீனா கீழே ஓடிப்போய், சுந்தரின் போட்டோ ஒன்றைக் கொண்டு வந்து, கணவனின் கையில் கொடுத்தாள்.

அந்தப்படத்தை வாங்கி, நீர் நிறைந்த கண்களால் அதைக் கூர்ந்து பார்த்தபடி, நெஞ்சிலே வைத்து அணைத்துக் கொண்டார் சுதாகர்.

கீழே - ஏற்பட்ட ஆரவாரம், சுரேஷின் வருகைக்குக் கட்டியம் கூறியது.

பரபரப்பாக மேலே வந்து கொண்டிருந்தான் சுரேஷ்.

அவனைப் பார்த்ததும், சுதாகர் கடுமையாகச் சண்டை போடப் போகிறாரே என்று மீனாவும் நிஷாவும் பயந்து நடுங்கியபடி, அவரைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் பயந்தபடி ஒன்றும் நடக்கவில்லை -

''அப்பா!... அப்பா!'' என்று பாசம் பொங்கக் கூப்பிட்டுக் கொண்டு வந்த சுரேஷின் குரலை, தன் காதில் வாங்கிக் கொள்ளாமலே, சுந்தரின் தந்தை அமரராகிவிட்டார்...

# ஒரு துண்டுக் கடிதம்

ஆர்வி

குமரேசனுக்கு உடல் வேதனையைவிட உள்ளத்து வேதனைதான் அதிகமாக இருந்தது. படுக்கையில் இருப்புக் கொள்ளாமல் அப்படியும் இப்படியும் புரண்டான். உதடுகள் கோணலாக நெளிந்தன. கண் பார்வையில் சுவரிலிருந்த கடிகாரம் தென்பட்டது. அவன் அந்த இடத்தை விட்டு விடைபெறுவதற்கு இன்னும் இரண்டு மணி நேரமே இருந்தது.

அவன் அங்கே வந்து சேர்ந்து கிட்டத்தட்ட மூன்றரை மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டன. முதல் மாதமெல்லாம் அவனுக்குத் தன் நினைவேயில்லை. உயிருடன் இருப்பது கூடத் தெரியாமல் நாள்கள் ஓடிவிட்டன. பிறகுதான் போதை தெளிவடைவது போல அவனுக்குச் சுய நினைவு வரத் தொடங்கியது. கால்களில் பெரிதாக அடிபட்டு, ஆஸ்பத்திரிப் படுக்கையில் போடப்பட்டிருக்கிறோம் என்பது தெரிந்தது. படுக்கைக்கு அருகில் பார்வதி, இரவு-பகல் எந்த நேரமும் பசி, தாகம் பார்க்காமல் உட்கார்ந்திருக்கிறாள் என்று தெரிந்து கொண்டான். தன்னுடைய காய்ப்பேறிய கையை, அவள் தன் பஞ்சு போன்று மிருதுவான கைகளில் எடுத்து வைத்துக்கொண்டிருப்பதை உணர்ந்து பெரும் ஆறுதல் அடைந்தான்.

கண்ணிமைகள் மூடியிருந்தன. அவற்றின் கடைவழியே கண்ணீர் கசிந்து கொண்டேயிருந்தது. பார்வதி தன் புடைவைத் தலைப்பினால் அந்தக் கண்ணீரை ஒற்றி ஒற்றி விட்டாள்.

அந்தரங்கமான குரலில் அவள். 'ரொம்ப வலிக்குதா?' என்று கேட்டாள்.

அவன் ''இல்லை'' என்று தலையசைத்தான்.

ஆனால் அவள் எந்த வேதனையைக் கண்டாள்? ஒரு கால் முழங்காலுக்குக் கீழே இல்லை. மற்றொரு கால், கணுக்காலுக்குக் கீழே இல்லை. ஆஸ்பத்திரி டாக்டர்கள் இரண்டையும் வெட்டி எடுத்துவிட்டார்கள். இல்லாவிட்டால் அவன் உயிர் பிழைத்திருக்கவே முடியாதாம்!

கால்களை இப்படி வெட்டியெடுத்து அவனை உருக்குலைத்திருப்பதைவிட, அவனைச் சாகவிட்டிருந்தால் எத்தனை பெரிய நன்மையாகப் போயிருக்கும்!

குமரேசனுக்கு எந்த வேதனையும் பெரிதில்லை. அவனால் தாராளமாகப் பொறுத்துக் கொள்ள முடியும். ஆனால், தன்னால் பார்வதி படப் போகிற வேதனையை எண்ணியபோது அவனால் பொறுக்க முடியவில்லை.

இந்த வேதனைக்குச் சிகிச்சை செய்யக்கூடிய டாக்டர் யார்? உள்ளத்துக்கு வைத்தியம் செய்ய முடியாதவர்கள், உயிரைப்பற்றி மட்டும் கவலைப் படுவானேன்?

பார்வதியின் மிருதுவான கையை அவனுடைய உள்ளங்கை சிறிது அழுத்திவிட்டது. வாயைத் திறந்து சொல்ல முடியாத செய்தி ஒன்றை வைத்துக் கொண்டு குழம்புவது போல் நடுங்கின, அவன் விரல்கள்.

நான்கு மாதங்களுக்கு முன் தன் கையை முதல் முதலாகப் பிடித்தபோது இந்த விரல்கள் இப்படித்தான் நடுங்கின என்பது அவள் நினைவுக்கு வந்தது.

அவளால் பொறுக்க முடியவில்லை.

புடைவைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, ''என்ன?'' என்கிற மாதிரி பார்த்தாள்.

''பார்வதி! எத்தனை நாள்... எத்தனை நாள் நீ இப்படி உட்கார்ந்திருப்பே?''

அவள் மெல்லச் சிரிக்க முயன்றாள்.

''இது என்ன கவலை இப்ப?''

நினைவு திரும்பி, நிலைமை புரிந்ததிலிருந்து குமரேசன் அவளிடம் இதையே திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தான்.

அவளிடம் மட்டுமின்றி, அவனுடைய நண்பன் கோவிந்தனிடமும் இந்த 'எத்தனை நாள்' பல்லவியை அவன் விடவில்லை.

குமரேசன் மின்சார யந்திரத்தில் அடிபட்டு விழுந்ததும், அவன் தான் முதலில் ஓடி வந்தான். அவன்தான் சரியான சமயத்தில் ஆஸ்பத்திரியில் சேர்க்க வைத்தான். அவன்தான் குற்றம் குமரேசனுடையதில்லை என்று நிர்வாகத்துக்கு நிரூபித்துக் காட்டினான். வைத்திய உதவிக்கும் மற்ற செலவுகளுக்கும் தட்டுப்பாடில்லாமல் பணம் கிடைப்பதற்கு வழி செய்தவனும் அவனேதான்.

எந்த விஷயத்துக்குப் போனாலும், அதில் தோல்வி என்று அவன் திரும்பியதே இல்லை. அப்படிப் பட்டவனால் கூட குமரேசனின் இந்தப் பல்லவிக்கு என்ன பதில் சொல்வது என்று புரியவில்லை.

''கோவிந்தா! என்னாலே எத்தனை பேருக்குக் கஷ்டம்?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லை. இது அவங்க கடமை.''

''யாரைச் சொல்றே, கடமைன்னுட்டு?''

''நர்ஸ்களைத்தானே சொல்றே நீ?''

''சரியாப் போச்சு போ! உனக்கு.. பார்வதிக்கு... இன்னும்... உங்களாலே..''

''எங்களுக்கு மட்டும் கடமையில்லையா? இதெல்லாம் என்ன பெரிய கஷ்டம்?''

''என்ன அப்படிச் சொல்றே? கஷ்டம் தான். கடமையாவது ஒண்ணாவது?''

''....''

''என் நிலைமை எப்படி ஆயிட்டுது, பார்த்தியா? ஆயுசுக்கும் இனிமே...''

''சரி விடு; வீணா இப்ப மனசைப் போட்டுக் குழப்பிக்காதே.. நாளைக்குப் பன்னிரண்டு மணிக்கு டிஸ்சார்ஜ். உனக்கு விடுதலை!''

பார்வதி இதைக் கேட்டதும் துள்ளிக் குதிக்காத குறைதான். குமரேசனின் கையை அர்த்த புஷ்டியோடு அழுத்தினாள். சங்கேதமாக நகங்களை வருடினாள்.

கோவிந்தன்தான் டாக்டரிடம் போய் டிஸ்சார்ஜ் செய்ய ஏற்பாடு செய்து கொண்டு வந்திருந்தான்.

''நாளைக்கு நீ வருவியா?''

''நான் வராமே எப்படி வீட்டுக்குப் போறது?''

''டியூட்டி இல்லையா?''

''இருந்தா என்ன? பர்மிஷன் வாங்கிக்கிட்டு வர வேண்டியதுதான், வழக்கம் போல! பர்மிஷன் வாங்கிற தாவது? நான் போய் நின்னதுமே, 'போ போ! போயிட்டு வா!'ன்னுடுவாரு ஜே.ஈ. அதனாலே நீ ரெடியா இரு!''

குமரேசன் சூனியத்தைப் பார்த்தபடி இளக்காரமாகச் சிரித்துக் கொண்டான். அவன் ரெடியாக இருப்பது என்ன? இல்லாவிட்டால்தான் என்ன? போட்ட இடத்தில் படுத்துக் கிடக்கிற நிலையில் இருக்கும் அவன் ரெடியாக இருப்பதாவது?

அந்த இளக்காரச் சிரிப்பைக் கவனித்த பார்வதியும் கோவிந்தனும், ஒரு நொடி ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். குமரேசன் இப்படி எந்தச் சிறிய விஷயத்துக்கும் அடிக்கடி சிரித்துக் கொண்டிருந்தான். அதை இருவரும் கவனித்துக் கொண்டுதான் இருந்தார்கள். அவன் என்ன நினைத்தாலும் சரி; அவர்கள் இருவருமே மேலே ஆக வேண்டியதில் கண்ணாக இருந்தார்கள்.

''சரி, நேரமாயிட்டுது; கிளம்பு! இருட்டிப் போச்சு!'' என்றான் குமரேசன்.

கோவிந்தனுக்குச் சொல்வதாக நினைத்துப் பார்வதி பேசாமல் இருந்தாள்.

''உன்னைத்தான் பார்வதி!''

''எனக்கு என்ன வந்தது. புதுசா இன்னிக்கு? சிறிது நேரம் பொறுத்துப் போய்க்கிறேன். இதைவிட அதிக நேரங்கழிச்சு நான் போனதில்லையா?''

''இன்னிக்கு ஒரு நாள் நேரத்தோடுதான் போயேன். நாளையிலிருந்து கவலையே இல்லை. இப்பத் துணை

இருக்கிறப்ப போகலாமில்லையா?'' - குமரேசன் கொஞ்சம் அழுத்தமாகவே சொன்னான்.

நோயாளியுடன் யாரேனும் ஒருவர் கூடவே இருந்து தான் ஆக வேண்டும் என்ற நிலை மாறியதிலிருந்து, பார்வதி, காலை, மாலை இரண்டு வேளைகளிலுமாக வந்து போய்க் கொண்டிருந்தாள். அவன் கண்களும் அவள் வருகிற வழியை ஆவலோடு பார்த்துக் கொண்டுதான் இருக்கும். குறிப்பிட்ட நேரத்துக்கு முன்னாலேயே வெளுத்துச் சிவந்த முகத்திலே முறுவல் நெளிய, கண்களிலே அன்பும் அக்கறையும் பளிச்சிட, கையிலுள்ள துணிப் பையிலே எதையாவது எடுத்துக் கொண்டு அவள் விரைந்து வருவாள். வந்த பரபரப்பிலே அவளுக்கு மூச்சு வாங்கும். இள மார்பு ஏறி இறங்குவதை அவன் பரிவோடு கவனிப்பான். போகும் போது வேண்டாதவற்றை எடுத்துப் பையில் போட்டுக் கொண்டு, பார்வையிலே ஏக்கத்தையும் பிரிவுத் துன்பத்தையும் சுமந்து கொண்டு, குறிப்பிட்ட நேரத்துக்குக் கால் மணி நேரம் கழித்துத்தான் தயங்கித் தயங்கி நடப்பாள். அவள் இருக்கும்வரை எல்லாம் இருப்பதுபோல இருக்கும். அவள் போன பிறகு எல்லாமே அவளோடு போய்விட்ட மாதிரி ஆகிவிடும்.

அப்போதெல்லாம் அவளுக்குத் துணை வேண்டாமா என்று அவன் கவலைப்பட்டதேயில்லை. அவளும் கவலைப்பட்டதில்லை. இன்றுமட்டும் அந்தப் பேச்சு எங்கே வந்தது? துணையாமே துணை! யாருக்கு யார் துணை?

''ம்.. ம்.. அவன் சொல்றதும் சரிதான். கிளம்புங்க உடனே...'' என்ற கோவிந்தன், ''எல்லாம் அவன் காரணத்தோடுதான் சொல்றான். பை இன்னிக்குப் பெரிசா இருக்கில்லையா? உங்களாலே தூக்க முடியுமா? இப்படிக்

கொடுங்க அதை'' என்று பையை அவளிடமிருந்து வாங்கிக் கொண்டான்.

''வேணாம் வேணாம்.. இது என்ன பெரிய கனம்?'' என்று பையைத் திரும்ப வாங்கப் பார்த்தாள்.

''இருக்கட்டும்; புறப்படுங்க!''

அவள் தயங்கினாள்.

''சரி, சரி; நீ புறப்படு!'' என்றான் குமரேசன்.

அந்த ஒரு நொடியில் மூவருமே சொல்லொணாத உணர்வையடைந்தார்கள். அவர்கள் இருவரும் போய் வெகு நேரம் ஆன பிறகு கூட, குமரேசனால் கண்களைத் திறந்து வெளிச்சத்தைப் பார்க்க முடியவில்லை. இதைவிடப் பெரிய கொடுமை வேறென்ன இருக்கிறது?

என்னதான் எதிர்பார்த்ததைவிட லட்சக்கணக்கில் நஷ்ட ஈட்டுப் பணமும் மற்ற வகைப் பணமும் வந்தாலும், ஊனமாகிவிட்ட வாழ்க்கையை அவனால் எப்படிச் சகிக்க முடியும்?

இதோ, இப்போது இன்னும் சில நிமிஷ நேரத்தில் கோவிந்தன் வந்து விடுவான். அதற்குப் பிறகு ஒரு புதுவாழ்க்கை - நரக வாழ்க்கையாகத்தான் இருக்கப் போகிறது. அவனுக்கு அதில் சந்தேகமேயில்லை. அந்த வாழ்க்கை வாழ்வதைவிட உயிரை விட்டுவிடுவது எவ்வளவோ நல்லதாக இருக்கும். அவனுக்குக் கோவிந்தன் முகத்தில் விழிக்கக்கூட வேதனையாக இருந்தது.

டிஸ்சார்ஜ் செய்ய வந்த டாக்டர்கள் பரிவாரத்தோடு நல்ல வேளையாகக் கோவிந்தன் மட்டும் தான் வந்தான். பார்வதி வரவில்லை.

ஆனால் இப்போது அவளைக் காணாமல் குமரேசனின் கண்கள் அலைபாய்ந்தன. படுக்கையில் அமர்ந்தபடி நர்ஸ்கள், மற்றுமுள்ள சிப்பந்திகள், வார்டிலுள்ள நோயாளிகள் முதலியோரிடம் அவன் விடைபெற்றுக் கொண்டபோது பார்வதி பக்கத்தில் இல்லாதது ஊனத்தைவிடப் பெரிய ஊனமாகத் தோன்றிற்று.

''என்னாதி இதி - இன்னிக்குப் போய் பார்வதியம்மா வைக் காண்றதில்லே?'' என்று உடைத்தே கேட்டுவிட்டாள் ஸ்டாஃப் நர்ஸ் பாலி சைமன்.

இப்பொழுதும் கோவிந்தன் தான் அதற்கு விளக்கம் சொல்ல வேண்டியிருந்தது.

''அம்மா வந்துட்டா, வீட்டிலே வேண்டிய ஏற்பாடுகளை, யார் செய்யறது? வீட்டைப் பூட்டிக்கிட்டு வந்துடமுடியுமா?''

''ஓ. அதுதன்னே கேட்டது - சரிதான்!''

குமரேசனுக்கும் அதுவே சமாதானமாக இருந்தது. அதுவே உண்மையாக இருக்கட்டும் என்று கண்களை மூடி வேண்டிக் கொண்டான்.

அவன் பிரார்த்தனை வீண் போகவில்லை. செக்கச் சிவந்த முகத்தில் பளிச்சென்று குங்குமமும் பரபரப்புமாய் அவள் எத்தனை ஆவலோடு குமரேசனை வீட்டுக்கு அவர்கள் அழைத்து வருவதை எதிர்பார்த்திருந்தாள்! கோவிந்தன் அழைத்து வரப் போயிருக்கும்போது, குறித்த நேரத்தில் வருவதற்கும் ஒரு சங்கடமும் இருக்காது என்று அவளுக்கு ஒரு நம்பிக்கை.

அன்று குமரேசனைப் பார்க்க வந்தவர்கள் - அவர்களில் சிலர் வேடிக்கை பார்க்கிறதுக்காக வந்தவர்களாய் இருந்

தாலும் - அத்தனை பேருக்கும் அவள் அலுக்காமல் சலிக்காமல் பதில் சொல்லி, உபசாரம் செய்து அனுப்பினாள்.

அன்றிரவு வெகு நேரம் கழித்து அவள் எல்லா வேலைகளையும் முடித்து விட்டு, அவன் கால்மாட்டுக்கு அருகே வந்து உட்கார்ந்தபோது குமரேசனுக்குக் கோபம் தான் வந்தது.

''என்னவோ போல இருக்கீங்களே, ஏன்?'' என்று கவலையோடு விசாரித்தாள் பார்வதி.

''ஊரிலே இவ்வளவு பேர்தானா, இன்னும் யாராவது பாக்கியிருக்காங்களா, வந்து வேடிக்கை பார்க்க?''

பார்வதி களைத்துப் போயிருந்தாலும் சிரிக்க முயன்றாள்.

''என்ன செய்யிறது? வராதே என்று யாரிடம் சொல்ல முடியும்?''

''எல்லாருக்கும் நான் இப்படி ஒரு வேடிக்கைப் பொருளாயிட்டேனே! இல்லையா?''

''அப்படியெல்லாம் நினைக்காதீங்க'' என்றவளுக்குத் திடீரென்று அவன் கால் நினைவு வந்தது. உடனே இடுப்பருகே நகர்ந்து உட்கார்ந்து கொண்டாள். அவன் பெருமூச்சு விடுவதைக் கண்ட அவளுக்கு ஆறுதலான சொற்கள் எதுவுமே அகப்படவில்லை.

''நீ என்ன நினைக்கிறே?''

''எதுக்கு?''

''எல்லாரும் என்னை மட்டுமா பாக்க வந்தாங்க?''

''பின்னே?''

''இல்லை. எல்லாரும் உன்னைத்தான் எப்படி யிருக்கேன்னு பார்க்க வந்திருக்காங்க!''

பார்வதிக்குச் சுருக்கென்றது. அவன் சொல்வதில் உண்மையிருக்கிறது என்று அவளுக்குப் பட்டது.

அவள், வந்தவர்கள் ஒவ்வொருவரையும் தனித்தனியாக நினைத்துப் பார்த்தாள். அவர்கள் என்ன நினைப்போடு வந்திருப்பார்கள் என்பதையும் எண்ணிப் பார்த்தாள். குமரேசன் சொன்னது மிகவும் பொருத்தமாகப் பட்டது.

அவர்களில் சிலர் சில மாதங்களுக்கு முன்பு - அதாவது அவளுடைய கல்யாண நாள் வரை - அவளுக்காக 'நான் - நீ' என்று போட்டி போட்டிருக்கிறார்கள். அவர்களில் படித்தவர்கள், பணம் படைத்தவர்கள், நல்ல வேலையில் இருப்பவர்கள் என்று சிலர், அவளிடமே தகாத முறையில் நெருங்கியிருக்கிறார்கள். சிலர் அவளுடைய பாட்டியிடமே பெண் கேட்டு வந்திருக்கிறார்கள். அத்தனை பேரையும் அவள் பிறருக்குத் தெரியாமல் ஒவ்வொரு வகையில் மட்டம் தட்டி ஒதுக்கித் தள்ளியிருக்கிறாள்.

கடைசியில் எல்லாரையும் விட்டு விட்டு, குமரேசனுக்கு மாலையிடச் சம்மதிப்பாள் என்று குமரேசனே கூட எதிர்பார்க்கவில்லை. எல்லாருக்குமே ஆச்சரியம். 'போயும் போயும் இந்தக் குமரேசனா இவளுக்குக் கிடைச்சான்!' என்று கேலி செய்து சிரித்தார்கள். இது அவளுக்கே தெரியும்.

குமரேசன் ஒரு தனிப் போக்குத்தான். அதிலும் ஒரு முரட்டுப் போக்கு. ஆளாவது நல்ல லட்சணமாக, நாகரிகமாக இருப்பானா? அதுவும் இல்லை. பின்னே பார்வதி அவனிடம் எந்த நல்ல அம்சத்தைக் கண்டு கழுத்தை நீட்டச் சம்மதித்தாள்?

''எல்லாம் சரி; எல்லாரையும் விட்டுட்டு என்னைக் கட்டிக்க எப்படிச் சம்மதிச்சே?'' என்று அவன் கேட்டான்.

''அதான் எனக்கே தெரியலை. என் கண்ணையும் நெஞ்சையும்தான் கேக்கணும்!''

குமரேசனுக்கு அந்தப் பேச்சுச் சாமர்த்தியமெல்லாம் இல்லை. ஆனால் ஒன்றுமட்டும் அவன் வரையில் நிச்சயமாகத் தெரியும். அவளிடம் தன்னளவுக்கு யாராலும் ஆசை, அன்போடு இருக்க முடியாது என்று அவன் உறுதியாக நினைத்தான். அப்படி ஒரு முரட்டு அன்பு. ஈடிணையில்லாத அன்பு; ஆசை!

கோவிந்தனுக்குக்கூட அந்த வகையில் அவனிடம் கொஞ்சம் பொறாமைதான். இதை அவன் வெளியில் காட்டிக் கொள்ளவில்லையே தவிர, குமரேசனுக்கு நன்றாகத் தெரியும். அந்தக் கோவிந்தனுக்கு அடிக்க வேண்டிய பரிசு மாறிப் போய்விட்டது.

'ஏ குமரு! என்ன இருந்தாலும் நீ பெரிய அதிர்ஷ்டக்காரன்!' என்றான் கோவிந்தன்.

''என்னடா இது! திடீர்னு இப்படிச் சொன்னா, என்னடா வந்துட்டுது எனக்கு இப்ப?''

''என்ன வந்துட்டுதா? அதிர்ஷ்டப் பிரைஸ் அடிச்சுட்டு என்ன வந்துட்டுதுன்னு என்னைக் கேக்கறியே. அதை வந்து நான் சொல்லணுமா?''

இப்படிச் சொல்லிவிட்டுக் கோவிந்தன் அவசரமாகப் போய்விட்டான். பிறகுதான் அவன் சொல்ல வந்தது குமரேசனுக்குப் புரிந்தது.

ஒரு நாள், வழியோடு போன அவனை யாரோ கையைத் தட்டிக் கூப்பிட்டார்கள். கூப்பிட்டவள் பார்வதியின் பாட்டிதான்.

''என்னையா கூப்பிட்டீங்க?''

''ஆமா, தம்பி! அன்னம்மா பேரன்தானே நீ?''

''ஆமா பாட்டி!''

''வந்து இப்படி உக்காரேன்!''

''இருக்கட்டும்; சொல்லுங்க!''

''ஒண்ணுமில்லை. வந்து என் வீட்டுப் பேத்தி பொண்ணைப் பாத்திருக்கியா நீ?''

குமரேசனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அந்தப் பெண்ணையும் தெரியும். அவளிடம் சிலர் பேச்சுக் கொடுத்து 'வாங்கிக் கட்டிக்' கொண்டிருக்கிறார்கள் என்பதும் தெரியும்.

''தெரியுமே - பார்த்திருக்கிறேனே - ஏன் தெரியாது?''

''உன்னையும் அது பாத்திருக்குதாம். அன்னம்மாவை ஒரு நாளு வாசல்வரைக்கும் கொண்டாந்து விட்டுப்புட்டு, தெருவோட போயிட்டியாமே.''

''அவசரம், போயிட்டேன்.''

''போவட்டும். அன்னம்மாவும் நானும் சின்னப் புள்ளையிலேருந்து ஓடி ஆடி விளையாண்டவங்க. உசிருக்கு உசிராப் பழகினவங்க. ஆச்சா! இப்ப எனக்கோ வயசாயிடுச்சு. இனிமே எது எப்படியோன்னு நாளை எண்ணிக்கிட்டுத்தான் இருக்கேன், போயேன். திடீர்னு அப்படி எதுனா ஒண்ணு ஆயிடுச்சுன்னா. ஆயி, அப்பன் இல்லாத எம் பேத்திக்கு யாரும் துணையில்லையேன்னு ஆண்டவனை வேண்டிக்கிட்டிருக்கேன். உன்னைக் கண்டதும் எனக்கு அன்னம்மா நினைவு திடீர்னு வரவேதான் கூப்பிட்டேன். பொட்டைப் புள்ளை பாரு, தனக்கு யாரும் துணையில்லையேன்னு அது கண் கலங்காமெ இருக்கணும்

பாரு - அதைச் சொல்லலாம்னு தோணிச்சு, சொல்லிப் புட்டேன்'' என்றாள் பாட்டி.

கதவுக்குப் பின்னாலிருந்து இவர்கள் பேசுவதை அந்தப் பேத்தி கேட்டுக் கொண்டிருந்ததையும் அவன் கவனித்தான். பாட்டி ஏதோ பழைய அபிமானத்தில் இதையெல்லாம் சொல்கிறாள் என்று, அவன் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை.

பாட்டி கவலைப்பட்டபடி 'அவள் கணக்கு' அதற்கடுத்த மாதமே தீர்ந்துவிட்டது. பார்வதி தனியாகிவிட்டாள். சொந்தத்தில் வீடு இருந்தது; பாட்டி சேமித்து வைத்திருந்த ரொக்கமும் கணிசமாக இருந்தது. ஆனால் அவளை ஒருவன் கையில் ஒப்படைக்கத் தான் சொந்த பந்தம் என்று யாரும் இல்லை.

பேத்தியின் கல்யாண விஷயமாய், பாட்டி என்ன அபிப்பிராயம் கொண்டிருந்தாள் என்று எப்படியோ அக்கம்பக்கத்தாருக்குத் தெரிந்து, குமரேசனுக்குப் பேசி முடிப்பது என்று தீர்மானித்தார்கள்.

''ஏம்மா, உனக்குச் சம்மதம்தானா?'' என்று பார்வதியைப் பார்த்துக் கேட்டாள், ஒருத்தி.

''என்ன கேள்வி கேக்கறே அதுகிட்டே போயி? அதுவே பாட்டியின் அபிப்பிராயம்னு சொன்னப்பவே, அதோட சம்மதம் தெரியலையா? வீணாக் கேட்டுக் கிட்டிருக்கியே!'' என்றாள் அடுத்த வீட்டுக்காரி.

''இருந்தாலும் அவ வாயாலே சம்மதம்னு வந்துடட்டுமே.. என்னம்மா கண்ணு, உனக்கு அவனைக் கட்டிக்க இஷ்டந்தானா?''

பார்வதியின் முகம் குப்பென்று சிவந்து போயிற்று. சம்மதத்துக்கு அறிகுறியாக அவள் மெல்லத் தலையை அசைத்தாள்.

இந்த விவரமெல்லாம் தெரிந்துதான் கோவிந்தன் பிரைஸ் அடித்து விட்டதாகச் சொல்லிவிட்டுப் போகிறான் என்பது குமரேசனுக்குப் புரிந்தது.

குமரேசனுக்குக் கல்யாணமான பிறகுகூட எல்லாம் கனவு போலத்தான் இருந்தது. யாருக்குமே எட்டாத கொம்பாக இருந்த பார்வதி, அவனிடம் தானாக எப்படித் தணிந்து போனாள்? இப்படி அவன் அதிசயப்பட்டது கிடக்கட்டும்; ஊரே இப்படித்தான் அதிசயப்பட்டது. ஆற்றாமையால் வெம்பி வெடித்தது.

குமரேசன் நன்றாக நினைத்துப் பார்த்தான். அன்று அவன் அதிர்ஷ்டத்தைப் பற்றிச் சொல்லி விட்டுப் போனதிலிருந்து கோவிந்தன் அவன் கண்ணிலேயே படவில்லை.

பிறகு அந்தச் சம்பவத்தின்போது தான் -

அந்த விபத்துக்குக்கூட ஊர் ஓமல்தான் காரணமாக இருந்திருக்கும் என்று சிலர் சொன்னார்கள். இல்லாவிட்டால் குமரேசனா ஏமாந்துபோய் மெஷின் சக்கரத்தில் மாட்டிக் கொள்வான்? அதுகூடச் சரியில்லை. பொறாமை வெடித்ததுபோல, யந்திரத்தில் ஏதோ ஒரு மரை படீரென்று வெடித்துத் தெறித்தது. அவன் சட்டென்று குனிந்து உட்காரப் போக... கீழேயிருந்த எண்ணெய்ப் பிசுக்கில் பூட்ஸ் கால் வழுக்கிவிட... சக்கரம் ஒன்றில் ஒரு கால் அகப்பட்டுக் கொண்டுவிட்டது. மறுகால் உதைத்துக் கொள்ளப் போய் அதுவும் ஊனமாகிவிட்டது.

கோவிந்தன் சட்டென்று மின்சாரத்தை நிறுத்திவிட்டு ஓடி வந்தானோ, அவன் உயிர் பிழைத்தானோ? இல்லா விட்டால்?

அவன் நல்லது செய்தானா, தீமை செய்தானா?

இந்தமாதிரி நிலையில் அவன் உயிர் பிழைத்திருந்து என்ன பயன்? இப்படி எல்லாரும் வந்து வேடிக்கை பார்த்து விட்டுப் போகவா அவன் பிழைத்துக் கொண்டான்? எல்லாரும் பார்வதியைப் பார்த்து பரிதாபப்படவா அவன் தன் உயிரைக் காப்பாற்றினான்?

இன்று அவன் மனத்தில் நன்றி சுரப்பதற்குப் பதில் கோவிந்தனிடம் கொள்ளைக் கோபம்தான் வெறுப்பாக வந்தது.

ஆனால் அதே சமயத்தில் பார்வதியின் நெஞ்சில் நன்றியுணர்வு பெருகி வழிந்தது.

வேலை நேரத்தில் உடல் ஊனமாகி விட்டதற்காக ஒரு பெரிய நஷ்ட ஈட்டுத் தொகை வாங்க அந்தக் கோவிந்தனே காரணமாக இருந்தான். திடமாக இருந்து ஆயுசு முழுக்க உழைத்தாலும் அத்தனை பெரிய தொகை கிடைத்திராது. நியாயமாகக் கிடைக்க வேண்டியதைப்போல் கிட்டத்தட்ட இரண்டு மடங்குத் தொகை, லட்சக் கணக்கில்.

பார்வதி இதை நன்றிப் பெருக்கோடு அவனிடம் குறிப்பிட்டபோது, குமரேசனால் அதைக் கொண்டாட முடியவில்லை. காரணம் கோவிந்தன் மன்றாடி வாங்கிக் கொடுத்தது, அவனைப் பார்த்துவிட்டுப் போக வந்த வர்களின் மனத்தில் ஒரு பொறாமையை ஏற்படுத்தி யிருப்பதை அவனால் உணர முடிந்ததால்தான்.

''கவலைப்படாதே, குமரேசா! பணத்தை வாங்கிக் கொடுத்த மாதிரி, கால்களுக்கும் கோவிந்தன் ஏதாவது ஏற்பாடு செய்துவிடுவான்!''

''கோவிந்தன் வந்து கவனிச்சுக்கிறப்ப என்ன கவலை உனக்கு?''

இதையெல்லாம் கேட்கும்போது அவனுக்கு, தான் ஒரு வேடிக்கைப் பொருளாகி விட்டதுடன், பரிதாபத்துக்குரிய பாத்திரமாகவும் ஆகிவிட்டதுபோல் அவமானமாக இருந்தது.

திருவிழாக் கூட்டத்தில் அருவருப்பைத் தரும் விநோதப் பிறவி ஒன்றைப் போட்டுக் கொண்டு துணியை விரித்தால் எத்தனை காசு வந்துவிழும்? இந்த நஷ்டஈட்டுப் பணம் அந்தக் காசுகளைப் போலத்தான் அவனுக்குத் தோன்றியது.

அதற்கு நேர் மாறாக, பார்வதியின் மதிப்பில் கோவிந்தன் நாளுக்கு நாள் உயர்ந்து கொண்டிருந்தான். நோயாளியை வைத்துக் கொண்டு எந்த நேரமும் பாடுபட வேண்டியிருந்த அவளுக்கு எந்தப் பிரச்னையையும் கண்ணில் காட்டாமல் அவன் உதவிய அருமையை அவள் தன் கணவனிடம் சொல்லிச் சொல்லி மாய்ந்து போனாள்.

கோவிந்தன் வேளை தவறாமல் வந்து போவதையும், நடக்க வேண்டியதையெல்லாம் அக்கறையோடு கவனிப்பதையும், பார்க்கிறவர்கள் என்ன நினைப்பார்கள் என்பதைப்பற்றி அவள் சிறிதும் கவலைப்படவேயில்லை. கோவிந்தன் எந்தவிதக் களங்கமும் இல்லாமல் நடந்து கொள்வதாகவே அவளுக்குப் பட்டது.

''பாவம், உங்க ஃபிரெண்டு, அவர் மட்டும் இல்லைன்னா என் கதி என்ன ஆயிருக்கும்னு கொஞ்சம் நினைச்சுப் பாருங்க. உங்களுக்காக அவர் உசிரைத்தான் விடறார்!''

என்றாள் பார்வதி, குமரேசனிடம் இரவு படுக்கப் போகும்போது.

''இதோபாரு. அவன் பாடுபட்டு உதவி பண்றதெல்லாம் எனக்கும் தெரியும். ஆனா அதுக்குப் பதில் என்னாலே அவனுக்கு என்ன செய்ய முடியும்? இதை நினைக்கிற போது தான் யாருக்கும் எதுவும் செய்ய முடியாத இந்த உசிரை வச்சிட்டிருக்கணுமான்னு எனக்கு வேதனையா இருக்கு!''

''அப்படியெல்லாம் ஏன் நினைக்கிறீங்க? நீங்க எப்படியிருந்தாலும் உசிரோடிருக்கிறதே எனக்குச் செய்யிற பெரிய உபகாரம் இல்லையா?''

பார்வதி அவன் மார்பில் இலேசாகச் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தாள். களைப்பு மிகுதியால் அப்படியே கண்ணயர்ந்து விட்டாள். ஆனால் குமரேசனுக்குத் தூக்கமே வரவில்லை, கண்களை மூடியவாறே படுத்திருந்தான்.

வாசற் கதவைத் தட்டும் சத்தம் கேட்டு, பார்வதி சட்டென்று விழித்துக் கொண்டு மெல்ல எழுந்து போவது தெரிந்தது. சற்றைக்கெல்லாம் பேச்சுக் குரல் கேட்டது. நெஞ்சு படபடக்க அவன் காதைக் கூர்மையாக்கிக் கொண்டான். கோவிந்தன் குரல்தான் அது. அவர்கள் முன்கட்டைத் தாண்டி வரவில்லை.

''என்னங்க, இன்னிக்கு வரவே மாட்டீங்களோன்னு பாத்தேன்!''

''இப்பக்கூட வரமுடியாதுன்னுதான் நினைச்சேன். நல்ல வேளையாகப் பாக்க வந்தவங்க சட்டுனு பேசிட்டுப் போயிட்டாங்க! சரி; பாத்துட்டுப் போயிடலாம்னு வந்தேன்!''

''அதான், நீங்க வரலையேன்னு என்னவோ கவலையா இருந்தது!''

''குமரேசன் என்னைக் கேட்டானா?''

''ஊகும்; நான்தான் காணமேன்னு பார்த்தேன்!''

சிறிது நேரம் பேச்சைக் காணோம். குமரேசன் நெஞ்சைப் பிடித்துக் கொண்டு படுத்திருந்தான்.

''என்ன செய்யறான்? தூங்கறானோ?''

''ஆமா; எழுப்பட்டுமா?''

''எதுக்கு? வேணாம், வேணாம்!''

மறுபடியும் மௌனம்.

''எந்நேரமானாலும் பாத்துட்டுப் போகணும்னு வந்ததே மனசுக்குத் தெம்பா இருக்கு!'' - பார்வதி.

''நான் வராமே இருப்பேனா?'' கோவிந்தன்.

குமரேசனுக்கு நெஞ்சுத் துடிப்புக்கூடத் தெளிவாகக் கேட்டது.

''சரி; நான் வரட்டுமா?''

மௌனம் ஒரு விநாடி... இரண்டு..

''போறேங்கிறீங்களா? சரி...''

குமரேசன் ஒவ்வொரு நொடியையும் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தான்.

மறுபடியும் கோவிந்தன் குரல் கேட்டது.

''நேரமாயிட்டுது; வரேன்.''

''ம்..''

ஒரு முறை தான் போகச் சொல்லியாச்சே. அப்புறம் எதனால் தயக்கம்? கோவிந்தன் போகிற காலடி ஓசையும், பார்வதி கதவைச் சாத்தும் சத்தமும் கேட்டன. குமரேசன்

தூங்குவது போலவே படுத்திருந்தான். பார்வதி அவன் கால் பக்கத்தைச் சரியாகப் போர்த்திவிட்டு, தரையில் தன் படுக்கையை விரித்துக் கொண்டாள். விளக்கை அணைத்து விட்டுப் படுத்துக் கொண்டாள்.

மறுநாள் கோவிந்தன் வந்துவிட்டுப் போனதைப் பற்றி அவள் சொல்வாள் என்று குமரேசன் எதிர்பார்த்தான். பார்வதி வாயைத் திறக்கவில்லை. இரவில் படுக்கையில் படுத்துக் கொண்ட பிறகு பார்வதியிடம் கோவிந்தன் பேச்சை எடுக்கலாமா என்று கேட்க நினைத்தான். அவள் கண்கள் என்னவோ தூங்குவதுபோல் மூடியிருந்தன.

பார்வதி கட்டிலுக்குப் பக்கத்தில்தான் கீழே படுத்திருந்தாள். வெகு நேரம் குருட்டு யோசனை செய்தவன், கண்களை மெல்லத் திறந்து பார்த்தான். ஒரே இருட்டு. வழக்கமாக வெள்ளிக்கிழமை வாங்குகிற பூ, அந்த இருளில் கம்மென்று மணந்து கொண்டிருந்தது. அவனுக்குப் பார்வதியேதான் அப்படி மணந்து கொண்டிருக்கிறாளோ என்றிருந்தது.

தன்னைப் பற்றி அவன் கொஞ்சம் நினைத்துப் பார்த்தான். அவனுக்கே ஒரே கூச்சமாகவும், மகா அருவருப்பாகவும் இருந்தது. அப்படியிருக்க பார்வதி மட்டும் எப்படிச் சகித்துக் கொள்வாள்? தன்னைப் போலவே பார்வதி தூங்காமல் மனம் புழுங்கியபடி படுத்திருக்கிறாளோ - அல்லது சலனமில்லாமல் தூங்குகிறாளோ? அவளை மெல்ல அழைத்துப் பார்க்கலாமா என்று அவன் நினைத்தபோது, முதல் நாளைப் போலவே கதவு மெல்லத் தட்டப்படும் ஓசை கேட்டது.

பார்வதி சட்டென்று எழுந்து விளக்கைப் போடாமலே, முன் ஹால் பக்கம் போவது தெரிந்தது.

''நீங்களாத்தான் இருக்கும்னு தெரியும்.''

''அப்படியா?''

''ஆமா; எப்படியும் ஒரு தடவையாச்சும் வராமே இருக்கமாட்டீங்க. அதனாலேதான் சொல்றேன்.''

''விசேஷம் ஒண்ணும் இல்லையே!''

''ஊகும்.''

''தூங்குறானாக்கும்?''

''ஆமா.''

மௌனம். கடிகாரத்தின் டிக்-டிக் ஒலி மட்டுமே கேட்டது. ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து...''

''என்னைக் காணோமேன்னு அவன் கேட்டானா?''

''ஊகும்.. கேக்கலை..''

''நான் வந்ததும் தெரியாதோ?''

''ஊகும்..''

''தெரியாமெ இருக்கிறதேகூட ஒரு விதத்துலே நல்லதுதான்!''

''..''

''சரி; நான் வரேன்!''

''ஏதாவது வேணுமா சாப்பிட? கொண்டு வரட்டுமா?''

''சேசே, அதெல்லாம் எதுவும் வேணாம். நான் வரேன்!''

''நாளைக்கு நீங்க வருவீங்களா இல்லையா?''

''தினம் வந்துட்டுத்தானே இருக்கேன்? என்ன சந்தேகம் திடீர்னு?''

''சந்தேகமில்லை.. சும்மாத்தான் கேட்டேன்!''

''ஒரு முறையாவது வந்து பாத்துட்டுப் போனாத்தான் - ஒரு திருப்தி.. மனசுக்கு!''

பார்வதி பேசாமல் அவன் முகத்தையே பார்த்தபடி நின்றாள்.

அவனும் அந்தக் கண்களைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''அப்ப நான் வரேன்.. நாளைக்குப் பாக்கலாம்.''

அவள் தலையசைப்பதற்குள் அவன் போய்விட்டான்.

கோவிந்தன் தன்னைப் பார்க்க வருகிறவனாய் இருந்தால் உள்ளே வந்து எட்டிப் பார்த்துவிட்டாவது போக வேண்டாமா? 'என்னவோ நேரம் கெட்ட நேரம் வர்றான். வந்துட்டு அப்படியே போறானே!' என்று புரண்டு படுத்தான், குமரேசன்.

பார்வதி விளக்கைப் போட்டாள். ஒரு முறை வழக்கம்போல் எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்த்துவிட்டு விளக்கை அணைப்பதற்குள், அவன் ஒரு நொடி கண்ணைத் திறந்து பார்த்தான். வாங்கியிருந்த பூ அவள் தலையில் மணக்கவில்லை. அது எதிரேயிருந்த படத்திலிருந்து மணந்து கொண்டிருந்தது.

மறுநாளும் பார்வதி அவன் வந்ததைப் பற்றி தெரிவிக்கவில்லை. 'ஏன், ஏன்?' என்று குமரேசன் மனம் குடைந்து கொண்டிருந்தது.

அவன் மன உளைச்சலைப்பற்றி ஒன்றும் அறியாமலே பார்வதி ஏதோ வேலையாக இருந்தாள். வரட்டும்; கேட்டு விடலாம் என்று அவன் காத்துக் கொண்டேயிருந்தான்.

''ஏன் என்னவோ போல இருக்கீங்க?'' என்று விளக்குகளை எரியவிட்ட பிறகு கேட்டாள் பார்வதி.

''நெஞ்சை வலிக்கிறது''

பார்வதி சட்டென்று அவனருகில் அமர்ந்து அவனுடைய மார்பைத் தடவி விட்டாள். மூன்றாம் முறையாக அவள் தடவிவிட்டபோது அவள் கையைப் பிடித்துக் கொண்டான்.

இருவர் கண்களும் கலந்து நின்றன - கணநேரம்.

''பார்வதி!''

''உம்...''

குரல் தழுதழுக்க, அவளுடைய கையைத் தன் நெஞ்சோடு அணைத்தவாறு, கண்ணை மூடிக்கொண்டு, ''பார்வதி!'' என்றவனுக்கு மூச்சுத் திணறியது.

''பார்வதி! விதி உன்னை வஞ்சித்து விட்டது. பார்வதி! என்னை உயிரோடு பாரமாக உன் தலையில் சுமத்திக் கொடுமை செய்துட்டுது!''

குமரேசன் அடி பட்ட செய்தி கேட்டபோதுகூட, அழாமல் தைரியமாக அதுவரையில் இருந்த பார்வதிக்கு, இப்போது அணை உடைந்ததுபோல அழுகை பீரிட்டுக் கொண்டு வந்தது.

''பார்வதி! நான் ஒண்ணு சொல்றேன் - கேட்பியா?''

''சொல்லுங்க!''

''கோபிச்சுக்கக் கூடாது. சொல்றபடி கேக்கறேன்னு கையிலே அடிச்சுக் கொடு!''

பார்வதி விழித்துக் கொண்டு விட்டாள். அவன் என்ன சொல்ல வருகிறான் என்று தெரிந்துவிட்டது. சட்டென்று அவன் உதடுகளைப் பொத்தியவாறு அடிக்குரலில் பேசினாள்.

''வேணாம். நீங்க எதுவும் சொல்லவும் வேணாம். நான் கையிலே அடிச்சுக் கொடுக்கவும் வேணாம்.''

அவள் விசுக்கென்று எழுந்து ஹாலுக்குப் போய் விட்டாள். வெகு நேரம் அவள் என்ன செய்தாளோ, உள்ளே வரவேயில்லை.

வழக்கம்போல் விளக்கையெல்லாம் அணைக்கப் போகும்போது கதவை மெல்லத் தட்டுவது கேட்டது. பார்வதி கட்டிலைப் பார்த்தாள். குமரேசன் தூங்குகிற மாதிரி இருந்தது.

ஓசைப் படாமல் நடந்து சென்று கதவைத் திறந்து விட்டாள். கோவிந்தன் தயங்கிக் கொண்டே நிலையைத் தாண்டி ஹாலுக்குள் வந்தான்.

''கதவைத் தட்டினதுமே யாருன்னு தெரிஞ்சிருக்குமே!''

''ஆமா, எதிர்பார்த்துக்கிட்டுத்தான் இருந்தேன்!''

''அப்படியா! எதுக்கு?''

பார்வதி உள்கட்டுப் பக்கம் திரும்பிப் பார்த்துவிட்டு, அவன் முன்னால் வந்தாள்.

''உங்களுக்கு ஒரு கடிதம் எழுதினேன். இதுதான்!'' மடியிலிருந்து ஒரு கடிதத் துண்டை எடுத்து அவனிடம் கொடுத்தாள்.

''என்ன விஷயம்?''

''படிச்சுப் பாருங்க.''

''பாக்கறேன். இப்ப ஒண்ணு சொல்லலாம்னுதான் வந்தேன். அதைச் சொல்லிடறேன். என்னைத் தவறா நினைக்கப்படாது.''

பார்வதி திகைத்துப் போய், ''என்ன சொல்லுங்க!'' என்றாள்.

அவனும் தயங்கினான்.

''நான் வேலையை விட்டுட்டேன். வடக்கே போயிட லாம்னு இருக்கேன்.''

''ஏன் அப்படி? எதுக்காக?'' - அடுத்து என்ன சொல்லிவிடுவானோ என்று திணறினாள்.

''எனக்கென்னவோ திடீர்னு எங்கிட்டேயே நம்பிக்கையில்லாமே போயிட்டுது. ஒரு பயம் வந்துட்டுது. அருமையான ஒரு சிநேகம் கறைபட்டுப் போயிடுமோன்னு - அதுக்கு நான் காரணமாயிடுவேனோன்னு தான் ஊரை விட்டே போயிடப்போறேன்.''

பார்வதி பேசாமல் அவன் என்ன சொல்ல வருகிறான் என்பதைப் புரிந்து கொண்டு அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

அவன் அவள் கொடுத்த துண்டுக் கடிதத்தைப் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தான்.

''எனக்கே எங்கிட்டே நம்பிக்கை போயிட்டுது. என்னாலே நீங்க இருக்கிற உயர்ந்த இடத்திலேயிருந்து விழுந்திடப் போறீங்களோன்னு பயமா இருக்கு. அதனாலே நீங்க அடிக்கடி இந்தப் பக்கம் வராம இருந்தா, இரண்டு பேருக்குமே நல்லது - பார்வதி.''

கோவிந்தன் பெருமூச்சு விட்டான்.

அவளும் பெருமையோடு பெருமூச்சு விட்டபடி அவன் வெளியேறிச் செல்வதைப் பார்த்துக் கொண்டு நின்றாள்.

# அம்மாவும் புஸ்ஸி குட்டியும்

ஆர்னிகா நாசர்

தென்றல் அபார்ட்மெண்ட்ஸ்.

பார்க்கிங்கில் ஸ்கூட்டியை ஸ்டாண்டிட்டு நிறுத்தினேன்.

நான்காவது தளத்துக்கு லிப்ட் உதவி இல்லாமல் படிக்கட்டுகள் தாவி ஏறினேன்.

அழைப்பு மணி அமுக்கினேன்.

உள்ளே சங்கீத சப்தம் எழுவது காதுகளுக்குக் கேட்டது.

இடது கக்கத்தில் 'புஸ்ஸி' பொமரேனியன் நாய்க் குட்டியைப் பதுக்கியபடி கதவைத் திறந்து விட்டார் உத்தண்டராமன்.

''ஹாய் அங்கிள்!''

உத்தண்டராமன் - என் உயிர்த்தோழி லாவண்யாவின் தந்தை. வயது 52 இருக்கும். கை வைத்த பனியனும் லுங்கியும் உடுத்தியிருந்தார். விடுமுறை நாள் ஆடை இது. பணி நாள்களில் ஸபாரியில் மினுமினுப்பார். செயின் ஸ்மோக்கர். கீழ் உதடு நடுவில் புண்ணாகி ரோஜா நிறம் பெற்றிருக்கும். ஆல்கஹாலிக் தொந்தி. இரு காதோர கம்பீர நரை. சிவாஜிகணேசன் சாயலில் பேசுவார். நடமாடும் உலகப் பொது அறிவு அகராதி அவர்.

அங்கிளின் முழுக் குடும்பமும் எனக்குப் பிடிக்கும்.

ஆன்ட்டி சங்கீதா. குடும்பப்பாங்கான சாத்வீகமான பெண்மணி. வயதான ராதிகா சாயல். அசைவச் சமையல் நிபுணி.

அங்கிளின் அம்மா - தோழி லாவண்யாவின் பாட்டி சீதாலட்சுமி இன்னொரு சுவாரசியமான கேரக்டர். வயது 77 இருக்கும். வெண்பூசணி போல் உருவம். பிள்ளையார் obsession எக்கச்சக்கம் அவருக்கு. Hindu mythologyயின் உன்னதமான fantasy 'பிள்ளையார்' என்பார்.

ஒரு கண்ணாடி பீரோ நிறைய விதவிதமான பிள்ளை யார்கள்.

நர்த்தனப் பிள்ளையார்

கண் திருஷ்டி பிள்ளையார்

ஊஞ்சலாடும் பிள்ளையார்

பிள்ளையார்பட்டி பிள்ளையார்

மரகத விநாயகர்

அனந்த சயனப் பிள்ளையார்

பவளப் பிள்ளையார்

கிரிஸ்டல் பிள்ளையார்

தேங்காய் மூடி விநாயகர்

அர்த்தநாரி பிள்ளையார்

புத்தகம் படிக்கும் விநாயகர்

பஞ்சமுகப் பிள்ளையார்

ஐந்து தலைப் பிள்ளையார்

வாத்தியம் இசைக்கும் பிள்ளையார்

இன்னும் நூறு வகையாய்...

நானும் பாட்டி என்றுதான் அவரை விளிப்பேன். நானும் லாவண்யாவும் தகவல் தொழில் நுட்பம் இரண்டாம் ஆண்டு படிப்பவர்கள். லாவண்யாவின் வீட்டுக்கு நான் வராத நாளேயில்லை.

அங்கிளும் ஆன்ட்டியும் என்னை ''ஹரிணி செல்லம்!'' என்றுதான் அழைப்பார்கள்.

பாட்டி, ''ஹரிணிக்குட்டி!''

புஸ்ஸி ''வஃப்... வஃப்!''

- வழக்கமாய் உற்சாகமாய் வரவேற்கும் அங்கிள் சோர்வாய் ''வாம்மா!''

நெற்றி சுருக்கியபடி உள்ளே போனேன்.

பாட்டி படுத்திருந்தார். அவரருகில் ஆன்ட்டியும் லாவண்யாவும் கவலையாய்.

பதறிப் போனேன். பாட்டியின் நெற்றி, கழுத்து, கைகளைத் தொட்டுப் பார்த்தேன்.

''பாட்டிக்கு என்ன... பாட்டிக்கு என்ன... பாட்டிக்கு என்ன?''

ஆன்ட்டியும் லாவண்யாவும் பதில் சொல்ல முடியாமல் திணற, தொலைக்காட்சி செய்தி வாசிப்பாளர் போல அங்கிள், ''அம்மாவுக்கு கான்ஸர்...ஹார்ட் கான்ஸர்... காலைலதான் பாடி ஸ்கேனிங் செய்து கன்பார்ம் பண்ணாங்க. ரொம்ப முத்தின ஸ்டேஜாம்! கீமோதெரபி செய்யறது கூட நம்ம திருப்திக்குத்தானாம்.'' அறிவித்தார். பேசியபடியே தனது புஸ்ஸி குட்டியை நீவி விட்டார். ஆன்ட்டியும்

லாவண்யாவும் அங்கிளை முறைத்தனர். அவர்களை அலட்சியப் படுத்தியபடி சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார். பால்கனிக்குப் போய் விட்டார்.

நான் பாட்டி அருகில் போய் அமர்ந்தேன்.

பாட்டியின் முகத்தில் மரண பயம் உறைந்திருந்தது.

''பாட்டி!''

கண்ணீருடன் கண் திறந்தார். துடைத்து விட்டேன்.

''உங்களுக்கு ஒண்ணும் ஆகாது பாட்டி. உங்க கான்ஸரை கண்திருஷ்டி பிள்ளையார் 'சூரசம்ஹாரம்' செஞ்சிடுவார்!''

''இல்லம்மா. நான் போக வேண்டிய நேரம் வந்திருச்சு. காலைலயிருந்து - இறந்து போன என் கணவர் வந்து கூப்பிடறார். 'வா சீதா.. வா சீதா'ன்னு...''

''உஷ். இப்டியெல்லாம் பேசக் கூடாது பாட்டி!''

''எனக்குப் போறதைப் பற்றி வருத்தமில்லை. ஆனா...''

''சொல்லுங்க!''

''லாவண்யா கல்யாணத்தையும் உன் கல்யாணத்தையும் பாக்காமல் போறோமேன்னுதான்...''

''சினிமாவில காட்ற மாதிரி இல்லை கான்ஸர் பேஷன்ட்டோட ஆயுள். மருந்து மாத்திரை சாப்பிட்டுக் கிட்டே இன்னும் பத்து வருஷம் சமாளிக்கலாம் நீங்க... எங்க கல்யாணத்தை மட்டுமில்லை. எங்க குழந்தைகள் ஸ்கூலுக்குப் போறதையும் பாத்துட்டுத்தான் கண்ணை மூடுவீங்க பாட்டி!''

''ம்ஹூம்..அப்படி இல்லை...'' கண்களை மூடிக் கொண்டார். ஆன்ட்டி, லாவண்யாவுடன் தனியறையினுள் ஒதுங்கினேன்.

''அங்கிள் - பாட்டிக்கு ஆறுதல் வார்த்தை ஏதாவது சொன்னாரா?''

''இல்லம்மா. கான்ஸர் கன்பர்ம் ஆன நொடி கண்களை இறுக மூடி வேதனை முகம் காட்டினார். பின் வழக்கத்தை விட கூடுதலாய் சிகரெட்களைப் புகைத்துத் தள்ளினார். புஸ்ஸியை நீவி விட்டார். வீடு திரும்பியதும் புஸ்ஸியுடன் பால்கனி ஊஞ்சலில் ஆடத் தொடங்கி விட்டார்!'' - ஆன்ட்டி.

''ஹரிணி! எங்கம்மாவுக்குத்தான் தாங்க முடியலை. ஆஸ்பத்திரிலேயே கதறியழுது ஆஸ்பத்திரியை இரண்டு பண்ணிட்டா...''

''நீ?''

''நானா?'' வாய் கோணி அழுதாள் லாவண்யா.

''பத்து வருஷ அழுகையை அழுது தீர்த்துட்டேன்!''

ஆன்ட்டி முகத்தைத் துடைத்துக் கொண்டு, ''நீங்க இரண்டு பேரும் காபி சாப்ட்டுட்டு கன்னிமாரா கிளம்புங்க!'' ஆணையிட்டாள்.

பெருமூச்சு விட்டபடி கிளம்பினோம்.

பத்தாவது நாள்.

பாட்டி இறந்த செய்தி தொலைபேசியில் வந்தது. கால்களால் பறந்தேன்.

பாட்டி கிடத்தப்பட்டிருந்தார்.

ஆன்ட்டி, லாவண்யாவுடன் உறவுப் பெண்மணிகளும் சேர்ந்து ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்தனர்.

சிகரெட் புகைத்துக் கொண்டு புஸ்ஸியை நீவிக்கொண்டு அங்கிள்!

அங்கிளின் முகம் வெளிறி நிச்சலனமாய்க் காணப் பட்டது.

துக்கம் விசாரிக்க வந்தவர்கள் அங்கிளைக் கட்டிக் கொண்டு அழுதார்கள். அவர்களை அங்கிள் சமாதானப் படுத்தினார்.

என்னருகில் வந்து விழிநீரைத் துடைத்து சுண்டி விட்டு தோளில் தட்டிக் கொடுத்தார்.

தகனத்துக்கான ஆயத்தங்களுக்கு, கர்ம சிரத்தையாய் உதவினார்.

'எல்லா மனிதருக்குள் ஒரு breaking point உண்டல் லவா? அங்கிள் மனத்தை அடக்கிக் கொண்டிருக்கிறார்... எந்த நிமிஷத்திலும் அவர் உடைந்து நொறுங்கி கண்ணீர்க கடலில் தத்தளிக்கக் கூடும்...'

அங்கிளின் அழுகையைப் பார்க்க நான் காத்திருந்தேன்.

ம்ஹூம்... கடைசி வரை அங்கிள் அழவேயில்லை!

தகனம் முடிந்து ஈர ஆடையுடன் மீசை இழந்து திரும்பினார் அங்கிள்.

நாங்கள் எல்லாரும் உணவு எடுத்துக் கொள்ளாமல் அழுதபடி மொஸைக் தரையில் படுத்துக் கிடந்தோம்.

அங்கிள் புஸ்ஸிக்கு உணவு புகட்டினார். நள்ளிரவில் சிகரெட் புகைத்தபடி புஸ்ஸியுடன் ஊஞ்சலாடினார்.

அதிகாலை வரை ஊஞ்சல் அசையும் இயந்திர சப்தம் கேட்டுக் கொண்டேயிருந்தது.

இரண்டு மாதங்களுக்குப் பின்...

லாவண்யாவின் அடுக்கு மாடிக் குடியிருப்புக்குப் புறப்பட்டேன்.

சீரியல் லைட் சதுரத்தில் பாட்டி புகைப்படம் புன்னகை பூத்தது.

''லாவண்! அங்கிள் எங்கே?''

''புஸ்ஸிக்கு நேற்று ராத்திரியிலிருந்தே கடும் வயிற்றுப் போக்கு. இதுவரை மூணு முறை வெட்னரி டாக்டர்கிட்ட காண்பிச்சிட்டார் டாடி. என்னென்னவோ மருந்து தந்தும் வயிற்றுப்போக்கு நிக்கலை. நாலாவது முறையா இப்ப மீண்டும் புஸ்ஸியை வெட்னரி டாக்டர்கிட்ட கொண்டு போயிருக்கார் டாடி...''

லாவண்யா பேசி முடிக்கும்முன் தரைத்தளத்தில் பிரளய ஓசை எழுந்தது.

மூன்று பெண்களும் தரைத்தளம் எட்டினோம்.

டாட்டா சுமோவை செக்யூரிட்டி கூண்டில் மோதி நிறுத்தினார் அங்கிள். புஸ்ஸியை எடுத்துக் கொண்டு காரின் கதவை எட்டி உதைத்து மூடினார். 'மடேர்...மடேர்' என்று நெற்றியில் அறைந்து கொண்டு ஓலமாய் அழுதார். தரைத்தளத்து ஆண்களைக் கட்டி அழுதார். தள்ளாட்டமாய் பிளாட்டுக்கு வந்தார்.

கதவைத் திறந்து கிரீச்சிட்டோம். ''என்னாச்சு புஸ்ஸிக்கு?''

புஸ்ஸி உடலை சோபாவில் கிடத்தி விட்டு தலைக் கேசத்தைப் பிய்த்துக் கொண்டு கதறினார்... ''புஸ்ஸி நம்பளையெல்லாம் பரிதவிக்க விட்டு சொர்க்கத்துக்கு போய்ட்டாம்மா... புஸ்ஸி! புஸ்ஸி! புஸ்ஸி! என் செல்லம்... என்னை விட்டுப் போய்ட்டியேம்மா... நீ இல்லாம நான் எப்படிம்மா உயிரோட இருப்பேன்? என்னையும் நீ கூட்டிட்டுப் போயிருக்கக்கூடாதா? ஒரு சாதாரண வயிற்றுப்

போக்கைத் தடுத்து நிறுத்த முடியாத வெட்னரி டாக்டருக்கு தூக்குத்தண்டனை விதிக்கணும்!''

மனைவியைக் கட்டிப் பிடித்து அழுதார். ஆன்ட்டிக்கு அழுகை வரவில்லை. சோகமாய் இருப்பது போல் நடித்தார். லாவண்யாவைக் கட்டிப் பிடித்து அழுதார். அங்கிளின் சோகம் தாங்காமல் நானும் அழுதேன். நான் அழுதது அவரின் அழுகையை மும்மடங்காய் கிரியா ஊக்கியது. மூக்கிலிருந்து இறங்கும் சளியை பலமாய்ச் சிந்தித் தன் சட்டையில் துடைத்துக் கொண்டார். புஸ்ஸிக்கு உபயோக மான - புஸ்ஸி உபயோகப்படுத்திய - அனைத்தையும் தொட்டுப் பார்த்து அழுதார்.

''புஸ்ஸி இல்லாத வீட்டில் ஊஞ்சல் எதற்கு?'' ஊஞ்சல் பலகையை உதைத்தார். சங்கிலி அறுந்து ஊஞ்சல் சிதறியது.

தரையில் புரண்டார். சட்டையைக் கிழித்துக் கொண்டார். என்னவோ ஏதோ என்று ஓடி வந்து குழுமிய அபார்ட் மெண்ட் மக்களை ஒவ்வொருவராய் கட்டிப்பிடித்து, கட்டிப் பிடித்து அழுதார்.

''நான் புஸ்ஸியோட அன்னியோன்யமாக இருக்கிறதைப் பாத்து வயித்தெரிச்சல் பட்டு வயித்தெரிச்சல் பட்டு பிளாட் மக்களே புஸ்ஸியைக் கொன்னுட்டாங்க. புஸ்ஸிக்கு ஆயிரம் முறை திருஷ்டி கழிச்சும் பிரயோஜனம் இல்லாம போச்சே... போங்கய்யா... போய் பால் பாயசம் வச்சுக் குடிங்க!''

முணுமுணுத்தபடி பிளாட் மக்கள் கலைந்தனர்.

புகைப்படக் கலைஞர் வந்து புஸ்ஸி சடலத்தைப் புகைப்படம் எடுத்தார். மனிதருக்குப் போன்றே சடங்குகள் செய்து புஸ்ஸியை நல்லடக்கம் செய்தார். நாளிதழில் புஸ்ஸி காலமானதைக் கண்ணீருடன் அறிவித்தார்.

மூன்று நாள்கள் உணவில்லாமல் கிடந்து மயங்கிச் சரிந்தார்.

மருத்துவமனையில் சேர்ப்பிக்கப் பட்டார்.

தீவிர சிகிச்சையும் கண்காணிப்பும் தொடர்ந்தது.

அங்கிளின் அருகேயே இருந்து அவரைக் கவனித்துக் கொண்டேன்.

புஸ்ஸியின் நினைவு வந்து அவர் அழும்போதெல்லாம் தோளில் அவரைச் சாய்த்து ஆறுதல்படுத்தினேன்.

லாவண்யா என்னிடம் திரும்பி, ''உனக்கு ஒரு விஷயம் தெரியுமா ஹரிணி? புஸ்ஸி இறந்ததிலிருந்து நானும் அம்மாவும் அப்பாகிட்டே பேசறதில்லை...''

பதறி ''ஏன்?''

''பின்னென்ன ஹரிணி? பெத்த தாய் இறந்தப்ப ஒரு துளி கண்ணீர் விடாம இரும்புச் சிலையாட்டம் நின்றிருந்தார். இவரது செயலைப் பார்த்து அபார்ட்மெண்ட் மக்கள் ரகசியமாக் காரித் துப்பியிருக்காங்க. நாங்களே இவரது குணமே அப்படித்தான்னு எங்களை சமாதானப்படுத்திக் கிட்டோம். புஸ்ஸி ஒரு வருஷக்குட்டி. அது இறந்ததும் எப்படி எப்படியெல்லாம் அழுது புரண்டு ஆர்ப்பாட்டம் செய்துட்டாரு எங்கப்பா? பெத்த தாயை விட ஒரு நாய்க்குட்டி அவருக்கு உசத்தியாப் போயிடுச்சு. என்ன மனுசன் அவரு? அவரைப் பார்க்கவே எனக்கு அரு வெறுப்பா இருக்கு. ஐ ஹேட் ஹிம் ஹரிணி! நாளைக்கு நானோ அம்மாவோ செத்தாக்கூட மரக்கட்டையாட்டம் நிப்பாரு போல...'' அழுதாள் லாவண்யா.

''நடந்த விஷயத்தை நீயும் ஆன்ட்டியும் அபார்ட்மெண்ட் மக்களும் நெகடிவ்வா பார்க்கறீங்க. உண்மை அப்படியன்று.

அம்மா இறந்ததற்கு அங்கிள் அழாததற்குப் பல காரணங்கள் இருக்கு. 'அம்மா நிறைஞ்ச வாழ்க்கை வாழ்ந்துட்டுத்தான் செத்திருக்கா... கேன்ஸராலே பல மாதங்கள் சித்ரவதை படாம் அமைதி மரணத்தைத் தழுவிக்கிட்டா'ன்னு அவர் நினைச்சிருக்கலாம். மனித உறவு முறைகளில் கட்டாயங் களும் நிர்ப்பந்தங்களும் நிபந்தனைகளும் ஏராளமாய் உண்டு. தாய் மரணத்துக்கு மகனோ, மகளோ வானம் வெடிக்க அழ வேண்டுமென எதிர்பார்க்கிறோம். இங்கு அழுதல் கடமையாக்கப்படுவதால் அழுகை அனிச்சையாய் வெடிப்பதில்லை. மிதமிஞ்சிய எல்லை தாண்டிய சோகத்தில் கூட அழுகை வராது. Beyond the freezing point. ஓர் இழப்பின் தாக்கம் இழப்பின் நிமிடங்களில் உணரப்பட மாட்டாது. சில பல மாதங்கள் கழித்து திடீரென்று ஒரு மைக்ரோ நொடியில் இழப்பின் தாக்கம் பூகம்பமாய் வெடிக்கலாம். உறவுகளில் பரஸ்பரம் எதிர்பார்ப்பு இருக்கக் கூடாது. 'உனக்கு நான் இதைச் செய்கிறேன்; நீ எனக்கு அதைச் செய்' என்கிற பண்டமாற்று கூடாது. ஆன்ட்டிக்கும் அங்கிளுக்கும் தெரிந்தோ தெரியாமலோ எதிர்பார்ப்புகளும் பண்டமாற்றுகளும் உண்டு. அது புஸ்ஸிக்கும் அங்கிளுக்கும் இடையே இல்லை. புஸ்ஸி உங்கப்பாவிடமிருந்து எதனை எதிர்பார்த்தது? நத்திங். தவிர நாயின் ஆயுட்காலம் 12 வருடம். பிறந்த ஓராண்டில் புஸ்ஸி இறந்தால் அது அகால மரணம்தானே? நிறைவான மரணத்துக்கு அழுகை வரவில்லை; அகால மரணத்துக்கு அழுகை வந்திருக்கிறது. பத்து வயதுக்குப் பிறகு உங்கப்பா உங்க பாட்டியை பாசமாத் தொட்ட நொடிகள் குறைவு. உங்கம்மாவுடன் கூட உங்கப்பா வுக்கு பிஸிக்கல் டச் அதிகம் இராது. வயதுக்கு வந்த மகள் உன்னைக்கூட சமூக நியதிகளுக்கு அப்பாற்பட்டு தொட்டு அவரால் பாசத்தைக் காட்ட முடியாது. ஆனால் புஸ்ஸி? ஒரு தாயை விட, ஒரு மனைவியை விட, ஒரு மகளை விட

அதிகம் ஸ்பரிஸ ரீதியாய் அவருடன் உறவு கொண்டாடி யிருக்கிறது. அவரின் அலுவலக ரீதியான பிரச்னைகளுக்கு பூரண வடிகால் புஸ்ஸிதான். இன்னொரு 'ஜிம்மி'யோ 'டாமி'யோ வந்தால் புஸ்ஸி மரணத்தை வெகு சீக்கிரம் மறந்து விடுவார் உன் அப்பா. ஆனால் தாய்க்கு மாற்று இல்லை. நாளாக நாளாக பிரிவுத் துயரம் மிகையாகும். ஸோ... அழுகைகளை வைத்து சோகங்களை அளக்காதே. தந்தையின் உள்ளும்புறமும் உணர்!''

அந்த நொடியிலேயே தந்தை மீதான கசப்புணர்ச்சி லாவண்யா மனத்திலிருந்து அகன்றது. ''தாங்க்யூ ஹரிணி!''

- பிள்ளையார் சதுர்த்தி. தந்தையிடம் கொழுக்கட்டை களை நீட்டினாள் லாவண்யா.

'கொழுக்கட்டை - பிள்ளையார் - பிள்ளையார் பிரேமை கொண்ட அம்மா!'

அவ்வளவுதான். ''அம்மா!'' எனப் பெருங்குரலெடுத்து அழுதார் உத்தண்டராமன். அவரது காலடியில் அவரது புதிய வளர்ப்பு நாய் 'மின்ட்டி'.

●



# மகளே... மகளே...

ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன்

''எனக்கு வெட்கமா இருக்குங்க. நாற்பத்தைஞ்சு வயசிலே எனக்கு இது வேணுமா? வேணாங்க. கலைச்சிடலாம்.''

''போடி பைத்தியக்காரி. அநாதையா இருக்கிற நமக்கு ஆண்டவன் ஒரு துணையா இதை அனுப்பியிருக்கான். இதுவாவது நம்மைக் காப்பாத்தாதா...?''

'இதுவாவது' என்ற சொல்லில் ஆயிரம் சோகம் அப்பியிருந்தது. எல்லாரையும் போல வரதராஜன் - கற்பகம் தம்பதிக்கு ஒன்று பிறந்தது. வளர்த்தார்கள். ஆளாக்கினார்கள். ஆனால் இன்று அந்த உறவு அவர்களுக்கில்லை.

''அநாதைன்னு ஏன் சொல்றீங்க? நாமும் ஒரு பிள்ளையைப் பெத்தவங்கதாங்க...''

''பெத்தோம்... அது நம்ம வரைக்கும் செத்துப்போன மாதிரிதான். இருபத்தோரு வயசு வரைக்கும் வளர்த்து, ஆளாக்கி படிக்கவச்சு பாங்கிலே ஓர் உத்யோகமும் பார்த்து வச்சோம். எவனோ, கூட வேலை பார்க்கிற பயலை விரும்பிக் கல்யாணம் பண்ணிக்கிட்டா. விரும்பினதிலேயோ கல்யாணம் பண்ணிக்கிட்டதிலேயோ தவறில்லை. ஆனா அவளுக்குச் செய்ய வேண்டியதைச் செய்யலைன்னு அவமானப்படுத்தினது தான் தாங்க முடியலை. எப்படிச்

செய்ய முடியும்? வந்த வருமானம் நமக்கு வாய்க்கும், வயித்துக்குமே சரியா இருந்தது. ஆபிஸிலே இருக்கிற லோன்கள் எல்லாத்தையும் எடுத்துத்தான் இவளைப் படிக்க வச்சோம். ஏதோ உத்யோகத்துக்குப் போனா கல்யாணம் ஆகற வரையாவது நாம பட்ட கடன்களைக் கரைப்பாள்னு பார்த்தா அவசரப்பட்டுக் கல்யாணம் பண்ணிக்கிட்டு ஓடிட்டா. பெத்தவங்க என்ன ஆனாங்கன்னு கூட எட்டிப் பார்க்காத இந்தப் பிள்ளை இருந்தென்ன செத்தென்ன? இரண்டும் ஒண்ணுதான்.''

''அய்யய்யோ... அப்படியெல்லாம் சபிக்காதீங்க.. நாம நம்மோட நேரத்தைத்தான் சபிக்கணுமே தவிர யாரையும் குறைசொல்லிப் பயனில்லை...''

''இவளுக்கு நாம என்ன செய்யலை? அழகு! இது யார் கொடுத்தது? பெத்தவங்க நாம கொடுத்ததில்லையா...? படிப்பு, பட்டம், உத்யோகம் இதெல்லாம் யார் கொடுத்தது! நாமில்லையா...? இவ அழகா இருக்கா. கை நிறையச் சம்பாதிக்கிறான்னு தானே அந்தப் பய இவளை விரும்பினான். பிறகேன் வரதட்சணை? சம்பளம் தான் சுலபத் தவணையிலே வந்துட்டிருக்கிற வரதட்சணையாயிருக்கே! போதாதா?''

''திருப்பித் திருப்பி இதையே பேசிட்டிருந்தா எப்படி? போனா போகட்டும் விடுங்க. எப்படியோ அவளுக்கு, நம்மைத் தலை முழுகிட்டு அவனோட ஒட்டு மொத்தமாப் போய்ச் சேர்ந்திடணும்னு நினைப்பு வந்திடுச்சு. நடந்து முடிஞ்சிடுச்சு.''

''உறவை அறுத்துப் போட்டுட்டு ஓடிட்டா இல்லையா? அதனாலேதான் சொல்றேன். நமக்குன்னு ஒரு புது உறவு... நம்ம மேலே பிரியமா இருக்க ஒரு பிள்ளை... இது ஆண்ட

வனாப் பார்த்து நமக்குக் கொடுத்தது. அழிச்சிடாதேடி... ப்ளீஸ் எனக்காகவேனும் இதைக் காப்பாத்துடி... இந்தக் கருவை வளர்த்துக் கையிலே கொடுடி.''

கற்பகத்தைக் கெஞ்சினார் வரதராஜன். வாழ்க்கை சோக மயமானதென்பதன் முழு வடிவம் அவர். அடிமேல் அடியாக வாழ்க்கையில் அவருக்கு அத்தனை அடிகள் அடிக்கடி விழுந்த போதும் வீழ்ந்துவிடாமல் நிமிர்ந்தெழுந்தவருக்கு இப்படித் தனிமைப்படுத்தப்பட்ட சோகம்தான் சிகரமாயிருந்தது. முழுதாக மகளை யாரிடமோ இழந்துவிட்டு அவள் வந்து போவதுமில்லாமல், இவர்கள் போய்ப் பார்ப்பதுமில்லாமல் அன்னியமாகிவிட்ட பிறகு கற்பகம் உண்டாகியிருக்கிறாள் என்கிற செய்தி வாழ்க்கையில் ஒரு பிடிப்பை ஏற்படுத்தியது. ஆனால் கற்பகத்தின் மனநிலை வேறு. நாற்பத்தைந்து வயதில் பேரனைக் கொஞ்ச வேண்டிய வயதில் இப்படி வயிறு வீங்கிக் கொண்டிருக்கிறோமே என்று வெட்கமாயிருந்தது. கூச்சப் பட்டுக் கொண்டு அவள் வெளியே வருவதில்லை.

இருந்தாலும் தெருவிலிருக்கிற பெண்டு பிள்ளைகளுக்கும், பெரியவர்களுக்கும் அவள் கர்ப்பமாயிருப்பது தெரிய வந்தபிறகு யாரும் கேலி செய்யவில்லை. மாறாக, வாழ்த்தித்தான் போனார்கள்.

''கற்பகம்! உன் புருஷன் சொன்ன மாதிரி கடவுளாப் பார்த்துத் தாண்டி இந்தத் துணையை உங்களுக்கு அனுப்பியிருக்கான். அந்த ஓடுகாலி உன்னையும் உன் புருஷனையும் அநாதையாக்கிட்டு ஓடிட்டா... இது ஓர் ஆணாப் பொறந்து உங்களை ஆயுள் பரியந்தமும் காப்பாத்தும். நாற்பத்தஞ்சு வயசிலே பிள்ளை பொறக்கறது நம்ம குடும்பத்திலே நடக்காததில்லை'' என்று கற்பகத்தின் தாய் பர்வதம்

ஆற்றுப்படுத்துவாள். என்ன இருந்தாலும் கற்பகம் அவளின் மகள்தானே! நாள்கள் மெல்ல நகர்ந்தன.

நாளாக ஆகத் தளர்ந்து போன கற்பகம் மெருகேறினாள். பூரித்து நிற்கும் பருவப் பெண் போலத் தன்னைப் பொலிவு படுத்துகிற அந்த ஜீவன் ஆணோ பெண்ணோ எதுவானாலும் அம்மா என்று வாய் நிறைய அழைக்க ஒரு துணையென்று வருகிறதேயென்று வரவேற்கத் தயாரானாள்.

வரதராஜன் தான் கூட மாட அவளுக்கு எல்லா ஒத்தாசை களையும் செய்தார். சரீரப் பிரயாசை முடியாவிட்டாலும் மாமியாராகவும், தாயாகவும் பர்வதம் வேண்டியதைச் செய்வதே அவருக்குச் செய்த பேருதவியாய் இருந்தது. ஆனால் உதவ வேண்டிய மகள் தான் உடனில்லை.

இத்தனைக்கும் மகள் நித்யா அதிகத் தொலைவிலில்லை. திருவான்மியூரில்தான் இருக்கிறாள். சொல்லியனுப்பலாமா என்று பக்கத்து வீட்டுக்காரர்கள் கேட்டபோது முற்றிலுமாக மறுத்துவிட்டார் வரதராஜன். இது அவளுக்குத் தெரியக்கூடா தென்றும் தடைபோட்டு விட்டார் அவர்.

மகளில்லாத குறை தெரியாதவாறு வரதராஜனே வளைய வளைய வந்து பணிவிடையாற்றினார். அலுவலகம், வீடு என்று எந்திரகதியாக இருந்த புருஷனைத் தன்மீது முழு நேரமும் அபரிதமான அன்பைச் சொரிகிற, ஆர்வத்தோடு கவனித்துக் கொள்கிற காதலனாக ஆக்கி வைத்திருக்கிறதே இந்தக் கர்ப்பம்! இதற்காகவேனும் இன்னும் பலமுறை உண்டாகலாம் போலிருக்கிறதே என்று நினைத்துக் கொண்டாள் கற்பகம்.

வேண்டாமென்று நினைத்த ஒன்றின் மேல் வெள்ளமாகப் பெருகிய ஆர்வத்தோடு கருவும் வளர்ந்தது. காலால் உதைத்தது. நாள்கள் நகர்ந்ததே தெரியாமல் பத்தாவது

மாதத்தை நெருங்கினாள் கற்பகம். பிரசவம் செப்டம்பர் இருபதாம் தேதி வாக்கில் இருக்குமென்று டாக்டர் புனிதவதி சொல்லியிருந்தாள். பதினைந்தாம் தேதி பார்வதி நர்ஸிங் ஹோமுக்கு வந்து சேர்ந்தாள் கற்பகம்.

''கற்பகம்! பிரசவம் உனக்கொன்னும் புதுசில்லையே... ஏற்கெனவே பெத்தவதானே நீ... இது கூடவா தெரியாது? இது பொய்வலி. சாதாரணமாக வலிச்சாக்கூட பிரசவ வலியோன்னு பயப்படக்கூடாது. சரி பரவாயில்லை வந்துட்டோம். இரண்டு நாள் தங்கிட்டுப் போவோம். ஆட்டோ விலே நீ இரண்டு தடவை முகப்பேர் போய் வந்தியானா அந்த ஆட்டோவிலேயே மகப்பேறு நடந்திடும்.''

டாக்டர் புனிதவதி சொன்னது கூட கற்பகத்திற்குச் சரியாகப்பட்டது. சென்னையில் புறநகர்ப் பகுதிகளில் சாலைகளா அவை...? குண்டும் குழியுமாக...! யாருக்கு எழுதிப் போட்டாலும் என்ன போராட்டம் நடத்தினாலும் இப்படியே இருந்தால் எப்படிப் போய் வருவது? நர்ஸிங் ஹோமிலேயே இரண்டு நாள் தங்கிப் பார்ப்பதெனத் தீர்மானித்தனர் அந்த மூதிளம் தம்பதி.

முன்னதாகவே கூட்டுறவு சங்கத்திலிருந்து கடன் வாங்கி யிருந்த தொகை கணிசமாகக் கையிலிருந்தது. இரண்டாயிரம் ரூபாயை முன்பணமாகக் கட்டிவிட்டுத் திரும்பிய போது வெளியே ஸ்கூட்டரை நிறுத்திவிட்டு, பாதி உட்கார்ந்தும், நின்றதுமாய் போஸ் கொடுத்துக் கொண்டிருந்தான் பாஸ்கர். பாவி! ஒரே இரவில் கதிர் முற்றிச் சாய்ந்திருந்த பயிரைத் திருட்டுத்தனமாக அறுவடை செய்து கொண்டு ஓடியது போல் காதல் என்ற பெயரில், இருந்த ஒரே ஓர் உறவையும் கபளீகரம் செய்து கொண்டு ஓடிப் போனவன். மூதேவி இங்கே எதற்காக வந்திருக்கிறது...? இரவு வருவதற்குள் எல்லாத் தகவலையும் தொகுத்துவிட்டார் வரதராஜன்.

''கற்பகம்! உனக்கு ஒரு சந்தோஷமான செய்தி... நீ அம்மாவாகப் போற சந்தோஷத்தோட பாட்டியும் ஆகப் போறே... உன் மகள் நித்யாகூட பிரசவத்துக்காக இங்கே சேர்ந்திருக்கா... மூணாவது மாடி.''

''அப்படியா... பார்த்தீங்களா? அவளும் உண்டாகி யிருக்காளா? கடவுளே.. காமாட்சி... கருமாரியம்மா... பிரசவம் நல்லபடி ஆகணும் தாயே...''

''ஆமாண்டியம்மா... தாயும் மகளும் ஒருத்தருக் கொருத்தர் வேண்டிக்குங்க...'' விரக்தி கலந்து கேலியாகச் சிரித்தார் வரதராஜன். டாக்டர் புனிதவதியும் இந்தச் சிறு நாடகத்தில் பங்கேற்றுக் கொண்டாள்.

''டாக்டர்! எனக்காக ஒரு சின்ன உதவி செய்வீங்களா...? எங்க குடும்பக் கதைதான் உங்களுக்குத் தெரியுமே. பிரசவம் முடிஞ்சு வீட்டுக்குப் போய்ட்டாங்கன்னா அவுங்களைப் பார்க்க சந்தர்ப்பம் எங்களுக்குக் கிடையாது. அதனாலே நித்யாவுக்கு பிரசவம் ஆனதும் குழந்தையைக் கொண்டு வந்து என்கிட்ட காட்டுவீங்களா? என் பேரக் குழந்தையை முதலும் கடைசி யுமா நான் கண் முழுக்கப் பார்த்துக்கறேன்'' பொங்கிப் பரவிய பாச உணர்வில் கரைந்தாள் கற்பகம்.

சற்று வெட்கமாகக் கூட இருந்தது. ஒரே நேரத்தில் ஒரே மருத்துவமனையில் தாயும், மகளும் பிரசவிக்கப் போகிறோமே என்று இருந்தாலும் எல்லாவற்றையும் நடத்தி வைக்கிற இறைவன் இதையும் நடத்துகிறான், ஏற்றுக் கொள்வதைத் தவிர என்ன செய்ய முடியும் என்று தன்னைத் தேற்றிக் கொண்டாள்.

முதற் பிரசவம் - மகளின் பிரசவம் நல்லபடியாக நடக்க வேண்டும் என்று வேண்டாத தெய்வமில்லை எனுமாறு எல்லாத் தெய்வங்களையும் வேண்டினாள் கற்பகம்.

''டாக்டர்! இங்கே நானும் பிரசவத்துக்காக அட்மிட் ஆகியிருக்கிற விஷயத்தைத் தயவு செய்து மறந்து கூட அவகிட்டே சொல்லிடாதீங்க. வெட்கம் மட்டுமில்லை. கேவலமும் கூட. அவளுக்கும், மருமகனுக்கும் எங்க பேரைச் சொன்னாலே போதும். கோபம் பொத்துக்கிட்டு வரும். டென்ஷனாயிடுவாங்க. சந்தோஷமா நிம்மதியா பிரசவிக்க வேண்டிய அவ எங்களை நினைச்சுக்கிட்டு ஆத்திரமோ, அருவருப்போ படக்கூடாது.''

டாக்டர் புனிதவதிக்கு இது தெரியும். கற்பகத்துக்கு நித்யா பிறந்தபோது பிரசவம் பார்த்ததே அவள்தான். இன்று நித்யா வுக்கும் அவளே பிரசவம் பார்க்கிறாள். காலம் மாறுகிறதோ இல்லையோ நாளும் அது நகர்ந்து கொண்டிருக்கிறது. மனிதர்கள் தான் இதில் மாறிக் கொண்டிருக்கிறார்கள். வலியைத் தாங்கிக் கொண்டு பெற்றாலும் சலிப்பைச் சுமந்து கொண்டு வளர்த்தாலும் எல்லாவற்றையும் மறந்துவிட்டு இன்று பெற்றோரை உதாசீனம் செய்துவிட்டு உணர்வு களுக்கே அதிகமாய் உள்ளத்தில் இடம் கொடுத்துவிட்டுக் குறைந்த பட்சப் பாசம் கூடக் காட்டாமல் போனதால், பெற்ற நெஞ்சு தவிப்பதைத் தாயாகவும் இருக்கிற டாக்டர் புனிதவதி புரிந்து கொண்டாள்.

தாயும் மகளும் இரண்டு தாய்களாய்... வெவ்வேறு அறை களில் இன்னும் சொல்லப்போனால் வெவ்வேறு தளங்களில் இருந்தாலும் வந்து போகிற ஆர்வம் மிக்க தந்தையர் இருவரும் எதிர் கொண்டுவிட்டால்... என்கிற பயமும் புனிதவதிக்கு இல்லாமலில்லை. இருவரும் சந்தித்து விடக்கூடாதே என்பதில் கவனமாக இருந்தாள் அவள்.

அன்றிரவு எட்டு மணியிருக்கும். வரதராஜன் வந்து போன அரைமணி நேரத்தில் பிரசவவலி அதிகமாயிற்று.

கற்பகம் மீண்டும் தாயானாள். அழகான ஆண் குழந்தை. எண்ணி இருந்தவாறும், எதிர்பார்த்தவாறும் ஆயுள் பரியந்தமும் தங்களைக் காப்பாற்ற ஆண்டவன் அளித்த பரிசாக எண்ணி அன்புச் செல்வத்தை அள்ளி முத்தமிட்டு மகிழ்ந்தாள் கற்பகம். பூரித்திருந்த அந்த இரவின் இன்பம் பூரணமாவதற்கு முன்பே ஒரு பூகம்பச் செய்தியோடு உள்ளே நுழைந்தாள் டாக்டர் புனிதவதி. கையில் அழகிய பெண் குழந்தை.

''கற்பகம்! மகளுக்குப் பிரசவமானதும் குழந்தையைக் கொண்டு வந்து காட்டுவீங்களான்னு கேட்டியே. இதோ பாரும்மா உன் பேத்தி. எத்தனை அழகா இருக்கா பார்த்தியா? இவ பேசமாட்டா. அழமாட்டா... அடம் பிடிக்க மாட்டா... காரணம் இறந்தே பிறந்திருக்கா. பிரசவத்திலே கொஞ்சம் சங்கடமாயிடுச்சு. தாயைக் காப்பாத்தவே பெரும்பாடு பட்டுட்டோம். எங்களுக்கு இன்னும் ஒரு பயம். இதயமும், கர்ப்பப்பையும் பலவீனமான உங்க மகளுக்கு இனிமே பிரசவம் கூடாது.''

''அது மட்டுமில்லை. குழந்தை இறந்து போன அதிர்ச்சியை அவ எப்படித் தாங்கிக்குவான்னு வேற பயமாயிருக்கு. இன்னும் அவளுக்கு மயக்கம் தெளியலை. மயக்கம் தெளியும் போது இந்த விஷயத்தை எப்படிச் சொல்றதுன்னு தெரியலை...'' என்று நிஜமாகவே டாக்டர் புனிதவதியும் தவித்தாள்.

''கடவுளே... இது என்ன சோதனை'' கற்பகம் கதறினாள்; துடித்தாள். இன்னும் சற்று நேரத்தில் கணவர் வேறு வந்து சேர்வார். அவருக்கென்ன பதில் சொல்வது? கேட்டால் அவர் வேறு துடித்துச் சிதைவாரே! சோதனைகளைத் தாங்கித் தாங்கியே மரத்துப் போனவள் கற்பகம். எப்போதும்

போலவே முறியாமல் நிமிர்ந்தெழுந்தாள். எதையும் பெற்று இழப்பதைப் போன்ற சோகம் எதுவுமிருக்க முடியாது. ஆனால் இழக்க வேண்டும் என்பதுதான் இறைவன் எழுதுகிற விதி என்பதால் ஏற்கத் தயாரானாள். ஒரு தெளிவோடு படுக்கையில் எழுந்து உட்கார்ந்து...

''டாக்டர்! எனக்காக ஓர் உதவி செய்வீங்களா? என் பேத்தியை என்கிட்ட கொடுங்க. இவளை என்னோட மகளா நினைச்சு அவளோட கடைசிக் காரியங்களைப் பண்ணிக் கிறேன். இதோ என் மகன். இன்னியிலேர்ந்து இவன் என்னோட பேரனாகட்டும். நித்யா மயக்கம் தெளியறதுக்கு முன்னாலே இவனை அவகிட்டே சேர்த்திடுங்க...''

டாக்டர் புனிதவதி கற்பகத்தின் இந்த முடிவைக் கேட்டு அதிர்ந்தாள்.

''கற்பகம்! எனக்கென்னவோ நீ பண்றது சரியாப் படலை. ஏற்கெனவே நீ உன் மகளை முழுசா இழந்திட்டிருக்கே. ஆறுதல் இல்லாம, ஆதரவு இல்லாம அநாதையா இருக்கிற உங்களுக்கு ஆண்டவன் ஓர் அழகான ஆண் குழந்தையைத் தந்திருக்கான். அதையும் இழக்க உனக்கு எப்படியம்மா மனசு வந்தது? வேணாம்மா...''

''இல்லை டாக்டர்! பெத்த குழந்தை இறந்து போன அதிர்ச்சியிலே என் மகளுக்கு ஏதாவது ஆகறதை விட இது எவ்வளவோ மேல். அது மட்டுமில்லாம எங்க சொற்ப வருமானத்திலே இவனை எப்படி வளர்த்து, படிக்கவச்சு ஆளாக்கப் போறோம்? நித்யா படிச்சவ. கெட்டிக்காரி. இவனை டாக்டராகவோ, என்ஜினியராகவோ ஆக்குவா... என் பிள்ளை எங்கேயிருந்தா என்ன. நல்லா இருந்தா போதாதா? என் பிள்ளையை நான் யார்கிட்டே இழக்கிறேன்? என்னோட இன்னொரு பிள்ளைகிட்டே

தானே? நானும் என் மகளுக்கு எதுவும் இதுவரை கொடுத்த தில்லை. சீர், செனத்தி பண்ணினதில்லை. அவளுக்குக் கொடுக்க எதுவுமில்லாத எனக்கு இதையாவது கொடுக்க ஒரு சந்தர்ப்பம் வாய்ச்சிருக்கே. என் பிள்ளை எங்கே வளர்ந்தாலும் நல்லா வளர்ந்தா அதுவே எனக்குப் போதும். அதோட என் மகளுக்கும் எதுவும் ஆகக்கூடாது. அவ உயிர் பிழைக்கணும். சீக்கிரம் என் பேத்தியை என்கிட்டே கொடுத்துட்டு என் பிள்ளையை எடுத்திட்டுப்போங்க டாக்டர்! ப்ளீஸ்.''

பெருகிய கண்ணீரில் நனைந்த வண்ணம் டாக்டர் புனிதவதியிடம் தன் பிள்ளையைக் கொடுத்தாள் கற்பகம். இப்போதாவது மகளுக்குப் பெரிதாக இதைச் செய்ய வாய்ப்பு கிடைத்த நிறைவு அவளுடைய நெஞ்சமெல்லாம் பரவியது.

●



# குலப் பழக்கம்

## குன்றக்குடி பெரியபெருமாள்

அவருடைய பெயரைச் சொன்னவுடனேயே, ''அடே யப்பா! கண்ணப்ப செட்டியார் தானே? கறார்ப் பேர் வழியாச்சே! எதுவாயிருப்பினும் வெட்டு ஒண்ணு, துண்டு ரெண்டுனுதான் பேசுவார்...!'' என்பார்கள்.

காரைக்குடி 'அரு. நா' வீதியில் உள்ள அரண்மனை போன்ற கண்ணப்ப செட்டியாரின் வீடு, பலருக்குப் பழக்க மானது. வீட்டின் முகப்புத் திண்ணையில், வெகு நாள்களாகச் செட்டியார் 'பெட்டியடி' வைத்துத் தொழில் நடத்தி வருகிறார். வெளியே, வாசலுக்கு வலப் புறத்தில், வீட்டுச் சுவரில் - 'இங்கே தங்கம், வெள்ளிச் சாமான்களும், பித்தளைப் பாத்திரங்களும் அடகு பிடிக்கப்படும்' என எழுதப் பெற்ற சிறிய விளம்பரப் போர்டைப் பார்த்தாலே, செட்டியார் செய்து வருகிற அடகுத் தொழிலின் காலப் பழைமையைக் கண்டு கொள்ளலாம்.

ஆத்தங்குடியில் பிறந்த தேனம்மை ஆச்சியைத் திருமணம் செய்து கொண்ட ஆறாவது மாதத்திலேயே, தம் வீட்டு முகப்புத் திண்ணையில், அடகுத் தொழிலைத் தொடங்கி விட்டார் கண்ணப்ப செட்டியார். சென்ற

மாதத்தில்தான், ஆச்சியும் செட்டியாரும் மீண்டும் ஒரு முறை மணவறையில் அமர்ந்து 'சாந்தி' செய்து கொண்டனர். பெட்டியடியை நறுவிசாகத் துடைத்த பின், பாயை எடுத்து வெளியே கொண்டு சென்று, உதறி, பெட்டியடிக்கருகே விரித்து, அருகே சுவரில் மாட்டப்பட்டிருந்த பிள்ளையார், முருகன், வேங்கடாசலபதி, லெட்சுமி, அனுமார் ஆகிய இறைத் திருவுருவப் படங்களுக்கு மல்லிகைச் சரங்களைச் சூட்டி, ஊதுபத்தியைப் பொருத்தி வைத்து, ஒரு கணம் கண்களை மூடிக் கரங்களைக் குவித்து நின்ற கணக்கப் பிள்ளை மருதநாயகம், 'முருகா' எனக் கூறிக்கொண்டே பெட்டியடியில் வந்தமர்ந்தார்.

கொப்புடையம்மன் கோயில் சிவாச்சாரியார் சுவாமிநாத குருக்கள், கண்ணப்ப செட்டியார் வீட்டுக்குள் நுழைந்தார். ''வாங்க, வாங்க! குருக்களய்யா வாங்க!'' என வாயெல்லாம் பல்லாக வரவேற்றார் மருதநாயகம்.

சுவாமிநாத குருக்கள், பெட்டியடிக்கு முன்னே வந்து அமர்ந்தார். ''காலைலே பத்து மணிக்கே வெயிலைப் பார்த் தேளா? அப்பப்பா...'' எனக் கூறியவாறே, மடியிலிருந்த ஒரு சிட்டையை எடுத்து, மருதநாயகத்திடம் கொடுத்தார் குருக்கள்.

கணக்குப் பார்த்த மருதநாயகம், ''குருக்களய்யா! முன்னூத்துப் பதினோரு ரூபாயும், எண்பத்தஞ்சு காசும் கொடுங்க'' என்றார்.

''இருநூற்று ஐம்பதுதானே நான் வாங்கிண்டது!'' என வினவினார் குருக்கள்.

''ஆமா, ஆமா! அதுக்கு வட்டி சேர்த்துத்தான் சொன்னேன்..'' என்றார் கணக்கப்பிள்ளை மருதநாயகம்.

மடியிலிருந்த ரூபாய் நோட்டுகளை எண்ணிப் பார்த்த சுவாமிநாத குருக்கள், ''முன்னூற்றுப் பத்துதான் கொண்டு வந்திருக்கேன்... சரி, இதை வாங்கிண்டு நகையைக் கொடுங்கோ. பாக்கி ஒண்ணு, எண்பத்தஞ்சா? செட்டி யாரண்டே சொல்லி, முடிஞ்சா தள்ளுபடி செய்யுங்கோ... அல்லது, நான் இந்தப் பக்கம் வரச்சே, அதைக் கொண்டு வந்து கொடுத்துடறேன்'' என்றார்.

''கொஞ்சம் இருங்க, குருக்களய்யா'' எனக் கூறிவிட்டு, உள் கட்டில் அமர்ந்திருந்த கண்ணப்ப செட்டியாரிடம் ஓடினார் மருதநாயகம்.

சுவாமிநாத குருக்களும், மருதநாயகமும் பேசிக் கொண்டிருந்ததை உள்கட்டுப் பட்டகசாலையில் அமர்ந்து, முழுவதுமாகக் கேட்டுக் கொண்டிருந்த செட்டியார், மருத நாயகத்தைப் பார்த்ததும், ''ஏனய்யா! இங்கே வந்து என்ன கேட்கப் போறீர்? போய்யா! குருக்களைப் பாக்கிய கொண்டு வரச் சொல்லுய்யா! பொறவு நகையைக் கொடுக்கலாம்...'' என்றார். ''இல்லே! ஒண்ணு எண்பத்தஞ்சுதானே?'' எனத் தலையைச் சொறிந்தார் மருதநாயகம்.

''ஏன்... உனக்கு அது பணமாத் தெரியலையா?'' என ஒரு பார்வை பார்த்தார் செட்டியார். அந்தப் பார்வையை எதிர்கொள்ள முடியாத கணக்கப்பிள்ளை, உள்கட்டிலிருந்து சோர்வாக, ஆனால் வேகமாக வெளியேறினார்.

காரைக்குடி கொப்புடைய நாயகியம்மனுக்கு, வெள்ளி யில் சிம்ம வாகனம் செய்ய, கோயில் அறங் காவலர்கள் முடிவு செய்தனர். நன்கொடைகள் பெற்றே, வாகனத்தைச் செய்து விடலாமென்றார், அறங்காவலர்கள் தலைவர்

மு.நா.மு. முத்தையா செட்டியார். அனைவரும் தலைவரின் கருத்துக்கு உடன்பட்டனர்.

அறங்காவலர்கள், தலைவர் உட்பட நால்வர், பின் சீட்டில் அமர்ந்து கொள்ள, சுவாமிநாத குருக்கள், அம்பாளின் திருவருட் பிரசாதங்களோடு, டிரைவருக்குப் பக்கத்தில் முன் சீட்டில் உட்கார்ந்திருக்க, சிம்ம வாகன நன்கொடை வசூலுக்குக் கார் புறப்பட்டது.

'அரு. நா' வீதியில் கார் சென்றபோது, ''கண்ணப்ப செட்டியார் வீட்டிற்கு முன்னே கொஞ்சம் நிறுத்தப்பா, டிரைவர்'' என்றார் தலைவர் முத்தையா செட்டியார்.

'முதல் முதல்லே, இந்தக் கருமியிடமா?' என முணு முணுத்துக் கொண்டே இறங்கினார் சுவாமிநாத குருக்கள்.

கண்ணப்ப செட்டியாரின் வீட்டு முகப்பில் அவர்கள் நுழைந்ததுமே, பெட்டியடியில் அமர்ந்திருந்த மருதநாயகம் எழுந்து நின்று, 'வாங்க, வாங்க... எல்லாரும் வாங்க...'' எனக் கை கூப்பியவாறே, ''முதலாளி! முதலாளி!'' என வீட்டினுள் குரல் கொடுத்தார்.

உள் கட்டிலிருந்து வெளியே வந்த கண்ணப்ப செட்டியார், ''அடடே! வாங்க.. உள்ளே வாங்க! தேனம்மை! தேனம்மை! இங்கே வந்து பாரேன். கோயில் தலைவர் வந்திருக்காக! நாட்டாண்மை சேர்வைக்காரர் வந்திருக்காக! கோயில் டிரஸ்டியெல்லாம்...'' முடிப்பதற்குள், மூன்றாங்கட்டு முற்றத்திலிருந்து, உள் கட்டிற்குள் வந்த தேனம்மை ஆச்சி, ''வாங்க... வாங்க!'' எனத் தனித் தனியாக ஒவ்வொருவரிடமும் கூறி வரவேற்றார்.

''பஞ்ச மூர்த்திகளாப் பொறப்பட்டு வந்திருக்கீக! கோயில்லே ஏதும் விசேஷமா?'' எனக் கண்ணப்ப

செட்டியார் வினவியவாறே, ''தேனம்மை! ஐஸ் பெட்டியைத் திறந்து, இவுகளுக்குக் குடிக்க எதுனாச்சும் கொடு'' என ஆச்சியிடம் கூறினார்.

குருக்கள் வழங்கிய கொப்புடைய நாயகி அருட் பிரசாதங்களைப் பக்தி சிரத்தையுடன் அணிந்து கொண்டு, ஃபிரிட்ஜைத் திறந்த தேனம்மை ஆச்சி, 'டொரினா'க்களை ஒவ்வொன்றாக எடுத்து, அதன் தலையை நெம்பி, ஒவ்வொருவரிடமும் பணிவாகக் கொடுத்தார்.

'ராம. கண' என விலாசம் நான்கு மூலைகளிலும் பின்னப் பட்ட பவானி சமுக்காளத்தில் அமர்ந்திருந்த ஐவரும், ஆச்சி அளித்த குளிர் பானங்களை அருந்திக் கொண்டிருந்தபோது, 'டொரினா'க்களைக் கொடுத்தே, மெல்ல நழுவி விடுவான் இந்த எம்டன்' எனச் சுவாமிநாத குருக்கள் தம் மனத்திற்குள் சொல்லிக் கொண்டார்.

''ரொம்ப நாளா எல்லாருக்கும் ஒரு விருப்பம். வேறொண்ணுமில்லை... கொப்புடையாளுக்கு ஒரு சிம்ம வாகனம் செய்யோணும்னு...'' என அறங்காவலர் தலைவர் மு.நா.மு. முத்தையா செட்டியார் வந்த காரணத்தைச் சொல்லத் தொடங்கியவுடன், ''அவசியம் செய்யோணும் மூனா! அதை உங்க காலத்திலேயே நிறைவேத்திடுங்க..'' என்றார் கண்ணப்ப செட்டியார்.

'அதுதானே கேட்டேன்! முத்தையா செட்டியாரையே, வாகனத்தைச் செஞ்சு வெச்சிடச் சொல்றான் கஞ்சன்!' - மீண்டும், குருக்கள் மனத்திற்குள் சொல்லிக் கொண்டார்.

''அதுதான்... நம்மைப் போல நாலைந்து புள்ளிகளைப் பார்த்து, அவங்களோட நன்கொடையிலேயே வாகனத்தைச் செய்துடலாம்னு பார்க்கிறோம்'' என்றார் நாட்டாண்மை சேர்வைக்காரர்.

''அப்படியா? ரொம்ப சந்தோஷம். அம்பாளுக்கு வாகனம் செய்ய கொடுக்கக் கொடுத்து வைக்கணும். ஆமா, நீங்க என்கிட்டே எவ்வளவு எதிர்பார்க்கிறீங்க?'' எனக் கேட்டார் கண்ணப்ப செட்டியார்.

''அவுகளை என்ன கேக்குறீக? நம்மளாலே முடிஞ்சதைச் செய்ய வேண்டியதுதானே?'' என்றார் தேனம்மை ஆச்சி.

''இருக்கட்டும்... இருக்கட்டும்! அவுகளே சொல்லட்டுமே!'' என்றார் கண்ணப்ப செட்டியார்.

''நாங்க, என்ன சொல்றது? அம்பாளே சொல்றமாதிரி, குருக்களய்யாவே சொல்லட்டும்...'' என்றார் தலைவர் முத்தையா செட்டியார்.

'ஒரு ரூபாய் எண்பத்தஞ்சு காசுக்கு ஓட, ஓட விரட்டினானே! இப்போ நம்மகிட்டே சிக்கிண்டான்!' என நினைத்த சுவாமிநாத குருக்கள், 'நன்னா, வசமா, கறந்துட வேண்டியதுதான்' என எண்ணியவாறே, ''அவா பேரே கண்ணப்பர்! பிறகென்ன? ஒரு கண்ணுக்குப் பத்தாயிரமா, இரண்டு கண்ணுக்கும் இருபதாயிரம் கொடுத்திட வேண்டியது தான்!'' என்றார் குருக்கள், கண்ணைச் சிமிட்டியபடி.

''குருக்களய்யா! கண் என்ன கண்? கொடுக்கிறது கை தானே? ஒரு கையிலே இருக்கிற விரலுக்குப் பத்தாயிரமா, ஐம்பதாயிரம் கொடுத்துடறேன். என்ன 'மூனா' திருப்தி தானே?'' என்றார் கண்ணப்ப செட்டியார். இரு கரங்களையும் கூப்பி, ''அம்பாளோட கைங்கர்யம் சீக்கிரமாவே நிறைவேறட்டும்'' என்றார், மீண்டும் கண்ணப்ப செட்டியார்.

'ஐம்பதாயிரம்' என்றதும், பிரமித்துப் போய் விட்டார் சுவாமிநாத குருக்கள்.

காரில் ஏறி அமருகிறபோது, ''மனுஷன் தொழில்லே தான் கறார்ப் பேர்வழி! தொண்டுன்னதும், அள்ளிக் கொடுத்துட்டாரே!'' என்றார் குருக்கள்.

''குருக்களய்யா! அது அவுங்களோட குலப் பழக்கம்!'' எனக் கூறிய நாட்டாண்மை, தலைவர் முத்தையா செட்டியாரைச் சற்றே உற்று நோக்கினார். தலைவர் பெருமிதத்தோடு புன்னகை செய்தார்!

●



# மூங்கில்

கோவி. மணிசேகரன்

'இத்தனை சேனைகள் அந்த நட்ட நடுக்காட்டை நோக்கி ஏன் செல்கின்றன? எவர் மீது படையெடுக்கச் செல்கின்றன? அவ்விதம் படையெடுத்துச் சென்றால் படைத்தலைவன் தேவையாயிற்றே! இங்கே ராஜ குரு, மகாமேதையான சாணக்கியரல்லவோ தலைமை தாங்கிச் செல்கிறார்! அப்படிச் செல்பவர் குதிரை மீது வீற்றுச் செல்லவில்லை. யானை மீது அம்பரித்துச் செல்லவில்லை. பல்லக்கில் செல்வானேன்?'

இக்கேள்விகள் யாரோ, எவருக்கோ எழவில்லை. சாணக்கியரைச் சூழ்ந்து செல்கிற படைவீரர்களுக்கே எழுந்தன. படைகளை நடத்திச் செல்லும் உதவிப் படைத் தலைவனுக்குக் கூட முழுமையாகத் தெரியாதென்றால், படை வீரர்கள் தங்களுக்குள் கேட்டுக்கொண்டதில் தவறில்லை.

மகத சாம்ராஜ்யத்தின் தென்மூலை நோக்கிப் படைகள் சென்று கொண்டிருந்தன. எத்தனை இரவுகள்; எத்தனை பகல்கள்? எங்கே செல்கின்றன? யாரை நோக்கிச் செல்கின்றன?

ஆதித்தன் மேற்கு வாயிலை ஆசீர்வதிக்கச் சென்று கொண்டிருந்தான். அந்தப் பயங்கரமான வனாந்தரத்தைக் கடந்து கொண்டிருந்தன படைகள்.

சாணக்கியரென்னவோ 'இவ்வளவு பெரிய படைகள் தேவையில்லை. குறிப்பிட்ட பாதுகாப்பு வீரர்களுடன் பயணமானால் போதும்' என்றுதான் சொல்லிப் பார்த்தார். ஆயினும் மகா சக்ரவர்த்தியான சந்திரகுப்தன் கேட்க வேண்டுமே! பயணமாவது அறிவின் கருவூலம். விலை மதிக்க முடியாத பொக்கிஷம். அண்டை நாட்டான் கொள்ளை யடித்துச் சென்றாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. மேலும் கிரேக்கப் பிடியிலிருந்து இப்போது தான் ஓரளவு தப்பி இருக்கிறது, கங்கைக்கரை. கிரேக்க மாவீரன் செல்யூக்கசுடன் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டாலும், சாணக்கியரைப் போன்ற மதியூகியைக் கடத்திச் செல்லமாட்டான் என்பது என்ன நிச்சயம்?

நியாயப்படி இப்பயணத்தில் சந்திரகுப்த மகா சக்கரவர்த்தியும் கலந்து கொண்டிருக்க வேண்டும். சந்திர குப்தனுக்குத்தான் இந்தச் சின்ன விஷயத்துக்கு சாணக்கியர் செல்வதே பிடிக்கவில்லை என்றிருக்க, அவரா பயணப்படப் போகிறார்?

நடந்து வந்த பாதையைத் திரும்பிப் பார்க்க மறுப்பது செல்வச் செருக்கு. மன்னர்களில் பெரும்பாலும் இப்படித் தானே? ஆனால், சாணக்கியர் அறிவு சாம்ராஜ்யத்தின் மகுடம் தரித்த அதிபதி. எனவே நன்றி அவரது நகக்கால்களிலும் நர்த்தனமிட்டுக் கொண்டிருந்தது.

எப்பேர்ப்பட்ட கிழவியவள்! கிழவியா அவள்? ஞானத்தாய்! இவ்வளவு பெரிய சாம்ராஜ்யத்தை ஒரு குடை நிழலில் கொண்டுவர அவளது அகல்விளக்கு போன்ற திரிப்பிரகாசம் தானே உதவியது?

அன்று பஞ்சைப் பார்ப்பனனாக இருந்த சாதாரண சாணக்கியர், இன்று மகதத்தின் மகாமேரு! பூணூல் மட்டுமே பூண்டறிந்த மார்பில், பொன்னாலான பூஷணங்கள்.

இத்தனைக்கும் காரணம் அந்த ஞானத் தாயல்லவா? ஆளையனுப்பி அந்த ஞானத்தாயைத் தலைநகராம் பாடலி புத்திரத்துக்கு அழைத்து வந்தால் போதாதா என்று சந்திர குப்தன் கேட்கலாமா? நாளை இவன் நம்மையும் இப்படித் திரும்பிப் பார்க்கும் ஞானமின்றி நடத்தினாலும் நடத்து வானல்லவா?

அர்த்த சாஸ்திரத்தின் முதல் வரி - மூலக்கனல் - அந்த ஞானத் தாயல்லவா? அப்படி என்ன மூலக்கனலை மூட்டி விட்டாள் அந்தக்கிழவி?

எண்ணிப் பார்க்கையில் மார்பு விம்ம பெருமூச்சு விட்டார், பூஜ்யத்தைக் கண்டு பிடித்த பூஜ்யரான சாணக்கியர். பல்லக்கு வேகமாகச் சென்று கொண்டிருந்ததால் அவரது கனத்த உடல் அசைந்து கொண்டிருந்தது. ஒல்லியான தேகத்துடன் கிழவியின் குடிசையுள் நுழைந்த உருவமா அது?

பகை மண்டலம், புகை மண்டலமாய்ச் சூழ்ந்திருந்த நேரம் அது. சந்திரகுப்தன் தலைக்கு நந்தர் குலம் ஏலம் விட்டு எதிர்பார்த்துக் கொண்டிருந்த நேரம். எந்தத் தாயை - மோராவை - விபசாரி என்று தனநந்தன் சொன்னானோ, அவன் தலையைக் கொய்து பந்தாடுகிறேன் என்று சந்திர குப்தன் சபதம் ஏற்றுத் தலைமறைவாக வாழ்ந்த இருண்ட நேரம் அது. அந்த இருளாட்சியில் ஒளிவிளக்காய் வந்து சேர்ந்து துணை புரிந்தவர்தான் சாணக்கியர். 'ஏ, தனநந்தனே! உன்னைச் சிம்மாசனத்தை விட்டு இறக்கவில்லையெனில், இந்தக் குடுமியை முடியேன்!' என்று வஞ்சினமேற்றவரா யிற்றே சாணக்கியரும்! இதுவும் ஒருவித பாஞ்சாலி சபதமே!

காடுகளிலும், மலைகளிலும் ஒளிந்தும், விழித்தும், பட்டினி கிடந்தும் காலம் தள்ளிய நாள்கள் எத்தனை,

எத்தனை? சமயம் கிடைக்கிறபோதெல்லாம் படைகளைத் திரட்டுவதும், தோல்வியடைவதுமே நாள்களாய் நகர்ந்தன. எவ்விதம் வெற்றி காண்பது?

இப்படி மறைந்து வாழ்ந்த நாள்களில் ஒரு நாள் -

அடர்ந்த அந்த வனாந்தரத்தில், உணவு தேடி வருகையில் கண்களில் தென்பட்டது ஓர் ஏழைக்குடிசை. அதனுள் வறுமையின் அம்மியில் அரைபட்டுத் தேய்ந்து தேய்ந்து உருக்குலைந்த வயதான ஒரு கிழவி, அவளது பேரன்.

பசி என்று வந்த சாணக்கியரையும், சந்திரகுப்தனையும் இன்னார் என்று தெரியாமல், பசி என்று வந்தார்க்கு, 'ஒரு படி சோற்றைப் புசி,' என்று அளிக்கும் நல்ல உள்ளம் கொண்ட மூதாட்டி, அவர்களை அமரச் செய்தாள். அப்போதைக்கிருந்த தினை மாவைக் கரைத்து அப்பம் சுட முனைந்தாள். அச்சமயம் குடிசையுள் நுழைந்த பேரன், ''பாட்டி! ரொம்பப் பசிக்கிறது,'' என்று துடிக்க, சாணக்கியரும், ''அம்மா! எங்களால் பசியைத் தாங்கிக் கொள்ள முடியும். இவன் சிறுவன். முதலில் அவனுக்குக் கொடுங்கள்,'' என்றார்.

''பாட்டி இவர்கள் யார்?'' சிறுவன் கேட்டான்.

''யாரோ, பாவம்! காட்டில் வந்து அகப்பட்டுக் கொண்டவர்கள். பசி என்றார்கள். 'நம் உணவை அவர்களுக்கும் பகிர்ந்து கொடுக்கலாமே', என்று உட்காரச் செய்தேன்.''

அக்கிழவி, அப்பத்தைச் சுடச் சுடப் பேரனுக்கு வைக்க, பேரனும், பசி மிகுதியால் அப்பத்தின் நடுப்பாகத்தைத் தொட்டுப் பிட்டு எடுக்க, விரல் சுடுபட்டதால் 'பாட்டி,' என்று துடித்து விட்டான்.

பதறி நோக்கிய பாட்டி, ''அட முண்டமே! சந்திர குப்தனுக்காகப் பாடுபடுகிறேன் என்று சாணக்கிய முண்டம்

செய்கிற தப்பை நீயும் செய்திருக்கிறாய். முதலில் நடுப்பாகத்தில் கை வைக்கலாமா? ஓரங்களைப் பிட்டுத் தின்னு... நடுப்பாகம் தன்னால் ஆறும். கடைசியில் அதில் கை வைக்க வேண்டும். என்ன ஆத்திரமடா, உனக்கு!''

யாரோ 'பளார்' என்று பிரம்பால் அடிப்பது போன்ற உணர்வில் துடித்துப் போனார் சாணக்கியர். எத்தனை பெரிய ஞானோதயம்! சூரியனும், அகல் விளக்கின் முன் தோற்குமோ? தோற்றுப் போய்விட்டதே!

எவ்வளவு சூசகமாகச் சொன்னாள் இக்கிழவி! எடுத்தவுடன் தலைநகரத்தைத் தாக்கக் கூடாது... கண்டுவரும் தோல்வியே இதனால்தான் போலும்! நகரத்தின் சுற்றுப் புறங்களைத் தனதாக்கிக் கொண்டு, தலைநகருக்குள் நுழைய வேண்டும்... ஓ...

பல்லக்கில் சென்று கொண்டிருந்த சாணக்கியருக்கு இதனை எப்போது நினைத்தாலும் பெருமூச்சு வரும். இப்போதும் வந்தது. அந்த ஞானத்தாயின் இந்தக் கருத்தின் அடிப்படையில் படை தொடுத்ததால்தானே, இத்தனை பெரிய சாம்ராஜ்யத்தைத் தனது காலடிக்குக் கொண்டு வர முடிந்தது! அந்த ஞானத்தாயை அழைத்து வந்து கனகாபிஷேகம் செய்து நன்றிக்கடன் ஆற்ற வேண்டுமல்லவா?

குறிப்பிட்ட அந்தக் குடிசையை நெருங்கியபோது, அழுகுரல் சத்தம் வந்தது கேட்டு அதிர்ந்து போனார் சாணக்கியர்.

குடிசைக்கு வெளியே ஆணும், பெண்ணுமாய் நாலைந்து பேர். உள்ளே அழுவது ஆண்குரல்.

பல்லக்கை விட்டிறங்கிச் சென்று கவனித்தார். அந்த ஞானத்தாய் வானத்தாயாகிக் கிடந்தாள். கொஞ்ச நேரத்துக்கு முன்புதான் உயிர் பிரிந்ததாகச் சுற்றியிருந்தவர்கள் கூறினர்.

வந்திருப்பவர் சாணக்கியர், மகத சாம்ராஜ்யத்து முடிதரியாச் சக்கரவர்த்தி என்று கேள்விப்பட்ட சிறுவன் எழுந்தோடி வந்து கழல்பணிந்து கட்டியழுதான். ''குருவே! பாட்டி என்னை விட்டுப் போய் விட்டாள்! அன்று நீங்கள் வந்தபோது யாரென்று அறியாள். பின்னாளில் அறிந்து உங்களையும், சக்கரவர்த்தியையும் பார்க்கப் பெரிதும் ஆசைப்பட்டாள். எங்கள் வறுமையைத் தீர்க்க வருவீர்கள் என்று நாளும் எதிர்பார்த்தாள்!''

எல்லாம் சரி; இவன் தன்னைக் குருவே என்று அழைத்ததன் காரணம்? பின்னர் கேட்டுக் கொள்ளலாம்... சாணக்கியர் நினைத்தார்!

கிழவியின் தகனத்துக்கான ஏற்பாட்டைக் கவனிக்கலானார் சாணக்கியர். எங்கிருந்தாலும் சந்தனக்கட்டைகளை எடுத்து வர ஆணையிட்டார். எல்லாமே 'சுறுசுறு'வென்று நிகழ்ந்தன!

தமது கையாலேயே அந்த ஞானத்தாயைக் குளிப்பாட்டினார். பொன்னறியா, மணியறியா அந்தப் பாட்டியை, மூலக் கனலை, தமது மார்பில் தவழ்ந்த பொன்னாரத்தாலும் மணியாரத்தாலும் அலங்கரித்தார். தாமே மகனாக நின்று இறுதிக்கடன் செய்தார். இது அவரது நன்றிக்கடன், மனத்துக்கு நயத்தகு சமாதானமாய்த் தெரிந்தது.

ஒரு நிம்மதி; எழுந்து எழுந்து அலைக்கழித்த பெருமூச்சுக்கு நிரந்தர நிம்மதி. ஞானத்தாயின் பேரப்பிள்ளையை என்ன செய்வது? விட்டுச் செல்வதைவிட வேதனை தரவல்ல மாபாவம் வேறில்லை. அழைத்துச் சென்று அவனுக்கு வேதங்கள் கற்பித்து எதிர்காலம் ஏற்றமிகு நலன்களைத் தரச் செய்யலாமல்லவா?

குருவே என்றானே!...

நினைவு வந்தது. இதனை வழியில் கேட்டுக் கொள்ள லாம். தமது பல்லக்கிலேயே அவனுக்கும் ஓர் இடம் ஒதுக்கிப் பயணமானார். வந்த படைகள் மகதம் நோக்கித் திரும்பின.

ஒரு நாள்போது பயணத்துக்குப் பிறகு...

மரங்கள் சூழ்ந்த வனாந்தரத்தில் பகற்போது உணவை யுண்டனர். பிறகு சற்றே இளைப்பாறிப் பயணத்தை மேற் கொண்டனர்.

பல்லக்கு மிக மெல்லவே சென்று கொண்டிருந்தது. உச்சியைத் தாண்டிய உக்கிர வெயில் இன்னும் குறையாம லேயே இருந்தது.

சாணக்கியர், அந்த இளைஞனை நோக்கினார்.

''நீ என்ன படித்திருக்கிறாய்?''

இளைஞன் சிரித்தான்.

''குருவே! படிப்பு என்பது என்னவென்று தெரியாது. உங்களைப் பற்றிப் பாட்டி அடிக்கடி சொல்வாள். 'இப்பேர்ப்பட்ட மாமேதை நம்வீட்டில் அமர்ந்து உண்டதால், அவரையே குருவாக எண்ணி வழிபடு; அறிவு தன்னால் வரும்' என்று!''

''அப்படியா அந்த ஞானத்தாய் சொன்னாள்?''

''ஆம் குருவே!''

''என்னை வழிபட்டு வருகிறாயா?''

''தினமும்!''

''அப்படியென்றால் என்னிலும் பெரிது ஏதுமில்லை என்கிறாயா!''

இளைஞன் கூர்ந்து கவனித்தான். சாணக்கியரும் 'தெய்வம்' என்று சொல்லுவான் என்றே எதிர்பார்த்தார். ஆனால் இளைஞன் சொன்னான். ''வளைந்த மூங்கில்!''

''வளைந்த மூங்கிலா?''

''ஆம் குருவே! இதோ பாருங்கள். மகாமேதையான உங்கள் தலைக்கு மேலே உயர்ந்து காண்பது அதுதானே!''

அதிர்ந்து போனார் சாணக்கியர். அப்படியும் ஓரக் கண்களால் தலைக்கு மேலே வளைந்து நிற்கும் மூங்கிலைக் கண்டார்.

''இதை நீயாகச் சொல்லுகிறாயா?''

''இல்லை குருவே! என் பாட்டி சொல்வாள் 'நாம் வளைந்த மூங்கில் போல், எதற்கும் பணிந்து வாழ்ந்தால், மகாராஜா தலைக்கு மேலும் உயரலாம். வளையாமல் வாழ்ந்தால், பாடைக்கு உதவும் மூங்கிலாகவும், கழைக் கூத்தாடி காலடிபட்டு நடக்கிற மூங்கிலாகவும் தான் வாழமுடியும்.' இதை வைத்துத்தான் 'என்னிலும் பெரிது எது?' என்று நீங்கள்கேட்ட போது உடனே இந்த மூங்கில் கண்களில் படவே சொல்லி விட்டேன்.''

சாணக்கியரின் அதிர்ச்சி இன்னும் குறையவில்லை. அவரது கர்வமோ குறையலாமா என்று எண்ணியதேயன்றி, குறைந்தபாடில்லை. மனத்தில் இவ்விதம் தீர்மானித்துக் கொண்டார்: 'மகதம் சென்றதும் இனி பல்லக்கிலேயே ஏறுவதில்லை!'

●

# கார வேர்க்கடலைகளும் சில பிஸ்கெட்களும்...

பா. சத்தியமோகன்

வாால்தனம் செய்யும் இரண்டாவது மகளைப் பின்னாலேயே துரத்தி ஓடி, ''நில்லு அபி... சட்டையைப் போடு'' என்று அதட்டிக்கொண்டே ஓடும்போதுதான் அது நிகழ்ந்தது. அந்தக் குரல்தான் - அந்தப் பேச்சுதான் - அவர்கள் பக்கம் நிமிர வைத்தது.

''அடம் பிடிக்காதம்மா... போய் அப்பாகிட்டே போட்டுக்கோ...'' காலை ஒன்பது மணிக்கு நுழையும் இந்தப் பாட்டியின் குரல் இம்சையாக இருக்கும். பக்கத்துத் தெருவில் இருக்கிறார்கள் என்றாலும் மெல்ல ஊர்ந்து நடக்கவும் மறுபடி எழுந்து செல்லவும் அரைமணி ஆக்கிவிடுவார்கள்.

ஒரு சாண் நீளத்துக்கு மட்டுமே மிச்சமிருந்த நரை முடிகளின் ஈரத்தை வலக்கையால் மெல்ல உதறியபடியும், அழிந்த நெற்றியுமாக அவர்கள் வருவது தெரிகிறது. அள்ளி அடித்த விபூதி பரந்திருந்தது நெற்றியில். வெள்ளிக்கிழமை!

எதற்கு வருகிறார்கள் என்று அத்தனை சீக்கிரம் கண்டுபிடிக்க முடியாது. என்ன கேட்பார்கள் என்பதும் தெரியாது.

நிமிர்ந்து பார்த்தேனே தவிர அவர்களுக்குப் பதில் ஏதும் சொல்ல முடியாத நிலையில், என் துரிதகரமான வேலைகள் இருந்தன. இரு வயது மகள் அபியைக் குளிக்கச் செய்துவிட்டு, ரேஷன் கடைக்குச் சென்று திரும்பிவிட்டு, பிறகு பதினோரு மணிக்குப் பதில் எழுதவேண்டிய கடிதங்கள் எவை எவை என்பதுவரை எனக்குள் பரபரப்பு கெட்டியாகப் பிடித்திருந்தது. ஏதாவதொரு வேலையை நாளைக்கெனத் தள்ளிப் போட்டாலும், அதற்குள் மற்ற மற்ற வேலைகள் குவிந்துவிடும். தனித்தனியாக, குடும்பங்கள் பெருகியதன் கால சாட்சியாக நிற்பதை இவர்களிடம் கூற முடியுமா? தளர்ந்தும் நொந்தும் போன இந்த எழுபது வயதுப் பாட்டியின் கண்ணாடி வழியே எங்களது பரபரப்பும் தெரிய வருமா? எனக்குப் புரியவில்லை. அதற்குள் அந்த அம்மாள் இரும்பு கேட் கிறீச்சிடத் திறந்து நுழைந்து வேப்பமரத்தின் அருகே இருந்த குட்டை சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்துவிட்டது தெரிந்தது.

பாட்டி வரவர தானே உரிமை எடுத்துக் கொள்கிறார்கள் என்று தோன்றியது. அதற்குள் அபி, மழலை வார்த்தையில் ''வாங்க....ப்....பாட்டி'' என்று சொன்னதும் பாட்டியின் சுருக்கம் விழுந்த முகத்தில் சிறு அகல் அளவு பிரகாசம்.

நான் எதுவுமே பேசாததைப் பாட்டியும் பொருட் படுத்துவதில்லை இப்போதெல்லாம். அவர்களுக்கு வேண்டியது என் இல்லத்தரசி. அவள் மட்டுமே!

''அவுங்க இருக்காங்களா?'' பாட்டி கேட்கும் நேரடி முதல் வார்த்தை இதுதான். நான் முகம் திருப்பும் ஆசாமி. 'உர்' முகம். அதிகம் பேசத் தூண்டாது. அதிலிருக்கும் பரபரப்பைப் பிறர் தானாக உணர வேண்டும் என நினைக்கிற நடுத்தர வயசாளி.

உள்ளக் கோபத்தைக் காட்டுவது எப்படி? குழந்தையைத் திட்டுவது போல் ஏதாவது பேசுவதெல்லாம் பாட்டிக்குப் புரிந்துவிடும். ''கிளம்பிட்டு அப்புறம் வர்றீங்களா பாட்டீ...?'' என்பதை வேறு அர்த்தத்தில், உள் பக்கம் திரும்பி, ''சசி...பாட்டி வந்திருக்காங்க கவனி'' என்றேன்.

எட்டரை மணி...சமையலறையிலிருந்து குரலுடன் வந்தாள் மனைவி. என் கண்ணின் வார்த்தைகள் புரிந்தவள்.

''இப்ப வெளியில கிளம்பறோம்...அப்புறம் சாயங் காலமா வாங்களேன்....'' என்ற பொய்யை நான் இன்னும் உதிர்க்காதது அவளுக்கு ஆச்சரியமாயிருக்கலாம்.

''இங்கே பாரு சசி... தோட்டத்திலே கறிவேப்பிலை பறிக்க வந்திருப்பாங்க. சீக்கிரம் பேசி அனுப்பு... எனக்கு டிபன் ரெடியா? பசிக்குது...'' என்று ஏக செய்திகளை வீட்டின் உள்பக்கம் நுழையும்போது சசியிடம் சொன்னது என் நேரத்தை மிச்சப்படுத்தும் என்று நம்பினேன்.

''வாங்க பாட்டீ'' என்றுதான் ஒரு முறை வாயாரக் கூப்பிடும் என் மனைவி மீது கூட எரிச்சல் வந்தது. அவர்கள் பேச்சின் நீளம் குறைவது மாதிரியாகத் தெரியவில்லை.

பசியுடன் ரேஷன் கடைக்குக் கிளம்பிவிட்டேன். சைக்கிளைப் படியைவிட்டுத் தள்ளிக்கொண்டு வரும்போது, வீட்டின் வாசலில் நசுங்கிய குரலில் பாட்டியும் அவள் பேச்சும் கேட்டன. பாட்டியின் கைகளில் ஏதோ மஞ்சள் பை ஒன்று இருந்ததை அப்போதுதான் கவனித்தேன். ஆனால் அது என் அவசர வேலைக்கும் பரபரப்புக்கும் நேரம் எடுக்கும் அரக்கனான சிந்தனை அல்லவா...!

நினைத்தபடி எந்த வேலையும் செய்ய முடியாமல் 11½ மணியாகி விட்டது ரேஷன் கடையிலேயே.

இரண்டு தோள்களும் வலித்தன. கோதுமை வழியும் பைகளைச் சைக்கிளை விட்டு வீட்டுக்குள் வைக்க எடுத்தபோது,

வீடு திறந்திருந்தது!

கதவுகளில் தாழ்கூட இல்லை.

எங்கே போனாள்...? மின் விசிறி கூட நிறுத்தப்பட வில்லையே... யோசித்தபடியே அறைக்குள் நோட்டம் விட்டபோது, என் மேசையில் ஒரு பொட்டலம் தட்டுப் பட்டது. பிரித்தேன். கார வேர்க்கடலை ஒன்றிலும், குருவி சிங்கமென்று வடிவம் கொண்ட பிஸ்கட் ஒன்றிலுமாக இரண்டு பொட்டலங்கள் கொண்ட ஒரே பொட்டலம் அது.

11½ மணி வெயிலுக்கும் பசிக்கும் உதவியது. நல்ல ருசியாயும் இருந்ததுகூட பிறகுதான் தெரிந்தது. அபிக்காக, தெருவில் போகும் கடலை வண்டிக்காரனிடம் வாங்கியிருப் பாள் என்று நினைத்துக் கொண்டிருந்தபோது, வாசல் பக்கம்-

''என்னங்க..? எப்ப வந்தீங்க..? சத்தமே யில்லையே...?'' என்றது மனைவியின் குரல். எப்போதும் கேள்விகளில்தான் இவள் உரையாடலைத் தொடங்குகிறாள். இடுப்பில் குழந்தையிருந்தது. வெயில் இருவர் முகத்திலும் தன் படலங்களை இறக்கியிருந்தது வியர்வையாக.

''நீ எங்கே போயிட்டு வரே? முதல்ல அதச் சொல்லு?'' என் குரலில் சூடு. ரேஷன் கடையில் கும்பலில் நின்ற சூடு. வரும்போது வீட்டில் யாரும் இல்லாத கோபத்தின் சூடு.

''வீட்டுக்குள்ளே போய் பேசலாமேங்க...''

''.....''

''அப்படிப் பாக்காதீங்க... பாட்டியை பஸ் ஏத்தி விட்டுட்டு வரேன். அதான் கொஞ்சம் லேட்டாயிடுச்சு...?'' அவள் குரலில் கசிவு தென்பட்டது.

பணிவு தென்படும் குரல்கள், கோபத்தை உறிஞ்சும் ஸ்பாஞ்சு போன்றவை. என் கோபத்தை அவற்றால் இன்னும் உள்வாங்க முடியும்.

''வீட்டைத் திறந்து போட்டுட்டுப் போறியே... எவனாவது வந்து இந்த வீட்டை ராவிட்டுப் போயிட்டா உங்கப்பனா பணம் கொடுப்பான்?''

''......''

பொறுமை உடையும்போது, வார்த்தைகளின் தரமும் உடைகிறது.

''பக்கத்து வீட்டு இராமசாமி போர்ஷன்ல என்னாச்சு தெரியுமில்லையா? முடிவாச் சொல்லிடு! பாட்டிக்கு உதவறேன்ட்டு நம் வீட்டைத் தெருவுல விட்றதாடி?'' பேசப்பேச மனைவியின் முகமும், மகளின் முகமும் ஒரு சேர இறுகின. மிரண்டன. லேசான கண்ணீர்த் திரட்சிக்கான சாயல் எழும்பியதும், என் கோபநதி வடிந்துவிடும் நிலைக்கு வந்தது. கண்ணீர், கோபத்தின் மீது தன் உப்பைப் போட்டு அணைத்து விடுகிறதோ..?

''சரி. இப்ப சொல்லு. ஏன் இவ்வளவு நேரம்? சொல்லு சசி!''

''இப்பத்தான் உண்டியலை உடைக்க முடிஞ்சதுங்க!''

''நீ என்ன சொல்றே?''

''தன்னோட பேத்தியே மருமகளா வந்தும்கூட, வேலைக்குப் போறோங்கிற திமிர்ல, பாட்டியைத் தினமும்

பட்டினிகூட போடத் தொடங்கிட்டாங்க...மனசு தாங்காம வடலூர் முதியோர் இல்லத்துக்கு இன்னிக்குக் கிளம்பிட் டாங்க... இத்தனை மாசம் சேத்து வைச்ச உண்டியல் காசை எடுக்குறதுக்குத்தான் இன்னிக்கு காலைல உண்டியலோட இங்க வந்திருந்தாங்க...''

''ஓ...! அதுக்கு நீ என்ன பண்ணினே...?''

''பசின்னாங்க. இராயர் கடைல நாலு இட்லி பார்சலும், டீயும் சாப்பிட வச்சு பஸ் ஏத்தி விட்டுட்டு வரேன்...''

சசி பேசிக்கொண்டே வந்தவள், என் மௌனத்தையும், அறையையும் நோட்டம் விட்டபடியே...

''ஏங்க...இங்கே இருந்த பொட்டலம் எங்கேங்க...?''

''ஏன், நான் சாப்பிட்டேன்'' என்றதும், சசி-

''பாவங்க... உண்டியலை உடைச்சதும் முதல் வேலையா நம்ம பொண்ணு அபிக்காக வேர்க்கடலையும் பிஸ்கட்டும் வாங்கித் தந்துட்டுத்தான் பஸ் ஏறிப் போனாங்க தெரியுமா..?''

பகீரென்று அடி வயிறு கலங்கியது குத்துவிட்டாற்போல். பரபரப்பில் புறக்கணித்து உதாசீனம் செய்த என் குணத்தில் கார வேர்க்கடலை, பட்டு எரிந்ததுபோல நெஞ்சு கரிக்கத் தொடங்கியது.

திரும்பி, மேசையில் பொட்டலத்தைப் பார்த்தேன். மிச்ச மிருந்த பிஸ்கெட் ஓடிசல்களில் எறும்புகள் ஏறி பாட்டியின் நினைவுபோல் கடித்துக் கொண்டிருந்தன. நீண்ட நேரத்துக்குக் கடிக்கும் என்று தோன்றியது.

# நம்மில் ஒருவர்

சரயு

அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தவனுக்குத் திடீரென்று மூச்சு முட்டுவது போலிருந்தது.

சற்றே புரண்டு நிமிர்ந்து படுத்துக் கொண்டான்.

கொஞ்சம் சுளுவாக மூச்சு விட முடிந்தது.

பத்து நிமிடங்கள் கழிந்திருக்கும்.

மறுபடியும் யாரோ முகத்தில் துணியைப் போர்த்தி விட்டது போல் மூச்சு விட அவஸ்தைப் பட்டான்.

அவன்... குரு நந்தன் எழுந்து உட்கார்ந்து விட்டான்.

பக்கத்தில் அகிலாவைத் திரும்பிப் பார்த்தான்.

அயர்ந்து பெருமூச்சு விட்டுக்கொண்டு தூங்கிக் கொண்டிருந்தாள்.

அவளை எழுப்ப மனம் வரவில்லை.

அப்பொழுது அவனால் உட்கார்ந்து கொண்டிருக்கவும் முடியவில்லை.

வயிற்றிலிருந்து ஏதோ பந்து போல் எழும்பி மூச்சுக் குழலை அடைத்துக் கொண்டாற் போல் சிரமப்பட்டான்.

எழுந்து கழிப்பறைக்குப் போய் விட்டு வந்தான்.

ஊஹூம்... வயிறு வெடித்து விடும் போல் இருந்தது.

''அகிலா!... அகிலா!''

மனசில்லாமல் சன்னமாய்த்தான் கூப்பிட்டான்.

வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தவள், ''ஏன்? என்ன ஆச்சு உங்களுக்கு?'' என்று கேட்டாள்.

''வயிறு உப்புசமாக இருக்கு. கொஞ்சம் பெருங்காயம் போட்டு மோர் கொடுக்கிறியா?''

அவள் 'காஸை' பற்ற வைத்து பெருங்காயத்தை வாணலி யில் புரட்டி மோரில் கரைத்து நீட்டினாள்.

அதைக் குடித்தான்.

இரவு நேரத்தில் இருவரும் மேற்கொண்டு பேசவில்லை.

விரைவில் இறுக்கம் சற்றுக் குறைந்த மாதிரி உணரவே தூங்கிப் போனான்.

மறுநாள் எப்பொழுது விடியுமென்று அகிலா காத்துக் கொண்டிருந்தாள்.

''இப்படி அடிக்கடி வர்றதே... ஒரு டாக்டரைப் பார்க்கிறது தானே?''

''வயிறு கொஞ்சம் மந்தப்பட்டுப் போச்சு... அவ்வளவு தான்... இதுக்குப் பெரிசா டாக்டர் கிட்டப் போகணுமா?''

''இப்படிச் சொல்லிச் சொல்லியே ஒரு வருஷமா உங்களுக்கு வயிறு சரியா இல்லை.''

''இதோ பார் அகிலா! முணுக்குன்னா டாக்டர் கிட்ட ஓடறவா இல்லை நாங்க. எங்கப்பா சாகிறவரை ஒரு டாக்டர்

கிட்டப் போனதில்லை. உடம்புக்கு வந்தா ஏதோ கை வைத்தியமா சாப்பிடுவார், சரியாப் போயிடும்.''

''உங்கப்பாவுக்குச் சரி. ஆனால் உங்கம்...'' மேற் கொண்டு வார்த்தைகளை அவள் கொட்டவில்லை.

குருவின் தாய் பெருங்குடலில் புற்று நோய் வந்து இறந்து போனாள். அவள் பட்டபாட்டை நினைத்தால் இப்பவும் அகிலாவுக்குத் தூக்கம் வராது.

மார்க்கெட்டிலிருந்து பிளாஸ்டிக் பை நிறைய அகிலா காய்கறி வாங்கிக்கொண்டு வந்தாள். பச்சைப் பட்டாணி, டெல்லி காரெட் - அலம்பி அப்படியே கடித்துத் தின்று விடலாம் போலிருந்தது. ரத்தச் சிவப்பில் பீட்ரூட், எண்ணெய் தடவினாப்போல் பளபளக்கும் தக்காளி - குழந்தைகளுக்கு வெஜிடபிள் உப்புமா, புலாவ் பண்ணினால் பிடிக்குமே.

சோபாவில் உட்கார்ந்திருந்த குரு அந்தக் காய்கறி களையே உற்றுப் பார்த்தான். முகம் ஜிவ்வென்று சிவந்தது.

''எதுக்காக இதையெல்லாம் வாங்கிண்டு வர்றே? இங்கிலீஷ் காய்கறி உடம்புக்கு வாய்வு... நாட்டுக் காயா கத்தரிக்கா, புடலங்கா, வெண்டைக்கா எதுவும் கிடைக்கலையா?''

வழக்கத்தை விட காட்டமாக இரைந்தான்.

''புடலங்காய், வெண்டைக்காய் எல்லாம் சாப்பிட்டு நாக்கே செத்துப் போச்சு... குழந்தைகள் கேட்கறா... ஆசையா ஏதாவது செய்து போடலாமின்னா...''

''சரி சரி... எனக்கு வற்றக் குழம்பும் சுட்ட அப்பளமும் போதும்... இந்தக் காயெல்லாம் வேண்டாம்.''

''ஏன்?''

''என்னவோ நெஞ்சில் கரிக்கிறது... லேசா எரியறது.''

அப்பொழுது தான் அகிலா அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

விளக்கெண்ணெய் குடித்தவன் போல் கஷ்டப்பட்டுக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருந்தான்.

ஆயிற்று... வற்றல் குழம்பு, சீரக ரசம், வாழைக்காய் பொரியல்... பருப்பே இல்லாமல்...

''அம்மா! எனக்கு வத்தக் குழம்பு வேணாம்... காரமா இருக்கு'' என்ற விக்னேஷின் கண்ணில் நீர்ப் படலம்.

'ஆமாம்... பருப்பு இல்லாம நாட்டுக் காயில் புருஷனுக்கு... பருப்பு போட்டு குழந்தைகளுக்கு... ஒரு முறை ஏற்றி இறக்கவே மனுஷி உயிர் போய் வருது... இதுல இரண்டு தினுசு வேறயா?'' என்று அகிலா மனத்துக்குள் அலுத்துக் கொண்டாள்.

பிறகு பிள்ளையிடம் திரும்பி, ''நாளைக்கு கேரட், உருளைக்கிழங்கு எல்லாம் போட்டு காரமேயில்லாம குருமா பண்ணித் தரேன்... இன்னிக்கு இதைச் சாப்பிட்டுடு... கண்ணோல்லியோ...'' என்று சமாதானப்படுத்தினாள்.

வாசலில் ஏதோ பேச்சரவம் கேட்டது.

''என்ன குரு சார்! அடுத்த இன்ஸ்பெக்ஷன் எந்த ஊருக்கு?''

''நான் இன்னும் கொஞ்சநாள் டூர் போக வேண்டாம்னு இருக்கேன்.''

''ஏன்?''

''கண்ட சாப்பாடெல்லாம் உடம்புக்கு ஒத்துக்க மாட்டேங்கறது... வயிற்றைப் படுத்தறது.'

''ஜீரணமாகலையா?''

''ஆமாம்... வயிறு மந்தமாயிருக்கு.''

''சாப்பிட்டபிறகு இதில ஒண்ணை வாயிலே போட்டுக்குங்க. சரியாயிடும்.''

இவனுக்காகவே கொண்டு வந்த மாதிரி தன்னுடைய ஷர்ட் பாக்கெட்டிலிருந்து இரண்டு மாத்திரைகளை நீட்டினார்.

ஆன்டாசிட்.

அவரும் அமிலக் கோளாறால் அவதிப்படுபவர் போலத் தோன்றியது.

குரு நந்தனுக்கு ஒரு மாத்திரையிலேயே குணம் தெரிந்தது.

பரவாயில்லையே, இதுக்குப் போய் டாக்டரைப் பார்ப்பானேன் என்று நினைத்துக் கொண்டான்.

மாத்திரைத் தோலியை விட்டெறியாமல் அப்படியே பத்திரப்படுத்தி வைத்திருந்து மருந்துக் கடையில் நீட்டிக் கேட்டான். பத்து மாத்திரைகள் கிடைத்தன. அதை அப்படியே விழுங்கக் கூடாதாம், கொஞ்சங் கொஞ்சமாக பெப்பர்மிண்டைப் போலக் கடித்துச் சுவைத்துத் தின்ன வேண்டுமென்று கடைக்காரன் சொன்னான்.

குருவுக்கு இப்பொழுது தேவலை. எப்பொழுதும் வாயில் 'பொக்' 'பொக்' கென்று ஒரு ரோஸ் கலர் மாத்திரை.

''சார்! அடுத்த வியாழக்கிழமை நந்துவுக்குக் கல்யாணம். நீங்களும், மிஸஸும், குழந்தையும் கண்டிப்பாக வந்துட ணும்'' என்று அடுத்த வீட்டுக்காரப் பத்திரிகையை நீட்டினார்.

குரு குடும்ப சமேதராகக் கல்யாணத்துக்குப் போய் விருந்து சாப்பிட்டான். பருப்பு சமாசாரங்களைக்

கொஞ்சமாகத்தான் சாப்பிட்டான். ஏனென்றால் அவனுடைய அகராதியில் பருப்பு சுலபமாக ஜீரணமாகாத பொருள். தேவையில்லாமல் எல்லாரும் சமையலில் சேர்ப்பதாக ஓர் எண்ணம் கூட உண்டு.

இரண்டு நாள்கள் ஒன்றுமில்லை.

மூன்றாம் நாள் வயிற்றை என்னவோ செய்தது. ரோஸ் கலர் மாத்திரைகளை நாலைந்து சாப்பிட்டும் அவதி குறையவில்லை.

''அகிலா! எனக்கு என்னவோ ஏப்பம் வருது. சில சமயம் வாந்தி எடுக்கணும் போல இருக்கு...''

''அந்தக் கல்யாணச் சாப்பாடு உங்களுக்கு ஒத்துக் கல்லை.''

''நான் ஒண்ணுமே சாப்பிடலையே... சாம்பார் எல்லாம் தொடக்கூட இல்லை.''

''சாப்பிட்டதில் வேற எதுவோ ஜீரணமாகல்ல.''

''ஜீரணமாகாத வயசாயிடுத்தா எனக்கு... எங்கப்பா...''

''உங்கப்பாவைப் போலத்தான் நீங்க இருக்கணும்னு யார் சொன்னது? நீங்க வேற யார் மாதிரியாகவும் இருக்கலாம் இல்லையா? உங்க தாத்தா, மாமா... இப்படி.''

பிறப்பு வழிக் கோளாறும் சாத்தியக் கூறும் இப்பொழுது தான் குருவுக்கு லேசாகப் புரிந்தது. அவனுடைய அப்பாவின் நகல் போல் அவன் தோற்றத்தில் இருந்தான். ஆனால் அங்க ஒற்றுமை அவனுடைய பிரச்னையைத் தீர்க்கவில்லையே!

''வயிற்றில் கொஞ்சம் எரிச்சல் கூட இருந்துண்டே இருக்கு.''

''சரி, சரி... நீங்க கை வைத்தியம் பண்ணிண்டது போதும்... வாங்கோ இன்னிக்குச் சாயங்காலம் டாக்டர் கிட்ட போகலாம்.''

''எந்த டாக்டர் கிட்ட போகலாங்கறே?''

அவனையறியாமல் அப்பாவின் கெஜக்கோலிலிருந்து வழுக்கிக் கொண்டிருந்தான்.

''டவுன் ஹால் கிட்ட டாக்டர் ராவ் இருக்காரே... ரொம்ப கெட்டிக்காரராம்.''

''அவரா! ஒரு தும்மல் போட்டாக் கூட எக்ஸ்ரே எடுப்பாராமே... வேண்டாம்... வேண்டாம்... ஏதாவது பெரிசா சொல்லிடப் போறாரு.''

''அவருக்கென்ன பைத்தியமா பிடிச்சிருக்கு, ஒண்ணுமில்லாததைப் பெரிசா சொல்றதுக்கு? இத்தனை பணம் செலவழிச்சு பின்னே எதுக்குதான் அவாளெல்லாம் டாக்டருக்குப் படிச்சுட்டு போர்டு போட்டுண்டு உட்கார்ந்திருக்காங்க? குயுக்தியா யோசிக்காமா பேசாம அவர்கிட்ட வாங்கோ.''

அகிலாவுக்கும் மனத்தில் பயமாகத்தானிருந்தது. அவனுக்கு ஏதாவது அல்சராயிருக்குமோ, பின்னால் அது முற்றிப் போய் அவனுடைய அம்மாவின் நோய் போல முடிந்து விட்டால்? பயத்தில் ஒவ்வொரு நிமிஷத்தையும் பிடித்துத் தள்ள வேண்டியிருந்தது.

டாக்டரின் கிளினிக்கில் ஏகக் கூட்டம்.

எத்தனையோ முறை குரு அந்த வழியாகப் போயிருக்கிறான். ஆனால் ஆஸ்பத்திரியின் பெயரைச் சரியாகப் படித்ததில்லை.

அந்தக் கிளினிக்கின் உள்புறமே அவனை அச்சுறுத்தியது.

பினாயிலைத் தரையில் தெளித்து ஒரு பையன் பிரஷ் ஷால் துடைத்துக் கொண்டே நகர்ந்து கொண்டிருந்தான்.

ஒரு மாதிரி ஆஸ்பத்திரி வாடையே அவன் குடலைப் பிடுங்கியது.

'கடகட' வென்று சப்தம் போட்டுக் கொண்டே வந்த ஒரு ட்ராலிக்கு வழி விட்டு, துடைப்பவன் நகர்ந்து இவன் பக்கம் வந்தான்.

குருவின் நெஞ்சு 'படக், படக்' கென்று ரேஸ் குதிரை வேகத்தில் அடித்துக் கொண்டது.

''கொஞ்சம் இருங்க. உங்க பேரை ரிஜிஸ்தர் செய்து விட்டு வரேன்,'' என்று அகிலா எழுந்து எங்கேயோ போனாள்.

குரு நந்தன் எதையுமே காணப் பிடிக்காமல் கண்ணை மூடிக் கொண்டான்.

சற்று நேரம் கழித்துக் கண்ணைத் திறந்து பார்த்த பொழுது தூரத்தில் அகிலா திரும்பி வந்து கொண்டிருப்பது தெரிந்தது.

அவளுக்கு முன்னால் சக்கர நாற்காலியில் ஒருவரை வைத்துத் தள்ளிக் கொண்டு போய்க் கொண்டிருந்தார்கள். அதைப் பார்த்ததும் குருவின் முகத்திலிருந்த ரத்தமெல்லாம் வடிந்துவிட்டது போல் வெளுக்கத் தொடங்கியது. படபடப்பை அடக்கிக் கொண்டான்.

''உங்க பேரைப் பதிவு செய்து கார்டு வாங்கி விட்டேன். உள்ளே போயிருக்கிற ஆள் வந்ததும் நாம் போகணும்.''

குருவால் எதையும் புரிந்து கொள்ள முடியவில்லை. மறுநாள் தூக்கில் தொங்கப் போகும் கைதியாக உணர்ந்தான்.

''எதுக்காக இந்தக் கிளினிக்குக்கு அழைச்சுண்டு வந்தே? டாக்டர் சுந்தரத்துக்கிட்ட போயிருக்கலாமில்லையா?''

''இவர்தான் கேஸ்ட்ரோ என்டராலஜிஸ்ட், வயிற்றுக் கோளாறையெல்லாம் பார்க்கிற பெரிய ஸ்பெஷலிஸ்ட்.''

''ஆமாம்... ஸ்பெஷலிஸ்ட்டுன்னு வயித்தை ஆபரேஷன் பண்ணிடப் போறான்.''

அவன் தன் வசமில்லை என்பதை உணர்ந்து கொண்ட அகிலா மேற்கொண்டு பேசவில்லை.

நேரம் மெதுவாக நகர்ந்து கொண்டிருப்பது போல் அவனுக்குத் தோன்றியது.

எதிரிலிருந்த சுவரை வெறித்தான். பெருங்குடலின் விளக்கப் படம் தொங்கிக் கொண்டிருந்தது. வானவில் போல கலர் கலராய்த் தெரிந்தது.

'சீ, ஆஸ்பத்திரிக்கு வரவாளுக்கு மனசுக்கு இதமாக வேற ஏதாவது போட்டோ மாட்டக் கூடாதோ' என்று முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான்.

''கொஞ்சம் நகர்ந்து உட்காருங்க.''

குரல் கேட்டுத் திரும்பினான்.

அவனை ஒட்டி உட்காரப் போகிறவனுக்கு சுமார் முப்பது வயதிருக்கலாம். அவனுக்குப் பின்னால் இன்னொருவன், அவனுடைய தம்பியாக இருக்கலாம்.

''உங்களுக்கு வயிற்றிலே ஏதாவது பிராப்ளமா?''

குரு நந்தன் தான் அவனைக் கேட்டான்.

''ஆமாம் சார்... பெருங்குடல்ல ஒரு சின்ன 'குரோத்' சதை வளர்ச்சி... அதை எடுக்க டாக்டர் சர்ஜரி பண்ணினார்.''

அவன் அலட்டிக் கொள்ளாமல் பதிலளித்தான்.

''முதல்ல வேறு தொந்தரவு இருந்ததா?''

''வயிற்றுல ஜீரணக் கோளாறில் ஆரம்பிச்சது - பிறகு ஒரே ஏப்பம்... நெஞ்சு எரிச்சல்... பேதி...''

''பிறகு?''

''டாக்டர் பேரியம் எனிமா டெஸ்ட் செய்து கட்டியைக் கண்டு பிடிச்சுட்டார்... ஆபரேஷனாகி ஒரு மாதம் ஆயிடுத்து... இப்பொ 'செக் அப்'புக்காக வந்திருக்கேன்.''

குருவுக்குப் பயத்தில் நாக்கு ஒட்டிக் கொண்டது. உதடு களைப் பிரிக்க முடியவில்லை.

அவனுக்கும் அதே கதிதான். எனிமா டெஸ்டெல்லாம்.. உண்டா? ஆபரேஷன் டேபிளிலேயே கூட அவனுடைய உயிர் பிரியலாம். யார் கண்டது?

'சீ...! இங்கே வந்திருக்கவே கூடாது' என்று நொந்து கொண்டான்.

அவனுக்குத் திடீரென்று ஒன்றுமே புரியவில்லை போலிருந்தது. இது என்ன சித்திரவதை? வெளியே பாய்ந்து மருந்துக் கடையில் நாலு ரோஸ் மாத்திரைகளை வாங்கிக் கொண்டு வீட்டுக்கு ஓடிப் போய் விட்டாலென்ன என்று கூடத் தோன்றியது.

'ஜிவ்'வென்று காதோரம் எரிந்தது. மிரட்சியில் எதையும் சரியாகப் பார்க்க முடியாமல் போகவே, மறுபடியும் கண்ணை மூடிக் கொண்டான்.

''வாங்கோ.''

அகிலாதான் கூப்பிட்டாள்.

டாக்டரின் அறையில் அகிலா பின்னாடி வர, இவன் முதலில் நுழைந்தான்.

''இப்படி உட்காருங்க. உங்களுக்கு என்ன பண்றது?'' என்று டாக்டர் இதமாகக் கேட்டார்.

இவன் விலாவாரியாக எல்லாவற்றையும் சொல்லி விடத்தான் நினைத்தான். ஆனால் பயத்தில் வார்த்தைகள் கோவையாக வரவில்லை. எப்படியோ சொல்லி விட்டான்.

''இந்த டேபிள்ல படுத்துக்குங்க.''

எச்சிலை விழுங்கியபடி படுத்துக் கொண்டிருந்தான்.

டாக்டர் வயிற்றை அமுக்கி, முதுகைத் தட்டிப் பார்த்த பிறகு அவனைக் கீழே இறங்க அனுமதித்தார்.

''இந்தாங்க. இந்த டெஸ்டெல்லாம் செய்து ரிஸல்ட் எடுத்துண்டு வாங்க. அதுவரைக்கும் இந்த மருந்தைச் சாப்பிட்டுட்டு வாங்க'' என்று இரண்டு தாள்களை நீட்டினார்.

அகிலா வாங்கிக் கொண்டாள்.

டாக்டர் எழுதியிருந்த டெஸ்டில் ஒன்று ரத்தப் பரிசோதனை.

அங்கேயே வேறு புறத்தில் இருந்த அறைக்கு அகிலா அவனை அழைத்துக் கொண்டு போனாள்.

பேப்பரைப் பார்த்த அஸிஸ்டென்ட் டெஸ்டுக்கு ரூபாய் எண்ணூற்றி ஐம்பது ஆகும் என்றார்.

'ரத்தப் பரிசோதனைக்கு எண்ணூத்தி ஐம்பது ரூபாயா... என்ன, பகல் கொள்ளையாக இருக்கும் போல இருக்கே' என்று எழுந்த கோபத்தை அடக்கிக் கொண்டான்.

''இதென்ன இவ்வளவு சார்ஜ் பண்றீங்க. மற்ற கிளினிக்ல ரேட் குறைவா இருக்கே.''

''இதுக்கு டி.பி.டெஸ்ட், புரோட்டீன் டெஸ்ட் எல்லாம் செய்தாகணும். அதுக்காகத்தான்.''

குருவுக்கு அவர் வார்த்தைகளில் நம்பிக்கை ஏற்பட வில்லை.

''இந்தாங்க, அப்படியே இதையும் டெஸ்டுக்குக் கொடுத்து விட்டுப் போங்க'' என்று சிறுநீருக்காக ஒரு பாட்டிலை நீட்டினார்.

அவன் பாட்டிலை எடுத்துக் கொண்டு கழிப்பறையின் கதவை அடைத்துக் கொண்டான். அங்கேயே உட்கார்ந்து கொண்டிருந்தால் தேவலாம் என்று தோன்றியது. உடல் ஒத்துழைக்காததால் காலி பாட்டிலை எடுத்துக் கொண்டு வெளியே வந்து விட்டான்.

இரண்டு நாள்கள் அவனால் தூங்க முடியவில்லை. இரவுப் பொழுதைக் கழுத்தைப் பிடித்துத் தள்ள வேண்டியிருந்தது.

இவனுடைய பரிசோதனை ரிப்போர்ட்டைப் பார்த்த டாக்டர் பச்சை நிற மசியால் நீளமாக ஏதோ எழுதினார்.

''இந்த டெஸ்டைச் செய்துண்டு மறுபடியும் என்னைப் பாருங்க.''

'அல்ட்ரா ஸௌண்டு ஸ்கேனிங்' என்டோஸ்கோபி! அதில் அவனுக்குப் புரிந்ததெல்லாம் இரண்டு எழுத்துகள் மட்டுமே.

டாக்டரின் கையெழுத்து சித்ரகுப்தனின் லிபியைப் போலிருந்தது.

டாக்டர் படிப்பு முடிந்த பிறகு இப்படிப் புரியாமல் எழுதுவதற்குக் கூட ட்ரெயினிங் எடுத்துக் கொள்வார்கள் போல இருக்கு என்று நினைத்துக் கொண்டான்.

டாக்டர் டெஸ்ட் செய்து காசு பிடுங்குகிறார் என்று அவனுக்குத் தோன்றியது.

வெறும் வயிற்றில் ஆறு பெரிய கிளாஸ் தண்ணீர் குடித்துவிட்டு ஆட்டோ தூக்கித் தூக்கிப் போட, சிறுநீரை அடக்கப் படாத பாடு பட்டு ஸ்கேன் செய்து கொண்டான்.

மறுநாள் போய் ரிப்போர்ட் வாங்கும் பொழுது ''என்ன சார்! ஏதாவது கோளாறு இருக்கா?'' என்று கேட்டான்.

''அதெல்லாம் ஒண்ணுமில்லை. டாக்டர் சொல்லுவார். நீங்க போங்க'' என்றார் அவர்.

ரிப்போர்ட்டை டைப் செய்திருந்தாலும் அதில் குறிப்பிட்டிருந்தது எதுவுமே குருவுக்கு விளங்கவில்லை.

எல்லாரும் நோயாளிகளுக்கு எதிராகச் சதி செய்வது போலிருந்தது.

ஒரு கூடை செங்கல்லும் பிடாரிகள் என்று நினைத்துக் கொண்டான்.

அப்படி யோசித்துக் கொண்டிருந்த பொழுது அவனுடைய நண்பன் பாஸ்கரனின் மகள் மெடிக்கல் படிப்பது ஞாபகம் வந்தது. இந்த டாக்டர் சொல்லாவிட்டால் என்ன, அவள் சொல்லி விட்டுப் போகிறாள்.

''குரு! அவள் இப்பொதான் இரண்டாவது வருஷம் படிக்கிறாள். அவளுக்கு ஒண்ணும் தெரியாது'' என்றான் பாஸ்கர்.

''பரவாயில்லை. தெரிஞ்ச வரைக்கும் சொல்லச் சொல்லேன், போதும்.''

பாஸ்கரனின் பெண் தடங்கலில்லாமல் ரிப்போர்ட்டைப் படித்தாள். அதில் கண்டிருந்த மருத்துவச் சொற்றொடர்கள் அவளுக்குப் புரியவில்லை போலும்.

''ஒண்ணுமில்லை அங்கிள்! உங்களுக்கு குடல்ல ப்ராப்ளம். அதுக்காகத்தான் ஸ்கேன் எடுத்திருக்காங்க'' என்று சொல்லி லிவர், ஸ்ப்ளீன் எல்லாவற்றைப் பற்றியும் குறிப்பிட்டிருப்பதாகச் சொன்னாள்.

குருவுக்குத் தலையைப் பிய்த்துக் கொள்ளலாம் போலிருந்தது.

அடுத்தது என்டோஸ்கோபி வேறு செய்து கொள்ள வேண்டும்.

'இந்த வியூகத்திலிருந்து தப்ப வழியே இல்லை போலிருக்கிறதே' என்று மிரண்டான். பொறியில் அகப்பட்ட எலிபோல் உணர்ந்தான்.

எண்டோஸ்கோபிக்கு முதல் நாள் சாயங்காலத்துக்குப் பிறகு எதுவும் சாப்பிடாமல் காலை ஏழரை மணிக்கு கிளினிக்குக்கு வரச் சொல்லியிருந்தார்கள்.

இவனுக்கு வயிறு காலியாக, காபி குடிக்காமல் தலை சுற்ற, உடம்பு வெட வெட வென்று நடுங்குவது போல் உணர்ந்தான்.

எட்டே கால் மணிக்குத் தான் டாக்டர் வந்தார்.

'எங்கள் கொடுமை உனக்குத் தெரியுமாய்யா? நீ டிபன் சாப்பிட்டு விட்டு நிதானமாக லேட்டா வர்றியே' என்று கேட்டுவிடலாமா என்று கூட நினைத்தான்.

பிறகு ஆத்திரப்பட்டு லாபமில்லை என்று அடங்கிப் போனான்.

டாக்டர் அவனைக் கூப்பிட்ட பொழுது மணி எட்டரை.

மறுநாள் எல்லா ரிப்போர்ட்களையும் எடுத்துக் கொண்டு அவனும் அகிலாவும் டாக்டர் ராவிடம் போனார்கள்.

''நான் எழுதிக் கொடுத்த மருந்தைச் சாப்பிடுறீங்களா?''

''சாப்பிடறேன். இப்பொ ரொம்ப தேவலாம்.''

டாக்டர் மறுபடியும் எல்லா ரிப்போர்ட்களையும் ஒரு முறை பார்த்தார்.

''வெல், உங்க உடம்பிலே பெரிசா ஒரு கோளாறும் இல்லை...''

பொல பொல வென்று தேவர்கள் வானத்திலிருந்து அவன் தலை மீது மலர் சொரிவது போல் உணர்ந்தான்.

''உங்கள் உபாதையை ஐ.பி.எஸ் அதாவது இரிடபிள் பவல் சின்ட்ரோம் என்று சொல்வோம். இந்த ஒரு வியாதியில் தான் நோயாளி ஏதோ தொந்தரவு இருப்பதாகச் சொல்வார். ஆனால் எங்களுக்கு எல்லாம் சரியாக இருப்பதாகத் தோன்றும். ஆனாலும் உங்க குடலில் அழற்சி இருக்கு. நீங்க கொஞ்சம் தாமதமாக வந்திருக்கீங்க... நான் கொடுக்கிற மருந்தைத் தொடர்ந்து இரண்டு மாசம் சாப்பிடுங்க...''

''அப்போ எனக்கு ஒண்ணுமில்லையே டாக்டர்?'' என்று பரவசமாகக் கேட்டான்.

''இப்போதைக்கு இல்லை. நீங்க இரண்டு மாசத்துக்குப் பிறகு மறுபடியும் வாங்க. அல்லது இடையில் தொந்தரவு அதிகமானால் கண்டிப்பாக வாங்க. தேவையானால் பேரியம் எனிமா செய்து கொள்ள வேண்டியிருக்கும்.''

''மறுபடியுமா?''

''உங்களுக்கு ஒரு தொந்தரவும் இல்லாமல் இருந்தாலும் இரண்டு வருஷத்துக்கு ஒரு முறை குடலை 'செக் அப்' செய்து கொள்றது நல்லது.''

''தேங்க் யு டாக்டர்'' அவன் குதித்துக் கொண்டு வெளியே வந்தான்.

அப்பாடா! சினிமாக் கொட்டகையின் இறுக்கத்திலிருந்து வெளி உலகத்துக்கு வருபவன் போல் ஹாய்யாக கைவீசி நடக்கலானான்.

அகிலாவுக்கும் சந்தோஷமாக இருந்தது.

'பகவானே! டாக்டர் நல்ல வாக்காகச் சொன்னாரே, அதுபோதும்' என்று சந்தோஷப் பட்டுக் கொண்டாள்.

''டாக்டர் கெட்டிக்காரர் தான். ஆனாலும் டெஸ்டுன்னு அடுத்தடுத்துப் பண்ணி இப்படிக் காசைப்பிடுங்கக் கூடாது. இப்பொ டாக்டர்களெல்லாம் இப்படி டெஸ்டு பண்ணிக் கோன்னு சொல்றதே ஃபேஷன் ஆயிடுத்து... ஒவ்வொரு டெஸ்டுக்கும் இவருக்குக் 'கட்' இருக்கும் தெரியுமா? இரண்டு மாசம் கழிச்சு யார் போகப்போறா?''

''அப்போ மறுபடியும் நீங்க டாக்டரைப் பார்க்கப் போறதில்லையா?'' என்று அகிலா கலவரப்பட்டுக் கேட்டாள்.

''அந்தக் காலத்துல இப்படியெல்லாம் டெஸ்ட் செய்துண்டாளா என்ன? அவா நன்னாத்தானே இருந்தா?''

'நாய் வாலை நிமிர்த்த முடியாது' என்பது போல் அகிலா அவனை ஏற இறங்கப் பார்த்தாள்.

●

# துணையா?

சாதனா ராதாகிருஷ்ணன்

அன்று வெள்ளிக்கிழமை. கோயிலுக்குச் சென்று திரும்பி வந்த சிவகாமி வீட்டைத் திறந்து உள்ளே செல்லாம லேயே வெளியே தோட்டத்தில் அமர்ந்திருந்தாள்.

அந்த வீட்டில் அவள் தனியாகத்தான் இருந்தாள். ஐம்பது வயதில் தனியாக இருப்பது ஒரு கஷ்டமாக அவளுக்குத் தோன்றவில்லை. அந்தத் தனிமையை அவள் மனம் ஏற்றுக் கொண்டது. சாதாரணமாக, பெரிய குடும்பத்தில் வாழ்க்கைப் பட்டவர்கள் சலிப்பு உண்டாகி, அமைதியான சின்னக் குடும்பமாக வாழ ஆசைப்படுவார்கள். ஆனால், சிறிய குடும்பமாக வாழ்பவர்களோ, 'பெரிய குடும்பமாக இருந்தால் கலகலப்பாக இருக்கும்' என்று ஏங்குவார்கள். சிவகாமியோ எந்த வித சஞ்சலமும் இல்லாமல், அமைதியாக வாழ்ந்து வந்தாள்.

வாழ்க்கையின் பல கட்டங்களைக் கடந்து வந்த அவளுக்கு அந்தத் தனிமை தேவைப்பட்டது. அவள் வாழ்க்கை அமைதியான நீரோடையாகவும் இருந்திருக்கிறது. சில சமயம் காட்டாற்று வெள்ளமாகவும் மாறியிருக்கிறது.

அவள் நடந்து வந்த பாதையைக் கொஞ்சம் திரும்பிப் பார்த்தாள்.

முதன்முதலில் அவளைப் பெற்ற தாய். பிறகு, தந்தை, கணவர், அண்ணி, குழந்தை என்று எத்தனையோ உறவுகளைக் கடந்து வந்த பிறகு இன்று இங்கு இந்த இடத்தில் தனிமையில் அமர்ந்து கொண்டிருக்கிறாள். பத்து வயதிலோ, இருபது வயதிலோ, முப்பது வயதிலோ அவளுக்குக் கிடைக்காத சுதந்தரம் இந்த ஐம்பது வயதில் அவளுக்கு ஆறுதல் பரிசாக அமைந்தது. அந்த வீட்டைச் சூழ்ந்திருந்த அமைதி அவளை அடிக்கடி கடந்த காலத்திற்கு அழைத்துச் சென்றது.

பாட்டியின் குரலும் அம்மாவின் குரலும் அவளுக்குக் கேட்பது போல் தோன்றும். இதோ இப்பொழுதுகூடக் கேட்கிறதே...

''சிவகாமி! எங்க போயிட்டா, இங்கே தானே இருந்தா? இந்தா சிவகாமி, இந்தக் காய்கறியைக் கொஞ்சம் நறுக்கிவிட்டுப் போயேன்'' என்று பாட்டியின் குரல் கேட்டு ஓடி வந்தாள் எட்டு வயது சிவகாமி. ''இல்ல பாட்டி, பக்கத்து வீட்டுல பாட்டுபாடிண்டிருக்கா. அதான் கேட்டுட்டிருந் தேன். நீயும் வந்து கேளு பாட்டி, ரொம்ப நல்லாயிருக்கு'' என்று முகம் மலர விவரித்தாள். ''ஆமாம்! போடி! பாட்டு கேட்டாளாம் பாட்டு. உன் கூட சேர்ந்து நானும் பாட்டு கேட்டா வீட்டு வேலையை யாரு செய்வா? அதெல்லாம் உனக்கு எதுக்கு? வேலை வெட்டி இல்லாதவங்க உட்கார்ந்து பாடுவாங்க, நீ போய் உன் வேலையைப் பார்'' என்றார் கடுமையாக.

பாவம், சிவகாமி! அவளுக்குத்தான் சங்கீதத்தின் பேரில் எவ்வளவு ஆர்வம்! இந்தப் பாட்டிக்குத்தான் புரியவில்லை என்றால் இந்த அம்மாவும்கூட பாட்டியைப் போலவே இருக்கிறார்களே. இருந்தாலும் ஒருமுறை கேட்டுத்தான் பார்ப்போமே என்று துணிந்து கேட்டும் பார்த்தாள். இது

எப்படித்தான் அந்தப் பாட்டி காதில் விழுந்ததோ? எங்கேயோ பின்கட்டிலிருந்து ஓடி வந்து, ''அதெல்லாம் ஒன்றும் வேண்டாம், இவ என்ன பெரிய கச்சேரியா செய்யப் போறா'' என்று தடுத்துவிட்டார். சே! என்ன செய்வது? அதற்குள், பள்ளியில் பாடுவது போலவும், மேடையில் பாடுவது போலவும் கனவெல்லாம் கண்டிருந்தாளே! சங்கீதத் தைக் கற்றுக்கொள்ள முடியாவிட்டாலும், நல்ல இசையைக் கேட்கவும், முடிந்தால், பாடவும் அவளுக்குத் தடையேதும் இல்லையே. என்னதான் பாட்டி திட்டினாலும், அம்மா தடுத்தாலும், நேரம் கிடைக்கும்போதெல்லாம், அடுத்த வீட்டிற்கு ஓடிச்சென்று, திண்ணையில் அமர்ந்து வகுப்பில் மாணவர்கள் பாடுவதைக் கேட்டு ரசிப்பாள். சிலசமயம் மெல்லிய குரலில் தானும் அவர்களுடன் பாடிப் பரவசமடை வாள். அவள் அங்கு அமர்ந்து கேட்பதை வாத்தியார் ஆட் சேபிக்கவில்லை. அதனால் அங்கே பயிலும் மாணவர்களை விட அவள் அதிக ஆர்வத்துடன் கவனிப்பாள். இப்படித்தான் ஒருமுறை, வாத்தியார் மாணவர்களை, ''யாராவது ஒருத்தர் நல்லா சுருதி மாறாமப் பாடிக் காட்டுங்களேன்'' என்று கேட்டபோது, ஒருவரும் முன் வரவில்லை. அப்பொழுது சிவகாமி திடீரென்று பாடத் தொடங்கியதும், மாணவர்கள் உட்பட ஆசிரியரும் அசந்து போய்விட்டார். வாத்தியார் அவளை அருகில் அழைத்து, ''சிவகாமி! உனக்கு நல்ல குரல் வளம் இருக்கு. நீ பாட்டு கத்துக்கலாமே'' என்று அன்புடன் சொன்னதும், சிவகாமி மெல்லிய குரலில், ''எங்கம்மா வேண்டாம் என்று சொல்லிவிட்டாள்'' என்று சொல்லி ஒரே ஓட்டமாக ஓடி விட்டாள்.

நாள்கள் நகர்ந்தன. சிவகாமிக்கு வயது ஏற ஏற மேலும் ஓர் ஆசை வளர்ந்தது. நன்றாகப் படித்து பெரிய உத்தியோகத் துக்குப் போகவேண்டும் என்பதே அந்த ஆசை. சினிமாவில்

தோன்றும் கதாநாயகிகள் சில படங்களில் ஆபீஸராகவும் மானேஜராகவும் தோன்றும்போதெல்லாம் அவளுக்கு அந்தக் காட்சியில் தன்னுடைய முகம்தான் பிரதிபலிக்கும். அப்படி ஒரு சிறுபொறியாகத் தோன்றிய ஆசை, விரைவிலேயே கொழுந்துவிட்டெரிந்தது.

தன் அண்ணன் தம்பியைவிட தான் அதிக மதிப்பெண்கள் பெற்றுப் பெருமையடைய வேண்டும் என்ற ஒரு லட்சியத்தோடு படித்தாள். தன் எதிர்கால ஆசையை, லட்சியத்தைத் தாயிடம் பகிர்ந்து கொண்டாள். ''அம்மா! அம்மா! நான் ஆபீஸராகப் போகிறேன் பார்! பிறகு காரில் போகலாம், பங்களாவில் இருக்கலாம்'' என்று விவரிக்கும் போது அவள் கண்கள் பளபளக்கும்.

பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு மேல் படிப்பில் சேரத் தன்னைத் தயாராக்கிக் கொண்டாள். அப்பாவிற்கு அடிக்கடி உடல்நலம் சரியில்லாததால், அதையும் அம்மாவிடமே பேசவேண்டிய கட்டாயம். கல்லூரியைப்பற்றி இன்று பேசியே தீரவேண்டும் என்று ஒரு வழியாக அம்மாவை அணுகிய அவளுக்கு ஓர் அதிர்ச்சி காத்துக் கொண்டிருந்தது. இவள் பேசத் தொடங்கும் முன் அம்மா, ''இப்படி உட்காரு சிவகாமி! நானே உன்கிட்ட ஒரு விஷயம் பேசணும்னு நினைச்சுகிட்டிருந்தேன். உனக்கு மாப்பிள்ளை பார்த்தாகி விட்டது. தூரத்துச் சொந்தம்தான். நமக்கேற்ற நல்ல இடம். உங்கப்பாவுக்கும் உடம்பு சரியில்லை. உனக்கு கல்யாணம் செய்துட்டா எங்க கடமை முடியும். அதனால இந்தப் படிப்பு வேலை பற்றி எல்லாம் என்கிட்ட பேசவராதே'' என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டு எழுந்து போய்விட்டார்.

கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, ''ஏம்மா! யாரைக் கேட்டு முடிவெடுத்தாய்? நமக்கும் ஓரளவுக்கு வசதி இருக்கு,

நீ நினைச்சா என்னைத் தாராளமாப் படிக்கவைக்கலாம், காலங்காலமா நம்ம நாட்டுல எல்லாப் பெண்களும் வாழறமாதிரியே என்னையும் வாழச் சொல்றியே! நான் கல்யாணம் பண்ணிக்கலை என்று சொல்லலை. அதைக் கொஞ்சம் தள்ளிப்போடுன்னு தான் சொல்ல வந்தேன்'' என்றாள், படபடவென்று. அம்மாவோ முன் வைத்த காலைப் பின் வைக்காதவள். ''அதெல்லாம் முடியாது! வேணும்னா முதல்ல கல்யாணம் பண்ணிக்கோ! அப்புறம் உன் மாமியார் அனுமதிச்சா மேல படி, சரிதானே?'' என்றவள், அவள் பதிலைக்கூட எதிர்பார்க்காமல் நடையைக் கட்டினாள்.

அம்மாவின் ஆசை நிறைவேறியது. ஒரு சராசரி இந்திய மாமியாரின் முகத்தில் இருக்கும் ஒரு கர்வமும் கடுகடுப்பும் அவளை மேல்படிப்பைப் பற்றிப் பேசவே விடவில்லை. பிறகென்ன? மருமகளாய், மனைவியாய், பிறகு தாயாய் வாழ்ந்து கொண்டிருந்த அவளுக்கு, கணவனின் அகால மரணம் பேரிடியாக அமைந்தது. கையில் ஒரு பெண் குழந்தை. இனி அவள் உலகமே அந்தக் குழந்தைதான். மேற்கொண்டு என்ன செய்வதென்று யோசித்து முடிவெடுப் பதற்குள் அண்ணனும் அண்ணியும் அவளை வீட்டிற்கு அழைத்துச் சென்றனர். ''இனி நாம்தான் அவளுக்குத் துணை'' என்ற வார்த்தை சிறிது ஆறுதல் அளித்தது.

அண்ணியோ கணவனின் ஜவுளிக் கடைக்குக் காலையி லேயே சென்று விடுவாள். கணவனுக்குக் கடையில் உதவி செய்து மாலைதான் திரும்புவாள். முதலில் சிவகாமி அந்த வீட்டில் நிம்மதியாகத்தான் இருந்தாள். போகப்போகத்தான் அந்தக் குடும்பத்தின் போக்கு அவளுக்குத் தெரிய வந்தது. அவர்களுக்கு இரண்டு குழந்தைகள். கணவன் மனைவி இருவரும் காலையிலேயே வெளியே சென்று விடுவதால் வீட்டைப் பொறுப்பாகக் கவனிப்பதற்கும், குழந்தைகளைப்

பார்த்துக் கொள்வதற்கும் சரியான நபர் இல்லாமல் அவர்கள் தவித்துக் கொண்டிருந்தார்கள். இவளின் வருகை அவர்களின் தேவையைப் பூர்த்தி செய்தது. தன் கணவருக்குப்பின் அவளுக்குச் சேர்ந்த பணத்தில் மாதாமாதம் தனக்கும் தன் குழந்தைக்கும் பராமரிப்புச் செலவுக்கு அண்ணியிடம் கொடுத்து வந்தபோதும், அவள் எதிர்பார்த்த சுதந்தரம் அவளுக்குக் கிடைக்கவில்லை. ஏதாவது வேலையில் சேர வேண்டும் என்ற எண்ணத்தை அண்ணனிடம் வெளி யிட்டாள். ''அப்படியா பார்க்கலாம்'' என்றவர் அதைப் பற்றி மீண்டும் பேசவில்லை. அண்ணியோ, எங்கே இவள் வேலைக்குப் போனால் குடும்பப் பொறுப்பு தன் தலையில் விழுந்துவிடுமோ என்று பயந்தாள்.

நாள்கள் செல்லச் செல்ல அவளுக்குள்ளே ஒரு தெளிவும் தன்னம்பிக்கையும் உருவாவதை உணர்ந்தாள். விரைவி லேயே அந்த வீட்டிலிருந்து வெளியேறிவிடவேண்டும் என்று திட்டமிட்டாள். அதன்படி, தன் கணவனின் பாகமாகக் கிடைத்த பணத்தில் ஒரு வீடு வாங்கி அதில் குடியேறினாள். மாடியில் இருந்த போர்ஷனை வாடகைக்கு விட்டு அந்த வருமானத்தில் நிம்மதியாகக் காலம் கடத்தினாள்.

ஆயிற்று. இனி கடந்த காலம் மெல்ல மெல்ல அவளை விட்டு அகன்றது. அவள் எண்ணம் எல்லாம் மகளையே சுற்றிச்சுற்றி வந்தன. தான் அனுபவிக்காத சுதந்தரத்தை மகளுக்கு அளித்து, அவள் சின்ன சின்ன ஆசைகளை எல்லாம் நிறைவேற்றுவதில் அவள் ஒரு தனி சந்தோஷம் அடைந்தாள். அவளுக்கு எல்லாவிதத்திலும் ஏற்ற கணவரை அவள் அடைய வேண்டும் என்று கவலைப்பட்ட அம்மாவுக்கு எந்தச் சிரமமும் வைக்காமல் தானே ஒருவரைக் காதலிப்பதாகச் சொன்ன கீதாவை அவளால் என்ன செய்ய முடியும்? வேறு வழியில்லாமல் சம்மதித்துக் கல்யாணத்தை

முடித்துவைத்தாள். மாப்பிள்ளை பரவாயில்லை. நல்ல குணம்தான். அதனால் அவள் மனம் ஆறுதல் அடைந்தது.

மகளும் மாப்பிள்ளையும் வேலைக்குப் போவதால் தன்னால் இயன்ற உதவிகளை ஒரு நல்ல தாயாக, நல்ல மாமியாராகச் செய்து வந்தாள். பேரனும் பிறந்தான்; பெருமையும் அடைந்தாள். கூடவே வேலையும் பொறுப்பும் அதிகமானது. ஒரு மாறுதலோ பொழுதுபோக்கோ இல்லாமல் ஓய்வில்லாமல் உழைத்தாள். அவள் இப்படி ஓய்வில்லாமல் உழைப்பதை மகளோ மாப்பிள்ளையோ பெரிதாக நினைக்கவில்லை. 'அவள் கடமையைத்தான் செய்கிறாள்' என்று ஆறுதலடைந்தார்கள்.

ஒரு நாள் மாலை மகளை அழைத்து, ''கீதா! நம்ம பக்கத்து வீட்டு ஆன்ட்டி இன்னிக்கு சாயந்தரம் இங்க வந்திருந்தாங்க. அவங்க லேடீஸ் கிளப்புல சேர்ந்திருக்காங்க. வாரத்துல ஓரிரு நாள்தான். 'கொஞ்சம் மாறுதலாக இருக்கும் மனசுக்கு. நீங்களும் வர்றீங்களா?' என்று கேட்டாங்க'' என்று சொன்னதும், ''ஏம்மா! உனக்கு எங்கேம்மா நேரமிருக்கும்? அவங்க வேணும்னா போய்ச் சேரட்டும், உன்னால் எப்படி அம்மா முடியும்?'' என்றபடி குழந்தையைத் தூக்கிக்கொண்டு கிளம்பிவிட்டாள்.

எங்கே தான் வெளியே போய்விட்டால் குழந்தையைச் சரியாகக் கவனிக்காமல் போய்விடுவேனோ என்ற மகளின் சுயநலம் அவளுக்குப் புரியாமல் இல்லை. இதை அவளால் யாரிடம் போய்ச் சொல்லமுடியும்?

ஆக, தன்னுடைய சின்ன சின்ன ஆசைகளை மூட்டை கட்டிவிட்டுத் தன் கடமைகளை மட்டும் செய்ய வேண்டும் என்றுதான் அவளைச் சுற்றியிருந்த அனைவரும் விரும்பினர்.

மூன்று வருடம் கழித்து மாப்பிள்ளைக்கு மாற்றலாகியது. தாயைப் பிரியவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதால் கீதாவின் முகம் வாடியது. ''அம்மா! நீயும் வாம்மா'' என்றழைத்த மகளை அணைத்து, ''இல்லம்மா நீங்க போயிட்டு வாங்க'' என்று அனுப்பிவைத்தாள். மாப்பிள்ளை, பேரனுக்கு அவள் ஆற்றிய கடமைகளிலிருந்து ஓய்வுகிடைத்தபோதும் அவள் மனம் கலங்கினாள்.

மகளை அனுப்பிவைத்து ஒரு மாதமாகியது. இதோ அந்தத் தோட்டத்தில், அவள் அமர்ந்திருக்கிறாள். பழைய நினைவுகளிலிருந்து விடுபட்ட அவள் மெல்ல எழுந்து கதவை நோக்கி நடந்தாள். இந்தத் தனிமை அவளுக்குப் பல பாடங்களைத் கற்றுத் தந்தது. அம்மாவின் நினைவு எப்பொழுதாவது வரும்போது, தன் சின்னவயதில் அவள் சங்கீதம் பயில வேண்டும் என்ற ஆசை நிராசையானது நினைவுக்கு வரும். அம்மா என்றால் அன்பு. அது சரி! அன்பு என்றால் என்ன? தனக்குப் பிடித்ததை மகளுக்குத் தருவதா? மகளுக்குப் பிடித்ததைத் தாய் தருவதா? இந்தக் கேள்வி களுக்கு அவளுக்கு விடை தெரியவில்லை. அண்ணியைப் பற்றி நினைத்தால், தான் வேலைக்குப் போக முடியாமல் செய்த அவளின் சூழ்ச்சி நினைவுக்கு வரும்.

அப்பொழுதுதான் திடீரென்று ஓர் எண்ணம் அவளுக்கு மின்னலாகத் தோன்றியது. ஆசைகளை நிறைவேற்றுவதில் வயது என்ன? இங்கே அவளைத் தடுப்பதற்கு யாரும் இல்லை. நம் ஆசைகளை ஏன் மற்றவர்கள் நிறைவேற்ற வேண்டும்? அதை நாமே நிறைவேற்றிக் கொள்ளலாமே!

மறுநாள் தேடிப்பிடித்து தானும் சங்கீதம் பயிலும் ஒரு வகுப்பில் சேர்ந்து கொண்டாள். முதல்நாள் பள்ளிக்குச் செல்லும் ஒரு மாணவியின் உற்சாகத்தோடு பாட்டு

வகுப்புக்குச் சென்றாள். அந்த உற்சாகம் அவளுக்கு ஒரு புதிய சுறுசுறுப்பை அளித்தது. காலையிலேயே சமையலை முடித்து விட்டு, மதியம் வரை பொழுதைக் கழிப்பது சிரமமாகத்தான் இருந்தது. அதற்கும் ஒரு வழி செய்தாள். அடுத்த தெருவில் புதிதாகத் திறக்கப்போகும் ஒரு பள்ளியில் ஆசிரியராகச் சேரத் திட்டமிட்டாள்.

ஆம்! அவள் வாழ்க்கையில் யாரை எல்லாம் தனக்குத் துணை என்று நினைத்தாளோ அத்தனை பேரும் அவளுக்குத் தடையே என்று உணர்ந்தாள்.

பெற்ற தாயிடம், பிறகு மாமியாரிடம், அண்ணியிடம், ஏன் மகளிடம்கூட சுதந்தரமாக வாழமுடியவில்லை. ஒன்றை நினைத்துப் பார்க்கும்பொழுது அவளுக்கு வியப்பாக இருந்தது. இவர்கள் எல்லாரும் பெண்களே! ஒரு பெண்ணிற்குப் பெண்ணே தடை என்பதை உணர்ந்தாள். இந்தத் தனிமை அவளுக்கு அளித்த சுதந்தரத்தை எந்தத் துணையும் இதுவரை அவளுக்கு அளித்ததில்லை. கொஞ்சம் சந்தோஷத்திற்குப் பெயர் நிம்மதி. அதிக நிம்மதிக்குப் பெயர் சந்தோஷம். அவள் சந்தோஷமாக இருந்தாளோ, இல்லையோ, நிம்மதியாக இருந்தாள்.

●



# மனிதம் சாகவில்லை

நளினி சாஸ்திரி

''தலைவர் பயணிக்கும் ஏர்பஸ்.321 விமானம், டெல்லி போகும் வழியில் வெடித்துச் சிதறும்படி குண்டு ஏற்பாடாகி விட்டது...''

''திட்டத்தில் எங்கும் ஓட்டை இல்லையே?''

''கனகச்சிதம்!''

'அப்ப ஏர்போர்ட்டுக்கு ஃபோன் செய்து எச்சரிக்கை செய்துவிடு..''

''தொடர்ந்து நான்கு நாள்களாக குண்டு இருப்பதாகச் சொல்லி வருகிறோம். ஆனால் இல்லை, இன்று உண்மையில் குண்டு இருந்தும் ஏமாறப் போகிறார்கள்...''

''தாய் மண்ணுக்கு வணக்கம்!'' என்றான்.

''தாய் மண்ணுக்கு வணக்கம்!'' என்றார்கள்.

தலைவர் டெல்லி செல்வதால், விமான நிலையம் அல்லோலகல்லோலப்பட்டது.. யாரும் உள்ளே செல்ல அனுமதி மறுக்கப்பட்டது. பயண டிக்கெட் வைத்திருந்த வர்கள் மட்டும் பலத்த பாதுகாப்பு விதிமுறைகளைத் தாண்டி அனுமதிக்கப்பட்டனர். எட்டு வயதுத் தம்பியுடன் உள்ளே நுழைவதற்குள் குமார் நொந்துவிட்டான்.

குமாரின் தவிப்பான பார்வையிலிருந்து, இது அவனின் முதல் விமானப் பயணம் என்று தெரிய வந்தது. இந்தப் பயணமே தம்பிக்காகத்தான்.

போர்டிங் வளாகத்தில் நுழைந்தவனை செக்யூரிட்டி அழைத்து, சூட்கேஸை கன்வேயர் பெல்டில் வைக்கச் சொன்னான். பெட்டி, எக்ஸ்ரே கன் வழியாக நுழைந்து வெளியே வந்தது. மானிட்டர் சற்றே எட்டிப் பார்க்க, பெட்டிக்குள்ளிருந்த டம்ளர் எல்லாம் தெரிந்தது.

ஆங்காங்கே செக்யூரிட்டிகள் 'வாக்கிடாக்கி'யில் பேசிக் கொண்டார்கள். டெல்லி விமானத்தில் குண்டு இருப்பதாகத் தகவல் வந்துள்ளதைக் கேட்டதும், குமாரின் வயிற்றில் அமிலம் சுரந்தது. முதல் பயணத்தின் பயம் தீர்வதற்குள் விமான 'பாம்' பயம் வேறு.

ஏதாவது விபரீதம் நேர்ந்தால் சிடி கார்டில் அம்மாவுக்கு ஐந்து லட்சம் கிடைக்கும். சூட்கேஸை போர்டிங் பாஸில் அனுப்பிவிட்டு, போர்டிங் பாஸ் வாங்கிக் கொண்டான். விவேக் சொன்னபடி, ஜன்னலோர சீட் கேட்டான். இரவு நேரப் பயணம் என்பதால், கிளம்பிய பின் ஏதும் தெரியாதாம். பகலாயிருந்தால் பஞ்சு பஞ்சாய் மேகம் பார்க்கலாமாம். இது சமீபத்தில் கல்கத்தா போய்த் திரும்பிய அனந்தன் உபயம்.

தானாக நகரும் எஸ்கலேட்டர் மாடிப்படி வழியே மேலே ஏறினார்கள். மீண்டும் மெட்டல் டிடெக்டர் வழியே போகச் சொன்னார்கள். 'கீக் கீக்' என்றது. கையைத் தூக்கச் சொல்லி உடம்பைத் தடவிப் பார்த்தார்கள். இடுப்பு அருகில் கை படுகையில் குமாருக்குச் சிரிப்பு வந்தது.

வாகன சாய்வு நாற்காலியில் வேடிக்கை பார்த்தபடி அமர்ந்தார்கள். இன்னும் அரைமணி நேரம் இருந்தது.

செக்யூரிட்டிகள் செக் செய்வதைப் பார்த்தால், ஏதோ கடமைக்குப் பணி செய்வது போலிருந்தது. பயமாக இருந்தது. இந்த நிலையில் செக் பண்ணினால், குண்டு உள்ளே நுழைந்துவிடுமே!

நிறையப் பேர் குட்டி சூட்கேஸ் அல்லது கைப்பையைச் சக்கர இணைப்பில் இழுத்துக் கொண்டு வந்தது - பார்ப்பதற்கு நாய்க்குட்டியை அழைத்து வருவது போலிருந்தது. தொடர்ந்து விமானப் பயணம் செய்பவர்கள் போலத் தெரிந்தது. அவர்களுக்கு ஒருவேளை 'பாம்' பயம் இல்லாமலிருக்கலாம்.

அப்போதுதான் -

பட்டிக்காட்டான் மிட்டாய்க்கடையில் நுழைந்த மாதிரி அவன் வந்தான். பார்த்தால் - ஏதோ சைக்கிள் ரிக்ஷாக்காரன் போலத் தோன்றியது. அவனுக்கும் விமானப் பயணத்துக்கும் ஸ்நானப் பிராப்திகூட இருப்பதாய்த் தெரியவில்லை. வேட்டி கட்டியிருந்தான். ஒருவேளை - தலைவருடன் பயணிக்கும் தொண்டனாக இருக்குமோ?

மெட்டல் டிடெக்டர் அவனை விடவில்லை. 'கீக்கீ' என்று கத்தியது. செக்யூரிட்டி விசாரிக்க, சட்டை நீக்கிக் காட்டினான். பாக்கெட்டிலிருந்து ஒரு சீட்டை எடுத்துக்காட்ட, செக்யூரிட்டி அவனை அனுமதித்தான். எதைக் காட்டியிருப்பானோ?

தலைவரையும் 'செக்' செய்கிறார்களா பார்க்கலாம் என்று காத்திருந்ததுதான் மிச்சம். தலைவர் விசேஷ வழியாகச் சென்றுவிட்டாராம். தலைவருக்காக விமானம் அரைமணி தாமதமாகக் கிளம்பியிருக்கிறது.

நெஞ்சம் படபடக்க விமானத்துக்குள் நுழைந்தார்கள். பணிப்பெண் ரெடிமேட் புன்னகையுடன் கைகூப்பி

அழைத்தாள். கண் எங்கோ பார்க்க, உயிரற்ற சிரிப்புடன் கடமைக்காக வரவேற்றது நன்றாகத் தெரிந்தது.

ஒரு வழியாக சீட் தேடி அமர்ந்ததும்தான் நிம்மதியாக இருந்தது. தம்பியை ஜன்னலோரம் அமரச் சொல்லி, குமார் நடுவில் அமர்ந்தான். சற்றும் எதிர்பாராவண்ணம் அந்தக் கிராமத்தான் அல்லது ரிக்ஷாக்காரன், குமார் பக்கத்தில் வந்து அமர்ந்தான்.

பணிப்பெண்கள், தட்டில் சாக்லேட் எடுத்து வந்து தந்தார்கள். மைக், 'சீட் பெல்ட் கட்டிக் கொள்ளவும்' என்றது. கொஞ்சம் கொஞ்சமாக் வேகம் எடுத்த விமானம், ரன்வே முனை சென்று திரும்பியது. பிறகு எதிர்பாரா வேகம் பெற்று விரைய...

தரையுடனான தொடர்பு விட்டு, காற்றில் எவ்வியது. கீழே நட்சத்திரம்போல விளக்குகள் கண்கொள்ளாக் காட்சியாக விரிய, மலைப்பாம்புபோல அண்ணாசாலை தகதகத்தது. எல்லாம் இரண்டு நிமிஷம்தான். பிறகு ஒன்றுமே தெரியவில்லை. ஒரே இருட்டு. இருட்டு.

கொஞ்ச நேரத்தில் ஆறாயிரம் அடி உயரத்தில் இருப்ப தாக கேப்டன் குப்தா அறிவித்தார். டேக் ஆஃப் ஆகும் போதே பணிப்பெண்கள் மோனோ ஆக்டிங் மாதிரி, ஆபத்து நேரத்தில் செய்வன குறித்து விளக்கி எக்சர்ஸைஸ் செய்து கொண்டிருந்ததைப் பாதிப்பேர் பார்த்ததாகத் தெரியவில்லை.

மகனின் நிலை குறித்து குப்புசாமி நொந்து போயிருந்தான்.

ஐந்து வயது ரமேஷால் தொடர்ந்து ஐந்து நிமிடம்கூட நடக்க முடியவில்லை. மூச்சுத் திணறினான். அடிக்கடி மார்பைப் பிடித்துக் கொண்டு வலிப்பதாகச் சொன்னான்.

டவுனிலிருக்கும் இலவச ஆஸ்பத்திரியில் போய்க் காட்ட, அவர்கள் அரசு ஆஸ்பத்திரிக்குப் போகச் சொன்னார்கள். அங்குதான் இடி போட்டார்கள். இதயத்தில் கோளாறு... ஓட்டை.... ஆபரேஷன் என்று புரியாத வார்த்தை எல்லாம் சொன்னார்கள். 'ஆபரேஷன் செய்யாட்டா இரண்டு மாசம்தான் உயிரோடு இருப்பான்' என்றார்கள்.

சைக்கிளை விற்று, தனியார் ஆஸ்பத்திரி ஒன்றில் காட்ட, அவர்களும் அதையே சொன்னார்கள். ஆபரேஷனுக்கு ஒரு லட்சம் செலவாகுமாம்.

குப்புசாமி தலையில் கை வைத்து உட்கார்ந்து விட்டான். 'ஆயிரம் ரூபான்னா புரட்டலாம். ஒரு லட்சத்துக்கு எத்தனை ஆயிரம்னே தெரியலை...!'

கேட்டது பெரிய தொகை என்று மட்டும் புரிந்தது.

முதலாளி தயவு தாட்சண்யமின்றி கைவிரித்து விட்டார். 'வேணும்னா ஒரு வருடத்துக்கான சம்பளமாக இரண்டாயிரம் தரேன்' என்று மட்டும் சொன்னார்.

எந்த மூலைக்கு? 'எம்.எல்.ஏ. மூலம் எழுதிப் போட்டா பத்தாயிரம் கிடைக்கும்' என்றும், 'கமிஷன் இரண்டாயிரம் தரணும்' என்றும் கட்சி சின்னு சொன்னான். விற்கக்கூட எதுவுமில்லையே? குப்புசாமி ஒடிந்தே போனான்.

ரமேஷைப் பார்க்கப் பாவமாயிருந்தது. நாளுக்கு நாள் மெலிந்து வந்தான். கண் எதிரில் யமன் அவனைக் கொண்டு போவது தெரிந்தது. கடவுள் முதற்கொண்டு எல்லார் பேரிலும் கோபம் வந்தது. பணக்கார வியாதி எல்லாம் ஏன் நமக்கு வருகிறது?

தன் கையாலாகாத் தனத்தினால் தான் ஒரு சிறு பிஞ்சைக் காவு கொடுக்கப் போகிறோம் என்பது தெரிந்ததும், முதலில்

தான் தூக்கில் தொங்குவது என்று முடிவு செய்தபோதுதான் அது நடந்தது.

அவனை இதற்கு முன் குப்புசாமி பார்த்ததில்லை. யார் என்று தெரியவில்லை.

''குப்புசாமி... நிமிர்ந்து உட்கார். நீ கஷ்டத்தில் இருப்பது எங்களுக்குத் தெரியும்! உனக்கு என்ன வேணும்..?''

''எம் மவனுக்கு ஆபரேஷன் பண்ணணும் தொரை...''

''அதுக்கு ஏற்பாடு செஞ்சா, பதிலுக்கு நீ என்ன தர்றே...?''

''இராசா!... நீ சொல்றதே வயித்துல பால் வார்க்குது. எங்கிட்டே இருக்கிறது உசிரு ஒண்ணுதான். அத வேணா தரேன்!'' - குப்புசாமி குழைந்த மெழுகானான்.

''சரி! உனக்கு வேண்டியதை நாங்க பண்றோம். எங்களுக்கு வேண்டியதை நீ பண்ணணும்...நாளைக்கு எங்க தலைவர்கிட்டே போறோம்...''

''தொரை... நீ கடவுள்!'' என்ற குப்புசாமி, அவன் காலில் விழுந்தான்.

விமானத்தில் அனைவரும் தங்கள் இருக்கையில் செட்டில் ஆனபோது - பணிப்பெண் ஒவ்வொருவரிடமாய், 'உணவு சைவமா; அசைவமா' என்று விசாரித்தாள். குறித்தாள். உணவும் வந்தது.

முன்புற இருக்கையிலிருந்த பலகையை இழுத்து, டைனிங் டேபிள் போலச் செய்து கொண்டார்கள். முன்புறம் எட்டிப் பார்த்து குமார் கற்க, அவனைப் பார்த்து ரிக்ஷாக்காரனும் கற்றான்.

''சார்..எங்க - டெல்லி போறீங்களா?'' என்றான் ரிக்ஷா.

''ஆமாம்!'' என்றான் குமார். சினிமா தியேட்டரில் சினிமாவுக்கா என்று கேட்பது மாதிரி இது! இருந்தும் பேச்சுத் தொடங்கலுக்கு இது அவசியம்.

''நீங்ககூட டெல்லிதான் போறீங்களா?'' - கேட்டபின் அபத்தம் உணர்ந்தான் குமார்.

''இல்லங்க... நான் டெல்லி போகலை!'' என்றான் அவன். அவன் ஜோக்குக்கு அப்படிச் சொல்வதாக குமார் நினைத்துக் கொண்டான்.

''மெட்டல் டிடெக்டர் செக்ல, உங்க பாக்கெட்ல இருந்து ஏதோ எடுத்துக் காட்னீங்களே... அது என்னங்க..?''

''அதுவா! எலெக்ட்ரானிக் கருவி இருக்கிறதா சொன்ன மெட்டல் இது தான். பாருங்க... மார்ல ஆபரேஷன். உள்ளே பேஸ் மேக்கரு வச்சுத் தச்சிருக்கு... அதுல இருக்கற பேட்டரியினால சத்தம் வந்தது. டாக்டர் சர்டிபிகேட் காட்டினேன். பொறவுதான் விட்டாங்க!'' - இழுத்து இழுத்துச் சொல்லி முடித்தான் ரிக்ஷா.

''சாரிங்க... அப்பலருந்து என்னவாயிருக்கும்னு யோசனை! அதான் கேட்டுட்டேன். கோவிச்சுக்காதீங்க..!''

''இதுல என்னங்க கோபம்? ஆமா... இதென்னங்க பாக்கெட்? இதுல என்ன இருக்கு..?''

''ஒண்ணுல சர்க்கரை... ஒண்ணுல உப்பு!'' என்ற குமார், தன் தட்டிலிருந்த பாக்கெட் மற்றும் சாக்லெட்களைத் தன் சட்டைப் பாக்கெட்டில் போட்டுக் கொண்டிருந்தான் - யாரும் பாராதவண்ணம். ஊர் சென்று இறங்கியதும், பறந்ததற்குச் சாட்சி என இவற்றைக் காட்டலாமே!

சாப்பிட்டு முடித்து காபி தந்தார்கள். வாயில் வைக்க - கசப்பு. யாரும் பார்க்காவண்ணம் பாக்கெட்டிலிருந்த சர்க்கரையை எடுத்துப் போட்டுக் கலக்கிக் கொண்டான்.

ரிக்ஷாக்காரன் பேர் கேட்கத் தயக்கமாயிருந்தது.

''சார்... சரியாவே சாப்பிடலை... தயிர் மட்டும்தான் சாப்பிட்டீங்க. வயிறு சரியில்லையா?''

''மேலே போறோம்... சாப்பிட்டா என்ன? சாப்பிடாட்டி என்ன?'' - அவன் சொன்னது குமாருக்குக் குழப்பத்தைத் தந்தது. மறை கழன்ற ஆள் என்று நினைத்துக் கொண்டான்.

''என்ன குப்புசாமி... சொன்னது புரிஞ்சுதா? அந்தத் தலைவரை அழிச்சாதான் நாடு உருப்படும். அது உன்னாலதான் முடியும். நீ மட்டும் இதைச் செஞ்சா, உன் பையன் ஆபரேஷனை நாங்க பண்றோம்...''

''என்ன சொன்னாலும் செய்யறேன். என் பையன் ரமேஷ் பொழைச்சாப் போதும். ஆனா நீங்க சொன்னதக் கேட்டா நான் செத்துடுவேன்... அப்புறம் நீங்க ஏமாத்திட்டா?''

பெற்ற பாசத்தில் அவன் சந்தேகம் முளை கட்டிக் கொண்டது.

''வாக்கு குப்புசாமி - வாக்கு...! வார்த்தைதான் முக்கியம்...''

''மன்னிக்கணும். உயிரை விட நான் தயார். அதுபோல நீங்க என் கண்ணு முன்னால ஆபரேஷனுக்கு ஏற்பாடு செய்யணும். அப்பதான் என்னால நிம்மதியா உங்களுக்கு உதவ முடியும்...''

உடனே - உடனே போன் போட்டுப் பேசினார்கள். ஒரு மணி நேரத்தில் சூட்கேஸ் பணத்துடன் ஆள் வந்தது.

குப்புசாமியைக் காரில் கூட்டிப் போனார்கள். ரமேஷைக் கூட்டி வந்து, பெரிய டவுன் ஆஸ்பத்திரியில் சேர்த்து முழுத் தொகையையும் கட்டினார்கள்.

ரமேஷ் பேரில் ஐம்பதாயிரம் ரூபாய் பேங்கில் போட்டார்கள். குப்புசாமிக்கு நடப்பதெல்லாம் கனவா என்று தோன்றியது. ரமேஷ் பிழைக்கப் போகிறான்! என் ரமேஷ்! கடவுள் கைவிடவில்லை.

''ஐயா... நீங்க தெய்வம். இப்பவே உங்க கால்ல வேணா உயிரை விடத் தயார்!'' என்றான் குப்புசாமி.

''இப்ப வேணாம்யா... தலைவர் போற விமானத்துல நீ உயிரை விடணும். உன்னோட தலைவரும் உயிரை விடணும். அதற்குச் சில ஏற்பாடுகள் இருக்கு... தயாரா..?''

''நீங்க சொன்ன வார்த்தைய நீங்க செஞ்சிட்டீங்க... என் வார்த்தைய நான் காப்பாத்த வேணாமா? என்ன செய்யணும் - சொல்லுங்க!''

திடீரென்று குமாரின் தம்பி, நெஞ்சைப் பிடித்துக் கொண்டான். வலி வலி என்றான். குமார் தடவி விட்டான். சற்று நேரத்தில் அழத் தொடங்கினான்.

பணிப்பெண்ணை விசாரித்தான் - விமானத்தில் டாக்டர்கள் யாரேனும் இருக்கிறார்களா என்று. யாரு மில்லை. ஆனால் உடனே அவன் சரிவாகி, குமார் மார்பில் சாய்ந்தான்.

''இராஜா... பொறுத்துக்கடா... கொஞ்ச நேரம்... நாளைக்கே எல்லாம் சரியாயிடும்...''

''என்னங்க... தம்பிக்கு என்ன..?'' என்றான் ரிக்ஷா.

''இவன் என் தம்பிங்க...இவனுக்கு இதயத்துல ஓட்டை. பாழாப்போன கடவுள், பிஞ்சுக் குழந்தையச் சோதிக்கிறான். உலகத்துல இல்லாத வியாதி. ஒரு வெளிநாட்டு நிறுவனம் இலவசமா ஆபரேஷன் செய்யறதுக்கு இவனை செலக்ட் பண்ணியிருக்காங்க... இரண்டு நாள்ல ஆபரேஷன். டிரெயின் குலுக்கல்கூட இவனுக்கு ஒத்துக்காதுன்னு முதல் தடவையா விமானத்துல வரோம்...''

ரிக்ஷாக்காரன் முகம் மாறி, இராஜாவைப் பார்த்தான். அவன் திணறிக் கொண்டு குமாரின் சுண்டுவிரல் இருக்கும் பகுதியைப் பிடித்துக் கொண்டிருந்தான். 'என்னை விட்டு விடாதே அண்ணே' என்ற இறுக்கம்.

எதை நினைத்தானோ தெரியவில்லை... அந்த ரிக்ஷாக் காரன் அழத் தொடங்கினான்.

''என்னங்க... எங்க கஷ்டத்தை உங்ககிட்டே சொல்லி உங்களை அழ வச்சுட்டேன்..! சாரி... மன்னிச்சிடுங்க...''

''இல்ல தம்பி... நீங்கதான் என்னை மன்னிக்கணும். இந்த விமானத்தை நிறுத்த ஏதாவது வழி இருக்கா? டிரெயினை செயின் பிடிச்சு நிறுத்தற மாதிரி?''

''நடு வானத்துல அது முடியாதுங்க... எதுக்குங்க..?''

''இன்னும் அரைமணி நேரத்துல விமானம் வெடிக்கப் போகுது. இதுல குண்டு இருக்கு..!''

''விளையாடாதீங்க சார்... முழுசா செக் பண்ணித்தான் விமானத்தைக் கிளப்பினாங்க...''

''ஏமாந்துட்டாங்க... என்கிட்ட பாம் இருக்கு... இதோ - இங்கே உடம்புக்குள்ள வச்சுத் தச்சிருக்கு! பேஸ் மேக்கர்னு

சொல்லி ஏமாத்தச் சொன்னாங்க... போலி டாக்டர் சர்டிபிகேட் நான் காண்பிச்சது..!''

''ஐயோ! என்னங்க சொல்றீங்க..?''

''நான் சொல்றது சத்தியம். உடனே நிறுத்தப் பார். இல்லாட்டா அத்தனை பேரும் காலி..!''

குமார் படபடப்புடன் எழுந்து, பணிப்பெண்ணைக் கூப்பிட்டான். கேட்ட அவள் அதிர்ந்தாள்.

''ஆர் யூ ஜோக்கிங்..?''

''தம்பி... ஜோக் பேசற நேரமா இது? நிறுத்தச் சொல்லுப்பா...''

''மிஸ்! இது சீரியஸ் விஷயம். இதுல வர்ற தலைவரக் கொல்ல சதி... என்ன விடுங்க... நான் கேப்டன் கிட்டே பேசறேன்...''

அதற்குள் விஷயம் சீட் சீட்டாகப் பரவி, அனைவரும் உறைந்தார்கள். மார்பில் கிராஸ் போட்டார்கள். இஷ்ட தெய்வத்தையும், குல தெய்வத்தையும் அழைத்தார்கள். மொத்தத்தில் யாருக்கும் என்ன செய்வது என்று புரியாத பதற்ற உச்ச களேபரம்.

''இட்ஸ் குரூஷியஸ்... அட்ராஷியஸ்!''

''யோவ்... என்னய்யா... மூளை இருக்கா..? உயிரோட விளையாடாதய்யா...''

''குண்டைப் பிடுங்கி எறிங்கப்பா..?''

''குண்டு அந்தாளு உடம்பில இருக்குய்யா... உண்மைல மனித வெடிகுண்டு!''

''அந்த ஆள அடிச்சுக் கொன்னுடலாம்...''

''குண்டு சாகாதே?''

''ஹலோ! கேப்டன் குப்தா... அமைதி... பாலைவனம் மேல பறந்திட்டிருக்கோம் இப்ப... இறங்கறதுக்கு சான்ஸே இல்லை. அமைதியா இருங்க..!''

குமார், அந்த ஆளை அழைத்துக் கொண்டு கேப்டனிடம் போனான். அவன் பேர் 'குப்புசாமி' என்று பணிப்பெண் மூலம் எல்லாரும் தெரிந்து கொண்டார்கள்.

''என்னய்யா செக்யூரிட்டி சிஸ்டம்..? கண்ணெதிரில குண்டு இருக்கு... கண்டுபிடிக்க முடியலை...'' என்று எக்ஸிகியூடிவ் கிளாசில் புழுங்கிக் கொண்டிருந்தார்கள்.

''டாக்டர் இருந்தா நெஞ்சக் கிழிச்சுக் குண்டை எடுத்துடலாம்..!''

''இல்லாத ஊருக்கு ஏன்யா வழி சொல்றே?''

''சார்... சாதாரண குண்டா? டைம்பாமா..?''

''டைம்பாம்..!''

''இந்த நல்ல புத்தி கிளம்பறச்சே என்னய்யா ஆச்சு..?''

''ஒரு குழந்தைக்காக ஒரு தகப்பன் சாகலாம். ஆனால் ஒரு குழந்தைக்காக ஒரு குழந்தை சாகக் கூடாது!'' என்றான் குப்புசாமி.

''என்னப்பா தத்துவம் பேசறே..?''

''தவறான நேரத்துல ஞானோதயம் வந்திருக்கு... உண்மை தெரிஞ்சும் நோ யூஸ்... தெரியாம இருந்தாகூட நிம்மதியா செத்திருக்கலாம்..!''

குப்புசாமியைக் கேப்டனிடம் அழைத்துப் போனான் குமார். தமிழ் தெரியாத கேப்டனிடம், குப்புசாமி சொல்வதை மொழி பெயர்த்தான்.

'விமானத்தைக் காப்பாற்ற, வெளியில் குதித்துவிட குப்புசாமி விரும்புகிறான்' என்றான்.

'இருக்கிற 268 பயணிகள் உயிரும் ஒன்றுசேர்ந்து தடுத்தாலும் குப்புசாமியைக் குதிக்க விடமாட்டேன்' என்று அடம்பிடித்தார்.

''ஓர் ஆளை விடாட்டா அத்தனை பேரும் காலி!'' என்றான் குப்புசாமி.

''நானே தயாரா இருக்கறப்போ... விடுங்கய்யா! நேரம் ஆக ஆக வெடிக்கற அபாயம் நெருங்குது... புரியலையாடா?''

கேப்டன் கீழே கண்ட்ரோல் டவருடன் தொடர்புகொள்ள டெல்லி பரபரப்பானது. தேடும் விமானங்கள் தயாராயின. ஆனால் முடிவெடுக்க யாரும் தயாரில்லை.

''எங்களுக்குப் பாராசூட் கொடுங்க... நாங்க குதிச்சிடறோம்...'' என்றனர் பயணிகள் ஒரு சேர!

பரபரப்பு.

''என்னைக் குதிக்க விடறீங்களா அல்லது - இப்பவே நான் வெடிக்கட்டுமா?'' என்று பொய் குண்டு போட, கேப்டன் சம்மதித்தார்.

''சார்! குதிச்சு ஒருவேளை குண்டு இல்லாம இருந்து குப்புசாமி செத்துடாம இருக்க, அவனுக்குப் பாராசூட் போட்டுக் குதிக்கவிடலாம்!'' என்றான் குமார்.

உடனே - உடனே குப்புசாமி பாராசூட் மாட்டப்பட்டான்.

எமர்ஜென்சி எக்சிட் திறந்து, கண் மூடும் நேரத்தில் வெளியே குதித்து விட்டான்.

பயணிகள் காக்பிட்டில் நடப்பது தெரியாமல் கண்மூடி, தாங்களும் சாகும் நேரத்துக்குக் காத்திருக்க... கேப்டனும் குமாரும் விண்ட் ஷீல்டு வழியே பார்க்க -

ஒரு மத்தாப்புக் குச்சி மாதிரி தீப்பொறியாகக் காற்றில் புகைக் கசிவாகச் சிதறிக் கொண்டிருந்தான் குப்புசாமி.

அவன் ஏன் மனம் மாறினான் என்பது குமாருக்குப் புரியவே இல்லை.

●



# வையாபுரி

நாகராஜகுமார்

நடு அறையில் மாட்டியிருந்த சுவர்க் கடிகாரத்தைப் பார்த்தாள் ஜானகியம்மாள். 'இந்நேரம் பிரிவு உபசார விழா நடந்து கொண்டிருக்கும்' என்று நினைத்துக் கொண்டாள். மனத்தில் லேசான பயமும் ஒட்டிக் கொண்டது.

கணவர் சடகோபன் தற்போது பத்திரிகை அலுவலகத்தில் துணை ஆசிரியராகப் பணியாற்றி ஒய்வு பெறுகிறவர். முதலில் பிழை திருத்துபவராகச் சேர்ந்து படிப்படியாக முன்னேறி, துணை ஆசிரியராகப் பணியாற்றிக் கொண் டிருந்தபோது வயது 58-ஐக் கடந்து விட, 'ஒய்வு பெற்றுக் கொள்ளுங்கள்' என்றது பத்திரிகை நிர்வாகம். இன்று ஒய்வு பெறும் நாள்.

ஒய்வு பெற்று வீட்டிற்குள் வரும்போது ஆரத்தி கலக்கி திருஷ்டி கழித்து வரவேற்கலாமா? என்று ஒரு கணம் யோசித்தாள் ஜானகியம்மாள். மறு கணம் தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டதற்குக் காரணம் இருந்தது.

ஜானகியம்மாள் எதைச் செய்தாலும் அதற்கு மறுப்புச் சொல்லும் குணம் சடகோபனிடம் ஆழமாகப் பதிந்திருப் பதை அவள் அறிந்தே இருந்தாள்.

40 வருட தாம்பத்ய வாழ்க்கை. ஒரே பெண். தற்போது இரண்டு பிள்ளைகளைப் பெற்றுக்கொண்டு தில்லியில் வசிக்கிறாள். அவளைப் பொறுத்தவரை எந்தப் பிரச்னையு மில்லை. ஜானகியம்மாளின் உள்ளுணர்வுகளை நன்றாய் அறிந்தவள். ஆனால் கணவன் சடகோபன்தான் தன்னைப் புரிந்து கொள்ளவில்லையோ என்று தனிமையில் கவலைப் பட்டுக் கொள்வாள் ஜானகியம்மாள். சில சமயம் வாழ்க்கை இப்படித்தான் என்று தேற்றிக் கொள்வாள்.

வசதிகள் ஒன்றும் குறைவில்லை. சின்னதாக ஒரு வீடு இருந்தது. வீட்டிற்குத் தேவையான அத்தனைப் பொருள் களும் இருந்தன. வங்கியில் சிறிது பணம் இருந்தது.

ஓய்ந்திருக்கும் நேரத்தில் வீட்டைச் சுத்தம் செய்யலாம் என்று சடகோபன் வைத்து உபயோகிக்கும் புத்தகங்களை அழகாக அடுக்கி வைத்தால் ஜானகியம்மாளுக்கு ஆபத்து வந்துவிடும்.

'வீட்டை அழகாக வைத்திருக்கிறாயே!' என்ற பாராட்டு கிடைக்காது. ''உன்னை யாரு இதையெல்லாம் அடுக்கி வைக்கச் சொன்னது? முக்கியமான குறிப்புகளை எடுக்க லாம்னு டேபிள் மேலே வைத்திருந்த புத்தகங்களை எல்லாம் எங்கே எடுத்து வைச்சே?'' வீட்டிற்குள் நுழைந்ததும் அலறுவார் சடகோபன். தான் எடுத்து வைத்த புத்தகத்தை மிக பத்திரமாய் - சரியாக எடுத்துத் தருவாள் ஜானகியம்மாள். அதிலும் சடகோபனுக்குத் திருப்தி இருக்காது. அதற்காகவே குவியலாக இருக்கும் அவர் பொருள் ஒன்றையும் தொட மாட்டாள் ஜானகியம்மாள். மாதக்கணக்கில் புழுதி படிந்து அப்படியே கிடக்கும். சடகோபனும் தொட மாட்டார்.

வீட்டில் இருந்தால் கேட்கவே வேண்டாம். ''ஏண்டி நேற்று கொண்டு வந்த ஒரு குறிப்பு நூலை எங்கே எடுத்து வைச்சே?''

''எந்த நூல்?''

''பெண் சிசுக் கொலை பற்றியது!''

''இந்தப் பேப்பருக்குக் கீழே இருக்கான்னு பாருங்க.''

டேபிள் மீதிருக்கும் அன்றைய தினசரி பேப்பரை விலக்கிப் பார்த்தால் உள்ளேயிருந்து எட்டிப் பார்க்கும் அவர் தேடிய நூல்.

ஆவலாகத் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்க்க முடியாது. எழுதுகிறேன் என்கிற போர்வையில் எந்த ஓசையும் வரவிட மாட்டார்.

ஆனால் சடகோபன் மட்டும், ''கொஞ்சம் காபி கொடேன். கொஞ்சம் கொறிக்க ஏதாச்சும் கொடேன்'' என்று சத்தமிட்டுக் கொண்டேயிருப்பது ஜானகியம்மாளின் வாழ்க்கையில் வாடிக்கையாகிவிட்டது.

மீண்டும் சுவரில் மாட்டியிருந்த கடிகாரத்தைப் பார்த்தவள், வாசல் பக்கம் தன் பார்வையைச் செலுத்தினாள்.

நேரம் மணி ஏழாக மூன்று நிமிடம் இருந்தபோது சென்னைத் தொலைக்காட்சியை இயக்கினாள். செய்திச் சுருக்கம் நிகழ்ச்சிக்காகக் காத்திருந்தாள்.

செய்திச் சுருக்க அறிவிப்பு தொடங்கியபோது அட்டகாச மாக உள்ளே நுழைந்தார் சடகோபன். சட்டென்று தொலைக் காட்சியை நிறுத்தினாள். எழுந்தவள், அவர் கையில் வைத்திருந்த ஒரு சின்னச் சால்வையையும் நிறையப் புத்தகங்களையும் பெற்றுக் கொண்டாள்.

காரணமில்லாமல் கண்ணீர் வந்தது ஜானகியம்மாளுக்கு.

அவள் சிந்திய கண்ணீரைக் கவனித்து விட்ட சடகோபன் ''என்ன? வேலைக்கு ஓய்வு கிடைச்சாச்சு. இனி வருமானத் திற்கு என்ன செய்யப் போறேன்னு பயம் வந்தாச்சா?''

''இல்லைங்க.''

''வேறே என்னவாம்?''

''சொல்லத் தெரியலை!'' என்றாள்.

''வயசாயிடுச்சு என்ற கவலையா?''

புன்சிரிப்பு ஒன்றை உதிர்த்துவிட்டு, ''இருங்க காபி கொண்டு வர்றேன்!'' என்று சமையல் அறைக்குள் திரும்பினாள்.

காபியுடன் ஜானகியம்மாள் வெளியில் வந்தபோது வழக்கமாக அமரும் நாற்காலியில் அமர்ந்து டேபிளின் மேல் இருந்த பேப்பர் பேடில் புதிய பேப்பர்களைச் செருகிக் கொண்டிருந்தார் சடகோபன்.

''காபி'' என்றாள்.

காபியை வாங்கி உறிஞ்சியவர் அதே வேகத்தில் சொன்னார். ''புதுத் தெம்பு வந்திருச்சு ஜானு'' என்றார்.

''நான் கொடுத்த காபியைக் குடிச்சதாலேயா?''

''சமயத்தில் நீயும் ஜோக் அடிக்கறே! நான் சொல்ல வந்தது அதைப் பற்றி இல்லை. இனி, நான் சுதந்தரப் பறவை! எல்லாப் பத்திரிகையிலும் எழுதலாம். வேலையை விட்டுப் புறப்படும்போது பிரபல வாரப் பத்திரிகை ஆசிரியர் ஒருத்தர் போன் செய்தார். என்னுடைய பத்திரிகை அனுபவத்தைப் பற்றி ஒரு தொடர் கட்டுரை உடனே வேண்டுமாம். அவர் என்னிடம் பேசியதில் ஒரு புது உற்சாகம் பிறந்திருக்கு. அதான் இப்பவே எழுதத் தொடங்கிவிட்டேன்'' என்றார்.

ஜானகியம்மாளுக்கு, தான் - இனி என்னவெல்லாம் செய்ய வேண்டும்; எதையெல்லாம் செய்யக்கூடாது என்று புரிந்து விட்டது.

அமைதியாகச் சமையலறைக்குள் நுழைந்தாள். இரவு உணவு தயாரிப்பில் கவனம் செலுத்தினாள். சடகோபன் அரைமணி நேரத்திற்கு ஒரு முறை கேட்கும் காபிக்கான டிக்காஷனைத் தயார் செய்தாள். பிளாஸ்டிக் டப்பாவில் கொறிக்க என்ன என்ன இருக்கிறது என்பதையும் பார்த்து வைத்துக் கொண்டாள்.

வெளியே வந்து பார்த்தபோது சடகோபன் எழுதுவதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். எழுத்துப் பணி அன்றைய நாளில் எப்போது முடியும் என்று சடகோபனுக்கே தெரியாது.

பசியெடுத்தபோது ஜானகியைச் சடகோபன் கூப்பிட. பரிமாறிவிட்டுக் களைப்போடு படுத்துக் கொண்டாள் ஜானகியம்மாள்.

விடியற்காலையில் குளிருக்குப் போர்வை கதகதப்பாக இருந்தது. பாதி இமையைப் பிரித்து சுவர்க் கடிகாரத்தைப் பார்த்தாள். இன்னும் அரைமணி நேரம் கழித்து எழுந்தால் போதும் என்று நினைத்த ஜானகியம்மாள் மீண்டும் போர்வைக்குள் புகுந்து கொண்டாள்.

நினைவுகள் கனவுகளாக மாறிக் கொண்டிருக்கும் நேரத்தில் ஒரு விநோதமான சப்தம் அவளை உலுக்கி எழுப்பியது.

''ச்சூ... ச்சூ... ச்சூ...'' என்ற குரலோசை தொடர்ந்து வர போர்வையை உதறி விட்டு எழுந்தாள்.

வழக்கமாகப் பக்கத்தில் படுத்திருக்கும் சடகோபன் காணாமல் போனதைப் பற்றிக் கவலைப்படவில்லை. விடியற்காலை வேளையில் எழுந்து எழுதுவது அவருடைய பழக்கம் என்பதால் படுக்கையை விட்டு விலகி - நடு அறைக்கு வந்தாள். விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

மேஜையும் நாற்காலியும் வெற்றிடமாக இருந்தது. தொடர்ந்து ச்சூ... ச்சூ... ச்சூ... ஒலி மட்டும் கேட்டுக்கொண்டேயிருந்தது.

வாசலுக்கு வந்தாள். வாசலைத் தாண்டி வெளிக் கதவின் அருகே குத்துக் காலிட்டு அமர்ந்திருந்தார் சடகோபன். ஒலி அவரிடமிருந்துதான் வருகிறது என்பதைத் திட்டவட்டமாக முடிவு செய்து கொண்டாள். மெதுவாக வெளிக் கதவின் அருகில் வந்தாள். சுவாரஸ்யமாக எட்டிப் பார்த்தாள்.

உட்கார்ந்திருந்த சடகோபனுக்குச் சற்றுத் தள்ளி ஒரு நாய்க்குட்டி அவரைப் பார்த்து வாலாட்டியபடி நின்று கொண்டிருந்தது. சிரித்து விட்டாள் ஜானகியம்மாள். அவள் சிரிப்பொலியைத் திடீரென்று கேட்டு விட்ட சடகோபன் பதறி எழுந்தார்.

சப்தம் போட்டுத் திட்டித் தீர்ப்பார் என எதிர்பார்த்த ஜானகியம்மாளிடம் சப்தமில்லாத குரலில் சொன்னார் சடகோபன். "ஏண்டி ஜானு, மெதுவாகச் சிரிக்கக் கூடாதா? பார், அந்த நாய்க்குட்டி பயந்து போய்ப் பின்வாங்குது. நான் இவ்வளவு நேரம் கஷ்டப்பட்டு அதைக் கூப்பிட்டு என்னிடம் வரவழைச்சேன். ஒரே நிமிடத்தில் அதைப் பின்வாங்க வைச்சுட்டியே" என்றார்.

ஜானகி அவரைக் கூர்ந்து பார்த்தாள். "உங்களுக்கு அந்த நாய்க்குட்டி வேணுமா?"

"உம்" என்றார் தலையாட்டியபடி.

"எதுக்கு?"

"நாய்க் குட்டியை மையமாக வைத்து ஒரு கதை எழுதலாம்னு ஆசை. அதுவுமில்லாமல் ஓய்வு பெற்றாகி விட்டது. அதை வளர்க்கிற நேரத்தில் பொழுது போகுமில் லையா?" என்றவர் கெஞ்சலாக, "நீ அந்த நாய்க்குட்டியை வளர்க்க சம்மதிப்பே இல்லையா?"

யோசித்தாள் ஜானகியம்மாள்.

சட்டென்று அவரைத் தாண்டிச் சற்றுத் தள்ளி வாலாட்டிய படி நின்றிருந்த நாய்க் குட்டியைப் பிடித்து இழுத்தாள். ''பார்த்து இழு ஜானு'' என்றார்.

அது ஒரு சின்ன சப்தத்துடன் அவளிடம் வந்தது. அவளிடமிருந்த நாய்க் குட்டியை, ''கொடு... கொடு... என்னிடம் கொடு! நானே வீட்டுக்குள்ளே கொண்டு வர்றேன்'' என்று ஆசையாக வாங்கிக் கொண்டார் சடகோபன். பொழுது விடிந்து விட்டிருந்தது.

காலைக் கடன்களை முடித்து, குளித்து வாசல் தெளித்துக் கோலமிட்டு ஜானகியம்மாள் சமையலறைக்குள் நுழையும் நேரம் வரை சடகோபன் அவளை அழைக்காதது ஆச்சரியமாக இருந்தது.

முதல் டிகாக்ஷனில் காபி கலந்து தம்ளரில் நிரப்பி சமையலறையை விட்டு வெளியே வரும்போது சமையலறை யின் வாசலில் நின்றிருந்தார் சடகோபன்.

''இதோ காபி ரெடி!'' கையிலிருந்த காபி தம்ளரை நீட்டினாள்.

''இன்னும் பல் துலக்கலை. இரு நானும் ரெடியா யிடறேன்!''

''இவ்வளவு நேரம் என்ன செய்துட்டிருந்தீங்க?''

''நீ பிடிச்சுக் கொடுத்தியே நாய்க் குட்டி. அதோடு விளையாடிட்டிருந்தேன். நேரம் போனதே தெரியலை ஜானு!''

''எங்கேயிருக்கு அது?''

''அது இது எல்லாம் சொல்லாதே. பெயர் சூட்டியாச்சு. 'வையாபுரி' என்று பெயர் வைச்சிருக்கேன். நல்லா யிருக்கா?''

''வையாபுரியா?''

''ஆமாம்! வையாபுரிதான். நான் 'வாடா வையாபுரி'ன்னு கூப்பிட்டேன். எவ்வளவு ஜோரா எங்கிட்டே ஓடி வர்றான் தெரியுமா?''

''சரி. பல் துலக்கிட்டு... முகம் அலம்பிட்டு வாங்க. நான் காபியை உங்க மேஜை மேலே வைக்கிறேன்'' என்று நகர்ந்த ஜானகியம்மாள், ''ஆமாம்... எங்கே உங்க வையாபுரி?'' என்றாள்.

உற்சாகமாகப் பதில் சொன்னார் சடகோபன். ''அவன் கிட்டே 'இரு நான் பல் தேய்ச்சுட்டு வர்றேன்'னு சொன்னேன். மேஜைக்கு அடியில் போய்ப் படுத்துட்டான். அவனுக்குப் பெயர் சூட்டிய விஷயத்தைச் சொல்ல உன்னைத் தேடிச் சமையல் அறைக்கு வந்தேன். நீ என்னடான்னா காபியோட நிற்கிறே... மேஜையில் காபியை வைக்கும்போது மெதுவாக வைச்சுட்டு சப்தம் போடாமல் வந்துடு.''

''ஏன்?''

''மேஜையின் அடியில் படுத்திருக்கிற வையாபுரி எழுந்து எங்கேயாவது ஓடிட்டா, திரும்பி அவனைப் பிடிக்க உன் உதவி தேவையாயிருக்கும்'' என்றவர் அவசரமாக பாத்ரூமிற்குள் நுழைந்தார்.

நுழைந்த வேகத்தில் திரும்பி வந்து ஜானகியம்மாளின் எதிரில் நின்று கேட்டார்: ''எனக்கு அப்புறமா ஓர் உதவி செய்யணும் ஜானு!''

புரியாமல் கேட்டாள் ஜானகியம்மாள். ''என்ன உதவி?''

''இன்னைக்கு நீ மார்க்கெட் போகும்போது என்னையும் அழைச்சுட்டுப் போகணும்?''

''எதுக்கு?''

''நம்ம வையாபுரி சாப்பிட சின்னதாக ஒரு தட்டு, ஒரு கிண்ணம். அப்புறம் கழுத்திலே மாட்ட லெதர் பெல்ட், ஒரு மெல்லிய சங்கிலி எல்லாம் வாங்கணும். நானே செலக்ட் செய்து வாங்கிக்கிறேன். நீ கூட இருந்து பேரம் பேசி வாங்கித் தந்தால் போதும். என்ன? என்னை அழைச்சுட்டுப் போறியா ஜானு?''

''சரி'' என்றாள் ஜானகியம்மாள். சடகோபன் துள்ள லுடன் பாத்ரூமிற்குள் மீண்டும் நுழைந்து கொள்ள, புரியாமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

மனித மனத்திற்கு எப்போது எதில் ஈடுபாடு வரும் என்று சொல்ல முடியாது. ஒரு தெரு நாய்க்குட்டியின் மீது சடகோபனுக்குத் திடீரென்று ஈடுபாடு வந்தது. பணியிலிருந்து ஓய்வு பெற்ற நிலையில் வந்திருக்கும் இந்த ஈடுபாடு ஜானகியைப் பொறுத்தவரை - சடகோபனின் பிடுங்கலி லிருந்து கிடைத்த விடுதலை என்றே நினைத்தாள். அடுத் தடுத்து தன் பணிகளில் சிந்தனைகளுடன் செயல்பட்டாள்.

சடகோபனின் சிந்தனைகளும் செயல்பாடுகளும் வேறு விதமாக இருந்தன. முதல் நாள் நாய் வளர்ப்பு புத்தகம் வாங்கி வந்தார். மறுநாள் நாயைக் குளிப்பாட்டி விட்டார். அடுத்த நாள் நாயைக் குளிப்பாட்டுவதற்குத் தனி சோப்பு உள்ளது என்று யாரோ சொல்ல. 'நாயாய் அலைந்து' அதையும் வாங்கி வந்தார். வாங்கி வந்த சோப்பை உபயோகித்து நாயைக் குளிப்பாட்டி விட்டார். குளிப்பாட்டிய கையை அடிக்கடி முகர்ந்து பார்த்துக் கொண்டார். அந்த

நாய்க்குட்டி செய்த இயற்கை உபாதைகளின் பொருள்களை - ஜானகியம்மாளை அழைக்காமலே - சுத்தம் செய்தார். தினம் தினம் காலை வேளையில் குட்டி நாய் வையாபுரியுடன் வாக்கிங் போவதை வழக்கமாக்கிக் கொண்டார்.

வாக்கிங் செல்கிறபோது தெரு நாய்கள் அவரின் குட்டி நாயைப் பார்த்து முறைத்து, குரைத்தால் விரட்ட ஒரு கம்பையும் கையில் வைத்துக் கொண்டார்.

வெகு விரைவில் அந்த வட்டாரத்தில் சடகோபன் அனைவராலும் 'நாய் மாமா' என்றே அழைக்கப்பட்டார். 'நாய் மாமா வீடு எது?' என்று கேட்டால் குழந்தைகளும் கூட சட்டென்று சடகோபனின் வீட்டை அடையாளம் காட்டினார்கள்.

அப்படி அடையாளம் காட்டப்பட்ட ஒருவர் சடகோபனின் வீட்டிற்கு வந்தார். தான் பிரபல பத்திரிகையிலிருந்து வருவதாகத் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார்.

சடகோபன், கீழேயிருந்த நாய்க்குட்டியைத் தன் மடிமீது வைத்துக் கொண்டு கேட்டார், ''சொல்லுங்க தம்பி, என்ன விஷயம்?''

''ஆசிரியர் அனுப்பி வைத்தார். உங்க பத்திரிகை உலக அனுபவம் பத்தி நீங்கள் எழுதுவதாக ஒப்புக்கொண்டீர்களாம். என்னாச்சு என்று கேட்டு வரச் சொன்னார்'' என்றார் வந்தவர்.

''அதுல பாருங்க தம்பி! இந்த வையாபுரியை விட்டு அப்படி இப்படி நகர முடியலை. காலையிலே இவன் அடிக்கிற லூட்டி என்ன? குழந்தைகளோடு குழந்தையா இவன் விளையாடுகிற குதூகலம் என்ன? நான் எங்கே போனாலும் என்னை விட்டு அப்படி இப்படி நகர மாட்டேன்

என்கிறான். பிறகு நேற்று காலையில் இவனைக் கூட்டிட்டு வாக்கிங் போனபோது நடந்த நிகழ்ச்சியைச் சொல்றேன். கேளுங்க...'' என்று சடகோபன் தொடங்கி, சொல்லச் சொல்ல, வந்தவர் உட்கார முடியாமல் நெளியத் தொடங்கியதைச் சமையலறையில் இருந்த ஜானகியம்மாள் புரிந்து கொண்டாள்.

அவசரமாக காபி கொண்டு வந்தாள். வந்தவர் முன் வைத்தாள். நாய்க்குட்டியைப் பற்றிப் பேசிக் கொண்டே யிருந்த சடகோபனைப் பரிதாபமாகப் பார்த்தாள். அவள் வந்ததைப் பற்றியோ, வந்தவர் காபியைக் குடித்துக் காலி தம்ளரை வைத்ததைப் பற்றியோ கவலைப் படாமல் கடைசியாகச் சொன்னார்:

''உங்க ஆசிரியரிடம் சொல்லுங்க தம்பி! இவன் கொஞ்சம் வளர்ந்துட்டான்னா - அவன் காரியத்தை அவன் செய்துப்பான். என் உதவி தேவைப்படாது. நான் கொஞ்சம் ஃப்ரீயாகி விடுவேன். நிச்சயம் எழுதிக் கொடுக்கறேன்னு சொல்லுங்க'' என்றதும், விட்டால் போதும் என்று எழுந்து கொண்டார் வந்த பத்திரிகையாளர். விடை பெறாமலேயே வாசலுக்கு விரைந்தார்.

சடகோபனிடம் இந்த நேரத்தில் என்ன சொன்னாலும் புரியாது என்பது ஜானகியம்மாளுக்கு நன்றாகத் தெரியும். பேசாமல் இருந்து விட்டாள். உள் மனத்தில் கவலை அதிகமாகிக் கொண்டே போனது.

அன்று வெள்ளிக்கிழமை. காலை பூஜையெல்லாம் முடிந்து கவலையுடன் வாசலில் அமர்ந்திருந்தாள் ஜானகியம்மாள். அடிக்கடி நடு அறைக்கு வந்து சுவர்க் கடிகாரத்தைப் பார்ப்பதும். மீண்டும் வாசலில் வந்து அமர்வதுமாக இருந்தாள். காலை பத்து மணி அடித்து பத்து நிமிடங்கள்

ஆனபோது தெருவின் கோடியில் சடகோபன் வருவது தெரிந்தது. சடகோபனின் நடை துவண்டிருந்தது. தலை தாழ்த்தி வருவதைத் துல்லியமாகப் புரிந்து கொண்டாள். எழுந்து போய் எதிர்கொண்டு அழைத்து வரலாமா என்று கூட யோசித்தாள். நினைப்பைச் செயல்படுத்தினால் காலையி லேயே சடகோபனுக்குக் கோபம் வரும் என்று நினைத்தாள். நடந்து வந்தவரைப் பார்த்துக் கொண்டேயிருந்தபோது தான் அவர் கையில் வழக்கமாய் இருக்கும் சங்கிலியில் நாய்க்குட்டி இல்லாததை உணர்ந்தாள். அவளது கவலை மேலும் அதிகமாகிப் போனது.

வாசலுக்குள் வந்த சடகோபன் நேரே அறைக்குப் போனார். ஏதாவது கேட்டால் அழுது விடுவார் என்பதைப் போல் இருந்தது அவர் முகம். காத்திருந்தாள் ஜானகியம்மாள்.

ஒரு கட்டத்தில் சட்டென்று பேசினார். ''துப்பாக்கி மட்டும் அப்போது என்னிடம் இருந்திருந்தால் தெரிந்திருக்கும் சங்கதி'' என்றார்.

''எதுக்குங்க துப்பாக்கி?'' என்றாள் மெல்லிய குரலில் ஜானகியம்மாள்.

''சுட்டிருப்பேன். சுட்டுக் கொன்றிருப்பேன் அந்த நாயை.''

''எந்த நாயை?''

நாற்காலியில் சாய்வாக அமர்ந்திருந்த சடகோபன் எழுந்து உட்கார்ந்தபடி சொன்னார். ''காலையில் வாக்கிங் முடிந்து ரயில்வே கேட்டைத் தாண்டி இந்தப் பக்கம் வந்தேன். இரண்டாவது மெயின் ரோடு மூன்றாவது வீட்டு வாசல் கதவை அந்தச் சோம்பேறி கூர்க்கா சரியாச் சாத்தவில்லை

போலிருக்கு. அங்கே வீட்டு கேட்டை நானும், வையாபுரியும் கடந்துட்டோம். திடீரென்று உள்ளேயிருந்து வெளியே பாய்ந்தது கன்றுக்குட்டி சைஸில் ஒரு நாய். அது பாய்ந்து வந்த வேகத்தைப் பார்த்து நானே பயந்துட்டேன். நம்ம வையாபுரி பயப்படாமல் இருப்பானா? மிரண்டு போய் நான் வெலவெலத்து நிற்க, தப்பினால் போதும் என்கிற நினைப்பில் சங்கிலியை அறுத்துட்டு, பிய்ச்சிட்டுப் போயிட்டான் வையாபுரி. அதுக்குள்ளே அந்தச் சோம்பேறி கூர்க்கா வந்துட்டான். அவன் மட்டும் வராமல், என் கையில் மட்டும் துப்பாக்கியும், இருந்திருந்தால் சுட்டே கொன்றிருப்பேன் அந்த நாயை. நாய் வளர்க்கிறாங்களாம் நாய். நாயா அது? பேய்! யமன்! பிசாசு!'' வாய்க்கு வந்தபடி திட்டினார். சட்டென்று நிறுத்தினார். மௌனமாக இருந்தார்.

''அந்தப் பிசாசுக்குப் பயந்து நம்ப வையாபுரி நேரே பக்கத்திலிருந்த ஸ்கூல் காம்பவுண்டு கேட்டுக்குள்ளே நுழைந்து உள்ளே ஓடிட்டான். கேட் பூட்டியிருந்தது. அந்தச் சின்ன சந்துக்குள்ளே என்னால நுழைய முடியவில்லை. சரி... ஸ்கூல் திறந்ததும் உள்ளே போய் அழைச்சுட்டு வரலாம்னு இருந்தேன். ஸ்கூல் கேட் திறந்து பசங்க ஸ்கூல் உள்ளே போனாங்க. நானும் ஸ்கூல் முழுதும் ஒவ்வொரு ரூமா ஓடிப் பார்த்தேன். ஒரு ரூம்லேயும் நம்ம வையாபுரியைக் காணோம். அவன் வேற எங்கேயும் போயிருக்க மாட்டான். ஸ்கூல் காம்பவுண்டுக்குள்ளேயே தான் நிச்சயம் இருப்பான். இதைச் சொன்னால் அந்த ஸ்கூல் வாட்ச்மேன் நம்பமாட்டேன் என்கிறான். அதான்... அந்த வாட்ச்மேன் போனதும் நாம் போய்ப் பார்க்கலாம்னு மெதுவா நடந்து வந்துட்டேன். ஃபேன் மெதுவாச் சுழல்கிறது பார். வேகத்தைக் கூடுதலாக்கு'' என்று சட்டையைக் கழற்றினார் சடகோபன்.

மின் விசிறியின் வேகத்தைக் கூடுதலாக்கினாள் ஜானகி யம்மாள். சமையல் அறைக்குச் சென்று தண்ணீர் கொண்டு வந்தாள். சடகோபனிடம் கொடுக்க வந்த போது நாற்காலியில் அமர்ந்த நிலையில் கண்களை மூடியிருந்தார். மெதுவாக அவர் தோளைத் தொட்டாள். சட்டென்று விழித்துக் கொண்ட சடகோபன், அவசரமாகக் கேட்டார்: ''நம்ம வையாபுரி வந்துடுவான் இல்லையா?''

தழுதழுத்த குரலில். ''நிச்சயம் வந்துடுவான். அவன் எங்கேயும் போயிருக்க மாட்டான்'' என்றாள் ஜானகி யம்மாள். அவள் கொடுத்த தண்ணீரைப் பெற்றுக் கொண்டவர் ஒரே மூச்சில் குடித்து முடித்தார். நாற்காலியில் அமர்ந்தபடி மேஜையில் கவிழ்ந்து படுத்துக் கொண்டவரைப் பார்த்தபோது ஜானகியம்மாளுக்குப் பாவமாக இருந்தது.

பகல் உணவிற்குச் சடகோபனை எழுப்பினாள். சோர்வுடன், ''வேண்டாம்'' என்றார் சடகோபன். ஆதரவாய் அவர் தலையைக் கோதினாள். உடல் உஷ்ணமாகியிருந்ததை உணர்ந்தாள்.

சூடாகக் கஞ்சி தயாரித்துக் கொடுத்தாள். அவர் முனக லுடன் உள் அறைக்குச் சென்று படுக்கையில் சாய்ந்ததும் பாயை விரித்துக் கட்டிலின் கீழே படுத்து உறங்கிப் போனாள்.

உறக்கம் கலைந்து விழித்த போது படுக்கையில் இருந்த சடகோபன் காணாமல் போனதை உணர்ந்தாள். பாயைச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள்.

முகத்தில் குளிர்ச்சியான தண்ணீரை இறைத்துக் கொண்டு முன்றானையால் முகத்தை ஒற்றிக் கொண்டாள். வாசலுக்கு வந்தாள். தவிப்புடன் நின்று கொண்டிருந்தவளை நோக்கி வந்தாள் ஏழு வயதுச் சிறுமி ஒருத்தி.

முதுகுப் பக்கத்தில் மூட்டையாக ஸ்கூல் பேக் அமர்ந் திருந்தது. அவள் மிக அருகில் வந்து. ''ஆண்ட்டி! உங்க வீட்டு 'நாய் மாமா' ஸ்கூல் வாசல்லே ரொம்ப நேரமா நின்னுட்டிருக்கார். வாட்ச்மேன் உள்ளே விட மறுக்கிறார். மாமா, 'வையாபுரியைப் பார்க்கணும் உள்ளே விடு'ன்னு அடம் பிடிக்கிறார். ஆமாம் வையாபுரி என்பது யார் ஆண்ட்டி? உங்க பையனா?'' என்றாள்.

தகவல் சொல்லி, கேள்வி கேட்ட சிறுமிக்குப் பதில் சொல்ல முடியாமல் தவித்தாள். ''ரொம்ப நன்றியம்மா'' என்று ஒற்றை வரியில் பதில் சொல்லிவிட்டு உள் அறையில் இருந்த பூட்டைத் தேடி எடுத்து வாசல் கதவைப் பூட்டிவிட்டு விரைந்தாள்.

பள்ளியின் வாசலில் சத்தமிட்டு சடகோபன் காவலாளி யிடம் தர்க்கம் செய்து கொண்டிருப்பதைத் தொலைவில் இருந்தே உணர்ந்தாள் ஜானகியம்மாள்.

அவளை மிக அருகில் கண்டதும் இன்னும் அதிகமாகச் சத்தமிட்டார். ''பாரு ஜானு! நம்ப வையாபுரி உள்ளேதான் இருக்கான். நானே போய்க் கூட்டிட்டு வர்றேன்னு சொன்னா, இந்தாளு என்னை உள்ளே அனுமதிக்க மாட்டேன்னு அடம் பிடிக்கிறான். நீ சொல்லு. என்னை உள்ளே விடச் சொல்லு. நான் உள்ளே போய் நம்ம வையாபுரியை அழைச்சுட்டு வருவதற்கு அனுமதி வாங்கு'' என்றார்.

ஜானகியம்மாள் வாசலில் இருந்த வாட்ச்மேனைப் பார்த்தாள். அவன், ''அம்மா! காலையிலே இதே மாதிரி தான் இவர் சொல்லி, உள்ளே அனுமதிச்சேன். பள்ளிக்கு வர்ற பசங்களுடன் சேர்ந்து 'நாய்க் குட்டியைத் தேடுறேன். என் வையாபுரியைத் தேடுறேன்'னு ரகளை பண்ணிட்டார். விஷயம் பிரின்ஸ்பால் வரைக்கும் போய்விட்டது. இவரை வெளியே அனுப்புவதற்குள் போதும் போதுமென்றாகி

விட்டது. இனியும் இவரை உள்ளே அனுமதிச்சேன்னா என் வேலையே போயிடும். அப்படியும் இவர் மேலே இருந்த அனுதாபத்தில் ஸ்கூல் முழுதும் இவர் சொல்கிற வையா புரியைத் தேடிப் பார்த்தேன். எங்கேயும் இல்லை!'' என்றான்.

''இல்லையா? என் வையாபுரி உள்ளே இல்லையா? பொய் சொல்றான். பச்சையா இதே பொய்யைத் திரும்பத் திரும்பச் சொல்றான்'' என்று மூர்க்கமாகக் கத்தியவர் மூர்ச்சையாகி அப்படியே சரிந்து தரையில் சாய்ந்தார். உடனடியாக மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார்.

மூன்றாம் நாள் காலை மருத்துவமனையில் கண் விழித்துப் பார்த்தார். நான்காம் நாள் காலை, தனியாக வெளி வராண்டாவில் சோகமாய் உட்கார்ந்திருந்த ஜானகி யம்மாளிடம். ''இன்றைக்கு சாயந்திரம் ஸாரை வீட்டுக்கு அழைச்சுட்டுப் போகலாம் மேடம்! திடீரென்று தன் அன்பு முழுவதையும் ஒன்றின்மீது செலுத்த, அது இல்லாதபோது அடைந்த திடீர் அதிர்ச்சி. பயப்பட ஒன்றுமில்லை. மருந்து எழுதித் தர்றேன். அவருக்கு நல்ல ஓய்வு மட்டும் தேவை!'' என்றார் டாக்டர். ஆறாம் நாள் காலை வீட்டில் இருந்தார் சடகோபன். ஏழாம் நாள் காலையில்தான் அந்த அதிசயம் நிகழ்ந்தது.

விடியற்காலை வாசலில் தண்ணீர் தெளித்துக் கொண் டிருந்தாள் ஜானகியம்மாள். காம்பவுண்டு சுவரின் ஓரத்தில் தண்ணீர் தெளித்த ஈரத்தில் தீனமாகக் குரல் கொடுத்தது அது. குட்டி நாய். தண்ணீர் தெளித்துக் கொண்டிருந்ததை அப்ப டியே விட்டு விட்டு, தண்ணீர் பக்கெட்டை வீதியில் போட்டு விட்டு ஓடிச்சென்று அதனை அள்ளியெடுத்து மார்புடன் அணைத்துக் கொண்டாள். உற்சாகமாக வீட்டிற்குள் சென்றாள். படுக்கையில் இருந்த கணவரை எழுப்பினாள்.

''இங்கே பாருங்க... யார் வந்திருக்காங்க பாருங்க'' என்றாள். லேசாகக் கண்களைத் திறந்தார் சடகோபன். உற்றுப் பார்த்துவிட்டுக் கண்களை மூடிக் கொண்டார். மெல்லிய குரலில் சொன்னார்: ''எங்கிருந்து எடுத்திட்டு வந்தியோ... அங்கேயே கொண்டு போய் விட்டுடு. இது என் வையாபுரி இல்லை. அவன் என்றைக்கோ செத்துப் போயிட்டான். என் மனசளவில் ஒரு ஜீவனுக்காக நான் பட்ட அனுபவங்கள் போதும். இனி எதன் மீதும் அளவுக்கதிகமாக அன்பு வைக்க மாட்டேன். அதை என் அனுபவத்தாலே புரிஞ்சுகிட்டேன். இந்த நாய்க்குட்டி நமக்கு வேண்டாம். போ. அதைக் கொண்டு போய் வெளியே விட்டுடு. வந்து முதல் டிகாக்ஷனில் ஒரு கப் காபி போட்டுக் கொடு. பத்திரிகைகளுக்கு நிறைய எழுத வேண்டியிருக்கு'' என்ற சடகோபனைப் பார்த்துக் கொண்டே நின்றாள்.

ஜானகியம்மாள் நிற்பதை உணர்ந்தவர் படுக்கையி லிருந்து எழுந்து அமர்ந்தார். ''இங்கே வா'' என்றார். மிக அருகில் வந்தாள். வந்தவளிடம், ''இனி உனக்கு நான் எந்தத் தொல்லையும் தரமாட்டேன் ஜானு! உனக்கும் ஓய்வு பெறுகிற வயசாயிடுச்சு. அந்த வயதை மீறி நாம் பகிர்ந்து கொள்கிற ஒரே விஷயம் அன்பாகத்தான் இருக்கணும். முதலில் உன் னைப் புரிஞ்சுக்கறேன். பிறகு மற்றவற்றைப் புரிஞ்சுக்க முயற்சி செய்யறேன். போ!'' என்றார் தழுதழுத்த குரலில். அவரை விட்டு விலகி வாசலுக்கு விரைந்த ஜானகியம்மாளை ஆழ்ந்த அன்புடன் பார்த்தார் சடகோபன்.

●

# சிறைகள்

நீலவன்

பத்மாசனத்தில் கருங்காலிப் பொம்மை போல் உட்கார்ந்திருந்தது சாம்பிராணிச்சாமி. சுற்றிக் கூட்டமில்லை. நாய் ஒன்று தட்டின் கீழே பரப்பியிருந்த பலகாரங்களில் ஒரு பொறை பிஸ்கட்டை இழுத்துக்கொண்டிருந்தது.

திகுதிகுவென்று தழல்விட்ட கண்சிவப்பில் பார்க்கிறவனுக்கு ஒரு குளிர்ச்சி தெரியும் களிப்பு. காடாய் மண்டிய தாடி. இதழ்க் கடையில் முகிழ்த்த புன்முறுவல் மனசின் ஆனந்தக்கூத்தை வெளியிட்டது. நாயை விரட்டாது வேடிக்கை பார்த்தது சாமி. பஸ், சைக்கிள் மணி, சைக்கிள் ரிக்ஷாக்காரன் கூப்பாடு, சோற்றுக்காரியின் பாக்கி வசூல் அங்கலாய்ப்பு, நகர வாழ்க்கையின் பதற்ற உணர்ச்சிகள் மாரியம்மன் கோயில் எதிரில் சம்மேளனமாகிக் கழிந்தன.

சாம்பிராணிச்சாமி வடியாத களிப்பில் பொங்கிக் கொண்டிருந்தது. இப்போது போவதா வேண்டாமா என்று தயங்கினான் மோகனராஜா.

'கொஞ்ச நேரமானால் சாமி எழுந்து மாதா கோயில் மைதானத்துக்குப் புறாக்களுக்குத் தீனி போடப் போய் விடும். அப்புறம் ஆளைப் பிடிக்க முடியாது' என்று மனசில் கூறிக்கொண்டு நெருங்கிக் கை கட்டி நின்றான் மோகனராஜா.

கண்களில் எக்களிப்போடு மோகனராஜாவைப் பார்த்தது சாமி.

''வாங்க...நயினா...பாக்ஸிங் நயினா'' என்று குழந்தைபோல் கும்மாளியிட்டது சாமி.

மோகனராஜாவுக்கு முதுகு சில்லிட்டு நெகிழ்ந்தது.

''சாமியை நீங்க பாக்ஸிங் போடறப்போ ஒரு தடவை இட்டுனு போயிக் காட்டக் கூடாதா நயினா!''

விரக்தியோடு சிரித்துக் கொண்டு கைகளைக் கட்டி நின்று, ''இல்லைங்க சாமி! ஜதை செஞ்சு ரொம்ப நாளாவுது'' என்றான்.

''ஏன் நயினா வுட்டுட்டீங்களா? இப்பெல்லாம் பாக்ஸிங் செஞ்சா தப்பா?''

''இல்லைங்க சாமி! எங்கேயும் இப்போ ஜாஸ்தியா பாக்ஸிங்கே செய்யறதில்லை. அதுக்கு மவுசு போயிடுச்சு'' என்று கூறினான் மோகனராஜா. மனசில் பழைய துக்கங்களில், பழைய பெருமைகளில், பழைய அர்த்தங்கள் வெற்றாய்ப் போன சூன்யத்தில் நினைவு புதைந்தது.

சாமி சிரித்தது; மோகன ராஜாவின் முகம் தொங்கியதைக் கண்டு. முகத்தை ஊடுருவி மனசைப் பிடிப்பதில் நிபுணர் 'அது'!

''வீணைக்கார நயினா எப்படி இருக்காரு?''

''அவருக்கு இந்த தபா அம்மா திருவிழாவில் கச்சேரி ஒண்ணு ஏற்பாடு செய்யணும்.''

சாமிக்கு ஆனந்தம் குறையவில்லை.

''வாத்தியாருக்கு இன்னொரு தடவை வலிப்பு வந்துடுச்சு சாமி.''

''அப்படியா. நான் வரணுமா நயினா?''

''உங்க பிரியம் சாமி.''

கொஞ்ச நேரம் யோசித்தது சாமி. தெருவை ஏதோ வேடிக்கை பார்ப்பதுபோல் பார்த்துவிட்டு, ஆசனத்தை விட்டு எழுந்து மோகனராஜாவோடு புறப்பட்டது. அது சாம்பிராணிக் கலசத்தையும், அதன் கீழே வரிசையில் படைத்திருந்த பலகாரங்களையும் தீண்டுவதில்லை. யாராவது அவற்றை எடுத்து வைத்துக் கொள்வார்கள். காலையில் கலசம் மட்டும் துலக்கி நெருப்புப் போட்டுத் தயாராக வரும். சாப்பாட்டு வேளைக்கு யாராவது உருக்கமாக உபசரித்துக் கொடுத்தால் வாங்கிச் சாப்பிடும். பிறகு அர்த்தமின்றியே தனக்குத் தானே வாய்கிழிந்து விடுவது போல் ஓங்காரமாய்ச் சிரிக்கும்.

அதற்குக் காரணங்கள் என்று எதைக் கற்பனை செய்து கொண்டாலும் அது பொருத்தமாயிருக்கும். குண்டலினி சக்திபெற்ற மகாயோகியின் நெற்றியில் நரம்பெடுத்துப் புடைத்து நிற்க, கண்கள் தீட்சண்யமான பேரொளியின் கதிர்களை வீசிக் கொண்டிருக்கும். மொத்தத்தில் சாமியை முழுசாய் அறிந்து கொள்ளுவதென்பது அரிது.

மாதாகோயில் மைதானத்தில் புறாக்களுக்குத் தீனி போட மட்டும், தென்படுகிற கடை எதிரில் சாமி போய் நிற்கும். அங்கே கொடுக்கிற தானியத்தை அரைமணி நேரம் ஆனந்தமாகப் புறாக்களைக் கொஞ்சியவண்ணம் இறைத்து விட்டுத் திரும்பும். மற்ற எந்தத் தேவைக்கும் அது கேட்பதும் இல்லை; போவதும் இல்லை.

**சா**மி மோகனராஜாவின் வீட்டிற்கு வந்ததும் அனந்தராமனின் நாக்கை மட்டும் நீட்டச் சொல்லிப் பார்த்தது. வித்துவான் எந்த டாக்டரிடமும் போனதில்லை. ஆளைப் பரிசோதிக்க அவர்கள் போடும் உத்தரவுகள் யாவும் சர்க்கஸ்

வேலை மாதிரி அவருக்குத் தோன்றும். அவற்றுக்குக் கீழ்ப் படிவது, ஏதோ தன் மனித அந்தஸ்தை இழந்துவிட்டதாக எண்ணுவார். சாமியின் மீது மதிப்பு இருந்ததால்தான் நாக்கை நீட்டினார்.

சாமி அவரைக் குழந்தைபோல் சிரிக்கும் பார்வையோடு நோக்கியது.

''மருந்து கொடுத்தா சாப்பிடுவீங்களா நயினா?'' அதே ஆனந்தம் துள்ளும் குரல். அந்த ஆனந்தமே ஓர் ஔஷதம்.

அனந்தராமனுக்குச் சற்றைக்கு முன்பு டீ குடித்ததில் சற்றுத் தெம்பு கண்டிருந்தது. ஒரு கணம் சாமியை உற்றுப் பார்த்தார். குரலில் ஓர் ஆயாசத்தோடு, ''மருந்து எதற்கு?'' என்றார்.

சாமிக்குக் கேள்வி வேறெதையோ விளக்கிற்று.

''நல்லாக் கேட்டீங்க வீணைக்கார நயினா! வெளிக்குத் தான் இதெல்லாம். உள்ளுக்கு மருந்து, உள்ளேயேதான் இருக்கேனேன்னு அது சிரிக்கும்!''

மோகனராஜாவுக்கு ஒன்றும் புரியவில்லை. வித்து வானையும், சாமியையும் மாறி மாறிப் பார்த்தான்.

''இதே தான் வாழ்க்கை சாமி! என்னென்னவோ டக்கர் அடிச்சுப் பார்த்தேன். நீங்க சொல்லுங்க. மனுஷாளாப் பொறந்துட்டா, எதுக்கும் மனசை விட்டுடலாமா?'' என்ற அனந்தராமன் சிரித்தார். சிரிப்பில் விரக்தி தோன்றியது.

''நயினா சிரிக்குது! நம்பிக்கையில்லை போலிருக்கு!''

வித்துவான் வேதனையோடு, ''நம்பிக்கை எதுக்கு சாமி! உடம்பைச் சுமந்து கண்ட பலன் ஒண்ணுமில்லை. அண் ணாத்தைக்குச் சொன்னா மனசுக்குக் கஷ்டம். பொழைச்சுத் தேறிச் சாதிக்கிறது என்ன?'' என்றார்.

''வர்ற அம்மா விழாவிலே, நீங்க வாசிக்கணுமே நயினா?''

அனந்தராமனுக்கு முகம் சுண்டிப் போயிற்று.

''மன்னிக்கணும் சாமி! வீணையைத் தொட்டு ஆறு மாசமாச்சு. தொடறதாவும் அபிப்பிராயமில்லை.''

சாமி கலகலவென்று சிரித்தது. லயம் தொனித்தது. அதுவே அனந்தராமனைச் சற்று கிளர்த்தியது.

''இருவது வருசமா வாசிச்சுக்கிட்டே இருக்கேன். ஏணியிலே கால் வச்சு ஏறிப் போனவங்க அநேகர். எந்த லாபமுமில்லை. சந்தை வண்டி மாதிரி தூங்கி விழிச்சுக்கினே ஆயுளு தீந்து வருவது...''

உள்ளத்தை மறைக்காது பேசும் வித்துவான் அனந்த ராமனைப் பார்த்தது சாமி. அது சாதாரண ஒரு நோக்கில்லை; ஒரு வட்டத்தின் மையத்தைச் சுடுகின்ற பார்வை. சாமி மிகவும் பொல்லாதது! மேலும் தொடர்ந்தார் வித்துவான் அனந்த ராமன்:

''யாருக்கு வாசிக்கிறேன்னு தெரியலை. வாசிச்சாக் கேக்கறதுக்கும் ஆளில்லை. வித்தைக்கு விளக்கேத்துன்னு வர்றவனுக்கும் மனசு சுத்தமில்லை. வருமானம்... விளம்பரம்... கார்...பங்களான்னு நாய்ப் பறப்பு. கேக்கிற வனுக்கும் புத்தி சுத்தமில்லை. கள்ள நெருப்பைச் சூர்யப் பிரகாசம்னு பூதக்கண்ணாடி விளம்பரம்...''

அனந்தராமன் அங்கங்கே நிறுத்தினார். பேசுகின்ற ஆளிடம் இருந்த புன்னகையில் வாழ்வின் போக்கே தவறுதானோ என்ற சந்தேகம் இருதலைக் கொள்ளியாக அவ்வப்போது தவித்தது. சாமி சிரித்துச் சிரித்துத்தான் கேட்டுக் கொண்டிருந்தது. என்ன நினைத்ததோ?

''எந்த அர்த்தமும் இல்லை. சாமி என்ன நினைக்கிறீங் களோ? வீணைக் கம்பி விரலை அறுத்து முரடுபட்டதைத் தவிர எந்த அர்த்தமுமில்லை. மதிப்பாருமில்லை. சங்கீதம்னு கொடுத்தா வாங்குவாருமில்லை. வாங்கறவன் முழுசா வாங் கிட்டாதானே கொடுத்தது அர்த்தம்?''

வலிப்பு வேறு பாதி சக்தியைத் தின்றிருந்தது. மன வெறியில் பேசிவிட்டாலும் அவருக்குத் தொண்டை காய்ந்து வெடவெடத்தது. மார்பினுள் இதயம் துடிப்பது தெளிவாகத் தெரிந்தது.

''சும்மா பேசாதே வாத்யாரே! எந்தக் கழுதையும் கேட் காட்டிப் போவுது. அதோட தலையெழுத்து அவ்வளவு தான்.''

உடனே, ''உடம்பு என்ன பாடுபடுது?'' என்று குறுக் கிட்டான் மோகனராஜா.

''அர்த்தம்னா என்ன நயினா?'' என்று மெதுவாகக் கேட்டது சாமி; கம்பீரமாகக் காலைச் சப்பணம் கூட்டி உட்கார்ந்தபடி.

அனந்தராமனுக்கு வியர்வை கண்டது. உடல்தணிய, படபடப்புக் கொஞ்சம் கொஞ்சமாக இறங்கி வந்தது. கேள்வியைக் கேட்டதும் 'சாமி கிண்டல் செய்கிறதோ?' என்று ஏறிட்டுப் பார்த்தார். கண்ணில் களிப்பு இருந்தாலும் கேலி இல்லை.

''போங்க சாமி...உங்களுக்குத் தெரியாதா?''

''மெய்யாத்தான் தெரியலை நயினா! சாமிக்குச் சொல்லப்படாதா?''

அனந்தராமனுக்கு நிஜமாகவே சாமி கேட்கிறது என்றுதான் பட்டது. எதைச் சொல்வது? வாழ்க்கைக்கு என்ன

அர்த்தம்? இந்தப் பிறப்பு... இருக்கை... போராட்டம், அடுத்தது, அடுத்தது என்று ஒரோரு நிலையிலும் தோன்றும் அதிருப்தி. இடைத்தட்டில் மனம் நிறையும் அற்ப சுகம். பின் முடிவிலாப் பெருவழிக்கு முற்றுப் புள்ளியாகவோ, காற்புள்ளியாகவோ நேரும் மரணம்...இவற்றுக்கெல்லாம் என்ன அர்த்தம்? சீறுவாணம் போல் கிளம்பிய விடைகளெல்லாம் காரணம் பொய்த்த வெறுமையால் தீர்வுற்று எகிறி விழுந்தன. எதைச் சொல்லப் போனாலும் தர்க்கத்திற்கு நிற்காது; அது அடிபட்டுவிடும் போலிருந்தது.

அர்த்தம்?

புகழா, வெற்றியா, செல்வமா? வீணை கற்றுக் கொள்ள வந்து ஒரு மாதத்தில் போய்விட்ட கல்லூரி ஆசான் ஒருவர், அடிக்கடி கூறும் வாக்கியம் நினைவு வந்தது.

'லைஃப் இஸ் எ டேல், டோல்டு பை அன் இடியட்ஃபுல் ஆஃப் சவுண்ட் அண்ட் ஃப்யூர்; ஸிக்னிஃபையிங்'

அப்படித்தான் பட்டது அனந்தராமனுக்கு. எதிரில் சாமி ஊன்றி உள்முகமாகப் பார்ப்பதுபோல் அவரைப் பார்த்தது. என்ன பதில் சொல்வது?

'சே! கொஞ்ச நாளா மனசில் ஒரே குழப்பம் சாமிக்கு. எதைச் சொல்வது?'

''என்ன நயினா, சாமிக்குச் சொல்லப்படாதா?'' என்று ஒரே சங்கதியை இரண்டு பாவத்தில் வாசிப்பது போல் சாமி அதே கேள்வியைக் குழைவாகக் கேட்டது.

''அர்த்தத்துக்கு அர்த்தம் சொல்ல முடியாது சாமி உடனே! அவங்கவங்க கற்பனையும், மனோதர்மமும் தொட்ட இடம் தான் அர்த்தம்...''

''ஆமாங்க நயினா! நீங்க தப்பிச்சுக்கிட்டாலும் அதுக்கு இதுதான் அர்த்தம். ஆனா, அது பொல்லாதது. அப்பனாரு

அடிமுடி போல் தேடத் தேட நீண்டுகிட்டே போகும். இராமர் காட்டிலே பார்த்த மான் மாதிரி மாயமா வந்து மினுக்கும். பிடிக்கப் போனாப் பாய்ச்சல் காட்டும். இல்லைங்களா? அதனாலே நாம்பளே அர்த்தமாயிட்டா. அதாவது நம்பளை நாம்பளே அர்த்தமாக்கிக்கிட்டா...''

அனந்தராமனுக்கு மூக்கணாங்கயிற்றை எட்டிப் பிடித்த மாதிரி இருந்தது. அலை பாய்ச்சல் வசத்திற்கு வந்துவிட்டதா?

மோகனராஜா நெடுமரம் போல் நின்றான். ஏதோ பெரிய விஷயம் என்று தன் முழங்கைத் தினவுக்குச் சொறிவதில் ஈடுபட்டிருந்தான்.

''சாமிக்குப் புத்தி கொஞ்சம் ஈரச்சூளை தான். சுட்டுப் பதமாக ரொம்ப நாள் போகும். நயினா கோபிச்சுக்கப் படாது...'' என்று கலகலவென்று சிரித்தவாறே சாமி எழுந்துவிட்டது.

அனந்தராமனுக்கு மனசிலே மூங்கில் விதைத்த மாதிரி இருந்தது. பரபரவென்று விளைகிறதே. என்ன வேகம்?

எழுந்து நின்றது சாமி. சுவரெல்லாம் மாட்டியிருந்த மோகனராஜாவின் குத்துச்சண்டை போட்டோக்களைப் பார்த்தது. சாமி பார்ப்பதைக் கண்டதும் மோகனராஜா தன் தலையைக் குனிந்து கொண்டான்.

''இத்தினிப் பேரோட பாக்ஸிங் சண்டை போட்டிருக்கீங் களா நயினா?'' என்று ஆச்சரியத்தால் பற்கள் பளீரென்று தெரியக் குழந்தைபோல் கேட்டது சாமி.

மோகனராஜாவின் தலை இன்னும் வளைந்தது.

''உங்களுக்கு நல்ல பாடி நயினா! அது என்ன படம்?'' கூர்ந்து பார்த்தவாறே ஒரு படத்தைக் காட்டியது சாமி.

தியாகையர், தம்பூராவை மீட்டியவாறே கண்மூடி ஆனந்தத்தில் திளைக்கும் படம்.

''தியாகராஜ சுவாமிகள்... சங்கீதத்திலே பெரிய...''

''அவரா? சொல்லிக் கேள்வி நயினா... பாக்ஸிங் நயினாவுக்கு மத்தியிலே...'' என்று விரலை அரைவட்டம் சுற்றிக் காட்டிவிட்டு, ''இது நல்ல தமாஷ்தான் நயினா!'' என்று கலகலவென்று சிரித்தவாறே வெளியேறிற்று சாமி. சாமியை வாசல்வரை வழியனுப்பச் சென்று விட்டுத் திரும்பி வந்தான் மோகனராஜா.

''சாமி மருந்து குடுக்கும்னு கூட்டியாந்தா அது பாட்டுக்குச் செமிபுடிச்ச மாதிரி என்னென்னவோ சொல்லிவிட்டுப் போகுதே! என்ன வாத்யாரே, சொல்லுச்சு! மருந்துன்னா வாணான்னுச்சா?''

''இல்லை, அண்ணாத்தை! கொடுத்துட்டுப் போயிருக்குது, விழுங்க முடியலை...''

''அய்ய, இவுரு வேறே! வானத்துலே தூண்டி போட்டு மீன் பிடிக்கிறாப்பலே. சரி கதையை விடு. டாக்டரை அனுப்பட்டுமா?''

''சொன்னாக் கேக்க மாட்டேன்றியே. எனக்கு மருந்து வேணாம்; மாயமும் வேணாம்!''

''ஊங்... மருந்து வாணான்னா...விடு..உன் இஷ்டம்... விட்டுடு! சோறு தண்ணியாவது உன்னுப்பா. நீ உண்டு

மாஞ்சிடாது. மோகனராஜாவுக்கு பாக்ஸிங் போனாப் போவட்டும். சின்ன வயசிலேந்து நாம எப்படிப் பழகின வங்க? உன் விதி, தனி மரமாயிட்டே. முட்டைவித்துக் கஞ்சி ஊத்துவேம்பா நான். என் பையனுக்கும், பெண்டாட்டிக்கும் ஊத்தலையா? அந்த நினைப்பை மட்டும் விட்டுடு.''

''அண்ணாத்தை!'' என்று வாய்க்குள்ளேயே ஓர் ஒலி தோன்றி ஸ்தம்பித்து விட்டது அனந்தராமனுக்கு.

அனந்தராமன் யோசித்துக் கொண்டிருந்தார். 'சாமி என்ன சொல்லிட்டுப் போச்சு?' இரண்டு நாள்களாக வலிப்பு வந்துவந்து போயிற்று. மோகனராஜா மருந்து சாப்பிடச் சொல்வதை விட்டுவிட்டான். வித்வானுக்குச் சாப்பாடு செரிக்கவில்லை. தாள முடியாத வயிற்று உபாதை வேறு.

சாமி பூடகமாகச் சொல்லிற்று.

உள்ளே வித்தை நிறைந்து தளும்புகிறது. வெளிப் போக்கின்றிப் புழுங்கி அதுவே சுமையாக அழுத்திக் கொண் டிருக்கிறது. அதற்கு மரியாதை இல்லை. காமா சோமா என்று இராகத்தை ஒப்பேற்றி மக்களுக்குப் பிரியமான சில குட்டிக்கரணங்கள் போட்டுவிட்டால், அவன் மகா வித்துவான்! ஓர் எல்லைக்கு மேல் புகழ் போய்விட்டால், அதைத் தலை கிறுகிறுக்குமளவு உயர உயர நான் முந்தி, நீ முந்தி என்று பட்டம் பறக்க விடுவதுதான் ஒரு மரபாகப் போய்விட்டது.

'அர்த்தமாகி விடுவதாமே எப்படி?'

'பத்துப் பதினைந்து பேருக்கு இந்த விளக்குத்திரியால் சுடர் கொடுத்திருக்கிறேன். தீபங்களுக்குத் திரியும் சுடரும் மட்டும் போதுமா? அவரவர் மனோசக்தி என்ற நெய்க்கேற்ப

அவர்கள் ஒளிவிடுகிறார்கள். இல்லாதவர்களுக்கு நான் இட்டு நிரப்பியிருக்கலாம். எனக்கில்லாமல் போய்விடுமே என்று சுய நலம். உள்ளே புழுங்கும் இந்த சங்கீதச் சுமையைத் தோள்மாற்றி இருந்தால்...ஒரு வேளை...'

'நான்...நான்...என் வெற்றி என்று செக்கு நுகத்தடியில் சுற்றிச் சுற்றியே கழுத்து நோவு கண்டுவிட்டது. இனிப் புதியதாக என்னை எப்படி அர்த்தப்படுத்திக் கொள்வது?'

உத்தரத்தில் கயிறு கட்டித் தொங்கிய வீணையை வித்து வான் மோகனராஜாவின் மகன் தாமோதரனை இறக்கச் சொன்னார். அவன் கீழே இறக்கித் தூசு தட்டி அதைத் துடைத்துக் கொடுத்துவிட்டு வெளியே போய்விட்டான்.

'மீட்ட மீட்ட மனசு குவியும்' என்று தந்திகளைத் தடவினார் அனந்தராமன். நாதம், நொண்டி நொண்டி ஒருவன் நடக்க முயன்றாற்போல் தெற்றித் தெற்றி நகர்ந்தது. கஷ்டப்பட்டுச் சரளமாகப் பேசவைத்தால், சிறிது நேரம் கழித்து தொண்டைக் கட்டுப்போல் கப்பென்று திணறியது. வெட்டும் துண்டுமாக அங்கங்கே நின்றது. அரைமணிநேரம் வியர்த்து ஒழுக, முழங்கை எலும்பு மூட்டுகள் குடையும் வலியோடு முயன்று முடியவில்லை.

'முடியாது...முடியாது' என்று மனத்திலே கூக்குரல். 'மேல் ஷட்ஜமத்திலே அந்தக் ககன சஞ்சாரம்...அந்தக் கற்பனை... அந்தக் கற்பனை...' என்று ஒரு ஜுர வெறி!

அடுத்த நாள். மறுநாள். அடுத்த மறுநாள். வீணைக்கு அருகே உட்கார்ந்து கதறியழாத குறையாக அனந்தராமன் அதைக் கெஞ்சிக் கொண்டிருந்தார். கற்றது மறந்துவிட்டால்... ஐயோ! தூக்கத்தில் அந்த நினைவு வந்து விட்டாலும்

பாதியில் விழித்து வீணையை நெருங்குவார். சுருதியைக் கூட்டக் கூட்டக் கலைந்துகொண்டே போயிற்று. புத்தியில் சுழற்காற்று மாதிரி என்னென்னமோ சுற்றின.

சாம்பிராணிச் சாமியை அழைத்து வந்தான் மோகன ராஜா.

அச்சமின்றி நெருங்கிச் சிரித்தவாறே சாமி பார்த்த பார்வை வித்துவான் அனந்தராமனைக் கட்டிற்று. கண், கத்தி முனைபோல் நெஞ்சில் நுழைந்தது.

''அம்மா திருவிழாவிலே நீங்க வாசிக்கணுமே நயினா..?''

வெறித்துப்போன விழிகளுடன் சாமியையே பார்த்தார் வித்துவான்.

''வாசிக்கணும் நயினா! வாசிக்க மாட்டீங்களா?''

'ஓ'வென்று பெருங்குரல் பாய்ச்சி அழத் தொடங்கினார் அனந்தராமன். வற்றிய தேகம் நார் நாராகக் கிழிந்து விடுவது போல் அங்கங்கள் துடித்தன.

''சாமி! குணமாகாதுங்களா?'' என்று கேட்டான் மோகனராஜா.

''நயினா! ஆத்மா தனக்கே விலங்கு மாட்டிக் கதவைச் சாத்தி உள்ளே பூட்டிக்கிட்டுது...பூட்டுத் திறக்கிறதுன்றது...''

''சாமி!...''

''மனசிலே பெரும் பளு நயினா! ஜெயிக்கணும், ஜெயிக்கணும்னு நினைச்சு பளு தாங்காமே நரம்பு இழுக்குது. எதையும் யாரையும் ஜெயிக்க முடியாது நயினா! உருகி உள்ளம் கரைஞ்சு வெள்ளமாத் தழுவணும் நயினா!

களரயலைன்னா கல்லுச் கலரா எழும்பிடும். ஆளையே கைது பண்ணிடும். சங்கீத நயினா தேர்றது..."

சாம்பிராணிச் சாமி சொல்லி முடிப்பதற்குள்-

"உவ்வ்வே!" என்று வாயிலெடுப்பது போல் மனோபலம் கைசோர, கைக் குழந்தையைப் போல் கத்தினார் வீணை வித்துவான் அனந்தராமன். கழுத்து நரம்புகள் புடைத்துப் பார்வை குத்திட்டு விட்டது. பல் கிட்டிவிட்டது. கை கால்கள் லேசாக உதைத்துக் கொண்டன.

சாம்பிராணிச் சாமி, வித்துவானைத் தொட்டார். ஜில்லிட்டு விட்டது.

"டே டேய்... அனந்தராமா..." கதறினான் மோகன ராஜா.

●



காதில் அவன் குரல்... இல்லை... கத்தல்... ஒலிக்கிறது.

'என்ன ஒரு நெகட்டிவ் அப்ரோச்? எத்தனை வருஷம் திடமா, என்னோட நிக்கிற இந்தக் காலும் கையும் வயசாயிட்டுதுன்னு சொல்லி, கீழே விழ விட்டுடுமா? எனக்குன்னு ஒரு ஜாக்கிரதை உணர்வு இல்லையா? பத்து, பன்னிரண்டு வருஷம் முன்னேவரை ஓடியாடி ஆபீஸ் வேலை பார்த்த உடம்புதான்... அதுக்குள்ள தேஞ்சுடுமா...? ரன்னிங் ரேஸ் வேண்டாம்... இப்படி ஏதாவது வீட்டு வேலையைச் சாக்கு வச்சிண்டு, உடம்புக்கு ஏதாவது எக்சர்சைஸ் தரலைன்னா எல்லாம் முடங்கிப் போயி டாதோ...? அது ஏன் என் பிள்ளைக்கு - இந்தக் காலத்து இளசுகளுக்கே தான் - தெரிய மாட்டேங்கறது...?'

கால் வழுக்கி விடாமல் ஜாக்கிரதையாக நடந்து கறிகாய்க் கடையை அடைந்தார்.

'பச்சப் பச்சன்னு காய்கறி பார்த்து வாங்கி எத்தனை நாளாயிட்டுது...?' இரண்டு வருஷம் முன்னாலே, மாய வரத்துல பெரிய வீட்டுல காலை வீசி வீசி நடந்து லட்சுமி யோட குடித்தனம் பண்றப்போ போய் வாங்கினது. பிறகு ஒரு நாள் அவளும் - இராத்திரியிலே தூக்கத்துலயே போயிட்டா... புண்ணியவதி. ''தனியா இருக்க வேண் டாம்பா...''ன்னு என் ஒரே பிள்ளை கூட்டி வந்து இழுத்ததில் மாயவரம் வீட்டை வந்த விலைக்கு விற்று விட்டு இங்கே பிள்ளையோடு ஃபிளாட் வாசம், இரண்டாவது மாடியில், இரண்டு அறை கொண்ட கூடு...'

சின்ன அறையை அவருக்குக் கொடுத்து விட்டு, சற்றுப் பெரிய அறையை ஸ்ரீதரும் விஜியும், குழந்தை அனுவுமாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள்...

அறையும், கட்டிலும், பூஜை அலமாரியும், ஒட்டினாற் போன்ற குளியலறையும் அவருக்குப் போதாமல் இல்லை...

இருந்தாலும் அந்தப் பரந்த கூடங்கள், வெயில் விழும் முற்றம், வேப்ப மரமும், குலுங்கும் வாழையும், எலுமிச்சையு மாக அக்கினி நட்சத்திர நாள்களில் கூடக் குளுமையான கிணற்றடிப் பிரதேசம்...

பழைய நினைவுகள் வட்டமிட்டன. திரும்பிப் போய் விடலாமா என்று சில சமயங்களில் மனசு பொங்கும்...

'ஆனா அங்கே தான் மனைவி இல்லையே...' ஒரு கசப்பு அலை எழுந்து உடல் முழுதும் பரவும்... 'வீட்டுக்குள்ளதான் வெறுப்பாயிருக்கு... வெளிய வாசல்ல நடமாடலாம்னா இந்தப் பிள்ளை ஏன் இப்படிப் படுத்தறான்...?'

'காலையில் பால் பாக்கெட் எடுக்கக் கீழே போக லாம்னா... மருமகள் சும்மா இருக்க மாட்டா...'

''இரண்டு மாடிப்படி ஏறி இறங்கி உங்கப்பா எங்கே யாவது விழுந்து வைக்கப் போறார்...'' என்பாள். ''நான போக மாட்டேனா...'' என்று சண்டை வரும்...

ஆசையாய், தேவையான காய்களை வாங்கிப் பையில் போட்டு விட்டு, பர்ஸிலிருந்து பணத்தை எடுத்து நீட்டினார்... வாங்கிக் கொண்டவன் சும்மாயிருக்க வேண்டியது தானே?...

''என்ன பெரிசு! உங்க மவன் தானே வழக்கமா வரு வாரு... ஊர்ல இல்லையா?... நீ என்னத்துக்கு இந்த வயசுல... தூக்க முடியாமத் தூக்கிக்கிட்டு...''

அவனுடைய அனுதாப வார்த்தைகள் எரிச்சலைக் கிளப்பின. இவன் மட்டுமில்லை. விஜி சொல்லச் சொல்லக் கேட்காமல் சில நாள் முன்னால் ''வாக்கிங் வெறி''யோடு மிஷினுக்கு மாவு அரைக்கப் போனாரே, அப்ப மிஷின்காரன் கூட இதே வார்த்தை தான் சொன்னான்... ''தூக்க முடியாமத் தூக்கிக்கிட்டு...''

'இரண்டு கிலோ என்பது பெரிய சுமையா?' என்று கோபத்தோடு விசுக்கெனத் திரும்பும் போது, ஒரு ஸ்கூட்டர் வேகமாய் மயிரிழையில் உரசிச் சென்றது... காய்கறிக்காரன் பதற்றமடைந்தான்.

''பார்த்து சாரே... வயசுக்காலத்தில எவனாவது லேசா இடிச்சாக் கூட தாங்காது...''

''போடா... உன்னை விட நான் ஸ்ட்ராங்குதான்...'' சொல்லத் துடித்த வார்த்தைகளை விழுங்கி விட்டுக் கோப மாய் நடந்தார்... மஞ்சள் குண்டுகளாய் மாம்பழங்கள்...

வேண்டாம்... வயிற்றுப் போக்காகி விடும் என்று பயமுறுத்துவார்கள்...

அபூர்வமாய்க் கிடைத்த வெளிக்காற்றைக் கூட அனுப விக்க விடாதபடி குறுக்கும் நெடுக்குமாய் கார்கள், பஸ்கள், லாரிகள், குடு குடு ஆட்டோக்கள், மாடுகள்...

ஒரு வழியாய் வீடு வந்து சேர்ந்தார்...

ஸ்ரீதர் டூரிலிருந்து வந்து விட்டான்... ''ஏம்பா... காய் வாங்க நீங்க தனியாவா போனீங்க...? அனுவையாச்சும் கூட்டிப் போயிருக்கக் கூடாதா?'' எகிறினான்... அவர் காதில் போட்டுக் கொள்ளவில்லை.

ஞாயிற்றுக் கிழமை...

ஸ்ரீதர், விஜி, அனு மூவரும் ஏதோ ஒரு கல்யாணத் துக்குப் போயிருந்தார்கள்...

ரூமுக்குள் சுற்றிச் சுற்றி வந்தவர் ஏதோ நினைத்துக் கொண்டு திடீரெனக் கிளம்பி பஸ் பிடித்து பெசன்ட் நகர் அஷ்டலட்சுமி கோயிலுக்குப் புறப்பட்டார்.

அலைகள் பொங்கியெழும் அலைகடலும், மத்தியான நேரக் காற்றும் கோயிலின் நறுமணங்களும் பரவசமா யிருந்தன. ''என்னைத் தெரியறதா சார்?''

சந்தான லட்சுமி சந்நிதியில் திடீரென அவர் முன் நின்று கொண்டு பவ்யமாகக் கேட்டவனை உற்றுப் பார்த்தார். 'யாரது, முன் வழுக்கையும், பருமனுமாய்...?' ஞாபகம் வந்தது.

''நீ... இராஜகோபால் இல்லையோ...?''

''ஆமா சார்... நல்ல ஞாபகம் வச்சிருக்கீங்களே...'' என்றான். கையைக் கட்டிக்கொண்டு பணிவாக நின்றவன்.

இருவருக்கும் ஏக உற்சாகம்.

'ஆளே மாறிட்டியே...''

பதினைந்து வருஷங்களுக்குமுன்... தனியார் கம்பெனி ஒன்றில் அவர் மானேஜராக இருந்தபோது, ஒரு வேலைக் காக அவரை மன்றாடி மன்றாடிக் கேட்டுக் கொண் டிருந்தவன்... எத்தனை முறை அவர் வீட்டுக்கும் ஆபீஸுக் கும் அலைந்திருப்பான்? அவர் தான் பின்னர் ஏதோ ஒரு கிளார்க் வேலையில் சேர்த்தார். அதுவும் கோயம்புத்தூர் கிளையில் தான் கிடைத்தது. ஆயிரம் நமஸ்காரம் கூறிவிட்டு ஆர்டரை வாங்கிப் போனான்.

''எப்படியிருக்கேப்பா...?''

''ஏதோ உங்க ஆசி...''

இப்போது அந்தக் கம்பெனியில் இல்லையாம். மாமனார் உபயத்தில் இப்போது சொந்தமாக அச்சாபீஸ் வைத்திருக் கிறானாம்... சைதாப்பேட்டையில் வீடு... மனைவியை அறிமுகப்படுத்தினான். சிறிது நேரம் பேச்சு... எங்கெங்கோ போயிற்று. கிளம்பும்போது அவன் கைகளைப் பற்றிக் கொண்டார். ''அப்பா ராஜா!... எனக்கு நீ ஓர் உதவி செய்யேன். பிள்ளை, மாட்டுப் பொண்ணு எல்லாம் வேலைக்குப் போயிடறா... பேத்தி ஸ்கூலுக்குப் போயிடறா. நாங்க குடியிருக்கிற சின்னப் பிளாட்டுக்குள்ளே சுத்திச்சுத்தி வர முடியலை... உன் பிரஸ்ல ஏதாவது வேலை கொடேன்... இப்பவும் என்னால புரூஃப் எல்லாம் திருத்த முடியும்...''

''அதுக்கென்ன, உங்களுக்கு இல்லாததா?... நிச்சயம் தரேன். உங்க ஃபோன் நம்பர் குடுங்க. ஃபோன், இல்லையா? சரி மகன் ஆபீஸ் நம்பர் குடுங்க, நான் உங்களைக் கூப்பிடறேன்...''

பரவசமாகிப் போனார் இராமு... அட்ரஸ், பிள்ளை ஆபீஸ் முகவரி, போன் நம்பர் எல்லாம் கொடுத்தார். அஷ்ட லட்சுமி கோயிலுக்குத் தனியாக வந்ததுக்குப் பிள்ளை கோபித்துக் கொண்டாலும், அதுவும் ஒரு நன்மைதானே என்று சமாதானம் சொல்லிக் கொள்ள வழி ஏற்பட்டது என்று அளவுகடந்த மகிழ்ச்சி அவருக்கு.

மீண்டும் கோயிலை வலம் வர வேண்டும் போல இருந்தது.

வீரலட்சுமி சந்நிதியைச் சுற்றித் திரும்பும்போது, கடலைப் பார்த்தபடி முதுகு காட்டி நின்று கொண்டிருந்த இராஜ

கோபாலும், அவன் மனைவியும் பேசிக் கொண்டிருந் தார்கள்.

''பின்னே என்னத்துக்கு அந்த ஆள்கிட்ட பொய் சொன்னீங்க...?''

''ஆமா... இந்தக் கிழத்துக்கு இந்த வயசுல வேலை வேணுமாக்கும்... ஏதோ கேக்கறார்... மூஞ்சிலடிச்சாப்பில 'யோவ். உனக்கு வயசாயிட்டுது... கண்ணும் தெரியாது... என்னய்யா ப்ரூஃப் பார்ப்பே நீ?' ன்னா கேக்க முடியும்...? போன் நம்பர்தானே? வாங்கிட்டேன்... கூப்பிட்டாத் தானே...?''

மனசை யாரோ மளுக்கென்று முறித்தாற் போன்ற வலியுடன் சுற்றிப் படிகளில் மெல்ல இறங்கி வந்தார் இராமு... பாவி, வேலையில்லை என்றே சொல்லியிருக் கலாமே?

அந்த வேதனையுடன் பஸ் ஏறியதாலோ என்னவோ, பஸ் கைப்பிடி வழுக்கிக் கீழே விழுந்து, அவர் விழுந்தது தெரியாமல் பஸ் கிளம்ப, அதற்குள் சுற்றி நின்றோரெல்லாம் பஸ்ஸின் பின்பக்கம் பட படவெனத் தட்டி நிறுத்தி, கீழே காயத்துடன் விழுந்தவரை மெல்ல எழுப்பி, ஆட்டோவில் ஏற்றி, கூடவே ஒரு சுருட்டைத் தலை இளைஞனும் துணைக்கு வந்தான்.

அட்ரஸ் சொல்லி, தன் பிளாட் வாசலில் கைத் தாங்கலாய் இறங்கிய போது, வாசலில் வம்பளந்து கொண்டிருந்த இரண்டு மூன்று பெண்கள் ஓடி வந்தார்கள்...

விவரம் அறிந்து, டெட்டால், நிபாஸல்ஃப் பவுடர் தந்து உதவினார்கள்...

பெரிய அடி எதுவும் இல்லை... ஆங்காங்கே சிராய்ப்புகள் தான்.

ஆனா அதற்கே ஊரிலிருந்து திரும்பிய ஸ்ரீதர் 'ஓ'வெனக் குதித்தான்... ''இதுக்குத்தான் சொன்னேன்... வெளியே போகாதீங்கன்னுட்டு...'' என்ற வரிகளை நூறு முறைக்கு மேல் சொன்னான்.

''உங்களுக்குத் தானேப்பா இப்போ அவஸ்தை?'' என்று மட்டும் சொன்னாள் விஜி. அவருக்கு உடலில் எந்த அவஸ்தையும் இல்லை... ஆனால் மனசு ரொம்பத் தளர்வடைந்து சோர்ந்து போயிற்று. நம்மால் என்ன முடியும் என்ற சலிப்பு தலை நீட்டிற்று.

மூன்று நாள்கள் ஓடிவிட்டன.

பிற்பகல்... கேட்டிலிருக்கும் தபால் பெட்டியில் ஏதாவது தபால் கிடக்கிறதா என்று பார்க்க வந்தார்.

அது கூட படியிறங்கிப் போகக் கூடாதென்று சொல்லியிருக்கிறான் ஸ்ரீதர். தபால் ஒன்றுமில்லை... பார்த்துவிட்டுத் திரும்பி வரும் போது...

கீழ் பிளாட் கதவு திறந்திருந்தது... உள்ளே பார்த்தார். நாற்காலியில் அமர்ந்தபடி வாசற்புறம் பார்த்துக் கொண்டு தவிப்பாக உட்கார்ந்திருந்தான் அந்த இளைஞன்...

அழகான அறிவு ஜீவித்தனமான முகம்... நல்ல உயரம்... கண்களில் மட்டும் கறுப்புக் கண்ணாடி அணியும் நிலை...

பார்வையில்லாத அவன் பெயர் அரவிந்தன்... அம்மா மட்டும் இருக்கிறாள். பள்ளிக்கூடம் ஒன்றில் ஆசிரியையாயிருக்கிறாள். சில மாதங்களுக்கு முன் தான் கீழ் பிளாட்டுக்கு

வந்திருக்கிறார்கள். சொந்தமோ, வாடகையோ... தெரியாது...

எத்தனையோ முறை அந்த இளைஞன் அதுபோல உட்கார்ந்து கொண்டு தவிப்போடு வாசலைப் 'பார்த்து'க் கொண்டிருப்பதை அவர் கவனித்திருக்கிறார்...

தாய் பள்ளிக்குச் சென்ற பிறகு அந்தப் பையன் யாரை எதிர்பார்த்து உட்கார்ந்திருக்கிறான்...? அதுவும் இந்தப் பிற்பகலில்...?

தொண்டையை லேசாகச் செருமிக் கொண்டு உள்ளே நுழைந்தார்...

அரவிந்தன் 'சட்'டென எழுந்தான்.

''கிருஷ்ணா...!''

''உட்காருப்பா... நான் கிருஷ்ணா இல்லை... மாடி வீட்டுல இருக்கேன். அஞ்சாம் நம்பர் ஃப்ளாட். என் பேர் இராமு... இராமச்சந்திரன்...''

''வாங்க சார்...'' மெல்ல ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டான்.

''உட்காருங்க...''

எடுத்த உடனே அவனது பார்வை பறிபோனதை விசாரித்து, சுய அனுதாபத்துக்கு அவனை உட்படுத்த அவர் விரும்பவில்லை...

''யாரையோ எதிர்பார்த்துக்கிட்டிருந்தே போலிருக்கு?''

''ஆமா சார்..'' லேசாகச் சிரித்தான்.

''கிருஷ்ணாவோ, அல்லது லதாவோ வருவாங்க இந்நேரத்துக்கு...''

''உன் ஃப்ரெண்ட்ஸா...?''

கொஞ்ச நேரம் பேசாமலிருந்தான்.

''ஃபிரெண்ட்ஸ் மாதிரி தான்... பல்லாவரத்துல இருக்காங்க... நான் எம்.ஏ. இலக்கியம் படிக்கிறேன்... சார்... அவங்க இரண்டு பேரும் பிரதர்... ஸிஸ்டர்... யாராவது ஒருத்தர் இங்கே வந்து எனக்குப் பாடம் படிச்சுச் சொல்லுவாங்க... எனக்காகப் பரீட்சையும் எழுதுவாங்க. எங்கம்மாவுக்குப் பாவம் நேரமே இல்லை சார்...''

''ஓ...'' சிறிது நேரத்துக்குப் பின் கேட்டார்:

''இன்றைக்கு வரலையா?''

அவன் குரல் தழைந்தது. ''லதா மேடத்துக்குக் கல்யாணம் நிச்சயமாயிடுச்சு... கிருஷ்ணாவுக்கும் பம்பாயிலே வேலைக்கு ஏதோ இண்டர்வியூன்னான்...''

சில வினாடிகளுக்குப் பின் ஏக்கமாய் அரவிந்தன் சொன்னான்: ''எனக்கு இப்பதான் எம்.ஏ முதல் வருஷம்... இன்னும் ஒரு வருஷம் இருக்கு. தினம் அவங்களைத்தான் எதிர்பார்க்கிறேன்.''

''தம்பி! உன் ஃப்ரெண்ட்ஸ் வரலைன்னாப் போகுது... இனிமே உனக்குப் பாடங்களை நானே படிச்சுக் காட்டறேம்ப்பா... உனக்காகப் பரீட்சையும் எழுதறேம்ப்பா...''

''சார்... நீங்க...?'' பிரமிப்போடு கேட்டான் அரவிந்தன்.

''நானும் அந்தக் கால பி.ஏ தான் தம்பி... எனக்கு இதன் மூலமா நிறையச் சந்தோஷமும் நிம்மதியும் தெம்பும் கிடைக்கும்னு எனக்குத் தோணறது... இதை ஓர் உதவியா நினைச்சு ஏத்துக்குவியாப்பா? ப்ளீஸ்...''

அவன் கைகளைப் பிடித்துக் கொண்டார்... நம்ப முடியாமல் நின்றான் அரவிந்தன்.

''உங்களுக்கு சிரமம் இல்லையே...'' என்றான் முடிவில்.

''ஒரு சிரமமும் இல்லைப்பா.''

''உங்க வீட்ல வேற யாரும் மறுப்பாங்களோ...?''

''யாரு என்ன வேணும்னாலும் சொல்லட்டும்... நீ சம்மதிக்கிறியா?''

''என் பாக்கியம் சார்...''

இருண்டு கிடந்ததாக அவர் எண்ணியிருந்த அவருடைய வாழ்க்கையில் ஒரு புது வெளிச்சம் கிடைத்துவிட்ட மகிழ்ச்சியில், ''இதோ... ஒரு நிமிஷம் இரு. வர்றேன். புத்தகங்களை... எடுத்து வை... வந்து படிக்கிறேன்...'' என்று கூறியவாறு திருப்தியாய் மாடிக்கு ஓடினார் இராமு.

●



# லட்சத்தில் ஒருவர்

'பால்யூ'

மயிலாப்பூரிலிருந்து கடைசி பஸ்ஸைப் பிடித்து ஒரு வழியாக வீடு திரும்புவதற்குள் இரவு மணி பதினொன்றுக்கு மேலாகி விட்டது. அகாலத்தில் வீடு திரும்பும் எந்தக் கணவனுக்கும், சகஜமாக ஏற்படும் தயக்கம் என்னையும் ஆட்டி வைத்துக் கொண்டிருந்தது.

மங்களம் அரைத் தூக்கத்தில் 'அழகாக' ஆடி வழிந்து கொண்டே மௌனமாகக் கதவைத் திறந்தாள். கலக்கம் தெளிந்து, 'ஏன் இவ்வளவு நேரம்?' என்று அவள் கேட்கு முன்பே நானே ஒரு கேள்வியைப் போட்டு வைத்தேன்.

''இன்னிக்கு ஏதாவது லெட்டர் வந்ததா?''

''ஹூம்.. ஹூம்...''

''யாராவது தேடிண்டு வந்தாளா?''

''முன்னாடி சாப்பிட வாருங்கோ: விசாரணையெல்லாம் அப்புறம் வச்சுக்கலாம்.''

''யார் வந்து தேடினா?''

''யார் வருவா? உங்களுக்குத் தெரிஞ்சவர் தான்! அந்த சர்மா இருக்காரே, அவர் தான் நான்கு முறை வந்தார். நீங்க ஆறு மணிக்கே ஆபீஸிலிருந்து திரும்பி வருவீர்கள் என்றெண்ணி ஏழு மணிக்கு அவரை வரச் சொன்னேன்.

அவர் லீவிலே தானே இருக்கார்? ஒரு முறைக்கு நாலு முறை வந்து விட்டுப் போனார்.''

''ஏதாவது முக்கியமாகச் சொன்னாரா?''

''முக்கியமாக என்கிட்டே என்ன சொல்வார்? நாளைக்கு உங்களைக் கூட்டிண்டு சங்கரனை எப்படியாவது பார்க்கப் போக வேண்டும் என்று அவசரம். பிறகு வேறே யாராவது முந்திக்கொண்டு விட்டா என்ன பண்றதுன்னு அவருக்குக் கவலை!''

சர்மாவைக் கண்டால் மங்களத்திற்கு எப்போதுமே அவ்வளவாகப் பிடிக்காது. அதுவும் குறிப்பாக எந்த விஷயத்திற்காக சர்மா தேடி விட்டுப் போனாரோ அது அவளுக்கு வேம்பாகக் கசிந்தது.

சாப்பிட உட்கார்ந்தபோது சொன்னேன். ''நான் அவர் கூடப் போவதனால் என்ன ஆயிடப் போறது! பையன் சம்மதிக்க வேண்டாமா?'' மங்களத்திற்குச் சாதகமாக இதைச் சொல்வதாக எனக்கு நினைப்பு. சர்மாவின் பக்கம் பரிந்து பேசி, அவளுடைய கோபத்தைக் கிளற எனக்கு விருப்பமில்லை.

அவள் விடவில்லை. ''சொல்லமாட்டேளா, நீங்கள்? அப்படி நிஜமாகவே நினைக்கிறவர், 'நான் வரமாட்டேன்' என்று தயக்கமில்லாமல் அவரிடம் சொல்வது தானே? உங்களுக்கும் வேறு வேலையில்லை; அந்த சர்மாவுக்கும் வேறு வேலையில்லை. எந்த முகத்துடன் போய் அந்தப் பிள்ளையிடம் கல்யாணப் பேச்சைத் தொடங்கப் போகிறீர்கள்? ஒரு பெண்ணை தர்மத்திற்கு ஏற்றுக் கொண்டு அதையும் பறி கொடுத்துவிட்டு நிற்கிறவனிடம் போய், 'இன்னொரு பெண்ணையும் நீ தான் ஏற்றுக் கொள்ளணும்' என்று கேட்கிற சுயநலத்தை என்னவென்று தான்

சொல்கிறது? இதுலே நீங்களும் தலையிடறது கட்டோட எனக்குப் பிடிக்கல்லை.''

படுக்கைக்குச் சென்ற எனக்குத் தூக்கமே வரவில்லை. காற்றுக்காக 'ஈஸிசேரை' தாழ்வாரத்தில் போட்டுக் கொண்டு சாய்ந்தேன். மங்களம் சொன்னது போல எந்த முகத்துடன் தான் சர்மா சங்கரனைக் கேட்கப் போகிறார்?

சர்மாவும் நானும் ஒரே அலுவலகத்தில் பணியாற்றி வருபவர்கள். வயது வித்தியாசத்தில் நான் அவருக்குத் தம்பி மாதிரி. பெரிய சம்சாரி மனிதர் அவர். பொதுவாகவே பெரிய சம்சாரக் குடும்பத் தலைவர்களுக்கு வருகிற சம்பளமும் குறைவல்லவா? அதனால் சர்மாவும் அனுதாபத்திற்குரிய நண்பராகவே திகழ்ந்து வந்தார்!

அவருடைய சம்சாரம் இளைய தாரம். அவளுக்கே நான்கு குழந்தைகள். மூத்தது பெண். நிகு. நிகு. வென்று தீட்டிய கத்திமாதிரி, ஏழைக் குடும்பத்தில் இளைய தாரத்தின் வயிற்றில் பிறந்திருக்கிறோமே என்ற நினைவே கொஞ்சங்கூட இல்லாமல், பதினாறு பிராயங்களையும் ஒரே தாண்டலாகத் தாண்டியது போல இளமையும் குறுகுறுப்புமாக வளர்ந்து நிற்கிற பெண் அவள்! அதற்கடுத்தாற்போல பத்து வயதில் ஒரு பையன். மூன்றாவது ஏழு வயதுச் சிறுமி. கடைக்குட்டி சின்னப் பயல்!

இளைய சம்சாரம் வெகு கெட்டிக்காரி. மூத்த மனைவி இளம் வயதில் ஒரு பெண் குழந்தையை சர்மாவின் தலையில் கட்டிவிட்டு அவரைப் பரிதவிக்க விட்டுச் சென்றபோது, குழந்தைப் பராமரிப்புக்காக, சாதுவாக இருந்த ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு தன்னுடைய சுதந்தரத்தையெல்லாம் இழந்து நிற்கும் பரிதாபத்தின் பிரத்யட்ச உருவமாகக் காட்சியளித்தார் சர்மா!

மூத்தாள் பெண் அந்தக் குடும்பத்தில் பட்ட சிரமம் கொஞ்ச நஞ்சமில்லை. இளையதாரத்திற்கு தலைச்சனாகப் பெண்ணும், அடுத்துப் பிள்ளையும் பெண்ணுமாக மாறி மாறிப் பிறக்கவே, அநாதையாகப் போய்விட்ட மூத்தாள் பெண் அந்தக் குடும்பத்தில் ஒரு வேண்டாத பூசனிக் காயாகவே ஆகி விட்டது!

சர்மாவுக்கு உள்ளூர அந்தப் பெண்ணிடம் வாஞ்சை அதிகம். இரண்டாம் தாரமாகக் கல்யாணமே செய்து கொள்ளாமல், அந்தக் குழந்தையைத் தாமே வளர்த்து ஆளாக்கி விட்டிருந்தால் எவ்வளவோ மேன்மையாக இருந்திருக்குமே என்று கூட அவர் சில சமயம் சிந்தித்து வருத்தப்பட்டிருக்கிறார்.

நான் அலுவலகத்தில் அப்போது சேர்ந்த புதிது. அடிக்கடி என்னைத் தன் வீட்டிற்கு இட்டுச் சென்று உரையாடிக் கொண்டிருப்பதில் சர்மாவுக்கு ஓர் அலாதியான ஆறுதல்.

கௌரி அப்போதெல்லாம் எனக்கு எதிர்ப்படுவாள். அவள் அடக்கமும், பதவிசான சுபாவமும், அலாதியான அழகும், பொறுமையான போக்கும் என்னுள் சொல் லொணாத ஆதங்கத்தை உண்டாக்கியிருக்கின்றன. 'இந்தப் பெண்ணுக்கு ஒரு நல்ல கணவனாக வாய்த்து, ராட்சஸ ஸ்வரூபமான இளையாளின் பிடிப்பிலிருந்து விடுபட்டுப் போக வேண்டுமே' என்று இதயம் ஒன்றிப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்.

என் பிரார்த்தனை வீண் போகவில்லை. நல்லவர்கள் பொருட்டு சிந்திக்கும் எந்த எண்ணத்திற்குமே ஒரு சுபமான முடிவு ஏற்படும் போலும்!

ஒரு நாள் குதூகலமாக என்னிடம் ஓடிவந்த சர்மா, ''கடைசியில் கௌரிக்கு ஓர் இடம் அமையும் போல இருக்கு;

பையனுக்கு தண்டையார்ப்பேட்டையிலே ஒரு கம்பெனியிலே 'ஸ்டெனோ' உத்தியோகம். கண்ணுக்கும் லட்சணமாக இருக்கிறான். கௌரிக்கு ஏற்றவன். தாயார், தகப்பனார் இல்லை. மாமாதான் பையனோட பொறுப்பாளி. ஈசுவர அனுக்கிரஹம் மாத்திரம் இருந்து கல்யாணம் நிச்சயமாயிடுத்துன்னா நான் ரொம்பப் பாக்கியசாலிதான்'' என்று கூறினார்.

சர்மா பாக்கியசாலியாகவே இருந்தார். பெண்ணை வந்து பார்த்துவிட்டுச் சென்ற சங்கரன் தன் பூரண சம்மதத்தைத் திருப்தியுடனே வெளியிட்டான். பையனுடைய மாமிக்குத்தான் கொஞ்சம் யோசனை. தாயில்லாப் பெண்ணைக் குடும்பத்திற்குக் கொள்வதால் ஏற்படும் பலாபலன்களைக் கவலையுடன் ஆராய்ந்தாள் அந்த அம்மாள். சர்மா அந்தக் கவலையைத் தன் வாக்கு சாமர்த்தியத்தால் ஓரளவு போக்கி அந்தத் தடையை விலக்கினார். எப்படியோ சிரமப்பட்டு இளைய சம்சாரத்தினிடம் மல்லுக்கு நின்று, சீர் செனத்தி விஷயங்களையும் கடன் வாங்கியாவது சமாளிக்கும் அளவில் சம்மதமும் பெற்று விட்டார்.

கௌரியின் கல்யாணம் இனிது நடைபெற்றது. மாலையும் கழுத்துமாகப் பெண்ணும் மாப்பிள்ளை சங்கரனும் அவரை நமஸ்கரித்தபோது சர்மாவின் மனம் வெகுவாக நிம்மதி அடைந்தது.

ஆனால் கல்யாணத்தையொட்டி அவர் மனைவிக்குத்தான் தீராத எரிச்சலும், குரோதமும் ஏற்பட்டு விட்டன. தன்னுடைய ஆதிக்கத்தில் பாத்திரம் தேய்த்து, தண்ணீர் எடுத்து, துணி துவைத்து, குழந்தைகளைப் பராமரித்து, வாய் திறவாத ஏழை வேலைக்காரியைப் போல தன்னுடைய அத்தனை வசவுகளையும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டு அல்லற்பட்ட அநாதைப் பெண்ணுக்கு இப்படிக்

கண் நிறைந்தவனாயும், உத்தமனாயும் ஒரு புருஷன் வாய்த்து விட்டானே என்ற பொருமல் அவளுக்கு அடங்கவேயில்லை. தன் சீற்றத்தை மாப்பிள்ளை சங்கரனுக்கு எதிரிலும் அவள் சில சந்தர்ப்பங்களில் காட்டிக் கொண்டு விட்டாள்.

இரண்டு வருஷங்களுக்குப் பிறகு கௌரி தலைச்சனை உண்டாகியிருந்தாள். வளைகாப்பு, சீமந்தம் எல்லாம் கிரமமாக நடந்தன. சங்கரனுக்கு இருந்த வைராக்கியத்தில், கௌரிக்குத் தாய், தகப்பன், கணவன் எல்லாமே அவன்தான் என்று உணர்ந்த நிலையில் பிரசவத்திற்குக் கூட அவளைப் பிறந்தகம் அனுப்பவில்லை அவன். சர்மா எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தார். அவன் மசியவில்லை. தண்டையார்ப் பேட்டை பிரசவ ஆஸ்பத்திரியிலேயே எல்லா ஏற்பாடு களையும் அவனே செய்து விட்டான்.

கடைசியில் பிரசவம் ஆகியது. தங்க விக்கிரகம் மாதிரி ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள் கௌரி. ஆனால் விதி செய்த கொடுமைதான் மிகப் பயங்கரமாக இருந்தது. குழந்தை பிறந்த நான்காம் நாளே ஜன்னி கண்டு கௌரி கண்ணை மூடிவிட்டாள்.

சங்கரன் அலறினான்; சர்மா கதறினார்; எந்தக் கதறலுக்கும் அலறலுக்கும் லட்சியம் செய்யாமல் காலன் கௌரியின் உயிரைப் பறித்துச் சென்று விட்டான்.

கடவுளின் விசித்திரமான இச்சோதனையை நினைக்க நினைக்க எனக்கு ஏற்பட்ட வியப்பும் வருத்தமும் எல்லையற்றதாய் இருந்தன. கௌரியும் சங்கரனும் வாழ்ந்த அந்த ஆதர்ச இல்லற வாழ்க்கை கடவுளுக்கே பொறுக்க வில்லையோ என்று கூட நான் நினைத்தேன்.

ஆனால் ஏழெட்டு மாதங்களுக்குப் பிறகு சர்மாவின் போக்கில் ஏற்பட்ட ஒரு திடீர் மாறுதல்தான் என்னுடைய

திகைப்பைப் பல மடங்கு அதிகப்படுத்தியது. சர்மாவே என்னிடம் கூறினார்:

''பாலு! உங்களிடத்தில் ஒரு விஷயமாகக் கலந்து ஆலோசிக்க வேண்டும். சங்கரனைப் போய் ஒரு முறை நாம் இருவரும் பார்த்துவிட்டு வந்தால் நல்லதென நினைக்கிறேன். சின்னக் குழந்தையையும் வச்சுண்டு, இந்த வயதிலே எப்படி அவன் மீண்டும் கல்யாணம் செய்து கொள்ளாமல் காலம் தள்ள முடியும்? ஆத்திலே அவ கூடச் சொன்னாள். நம்ப ருக்மணியையே, அவன் இஷ்டப்பட்டால் கல்யாணம் செய்து கொடுத்துவிட்டால் என்ன என்று தோன்றுகிறது!''

'ஷாக்' அடித்தாற்போல இருந்தது எனக்கு. ஒரு மகள் இறந்து, அந்தத் துக்கமே இன்னும் ஆறாமல் இருக்கையில், அதே இடத்தில் இன்னொரு பெண்ணையும் கல்யாணம் செய்து கொடுக்கத் துடிதுடிக்கும் அவர் மனப்போக்கை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவரே தொடர்ந்து சொன்னார்:

''நான் வேண்டுமானால் சொல்கிறேன். சங்கரனைப் போன்ற இளம் வயதினருக்கு மனம் நிச்சயமாக மறு விவாகத்தை நாடாமல் இருக்க முடியாது. வேறொருத்தி அவன் கரம் பிடித்து, கௌரியின் குழந்தையைப் பார்த்துக் கொள்வதை விட, நம் அகத்துப் பெண்ணான ருக்குவே அந்த ஸ்தானத்தை ஏற்றுக்கொண்டு விட்டால் நல்லது தான்'' என்று அவர் சொன்னதை ஆமோதிக்காவிட்டாலும், நான் ஒன்றும் ஆட்சேபிக்கவில்லை. ருக்கு இளையாளின் மூத்த பெண்.

சர்மா சுலபமாகச் சொல்லி விட்டாரே தவிர, எனக்கு என்னவோ சங்கரன் இது விஷயத்தில் பிடிகொடுத்து, வழிக்கு வருவான் என்ற நம்பிக்கையே இல்லை. சங்கரனிடம் பேசப்

போவதற்கு நானும் வர வேண்டும் என்று இரண்டு மூன்று முறை வற்புறுத்தியும் விட்டார்.

அதற்கு மறுநாள் காலையில் வாசலில் குரல் கேட்டது. சர்மா தான் காட்சியளித்தார். மங்களம் வெறுப்புடன் என்னை வழி கொடுத்து அனுப்பினாள். சர்மாவும் நானும் தண்டையார்ப்பேட்டைக்கு சங்கரனைப் பார்த்து வரப் புறப்பட்டோம். எனக்கு இந்தக் காரியம் கை கூடுமெனக் கொஞ்சம் கூட நம்பிக்கையேயில்லை. என் அவநம்பிக்கை யைப் பேச்சுவாக்கில் ஊகித்துவிட்ட சர்மா, கூறினார்:

''பாலு! உங்களுக்கு அவ்வளவாக உலக அநுபவம் போதாது. அதனால்தான் இப்படி நீங்கள் நினைக்கிறீர்கள். கௌரியின் அம்மா இறந்தபோது எனக்கு இருந்த மன வேதனை வார்த்தைகளில் சொல்லி முடியாது. வாழ்க்கையே சூன்யமாகிப் போய் ஒரு பயங்கர இருள் என்னைக் கவிந்து கொண்டு விட்டதாகவே நினைத்தேன். கௌரியின் பிஞ்சு முகத்தைப் பார்க்கும்போதெல்லாம் தேம்பித் தேம்பி அழுதேன். ஆயினும் கடைசியில் என்ன ஆயிற்று?

''ஏதோ ஒரு சஞ்சல எண்ணம் - சபல சித்தம் - தன்னுடைய ராட்சஸ சக்தியை உபயோகித்து என் வைராக்கியத்தை வீழ்த்தி விட்டது. மனத்தின் இந்த மாற்றத்திற்குப் பலியாகாத மனிதர்களே மிகக் குறைவு தான். லட்சத்தில் ஒருவன் வேண்டுமானால் அத்தகைய திட புருஷனாயும், மறு விவாகமே வேண்டாம் என்று துணிந்து கூறும் தீரனாயும் இருக்க முடியும்!''

உலக ரீதியில் - நடை முறையை ஒட்டிய தினுசில் - சர்மா சொன்னதை நான் அங்கீகாரம் செய்து கொள்ள வேண்டியிருந்தது. வேண்டாவெறுப்பாக அவருடன் போகச் சம்மதித்தேன்.

சங்கரன் இல்லத்தை அடைந்தபோது அவனோ, அல்லது அவன் மாமாவோ வீட்டில் இல்லை. உள்ளே கிடந்த தொட்டிலில் குழந்தை படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தது. சங்கரன் மாமிதான் எங்களை வரவேற்றாள். சர்மா பேச்சுப்போக்கில் தான் வந்த காரியத்தின் நோக்கத்தையும், அதனுடைய அவசியத்தையும், பக்குவமான முறையில் அந்த அம்மாவிடம் சொல்லிக் கொண்டிருந்தார். அந்த அம்மாள் வெறும் புன்முறுவலினாலேயே இந்தப் பேச்சுகளைப் பரிகாசம் செய்கிறாளோ என்று எண்ணும்படி தோற்றம் காட்டிக் கொண்டிருந்தாள்.

அந்த நேரத்தில்தான் சங்கரன் வெளியிலிருந்து வந்தான். சர்மா அசட்டுச் சிரிப்பொன்றை உதிரவிட்டு, அவனைக் குசலம் விசாரித்தார். சங்கரன் சாந்தமாகவே எங்கள் இருவருக்கும் முகமன் கூறினான். சிறிது நேரம் என்ன பேசுவதென்றே எங்களில் யாருக்கும் தோன்றவில்லை. நான்தான் சொன்னேன்:

''உனக்குத்தான் ரொம்பக் கஷ்டம், சங்கரன்! இந்த வயதிலே அநுபவிக்கக் கூடிய துக்கமா இது? எவ்வளவு நாள்களுக்குத்தான் இப்படித் தாயில்லாக் குழந்தையை வைத்துக் கொண்டு கஷ்டப்பட முடியும்? மாமிகிட்டே கூட இதைப்பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தோம்'' என்று இழுத்தாற்போலச் சொல்லி சர்மாவுக்குச் சுருதி கூட்டி வைத்தேன்.

சங்கரன் வறட்டுச் சிரிப்பு சிரித்தான். அதற்குள் சர்மா தன் பல்லவியைத் தொடர்ந்தார்.

''நானும் வெகுவாக யோசித்துப் பார்த்தேன் சங்கரன்! உன் நன்மையையெல்லாம் உத்தேசித்துத் தான் சொல்கிறேன். எவ்வளவு நாளைக்கு மனத்தில் வைத்துக் கொண்டு

வேதனைப்பட்டாலும் ஆறாத துக்கம் இது. கௌரிதான் கொடுத்து வைக்கலை. குழந்தையைப் பார்த்துக் கொள்வதற் காவது நீ மறுபடியும்...''

சங்கரன் இடை மறித்துச் சற்றுக் கடும் குரலில் சொன்னான்:

''நீ மறுபடியும் என்னுடைய இன்னொரு பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கோ அப்படின்னு சொல்ல வரேள், இல்லையா? உங்களுக்கு வேறு வேலை இல்லையா? என் குழந்தையைப் பார்த்துக் கொள்வதற்கு உங்களுக்கு என்ன அக்கறையோ?'' என்று சொல்லிக் கொண்டே வந்தவன், ''மாமி'' என்று உள் பக்கம் கத்தினான். மாமி கைக் காரியத்தை அப்படியே போட்டு விட்டுப் பரபரப்புடன் ஓடி வந்தாள்.

சங்கரன் கண்களைப் பார்ப்பதற்கு எனக்கே நடுக்கமாக இருந்தது. என்ன நினைத்துக் கொண்டோ, தொட்டிலில் கிடந்த குழந்தையை எடுத்து சர்மாவின் எதிரில் கொண்டு வந்து போட்டு ஆவேசம் வந்தவனைப் போலக் கத்தினான் அவன்.

''இந்தக் குழந்தையின் மேல் ஆணையாகச் சொல் கிறேன், இன்னொரு முறை இம்மாதிரி பேச்சை என்னிடம் எடுக்காதீர்கள். இன்னொரு கல்யாணம் பண்ணிக் கொண்டால்தான் குழந்தையை வளர்க்க முடியும் என்று நம்புகிறவன் நான் இல்லை. அதனாலே உலகத்திலே இரண்டாம் முறையாக மணம் செய்து கொள்பவர்களை முட்டாள்கள் என்று நான் சொல்ல வரவில்லை. மனத்திலே ஊறும் சபலத்தைத் துடைக்க அவர்களால் முடிவதில்லை; அவ்வளவுதான்!''

''நீங்கள் வயதிலே பெரியவர். இப்போது உங்களுக்கு இன்னொரு பெண் இல்லாத நிலையில், நான் மறுவிவாகம் செய்துகொள்ள முற்பட்டால் உங்கள் மன நிலை எப்படி இருக்கும் என்று நினைத்துப் பார்த்தீர்களா?''

''கௌரியுடன் நான் நடத்தின வாழ்க்கையை வேறொருத்தி -- அதுவும் என் மைத்துனி - வந்து பூர்த்தி செய்து விட முடியாது. அழகிய கனவொன்று பாதியில் கலைந்து விட்டால், திரும்ப உறங்கும்போது அந்த மோகனக் காட்சி நம் கண்முன்னே வந்து விடுகிறதா? அதுபோலத்தான் இதுவும்'' என்று அவன் நீளமாகப் பேசிக் கொண்டே போனான்.

குழந்தை வீறிட்டுக் கதறியது. சர்மா பேயறைந்தவர் போல அவன் சொல்வதைக் கேட்டுவிட்டுச் சிலையாக உட்கார்ந்திருந்தார். எனக்கு ஒரே குழப்பமாக இருந்தது. ஆத்திரத்துடன் சங்கரன் தொடர்ந்து பேசினான்.

''இந்தக் குழந்தை, கௌரி எனக்கு வைத்து விட்டுப் போன ஞாபகார்த்தம். குழந்தையை விட்டு, கணவனை இழந்து போகும் மனைவிக்குக் குடும்பத்தில் என்ன கடமை? குழந்தையை மறைந்து போன கணவன் வைத்து விட்டுச் சென்ற லட்சியமாகக் கொண்டு, அதன் பராமரிப்பில் தன் வாழ்க்கையைச் சமர்ப்பித்து விடுவதில்லையா? அந்தப் பவித்திரமான கடமை கணவனுக்கு இல்லையா? உண்டு என்று நான் நிரூபிக்கப் போகிறேன்! இனி இம் மழலைக்கு எல்லாமே நான் தான்!''

வெறியில் பேசும் வார்த்தைகளாக இல்லை சங்கரனின் பிரசங்கம். நெஞ்சத்தின் அடியிலிருந்து பீரிட்டுக் கிளம்பும் சத்திய வாக்குப் பிரவாகமாகவே அதை ஏற்றுக் கொண்டேன்.

சர்மாவின் கண்கள் கலங்கின. கண்களிலிருந்து வழியும் நீரைத் துடைத்துக் கொண்டு அவர் சொன்னார்:

''சங்கர்! உன் மனத்திலே அந்த உத்தமியிடம் நீ வைத் திருக்கும் மாசற்ற அன்புத் தழல் கனன்று கொண்டிருப்பது தெரியாமல் நான் ஏதோ சொல்லி விட்டேன். நான் வயதிலே தான் பெரியவன். என்னைவிட நோக்கத்தில் எவ்வளவோ பெரியவனப்பா நீ! உன் மனசு நோக இந்த ஏற்பாட்டைப் பற்றிச் சொல்லி விட்டேன். இதையெல்லாம் மறந்துவிடு, சங்கர்!''

புயல் அடித்து அமைதி பிறந்த சாந்தி எங்கள் உள்ளங்களில் நிரம்பியது. சர்மாவும் நானும் வீடு திரும்புகையில் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளவே யில்லை. 'லட்சத்தில் ஒருவ'னை அவர் கண்டு விட்டார்! சச்சிதானந்த ஸ்வரூபத்தையே நேரில் கண்டிருந்தால் கூட இத்தகைய பரவசமும் பரபரப்பும் அவருக்கு ஏற்பட் டிருக்குமோ என்பது சந்தேகம்தான்.

சர்மாவின் உள்ளத்தில் மட்டுமன்று. என் இதயக் கோயிலிலும், சங்கரன், மனைவியை இழந்த உலகத்து இளம் கணவன்மார்களுக்கெல்லாம், லட்சிய குருவாய், அன்பின் உருவாய், வைராக்கியத்தின் ஞான ஒளியாய் ஒளிர்ந்து நின்றான்!



# இளைய தலைமுறை

- பூவண்ணன்

''சரி, கிருஷ்ணா! இத்தனை வருஷம் இருந்துட்டே. இன்னும் ஒரு வருஷந்தானே இருக்கணும்னு சொல்றே? இரு கிருஷ்ணா! ஆனா, நான் சொல்லாமலே ஒரு வருஷம் முடிஞ்சதும் எனக்கு வீடு காலி செய்து கொடுத்திடணும். சரியா?'' சிதம்பரம் கேட்டார்.

கிருஷ்ணசாமி உடனே சிதம்பரத்தின் இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டு, ''ரொம்ப ரொம்ப நன்றிடா! சிதம்பரம்! இந்த வருஷத்திலே என் பொண்ணு பிளஸ் டூ முடிச்சுடறா. அப்புறம் நாங்க பொள்ளாச்சிக்கே போயிடலாம்னு இருக்கோம். அங்கே அவ்வளவு பெரிய வீட்டில் எங்கம்மாவும் அப்பாவும்தான் தனியா இருக்கிறாங்க. இந்த மாசத்திலிருந்து ஒரு நூறு ரூபா வாடகை சேர்த்துக் கொடுத்துடட்டா?'' என்று கேட்டதும், சிதம்பரம் அவசர அவசரமாக அதை மறுத்தார்.

''அதெல்லாம் வேணாம். போன வருஷந்தானே சேத்துக் கொடுத்தே! அது போதும். நான் புறப்படறேன்.''

சிதம்பரம் புறப்பட்டார். கிருஷ்ணசாமி வெளி கேட் வரை வந்து வழியனுப்பினார்.

சிதம்பரமும் கிருஷ்ணசாமியும் பள்ளித் தோழர்கள். சிதம்பரம் வங்கி ஊழியராக, கிருஷ்ணன் பள்ளி ஆசிரியரா னார். அதுவும் தமிழாசிரியர்.

எட்டு வருடங்களுக்கு முன்பு சிதம்பரத்தை ஔரங்கா பாத்துக்கு மாற்றியபோது, அவர் அப்போதுதான் சாயிபாபா காலனியில், எஸ்.ஆர்.பி. நகரில் கட்டிய வீட்டை வாடகைக்கு விட வேண்டியிருந்தது. கிருஷ்ணசாமி அதை அறிந்து தனக்குத் தருமாறு கேட்டார். சிதம்பரமும் சந்தோஷமாகக் கொடுத்துவிட்டு ஔரங்கபாத்துக்குப் போய்விட்டார். அப்போது மாத வாடகை எழுநூறு ரூபாய்.

ஏழு செண்ட் இடத்தில், சுற்றிலும் இடம் விட்டுக் கட்டப்பட்ட ஒரு படுக்கை அறை கொண்ட அந்த வீடு, அவருக்கு மிகவும் பிடித்திருந்தது.

ஔரங்காபாத்துக்குப் போன சிதம்பரம் அப்படியே டில்லி, ஜெய்ப்பூர், புவனேஸ்வர் என்று வட நாட்டிலேயே மாறி மாறி வேலை பார்த்தார். ஒவ்வொரு மாதம் ஐந்து தேதிக்குள் வீட்டு வாடகை டிராப்டாக வந்துவிடும். வீட்டு வரி எல்லாம் கிருஷ்ணசாமியே கட்டி விடுவார். இரண்டு வருஷத்துக்கொரு தரம் சிதம்பரம் கேட்காமலே நூறு ரூபாய் வாடகையை அவரே கூட்டிக் கொடுத்து வந்தார். வீட்டில் அவர் வைத்த மாமரம்கூட பழம் கொடுக்கத்தொடங்கி விட்டது.

மூன்று மாதத்துக்கு முன்னே புவனேஸ்வரிலிருந்து கோவைக்கு மாற்றலானார் சிதம்பரம். அவருக்கு வங்கி ஒப்பந்தம் செய்து வைத்திருந்த பெரிய வீடு கிடைக்கவே, சொந்த வீட்டைக் காலி செய்யுமாறு கேட்கவில்லை. சிதம்பரத்துக்கு ஒரே ஒரு செல்வப் புதல்வன் சோமு, எஸ்.ஆர்.பி. நகரின் தற்போதைய வாடகை நிலவரத்தை விசாரித்து வந்து, ''அப்பா! நம்ம வீடு இப்போ திருடன் கிட்டே கொடுத்தாக்கூட, மாதம் இரண்டாயிரத்துக்கு மேலே வாடகை கொடுப்பான். உங்க நண்பர் ஏமாத்தறார். ஆயிரத்து நூறுதான் தர்றார். பேசாம அவரைக் காலி செய்யச்

சொல்லுங்க'' என்று யோசனை கூற, அதற்கு அம்மாவும், ''ஆமாங்க, தம்பி எவ்வளவு அக்கறையா, வாடகை விவரம் கேட்டுச் சொல்லியிருக்கிறான். இனியும் பழைய சிநேகிதன்னு சொல்லிட்டு நஷ்டப்படாதீங்க. இப்பவே புறப்பட்டுப் போய் காலி செய்யச் சொல்லுங்க'' என்று அவரைத் தூண்டிவிட, சிதம்பரம் பத்து நாளுக்கு மேல் அவள் நச்சரிப்புத் தாங்காமல் புறப்பட்டு வந்து, தயங்கித் தயங்கி கிருஷ்ணசாமியைக் காலி செய்யச் சொன்னார். அவர் ஒரு வருஷம் அவகாசம் கேட்டதும் கொடுத்துவிட்டார்.

''என்ன ஆச்சு? அந்த மனுஷர் காலி செய்யறதா ஒத்து கிட்டாரா?'' தர்மபத்தினி கேட்டாள். ''ஓ, ஒத்துகிட்டானே! நான் கேட்டா, முடியாதுன்னு சொல்லிடுவானா? அடுத்த வருஷம் காலி செய்யறதாச் சொல்லிட்டான். மனுஷன் சொன்ன சொல் தவற மாட்டான்.''

சிதம்பரம் ஏதோ சாதனை செய்த மாதிரி சொல்ல, தர்மபத்தினி ''நீங்க எப்பவும் ஏமாளிதான்! மாசாமாசம் டிராப்ட் வருதுன்னு சொன்னீங்க. எத்தனை மாசம் கொடுக் காம அவன் ஏமாத்திட்டானோ?'' - அவள் மேலே தொட ரும்முன், ''மரியாதை இல்லாமப் பேசாதே! அவன் என் சிநேகிதன்! ஊரெல்லாம் ஓஹோன்னு சொல்ற மாதிரிப் பேரெடுத்த ஆசிரியர். அவனைப்பத்தி மேலே பேசினே... நான் சும்மாயிருக்க மாட்டேன்'' என்று குறுக்கிட்டு எச்சரிக்கை செய்தார்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த செல்லப் பிள்ளை சோமு, அம்மாவுடன் கூட்டணி அமைத்துக் கோதாவில் இறங்கினான். இரட்டை நாதஸ்வரம் போல அம்மாவும் பிள்ளையும் மாறி மாறிப் பேச... தாக்குப் பிடிக்க முடியாத சிதம்பரம் மதுரையாக மாறி, ''சரி! சரி! வாடகை குறைச்சல்தான்! ஆனா, இப்பத்தான் ஒரு வருஷம் டயம்

கொடுத்துட்டு வந்திருக்கேன்... உடனே போய் எப்படி இதே வாயால காலி செய்யச் சொல்றது?'' என்று முகாரி பாட, தவப்புதல்வன் தந்தைக்குக் கைகொடுக்க முன்வந்தான்.

''அப்பா! நீங்க போய்ச் சொல்ல வேணாம்! நானே போய்ச் சொல்லிடறேன்.''

சோமு சொன்னதும், ''ஆம்பிள்ளைன்னா நீதாண்டா ஆம்பிளை! போய் அந்த ஆளை உடனே காலி செய்யச் சொல்லுடா.'' 'பொறுத்தது போதும்; பொங்கி எழு' - பாணியில் அன்னை ஆணையிட, சோமு வீராவேசமாய்ப் புறப்பட்டுப் போனான்.

அன்னையோ வெற்றி மாலை சூட்டி வரவேற்கக் காத்திருந்தாள்.

ஒரு மணி நேரத்துக்குப் பின்பு புயலைப் போல வீட்டுக்குள் புகுந்த சோமு, ''அயோக்கியப் பயல்! ராஸ்கல்! ரௌடிப் பயல்'' என்று அர்ச்சனை செய்ய, அவன் கட்சியிலே இருந்தாலும் அன்னை அதைத் தடுத்து ''டேய், முதல்லே போன காரியம் என்னாச்சு? அதைச் சொல்லு...'' என்று கேட்டாள்.

சோமு விளக்கினான்.

அவன் போன போது அப்பாவின் சிநேகிதர் வீட்டில் இல்லை. அவர் மகன் பொன்னுராஜ் இருந்தான். அவனிடமே விஷயத்தைச் சொல்லி, ''உங்கப்பா வந்தா, நான் சொன்னதைச் சொல்லு. ஒரு வாரத்திலே வீட்டைக் காலி செய்யச் சொல்லு... இல்லைன்னா... என்ன நடக்கும்னு எனக்கே தெரியாது'' என்று பயமுறுத்தினான்.

பொன்னுராஜ் ''இதுக்கு எங்கப்பா என்ன பதில் சொல்றது? நானே சொல்றேன். அதெல்லாம் காலி செய்ய

முடியாது! குடித்தனக்காரரை இப்படிக் காலி செய்யச் சொல்ல உனக்கு அதிகாரமில்லை... போய் கோர்ட்டில் 'எவிக்ஷன்' கேஸ் போடு... ஒரு பத்து வருஷத்திலே வீட்டைக் காலி செய்து, உங்கிட்டே ஒப்படைக்கிறோம்... என்ன, கதவெல் லாம் உடைஞ்சிருக்கும்... வாஷ் பேசின் பாதியாயிருக்கும்... எல்லாம் உங்க வசதிக்குத்தான்... வீட்டை உடைச்சு புதுசா கட்ட வசதியா, பாதி உடைச்சு ஒப்படைக்கிறோம்'' என்று எள்ளலும் துள்ளலுமாய்ச் சொல்லியிருக்கிறான்.

''டேய், எங்கிட்டேயே கிண்டலா? சவாலா? ஒரு வாரத் திலே... ஒரே வாரத்திலே உன்னைக் காலி பண்ண வைக் கிறேன்'' என்று சவாலுக்குச் சவால்விட்ட வீரப்பிரதாபத்தை விளக்கினான் சோமு.

சிதம்பரம் பதறினார்.

ஆனால், தர்மபத்தினியோ, ''செய்டா! செய்! இப்பவே போய் அந்த வாத்தியானைக் காலி செய்ய வழி செய்'' என்று ஊக்குவித்தாள்.

''அதுக்குக் கொஞ்சம் பணம் செலவாகுமே...'' என்று சோமு இழுக்கவே, ''நான் தரேன்! எவ்வளவு செலவானா லும் நான் தரேன்!'' என்று உதவிக்கரம் நீட்டினாள் அன்னை.

சிதம்பரம் வாயடைத்துப் போனார். அம்மாவும் பிள்ளை யும் சேர்ந்த கூட்டணி முன் அவரது எதிர்ப்பு, சுயேச்சை வேட்பாளரின் எதிர்ப்பு போன்றது. அதனால், வள்ளல் பெருமானின் வாய்மொழியைப் பின்பற்றினார்: ''சும்மா யிருப்பதே சுகம்.''

கை நிறையப் பணத்தோடு சோமு, வீர அபிமன்யு நடை நடந்து சங்கனூர் பள்ளத்தில் குடியிருக்கும் செங்கோடனைத் தேடிப் போனான்.

செங்கோடன் அந்தப் பகுதியின் ரவுடி! பாஸ்! பிஸ்தா! தலைவன்! பணம் கொடுத்தால் எதுவும் செய்வான்.. நண்பர் மூலம் அறிந்து சோமு அவனை நாடி, விஷயத்தைச் சொன்னான். செங்கோடன் ''மொத்தமா மூவாயிரம் தரணும். தந்தா மூணே நாளில் வீடு காலியாயிடும்'' என்றான்.

சோமு அம்மாவிடம் சொன்ன ரேட் ஐந்தாயிரம் ரூபாய். மூவாயிரம் முழுசா கொடுத்தாலும் இரண்டாயிரம் அவனுக்குக் கிடைக்கும் - அதனால் சம்மதித்து, பாக்கெட்டிலிருந்த பணத்தை எடுத்துப் பங்கு போட்டு, ரூபாய் மூவாயிரத்தை நீட்டினான்.

வீடு தேடி வந்த ''காந்தி''யை இரண்டு கையால் வாங்கி, எண்ணிப் பார்த்தவாறே, ''தம்பி, விஷயத்தைச் சொன்னே... பார்ட்டி யாருன்னு சொல்லலையே'' என்றான் செங்கோடன்.

''எஸ்.ஆர்.பி. காலனி வளைவுக்குப் போனால் வலப்பக்கம் இருக்கும் மூணாவது வீடு... வெளியே புலவர் கிருஷ்ணசாமின்னு ஒரு போர்டு இருக்கும்...''

சோமு தொடர்வதற்கு முன் செங்கோடன் எண்ணுவதை நிறுத்தி, ''புலவர் கிருஷ்ணசாமியா? தமிழய்யா கிருஷ்ணசாமியா? எப்பப் பார்த்தாலும் திருக்குறள் வகுப்பு - திருக்குறள் வகுப்புன்னு ஒரு நாலஞ்சு பேருக்குப் பாடம் சொல்லிப் பாட்டுப் பாடுவாரே, அவரா?'' என்று கேட்டான்.

சோமு, கோவைக்கு வந்து கொஞ்ச நாள்களே ஆகியிருந்தாலும் புலவர் கிருஷ்ணசாமி திருக்குறள் வகுப்பு நடத்தாத நாளே இராது என்று கேள்விப்பட்டிருந்தான். அதனால், ''ஆமாம், அந்த ஆளேதான். இரண்டு போடு போட்டா... இல்லை... இல்லை... போடறதா... நீங்க சொன்னாக்கூட அவர் மிரண்டு போயிடுவாரு'' என்றான்.

செங்கோடன் எண்ணிக் கொண்டிருந்ததால், நூறு ரூபாய் நோட்டுகள் வலக்கையில் கொஞ்சமும் இடக்கையில் கொஞ்சமும் இருந்தன. அவற்றை உடனே ஒரு கைக்கு மாற்றி, ''இந்தா தம்பி! இதைப் பிடி'' என்று நீட்டினான்.

சோமு அதை வாங்காமல், ''ஏங்க... என்னாச்சு? பணம் போதாதா?'' என்று கேட்டான்.

''தம்பி, நான் ரவுடிதான்! குத்து, வெட்டெல்லாம் நமக்கு சகஜந்தான். ஆனா, புலவர் கிருஷ்ணசாமி எப்பேர்ப்பட்ட வர்னு தெரியும். நம்ம கூட்டாளி ஒருத்தன் இந்தத் தமிழய்யா கிட்டே, எப்பவோ மழைக்காகப் பள்ளிக்கூடத்திலே ஒதுங்கிப் படிச்சானாம்... கொஞ்ச நாளுதான்... அவன் அவரைப் பத்திச் சொல்லியிருக்கான். இதோ இந்த ரூபா நோட்டிலே இருக்கிற காந்திகூட அவரு முன்னாடி நிக்க முடியாதாம். அப்பேர்ப்பட்டவரை வீட்டை விட்டுக் காலி செய்ய வைக்கிற பாவத்தை நான் செய்ய மாட்டேன்... இந்தப் பணத்தை வாங்கிட்டு இடத்தைக் காலி செய்.''

செங்கோடன் சோமு கையில் பணத்தைத் திணித்தான்.

சோமு ஏதோ அதிசயத்தை நேரே பார்க்கிற திகைப்போடு பணத்தை வாங்கி மடித்துப் பாக்கெட்டில் வைத்துக் கொண்டு நடந்தான்.

'அம்மாவிடம் வீர வசனம் பேசி, கையிலடித்துச் சொல்லாத குறையாய் சபதம் செய்துட்டு வந்தோமே... இப்ப என்ன செய்யறது?' என்று யோசித்தபடி, குடிசைப் பகுதியைக் கடந்து பைபாஸ் சாலையில் ஏறினான். 'வேறே ரவுடியைத் தேடலாமா...?' - அவன் யோசிக்கும் போதே கும்பிடப் போன ரவுடி குறுக்கே வந்தாற் போல... போலவெல்லாம் இல்லை... குறுக்கே சைக்கிளில் வந்து அவன் முன் குதித்தான்.

''இந்தாங்க... இப்ப செங்கோடனிடம் சொன்ன அதே மேட்டரை நான் முடிச்சுத் தரேன். அதே மூவாயிரம் ரூபா கொடுங்க'' என்று கேட்டான்; கையும் கேட்டது.

''நீங்க...''

''நான் மணி... செங்கோடன் மகன்... அப்பாவைப்போல சுத்தமா விஷயத்தை முடிப்பேன்... பணத்தைக் கொடு.''

சோமு தயங்கவில்லை. ஒரு பிரச்னைக்குத் தீர்வு கண்டது போன்ற சந்தோஷத்தோடு பணத்தைக் கொடுத்து, தன் முகவரியைச் சொல்லத் தொடங்கினான்.

''அதெல்லாம் வேணாம் கண்ணு... போன் நம்பர் சொல்லு...''

சோமு சொன்னான்.

குறித்துக் கொண்டு சைக்கிளில் ஏறிய மணியை சோமுவின் குரல் தடுத்தது.

''உங்கப்பா முடியாதுன்னதை நீங்க முடிச்சா அவர் கோபிக்க மாட்டாரா?''

''கோவம் வரும்... கத்துவார்... அடிச்சாலும் அடிப் பார்... அதெல்லாம் பாத்தா தொழில்லே முன்னேற முடியுமா...?''

சோமுவின் சைக்கிள் பறந்தது.

அன்று மாலையே புலவர் கிருஷ்ணசாமியின் வீட்டை நோட்டமிட்டு, புலவருக்கு ஒரு புதல்வனோடு ஒரு புதல்வியும் இருக்கிறாள் என்பதையும், அவள் பாரதி பார்க் சாலையில் கோட்டை அரணுக்குள் பாதுகாப்பாய் இருக்கும் பள்ளியில் படிக்கிறாள் என்பதையும் தெரிந்து கொண்டான்.

மறுநாள் காலை,

புலவர் மகள் பள்ளி முடிந்து, வீட்டுக்குப் புறப்பட்டுச் சாலையில் நடந்து கொண்டிருந்தாள்... திடீரென்று ஒரு சைக்கிள் அவளை நோக்கி வந்து அவள் மீது மோதியது. அவள் புத்தகங்கள் சாலையில் சிதற, 'அம்மா' என்ற அலறலுடன் கீழே விழுந்தாள்.

சைக்கிளில் இருந்தபடியே ஒரு காலைச் சாலையில் ஊன்றி, மிடுக்கான பார்வையிலிருந்த மணி, ''என்னம்மா... கையிலே காயமா? பரவாயில்லை... இதோ பாரு, என்னாலே ஸ்கூட்டர்லே வர முடியும்... கார்லே வர முடியும்... வந்து இப்படி மோதினா... நீ குளோஸ்! உங்கப்பா கிட்டே சொல்லு! மூணே நாளிலே வீட்டைக் காலி செய்துடணும்... இல்லைன்னா நீ காலி.''

சொல்லி முடித்ததும் சோமுவின் சைக்கிள் நிதானமாகப் புறப்பட்டு, ஒருவகை ஸ்லோமோஷனில் நகர்ந்து சென்றது.

இரண்டாம் நாள் காலையிலே புலவர் கிருஷ்ணசாமி தம் நண்பர் சிதம்பரத்தின் வீட்டுக்குச் சென்றார். சிதம்பரம் வீட்டில் இல்லை. தர்மபத்தினி இருந்தாள். ''அம்மா! உங்க வீட்டை நேற்றே காலி செய்துவிட்டேன். சிதம்பரம் வந்தா சொல்லுங்க. எட்டு வருஷமா வீட்டைக் கொடுத்ததுக்கு நன்றி'' என்று கூறிய புலவர் வீட்டுச் சாவியைக் கொடுத்து விட்டு வெளியே செல்லும் போது, உள்ளே நுழைந்த சோமு நடந்ததை அறிந்து துள்ளிக் குதித்தான். ''அம்மா! நான் சாதிச்சிட்டேன்!'' என்று ஒரு கோரஸ் சத்தத்தைத் தன் ஒற்றைக் குரலில் வெளியிட்டான். அம்மாவும் அவனுக்குத் தனி ஆளாகவே ஒரு பாராட்டுக் கூட்டம் நடத்திவிட்டாள்.

''அம்மா! சாவியைக் கொடு. போய் அந்த வீட்டை வாடகைக்கு விடறதுக்கு முன்னாலே, ரிப்பேர் வேலை ஏதாச்சும் இருக்குதான்னு பார்த்துட்டு வரேன்.''

கொஞ்ச நேரத்தில் சோமு சாவியுடன் ஸ்கூட்டரில் பறந்தான்.

சோமுவின் ஸ்கூட்டர் எஸ்.ஆர்.பி. நகரின் வளைவுக்குள் நுழைந்த போதே, சோமு அதிர்ச்சியால் இரு கைகளிலும் பிரேக் போட்டு, ஸ்கூட்டரை 'திடீர்' நிறுத்தம் செய்தான்.

'அது தன் வீடுதானா?' - என்று உற்றுப் பார்த்தான்.

அவன் வீடேதான்!

ஆனால், அங்கே ஆள் நடமாட்டம் தெரிகிறதே! அதோ வீட்டுக்குள்ளிருந்து யாரோ ஒருவன் வெளியே வருகிறானே! யாரோவா! வந்தவன் மணி! வீட்டைக் காலி செய்வதற்கு மூவாயிரம் ரூபாய் வாங்கியவன்.

''அவன் எப்படி இங்கே? வீட்டுச் சாவி என்னிடம் இருக்கும்போது வீடு எப்படித் திறந்திருக்கிறது?''

சோமு ஸ்கூட்டரைத் தள்ளிக் கொண்டே போய் வீட்டின் முன்னே நிறுத்தினான். அவனைக் கண்ட மணி, ''வாங்க! வாங்க! நான் சொன்னபடி செஞ்சுட்டேன்! புலவரை ஒரே நாளில் காலி செய்ய வச்சுட்டேன், இல்லைங்களா?'' என்று கேட்டான்.

''அது சரி, வீடு காலியா இல்லையே!'' சோமு தயக்கத்தோடு கேட்டான்.

''ஒரு நாள் காலியாயிருந்தாலும் உங்களுக்கு வாடகை நஷ்டந்தானே? அதனாலே நேத்து இராத்திரியே பூட்டை உடைச்சு, நான் என் மனைவியோடு, மகளோடு, இங்கே குடியேறிட்டேன்... ரொம்ப நாளா தனியா போவலாம்னு என் சம்சாரம் சொல்லிச்சு. வீடு தோதா அமையலை. இந்த

வீடு பாதகமில்லை... சும்மா எடுத்துட்டேன்னு நினைக்கா தீங்க. மாசம் ஐந்நூறு ரூபாய் கொடுத்துடறேன்.''

சோமு திகைத்து நின்றான்.

''ஏங்க, வெளியிலே நிக்கறீங்க? உள்ளே வந்து காப்பி சாப்பிட்டுப் போலாங்களே...''

சோமுவுக்கு ஆத்திரம்! காட்டமான சொற்கள் நெஞ்சு வரை வந்தன. ஆனால் ரவுடி செங்கோடனையே மதிக்காத மகன் இவன் - இவனிடம் எதைச் சொல்ல முடியும்?

இதுதான் விதியா?

சோமு ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்தான்.

''இதோ பாருங்க, திரும்ப என்னைக் காலி செய்ய இன்னொரு ரவுடியைத் தேடிப்போனா நீ காலி! உங்கப்பா... உங்கம்மா... மொத்தக் குடும்பமே காலி! இதை எப்பவும் மறக்காதே!''

சோமு தன் பையில் கைவிட்டு, புலவர் தந்த சாவியை எடுத்து வீட்டுக்குள் வீசினான். ஸ்கூட்டர் கிளம்பி மரண ஊர்வலம் போல மெல்ல நகர்ந்தது.

●



# பொய்ம்மையும்

மன்னார்குடி விசுவநாதன்

**சோ**முவுக்குத் தூக்கம் வரவில்லை.

அறுபது வயதுக்கு மேல் ஊர் உலகத்து நினைவுகளுடன் குடும்பம் சம்பந்தமான நினைவுகளும் சேர்ந்து கொண்டால் தூக்கம் வராமல் போவது இயல்புதானே...?

சோமு பள்ளிக்கூடம் ஒன்றில் பியூனாக வேலை பார்த்து ஓய்வு பெற்றவர்.

அவர் மனைவி தங்கம்மா பள்ளிக்கூடம் ஒன்றில் சத்துணவு ஆயாவாகப் பணிபுரிந்து வருகிறாள்.

கும்பகோணம் தோப்புத்துறைப் பகுதியில் வீடு.

அங்கிருந்து மெல்லக் கால்நடையாகவே தினமும் நடந்து வந்து கடலங்குடித் தெருவிலிருக்கும் பள்ளியில் பியூன் வேலை பார்த்து வந்தார் சோமு.

தங்கம்மாவும் கால்நடையாகவே உச்சிப்பிள்ளையார் கோயில் வரை நடந்து வந்து அங்கிருந்து டவுன் பஸ் ஏறி டயமண்ட் டாக்கீஸ் பஸ் நிறுத்தத்தில் இறங்கி, காந்தி பூங்காவைக் கடந்து சென்று டவுன் ஹைஸ்கூல் சத்துணவுக் கூடத்தில் புகுந்து பணிபுரிந்து வந்தாள்.

சோமுவுக்குப் பூர்வீகம் ஜெயங்கொண்டம்.

தங்கம்மாவுக்குப் பூர்வீகம் கும்பகோணத்துக்குப் பக்கத்திலுள்ள அம்மாசத்திரம்.

தங்கம்மாவின் அப்பா நாராயணன் பட்டுத் தறி நெய்து வந்தார்.

வாரம் தவறாது ஒரு புடைவையை நெய்து முடித்து நகாசு எல்லாம் செய்து மடித்தெடுத்துப் பேப்பரைச் சுற்றி மேலே நூல் போட்டுக் கட்டிக் கக்கத்தில் வைத்துக் கொண்டு டவுன்பஸ் ஏறி திருபுவனம் சென்று மாஸ்டர் வீவர் என்று சொல்லப்படும் முதலாளியிடம் அதைக் கொடுத்துக் கூலிப்பணத்தைப் பெற்றுக் கொண்டு திரும்புவார்.

பணத்துடன் வீட்டினுள் நுழையும் அப்பாவிடம் அம்மா காமாட்சி சண்டை போடுவாள். ''என்னங்க... வர்ற வழியிலே ஏதாச்சும் காய்கறி வாங்கிட்டு வரப்படாதா...? இதுக்கு ஒரு தரம் நான் லோ..லோ..ன்னு அலையணு மாக்கும்... வீட்டிலே பொண்ணு தங்கம்மா இருக்கிறா...நான் ஒருத்தி இருக்கேன். கும்பகோணம் பஸ் ஸ்டாண்டிலே இறங்கித்தானே வர்றீங்க... எத்தனை ஸ்வீட் ஸ்டால் இருக்கு... நூறு கிராம் பூந்தி... நூறு கிராம் பக்கோடா... இப்படி ஏதாச்சும் வாங்கிட்டு வரப்படாதா? அல்லது... எத்தனை பழக்கடைகள் இருக்கு...நாலு ஆரஞ்சு... ஒரு சீப்பு வாழைப்பழம்...இப்படி எதுனாச்சும் வாங்கிட்டு வரப் படாதா? தேமேன்னு கையை வீசிக்கிட்டு வர்றீங்களே.. நீங்க செய்யுறது உங்களுக்கே நல்லா இருக்கா?''

மனைவியுடன் சண்டை போட விரும்பாத தங்கம்மாவின் அப்பா நாராயணன், 'ப்ச... ப்ச...'' என்று இரண்டு தரம் சொல்லிவிட்டு, கூலிப் பணத்தை விளக்குமாடத் தில் வைத்துவிட்டுப் பேசாமல் அப்பால் போய் விடுவார்.

பத்து வயதுப் பெண்ணாக இருந்த தங்கம்மா என்ன செய்வது... ஏது செய்வது... என்று புரியாமல் கைகளைப் பிசைந்து கொண்டு நிற்பாள்.

ஆப்பிள் கன்னங்கள், முத்துப்பல் வரிசை, அழகாக நேர் வகிடு எடுத்துச் சீவி விடப்பட்ட மயிர்க்கற்றை. குறு குறுத்த விழிகள்... அந்தச் சின்ன வயசிலேயே தங்கம்மாவின் முகத்தில் தனியான களையை ஏற்படுத்தியிருந்தது என்றுதான் சொல்ல வேண்டும்.

''தங்கம்மா... தங்கம்மா...''

தூக்கத்தில் பழைய நினைவுகள் கனவுகளாக உருமாறி மனத்திரையில் நிழலாட, அந்தச் சுகத்தில் தன்னை இழந்தவளாய்ப் படுத்துக் கிடந்த தங்கம்மா கணவரின் குரல் கேட்டுத் துணுக்குற்று எழுந்து உட்கார்ந்தாள்.

''என்ன... தூக்கக் கலக்கமா? நான் கூப்பிட்டது காதுல விழலையா..?''

கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டு, சற்றுத் தள்ளி கோரைப் பாயில் முழங்காலிட்டவாறு உட்கார்ந்திருந்த கணவரைப் பார்த்தாள் தங்கம்மா.

அவளுக்கு என்னவோ போலிருந்தது.

''என்னங்க... இன்னமும் தூங்கலையா...?''

''தூக்கம் வந்தால்தானே தூங்குறதுக்கு...''

''அது என்ன பொஸ்தகம்... பாதிப்பக்கத்தோட பாயிலே குப்புறக் கவிழ்த்து வச்சிருக்கீங்க...''

''சத்திய சோதனை...''

''ஓ... நீங்கதான் மகாத்மா காந்தியோட பக்தராச்சே... இந்த நேரத்திலேகூட அந்தப் பொஸ்தகத்தைத்தான் படிக்கணுமா...?''

''தங்கம்மா... எப்பல்லாம் எனக்குச் சோதனை ஏற்படுதோ... அப்பல்லாம் எனக்குப் பக்கத் துணையா இருக்கிறது இரண்டுதான். ஒண்ணு... நீ...என்னோட வாழ்க்கைத் துணைவி...அடுத்தது இந்தப் பொஸ்தகம்... இரண்டுமே... என்னைப் பொறுத்த வரைக்கும் சலிக்காத சமாசாரம்...''

''போதும்...உங்க புகழாரம்.. இப்ப என்னத்துக்கு இப்படிக் கொட்டக் கொட்டக் கண் விழிச்சுகிட்டு உக்காந்திருக்கீங்க... ராக்கோழி மாதிரி...?''

''அதான்... மொதல்லியே சொன்னேனே... எனக்குத் தூக்கம் வரலை தங்கம்மா...''

''அதுக்குத்தான் என்ன காரணம்னு கேக்கிறேன்..''

யோசித்தார் சோமு.

''ஓ... காலம்பற நம்ம பொண்ணு நீலாகிட்டேயிருந்து தபால் வந்துச்சே... அதையே நினைச்சுகிட்டு உட்கார்ந்திருக்கீங்களா?... எனக்கு இப்பத்தான் புரியுது...''

''நல்ல வேளை... இப்பவாச்சும் புரிஞ்சுதே...''

இப்பொழுது சோமு சம்மணமிட்டு உட்கார்ந்தார்.

எதையோ நினைத்துக் கொண்டவரைப் போல மேலே அண்ணாந்து பார்த்தார்.

சுவரில் அவர் பெண் நீலாவும் அவள் கணவர் நீலகண்டனும் புதுமண ஜோடியாகக் காட்சியளித்த போட்டோ கண்ணில் தென்பட்டது.

''என்னங்க... படத்தையே பார்க்கிறீங்க...? தன் கணவனோட செய்கை கொஞ்ச நாளாகச் சரியாவே

இல்லைன்னு பொண்ணு எழுதியிருந்தா... சீட்டாட்டம்... குடி... இப்படிப்பட்ட பழக்கமெல்லாம் வந்துட்டுதாம்... கவர்மெண்ட் உத்தியோகம்...இருந்தாலும்...பாதிக்கு மேல் செலவு பண்ணிட்டு மிச்சத் தொகையைத் தான் கொண்டு வந்து கொடுக்கிறாராம் மாப்பிள்ளை... பரஸ்திரீகளோட பரிச்சயம்... தொடர்பு ஒண்ணுதான் பாக்கி போலிருக்கு... அவ எழுதியிருந்ததைப் படிச்சதிலேர்ந்து எனக்கு அழுகை அழுகையா வந்திச்சு... நாம என்ன பண்றது...? அவ இருக்கிறது ஆட்டையாம்பட்டியிலே... நாம இருக்கிறது கும்பகோணத்துல...நூத்தி ஐம்பது மைலுக்கு மேலே இருக்கும்னு நீங்கதான் சொல்லுவீங்க...''

எங்கோ பார்த்தவாறு தனக்குத்தானே பேசிக் கொண்டிருந்த தங்கம்மா... தன் பாட்டுக்குப் பேசிக்கொண்டே போகிறோமே... கணவரிடமிருந்து பதில் ஒன்றும் வரவில்லையே...என்று நினைத்தவாறு சோமுவைப் பார்த்தாள்.

'சத்திய சோதனை' புத்தகத்தை நெஞ்சோடு சேர்த்து அணைத்தவாறு பாயில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார் சோமு.

பாவம்...

தங்கம்மாவுக்குத் தூக்கம் கலைந்தது கலைந்ததுதான்... அதன் பிறகு அவளுக்குத் தூக்கம் வரவே இல்லை...

பொழுது விடியும்வரை கொட்டக் கொட்டக் கண் விழித்தவாறு முழங்காலிட்டுக் கொண்டு பாயில் உட்கார்ந்தே இருந்தாள்.

மொட்டைக் கோபுர வாசல் நூலகத்தில் தற்காலிகப் பொறுப்பாளராக வேலை பார்க்கத் தொடங்கியிருந்தார் சோமு.

காலைச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு அவர் வெளியே புறப்படத் தயாராகிக் கொண்டிருந்த சமயம் கையில் மஞ்சள் பையோடு பயணமாகி நின்றிருந்தாள் தங்கம்மா.

''என்ன தங்கம்மா...எங்கே புறப்பட்டுட்டே...?''

புரியாமல் கேட்டார் சோமு.

''வேறே...எங்கே...? ஆட்டையாம்பட்டிக்குத்தான்... அங்கே நம்ம பொண்ணு என்ன செய்துகிட்டு இருக்காளோ? கையில பச்சைக் குழந்தை வேறே...''

''சரி..இப்ப நீ அங்கே போயி என்ன தான் செய்யப் போறே...?''

''ஏன்...என்னால் ஒண்ணும் செய்ய முடியாதுன்னு நினைக்கிறீங்களா? பள்ளிக்கூடத்துல போயி காலையிலேயே சொல்லிட்டு வந்துட்டேன்...ஒரு வாரம் லீவு வேணும்னு... ஒரு வாரம் வரைக்கும் அங்கேயே மகளோட தங்கியிருந்து எப்படியாச்சும் இதுக்கு ஒரு முடிவு கட்டிட்டு வரப் போறேன்...இப்ப..கொஞ்ச நாளாகத்தானே மருமகனுக்கு இந்தப் பழக்கமெல்லாம்...இதை முளையிலேயே கிள்ளி ஆகணும்...ஒரு குடும்பம்...அதுவும் நம்ம பொண்ணோட குடும்பம்...நம்ம கண்ணு முன்னாடியே சீர் குலையுறதைப் பார்த்துகிட்டு இருக்க முடியாதுங்க... நீங்க ஒரு வாரம் வரைக்கும் ராயர் கடையிலே சாப்பிட்டுப் பொழுதைப் போக்குங்க...நான் போயிட்டு வந்துடுறேன்..''

கிளம்பி விட்டாள் தங்கம்மா.

சோமுவால் அவளைத் தடுக்க முடியவில்லை. தடுக்கவும் இல்லை.

பஸ் ஓடிக் கொண்டிருந்தது.

தங்கம்மாவின் கண்களிலிருந்து அவளையுமறியாமல் கண்ணீர் வழிந்து கொண்டேயிருந்தது.

'ஒரே பொண்ணுண்ணு எப்படியெல்லாம் போற்றி வளர்த்தோம். அவ நெலைமை இப்படி ஆயிடுச்சே...காந்தியோட கொள்கையில அழுத்தமான நம்பிக்கை கொண்ட அப்பாவுக்குப் பொண்ணாகப் பொறந்து... கடைசியில... இப்படி குடிகாரன் மனைவின்னு மத்தவங்க தூரத்துற மாதிரி ஒரு வாழ்க்கை அவளுக்கு அமைஞ்சிட்டுதே... கடவுள் முகம் பார்க்கணும். மாப்பிள்ளையைத் திருத்தி நல்வழிக்குக் கொண்டு வராமே ஊர் திரும்பமாட்டேன்... திரும்பவே மாட்டேன். என் பொண்ணோட வாழ்க்கை மத்தவங்க பாராட்டும்படி இருக்கணும். அதுவரைக்கும் நான் ஓயவே மாட்டேன்...''

மனசுக்குள் சூளுரை செய்து கொண்டாள் தங்கம்மா.

பொங்கிப் பெருகிய கண்ணீரை மற்றவர்கள் அறியாமல் துடைத்துவிட்டுக் கொண்டாள்.



தறிநெசவில் பெயர்போன ஆட்டையாம்பட்டிக்குள் நுழைந்த தங்கம்மாவுக்கு மகள் வீட்டினுள் நுழைந்து பேரப்பிள்ளையைத் தூக்கி மடியில் வைத்துக் கொஞ்சிய பிறகுதான் நிம்மதியே பிறந்தது.

''என்னம்மா சாப்பிடுறே? மோர் கொண்டு வரட்டுமா? காப்பி போடட்டுமா?'' என்று கேட்டு முகம் மலரத் தன் தாயை வரவேற்றாள் நீலா.

''அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம்மா... மொதல்ல உன் கதையைச் சொல்லு... நீ கடிதத்திலே எழுதியிருந்ததெல்லாம் உண்மைதானா? உன் கணவன் குடிக்கிறானா?

ஐயோ... இந்தப் பிஞ்சுக் குழந்தையின் முகத்தைப் பார்த்தா... குடிச்சிட்டு சீரழியுறதுக்கும் மனசு வருமா? கடவுளே... கண்ணைத் திறந்து பார்க்கமாட்டியா?''

தங்கம்மாவின் கண்களிலிருந்து கண்ணீர் வழியத் தொடங்கியது.

ஊரிலிருந்து வந்ததும் வராததுமாகத் தன்னுடைய தாய் இப்படிக் கண்ணீர் வடிக்கிறாளே என்பதை நினைத்து மனம் குமுறினாள் நீலா.

பெட்டையின் குஞ்சு போலத் தாயின் அரவணைப்பில் வளர்ந்தவள் நீலா.

நீலா கண்கலங்கும்படி தங்கம்மா விட்டதே இல்லை.

இன்று தன் வீட்டினுள் வந்து உட்கார்ந்து கொண்டு, தனக்காகத் தன் தாய் கண்ணீர் விடுவதை அவளால் பொறுத்துக் கொள்ளவே முடியவில்லை.

''ஏம்மா...இப்படி வந்ததும் வராததுமா அழறே? இப்ப என்ன நடந்து போச்சு... குடியா முழுகிப் போயிட்டுது...''

''என்னடி சொல்றே? குடிதானே முழுகிப் போயிட்டுது... ஒரு குடும்பத்தின் தலைவன் குடிக்கவும் சூதாடவும் தொடங்கிட்டான்னு சொன்னா.. பிறகு அந்தக் குடும்பத்திலே என்னடி இருக்கு?'' என்றவாறே மீண்டும் கண்ணீர் வடித்தாள் தங்கம்மா.

''அம்மா! நான் சொல்றதைக் கொஞ்சம் பொறுமையாக் கேளு...நான் கடிதத்திலே எழுதியிருந்தது எல்லாமே உண்மைதான்... இரண்டு மூணு மாசமாகத்தான் அவருக்கு இந்தப் பழகக்கமெல்லாம் ஏற்பட்டுட்டுது. நானும் அவர் வேலை பார்க்கிற ஆபீசுக்கே போயி விசாரிச்சுப் பார்த்துட்டேன். யாரோ ஒருத்தர்... வேறே ஊர்லேயிருந்து

மாற்றலாகி இந்த ஆபீசுக்கு வந்திருக்காராம்... அவர்கிட்டே குடிப்பழக்கம், சீட்டாடுற பழக்கம் எல்லாம் உண்டாம்... அவருதான் கொஞ்சம் கொஞ்சமா இவரு மனசை மாத்தி...இப்படி ஆக்கிட்டாராம்...''

''பாவி...அவன் உருப்படுவானா? நல்லா இருந்த குடும்பத்தை இப்படிச் சீரழியும்படி செய்துட்டானே..அவன் நாசமாப் போக...'' கைகளைச் சொடுக்கிச் சாபமிட்டாள் தங்கம்மா.

''அம்மா... அதெல்லாம் ஏம்மா... நான் கொடுத்து வச்சது அவ்வளவுதான்...நான் வழிபடுகிற அம்பிகை என்னைக் கைவிட மாட்டாள்ங்கிற நம்பிக்கை எனக்கு இருக்கு...''

அதற்குமேல் பேசி மகளின் துயரத்தை அதிகமாக்க விரும்பாத தங்கம்மா எதையோ சாப்பிட்டு விட்டுப் பேரக் குழந்தையை நெஞ்சோடு அணைத்தவாறு ஒரு பக்கமாகப் போய்ப் படுத்துவிட்டாள். பயணக் களைப்பு...படுத்தவுடன் தூக்கம் அவளை ஆட்கொண்டுவிட்டது.



விடிந்தது.

பல் துலக்கி முகம் கழுவியபின் மகள் நீலா போட்டுக் கொண்டு வந்து கொடுத்த காபியைக் குடித்து முடித்தாள் தங்கம்மா.

ஒரு பக்கமாகப் போய் உட்கார்ந்து குழந்தையை மார்போடு அணைத்துப் பாலூட்டிக் கொண்டிருந்தாள் நீலா.

தங்கம்மாவுக்குத் துயரம் ஒரு பக்கம், ஆத்திரம் ஒரு பக்கம் தாங்க முடியவில்லை.

மருமகன் நீலகண்டனைப் பார்த்து நாக்கைப் பிடுங்கிக் கொள்கிற மாதிரி நான்கு கேள்விகள் கேட்க வேண்டுமென்று துடியாய்த் துடித்தாள்.

எங்கே ஆளைக் காணோம்?

காலை மணி ஏழு தானே ஆகிறது...

அதற்குள் ஆள் எங்கே போய் விட்டான்?

அல்லது...இன்னமும் தூங்குகிறானா?

நீலாவிடம் கேட்பதற்குத் தயக்கமாக இருந்தது.

கேட்பதைத் தவிர வேறு வழியும் தெரியவில்லை தங்கம்மாவுக்கு.

''என்னம்மா நீலா! பொழுது விடிஞ்சு மணி ஏழு ஆவுது... இன்னுமா உன் புருஷன் தூங்கிக்கிட்டு இருக்கான்?'' வியப்புடன் கேட்டாள் தங்கம்மா.

''அவர் ஆறு மணிக்கெல்லாம் எழுந்து போயிட்டாரும்மா...'' என்றாள் நீலா.

''ஏன்...ஆபீஸில் ஏதாவது அவசரமான வேலையா...''

''...அப்படின்னு சொல்லிட்டுத்தாம்மா போவாரு... ஆனா... அவரோட கூட்டாளியைப் போய்ப் பார்த்துட்டு... இரண்டு பேருமா ஊர்க்கோடியிலே..ஆற்றங்கரையிலே ஒதுக்குப்புறமாகப் போய் உட்கார்ந்துகிட்டு சாராயம் குடிப்பாங்க... போதை ஏறி... அது குறைஞ்ச பிறகு ஆற்றிலே இறங்கிக் குளிச்சிட்டு நல்ல பிள்ளை மாதிரி வீட்டுக்குள்ளே வந்து நுழைவாரு...இப்ப..அவர் வருவதற்கு இன்னும் இரண்டு மணி நேரம் ஆகும்...''

மகள் நீலா சொன்னதைக் கேட்டு மேலும் ஆத்திரமடைந்தாள் தங்கம்மா.

ஆற்றங்கரை எந்தப் பக்கம் இருக்கும்?

அங்கேயே போய்..மானம் போகிற மாதிரி நாலு கேள்வி கேட்டுட்டு வந்துடுவோமா?

ம்ஹூம்...அது சரிப்பட்டு வராது.

வேறு வழியைத்தான் தேட வேண்டும்.

ஒன்பது மணி இருக்கும்.

வழக்கத்துக்கு மாறாக குளிக்காமல் தன்னுடைய கூட்டாளி நண்பனையும் அழைத்துக் கொண்டு வீட்டினுள் வந்து நுழைந்தான் நீலகண்டன்.

தன் அத்தையைப் பார்த்து, ''அத்தை! நீங்க எப்ப ஊர்லேயிருந்து வந்தீங்க?'' என்று கேட்டவன், தன்னுடைய நண்பனின் பக்கம் திரும்பி, ''மிஸ்டர் கண்ணன்! இவங்கதான் என்னோட அத்தை... என்னோட மாமாவை நீங்க பார்த்திருக்க மாட்டீங்க... காந்தி பக்தர். எப்பவும் காந்தியடிகளோட சத்திய சோதனை புத்தகத்தைக் கையிலே வச்சுகிட்டுத்தான் இருப்பார்... காந்தியக் கொள்கைகளில் ரொம்பவும் ஈடுபாடு கொண்டவர். அந்த வட்டாரத்தில் அவருக்கு ரொம்ப நல்ல பேரு...''

இப்பொழுது தங்கம்மாவின் மூளையில் மின்னல் பளிச்சிட்டது.

சுவர் நிலைப்படியில் சாக்கட்டியினால் எழுதப்பட்டிருந்த வரிகளைக் கூர்ந்து படித்தாள்.

''மாப்பிள்ளை...! அதை ஏன் கேக்குறீங்க? அதுக்காகத் தான் நான் திடுதிப்புன்னு புறப்பட்டு இவ்வளவு தூரம் ஓடியாந்திருக்கேன்...காந்தியின் கொள்கையும் போச்சு...சத்திய சோதனையும் போச்சு. பொழுது விடிஞ்சு

பொழுது போனா... குடிக்கிறதிலேயே மூழ்கிப் போயிடுறாரு உங்க மாமா. மாப்பிள்ளை! எனக்கு என்ன செய்யுறதுன்னே தெரியலை...எந்தச் சண்டாளனோ அவருக்கு இந்தப் பழக்கத்தைக் கத்துக் குடுத்துட்டான்...அக்கம் பக்கத்திலே யெல்லாம் அவரைக் கீழ்த்தரமாகப் பேசுறாங்க...அதைக் கேட்டுக்கிட்டு என்னாலே சும்மாவே இருக்க முடியவில்லை... தயவு செய்து நீங்க ஒரு வாரம் லீவு போட்டுவிட்டு அங்கே வாங்க...எப்படியாச்சும் அவரைத் திருத்தி...அந்தக் கஸ்மாலப் பழக்கத்திலேயிருந்து அவரை விடுவிச்சிடுங்க மாப்பிள்ளை! இல்லைன்னு சொன்னா... நான் உயிரை விடுறதைத் தவிர வேற வழியே இல்லை...''

தங்கம்மாவின் கண்களிலிருந்து கண்ணீர் பொலபொலவென வழிந்தது.

நீலகண்டனின் நண்பர் கண்ணப்பன் போன இடம் தெரியவில்லை.

நீலகண்டன் மட்டுமன்று; அவன் மனைவி நீலாவும் சிலையாகி நின்றிருந்தாள்.

நிலைப்படியில் சாக்கட்டியினால் எழுதப்பட்டிருந்த வரிகளை மீண்டும் ஒரு முறை படித்தாள் தங்கம்மா.

**''பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரை தீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின்''**

●



# அந்தரத்தில்... ஊஞ்சல்

மாலா உத்தண்டராமன்

சாலையோரத்தில் கம்பம் நட்டு, கம்பி கட்டி, அந்தரத்தில் வித்தை காட்டி வாழ்க்கை வண்டியை ஓட்டும் கழைக் கூத்தாடிக் கூட்டம் அந்த ஊரின் எல்லைப்புறத்தில் கூடாரம் போட்டுத் தங்கியிருந்தது.

அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பதினைந்து கூடாரங்கள் தேறும். எங்கிருந்தோ பிழைப்புத் தேடி, அந்த ஊருக்கு வந்து, மணல்வெளியில் தற்காலிக வீடமைத்து, அப்பகுதியில் ஒரு சிறுதீவு போல - கிட்டத்தட்ட அறுபது பேர் அடங்கிய குழு.

குடும்பத்துக்கு ஒருவர் கூடாரத்தில் இருந்து கொள்ள, மற்றவர்கள் தனித்தனிப் பிரிவுகளாக ஆளுக்கொரு திசையில் சென்று தெருக்களில் வித்தை காட்டிக் கிடைக்கும் வருமானத்தில் வயிற்றைக் கழுவியது போக மிச்சத்தைச் சேமித்து வைக்கும் எண்ணம் கொண்டவர்கள் அவர்கள்.

மீனாட்சி. வயது பதினாலு. பல வண்ணங்களில் திட்டுத் திட்டாக ஒட்டுப் போட்ட பாவாடை - தாவணி; படிய வாரி, இறுக்கிப் பின்னிய இரட்டைச் சடை.

கழுத்தில் மேளத்தை மாட்டி, இரு கைகளால் தட்டி 'டகடக'வெனச் சப்தம் எழுப்பினாள்.

``ஐயா வாங்கோ! அம்மா வாங்கோ! எல்லாரும் வாங்கோ...உங்க கண் முன்னால அதிசயம் நடக்கப் போவுது...இந்தச் சின்னப் பொண்ணு, அறியாத பொண்ணு, அந்தரத்திலே கம்பி மேலே நடக்கப் போறா...கரணம் தப்பினால் மரணம்! உயிரைப் பணயம் வச்சு சாகசம் செய்யப் போறா... எல்லாரும் பாருங்க...நல்லாப் பாருங்க...ஜோரா கை தட்டுங்க...பார்த்த பிறகு மனசு இரங்கிக் கொஞ்சம் காசு போடுங்க. ஐயாமாரே! அம்மா மாரே! சின்னவங்களே! பெரியவங்களே! சீக்கிரம் வாங்கோ!'' - கணீர் குரலில் கடகடவென ஒப்பித்தாள் மீனாட்சி. இடையிடையே தாளத்தையும் பொருத்தமாகத் தட்டினாள்.

கூட்டம் வட்டமாகச் சூழ்ந்தது.

இருபுறமும் சவுக்குக் கம்பம்; இரண்டையும் இணைக்கும் கம்பி; சாய்ந்து நின்றிருந்த கம்பத்தில் ஏழுவயது இராணி சிறிதளவு கூடப் பதற்றமில்லாமல் கிடுகிடுவெனத் தாவி மேலே ஏறினாள்.

திடீரென்று பாரம் கூடியதால் கம்பமும், கம்பியும் ஒருசேர அசைந்தாடின. இராணி இரு கைகளையும் பக்கவாட்டில் நீட்டி, பாலன்ஸ் செய்து, கம்பி மீது அசாதாரணமாக நடந்து, சிறிது சிறிதாக முன்னேறி, அடுத்த முனைக்கு வந்து சேர்ந்தாள். லாகவமாகக் கம்பத்தில் சரிந்து, வேகமாக இறங்கி, கீழே குதித்துக் கையை ஆட்டிச் சிரித்தாள். கூட்டத்திலிருந்து பலத்த கரவொலி.

''வணக்கமுங்கோ! ரொம்ப நன்றிங்கோ! இப்போ இந்தப் பொண்ணு இராணி டான்ஸ் ஆடுவா. நான் பாட்டுப் பாடுவேன்.''

அடுத்த நிகழ்ச்சியை அறிவித்தாள் மீனாட்சி.

இன்னொரு சிறுவனும், மீனாட்சியும் இசைக் கருவிகளை இயக்கிப் பாட-

இசைக்கேற்றாற்போல் இடைவளைத்து, நளினமாகக் கை கால் அசைத்து நடனமாடினாள். பயமில்லாமல் அவள் ஆடிய நாட்டியம் கண்டு கூட்டத்தினர் கைதட்டி ஆரவாரித்துப் பாராட்டினர். மீண்டுமொரு முறை ஆடச் சொல்லி ரசித்தனர்.

பிறகு-

ஒவ்வொரு நிகழ்ச்சியையும் மீனாட்சி அறிவிக்க உடம்பை வில்லாய் ஒடித்து, நெளித்து, மடக்கி, நிமிர்த்தி, தரையில் பல்டியடித்து, மேலும் சில வித்தைகள் செய்தாள் இராணி. முடித்துவிட்டுத் தட்டேந்தி கூட்டத்தாரை வலம் வந்தாள். சில்லறைகளை அள்ளி வீசித் தட்டை நிரப்பினர் ரசிகர்கள்.

அந்தி சாய்ந்திருந்தது. கூடாரங்களில் சிம்னி விளக்குகள் கண் சிமிட்டத் தொடங்கின. இரவு உணவுக்குச் சமையல் தொடங்கப்பட்டிருப்பதை அடுப்பிலிருந்து வெளிவந்த புகை பறை சாற்றியது.

இசைக் கருவிகளைத் தூக்கிக் கொண்டு, இராணியுடன் கூடாரத்திற்கு வந்து சேர்ந்தாள் மீனாட்சி.

''வாம்மா மீனாட்சி.'' - கூட்டத் தலைவன் இராக்கப்பன் அன்போடு வரவேற்றான். ஐம்பத்தைந்து வயதைத் தாண்டியிருந்தான். வெற்றிலை குதப்பிய பற்களில் காவி ஏறியிருந்தது.

அன்றைய வசூல் தொகையை ஒரு பெரிய துணி முடிச்சாக அவனிடம் நீட்டினாள் மீனாட்சி.

''இந்தக் கூட்டத்திலேயே அதிகமாச் சம்பாரிச்சுத் தர்றது நீதாம்மா. இது உன் உழைப்பால கிடைச்ச பணம். அதை எங்கிட்ட ஏன் கொடுக்றே? நீயே வச்சுக்க.'' - ஆணித்தரமாகக் கூறினான் இராக்கப்பன்.

''என்ன ஐயா நீ? எப்பப் பார்த்தாலும் இதையே சொல்லி என்னைப் பிரிச்சுப் பேசறே... சம்பாரிச்சதை உங்கிட்டே தராம வேற யாருகிட்டே தரணும்? எனக்கு எல்லாமே நீதானே... இனிமே இந்த மாதிரிப் பேசி என் மனசை நோகடிக்காதே.'' உதடுகள் துடிக்கச் சொல்வதற்குள் அழுகை. நரம்புகள் புடைத்து, மீனாட்சிக்குக் கண்ணீர் துளிர்க்கலாயிற்று.

''உடனே கண்ணைக் கசக்கி என் வாயை அடைச்சிடறே நீ... உன் நல்லதுக்குத்தாம்மா சொல்றேன். புரியாம நீ பாட்டுக்கு அழறே... சரி. பணத்தைக் கொடு. ஆனா, இதை நான் செலவு செய்ய மாட்டேம்மா. உனக்கும், தங்கச்சிக்கும் பிற்காலத்தில உதவட்டுமேன்னு தனியா சேர்த்து வச்சுக்கிட்டு வரேன். மொத்தமா உனக்கே திருப்பிக் கொடுத்திடறேம்மா.''

''போதும் நிறுத்துய்யா... பிறகு பேசிக்கலாம். இப்போ சோறு பொங்கணும். குழம்பு வைக்கணும். ஏகப்பட்ட வேலை கிடக்கு எனக்கு.'' - வழியில் மார்க்கெட்டில் வாங்கி வந்த காய்கறி, பருப்பு, அரிசி அடங்கிய பையோடு அடுப்படி நோக்கி நடந்தாள்.

''இந்தப் பொண்ணு எதுக்கு இப்படிக் கஷ்டப்படணும்? என்னைக்குத்தான் நல்ல காலம் பிறக்கப்போவுதோ, தெரியலையே...'' பாசமாக அவளைப் பார்த்தவாறு வெற்றிலையில் சுண்ணாம்பு தடவினான் இராக்கப்பன்.

இராக்கப்பனுக்கும் இராணிக்கும் சாப்பாடு பரிமாறினாள் மீனாட்சி. பின்னர் அவளும் சாப்பிட்டு முடித்து, பாத்திரங் களைக் கழுவி, அடுக்கி வைத்துவிட்டுக் கூடாரத்தின் வெளிப்பக்கம் வந்தாள்.

''ஐயா... நான் தெருவரை போய்ட்டு வரேன்.''

''ஓ... அடுத்த கடமை கூப்பிடுதோ? சரிம்மா... போயிட்டு சீக்கிரமா திரும்பிடு. இப்படி ஓய்வு ஒழிச்சலில் லாம அன்றாடம் அவதிப்படணும்னு உன் தலையில எழுதி யிருக்கு...''

''ஐயா... நீ படுத்துக்க... இராணி தூங்கிட்டிருக்கா. பார்த் துக்க. நான் வரேன்.'' வேகமாக வெளியேறினாள்.

அப்பகுதியின் முகப்பிலிருந்த தெரு விளக்குக்குக் கீழே பத்துப் பதினைந்து சிறுவர் - சிறுமியர் குழுமியிருந்தனர். அதில் சிறுமிகள் எண்ணிக்கை கூடுதலாயிருந்தது.

''இன்னிக்குப் பள்ளிக்கூடத்தில சொல்லிக் குடுத்ததை எல்லாரும் படிங்க. அப்புறம் வீட்டுப்பாடம் எழுதுங்க'' என்றாள் மீனாட்சி.

அவள் கட்டளைக்கு அடிபணிந்து ஆளுக்கொரு மூலை யில் அமர்ந்து படிக்கலானார்கள் அவர்கள். அவளிடம் புத்தகத்தை நீட்டி ஒப்பித்தார்கள். வீட்டுப்பாடத்தில் தவறாக எழுதியவர்களைச் செல்லமாகக் கண்டித்துத் திருத்தி எழுத வைத்தாள். ஒரு மணி நேரம் படிப்பும் எழுத்து வேலையும் முடிந்தன.

''ஒழுங்காப் பள்ளிக்கூடம் போவணும். நல்லாப் படிக்கணும். பரீட்சையில் நிறைய மார்க் எடுக்கணும். நாளைக்கும் இதே நேரத்துக்கு இங்கே வந்துடுங்க'' என்று

சொல்லி அனைவரையும் அனுப்பி வைத்தாள். மகிழ்ச்சி யோடு கூடாரம் நோக்கி ஓடினார்கள் பிள்ளைகள்.

கூடாரத்தினுள் நுழைந்தவளை இராக்கப்பனின் கரகரப் பான குரல் தடுத்து நிறுத்தியது.

''பாடம் சொல்லிக் கொடுத்தாச்சா? காலையிலிருந்து பொழுது சாயறவரைக்கும் தெருவுல கால் கடுக்க நின்னு, கத்தி, பாடி, வித்தை காட்டி அசந்து போறே... அது போதா துன்னு இராத்திரியில எதுக்கும்மா இந்த வேதனையெல் லாம்? நமக்கு அரை வயித்துக் கஞ்சிக்கே பெரும்பாடா யிருக்கு. இந்தப் பசங்களுக்கு எதுக்கும்மா படிப்பு, பள்ளிக் கூடமெல்லாம்? நீ ஏம்மா அவங்களுக்காக வாடி வதங்கறே? நான் சொல்றதைக் கேளு பேசாம...'' தொடர்வதற்குள் இராக்கப்பனின் வாயைப் பொத்தினாள் மீனாட்சி.

''ஐயா!... எனக்கு நீ ஒரு வாக்குறுதி தரணும்.''

''என்னம்மா மீனாட்சி? சொல்லு...''

''நம்ம கூடாரத்திலிருந்து பள்ளிக்கூடம் போய்ப் படிக்கிற பிள்ளைங்களை எவ்வளவு கஷ்டம் வந்தாலும் நிறுத்திட வேணாம். நம்ம கூட்டத்திலே கொஞ்சம் பேராவது படிச்சு மேலே வரட்டும். தயவு செஞ்சு அதுக்கு முட்டுக்கட்டை போட்டுடாதீங்க. என் பணத்திலே பாதியை அவங்க படிப்புக்காகச் செலவு பண்ணுங்க. ஒருவேளை எனக்கு ஏதாவது ஆகி நான் இல்லாமப்போனா, சேர்த்து வச்சிருக்கிற மீதிப்பணத்தையும் வச்சு அவங்களைக் கரையேத்திட வேண்டியது உங்க பொறுப்பு.'' - கெஞ்சிக் கேட்டாள்.

''ஏம்மா...பெரிய வார்த்தையெல்லாம் பேசறே? நம்ம பிழைப்புக்கு இதெல்லாம் சரிப்பட்டு வராதும்மா! என்னவோ நீ பாட்டுக்குச் சத்தியம் கேட்கறே... முடியாதுன்னா, அழத்

தொடங்கிடுவே. சரி..சரி. உன் இஷ்டம். இப்ப சந்தோஷமா?''

''அது போதும் ஐயா...''

திருப்திப்பட்டாள் மீனாட்சி. இராணியின் அருகில் சுருண்டு படுத்துக்கொண்டு உறங்கினாள்.

'என்னடா இது? இந்தப் பொண்ணோட தினமும் வம்பாப் போச்சு.' - சலித்துக் கொண்டு, வெற்றிலையை மென்றான் இராக்கப்பன். ஐந்து வருடங்களுக்கு முன்பு நடந்த சம்பவம் அவனது மனத்திரையில் ஓடலாயிற்று.

அருகில் சலசலப்பு. கண்விழித்து, தூக்கக் கலக்கத்தோடு படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தான்.

எதிரே கந்தன், முனுசாமி, செல்லம்மா என அவனது கூட்டத்தினர் ஐந்தாறு பேர் நின்றிருந்தார்கள்.

''தலைவா! எந்திரிச்சு வா. தனியா உங்கிட்டே பேசணும்.'' கிசுகிசுத்தான் கந்தன்.

கூடாரத்திலிருந்து சிறிது தூரம் நடந்தார்கள் அவர்கள்.

''நீ செய்றது நல்லாயில்லை தலைவா! அந்த மீனாட்சிப் பொண்ணு இராணியோடு இங்கே வந்து இரண்டு வருஷமாகுது. பெரிய இடத்துப் பிள்ளை போலிருக்கு. நீ பாட்டுக்கு நம்ம கூட்டத்திலே சேர்த்துட்டு தங்கறதுக்கு இடம் கொடுத்தது சரியில்லை. திருப்பி அனுப்பிடலாம். யாராவது தேடிட்டு வந்தா பிரச்னையாயிடும்'' என்றான் கந்தன்.

''என்னவோ அப்பா, அம்மாவோட ரயில்ல வந்திச்சாம். இரண்டுபேரையும் விட்டுட்டு, பெத்தவங்க போயிட்டாங்களாம். அதனால இங்க வந்திருச்சின்னு கதை விடுறா மீனாட்சி. அதை நம்பிட்டு நீயும் அவங்க இரண்டு பேருக்கும்

அடைக்கலம் கொடுத்திருக்கே.'' - அங்கலாய்த்தாள் செல்லம்மா.

''உஷ்..! சத்தம் போட்டுப் பேசாதீங்க. நானும் எத்தனையோ முறை தலைப்பாடா அடிச்சுக்கிட்டேன். ஆனா அந்தப் பொண்ணு ஒண்ணுகிடக்க ஒண்ணு சொல்லிட்டிருக்கு. கோபமாப் பேசினா கண் கலங்குது. படிச்ச குடும்பத்துப் பொண்ணு போலிருக்கு. பணக்காரங்களா இருப்பாங்க... யாராவது வந்து கேட்பாங்கன்னு பார்த்தா இத்தனை வருஷமா யாருமே வரலை. சம்பாதிக்கிற காசை ஒரு பைசா கூட எடுக்காம அப்படியே எங்கிட்டே தந்துடுது. பரிதாபமாயிருக்கு. என்ன செய்றதுன்னு தெரியலை...'' திணறினான் இராக்கப்பன்.

''வேணாம் தலைவா! மூணாவது ஆளை நம்ம கூட்டத்திலே வச்சிருக்கிறது என்னைக்கும் ஆபத்து. திடீர்னு போலீஸோட வந்து கூட்டிட்டுப் போயிடுவாங்க. அதனால சீக்கிரமா அவங்க இரண்டு பேரையும் அனுப்பி வச்சிடு. இது சரிப்பட்டு வராது.'' - கண்டிப்பாகக் கூறினான் முனுசாமி.

''சரி... நீங்க போங்க. இன்னும் இரண்டு மூணு நாள்ல இதுக்கு முடிவெடுத்துடறேன்.'' வாக்களித்து, அவர்களை அனுப்ப எத்தனித்தபோது -

இராக்கப்பனின் பாதங்களை இரு கரங்கள் தொட்டுக் கும்பிட்டன. அந்தக் கரங்களுக்குச் சொந்தக்காரி மீனாட்சி. அவளது கண்ணீர் அவன் பாதங்களை ஈரமாக்கியது.

இராக்கப்பனும் மற்றோரும் பிரமித்து நின்றார்கள்.

அவள் தோள் பிடித்துத் தூக்கி நிறுத்தினான் இராக்கப்பன்.

''நீங்க பேசினது எல்லாம் கேட்டேன் ஐயா! என்னை இங்கிருந்து அனுப்பிடாதீங்க. நான் போகமாட்டேன்.

போனா நானும் இராணியும் உசிரோட இருக்கமாட்டோம். தயவு பண்ணுங்க ஐயா!''

''இதோ பாரும்மா மீனாட்சி... எங்க கூட்டத்திலே சட்ட திட்டங்கள் இருக்கு. பழக்கவழக்கங்கள் புதுமாதிரியாத் தெரியும். இங்கே நீ தங்கறதெல்லாம் முடியாத காரியம். பொண் குழந்தையோடு இராத்திரி நேரத்திலே வந்தியேன்னு பாவப்பட்டு இடம் தந்தேன். இனி நீ இங்கு இருக்கக்கூடாது. உன் ஊருக்குப் போயிடு. ஓர் ஆளை வேணும்னா துணைக்கு அனுப்பறேன். ஆமா, நீ எந்த ஊரு?''

''சொல்லவே மாட்டேன். போக முடியாது. உங்களைக் கெஞ்சிக் கேக்கறேன். எனக்கு வேலை குடுங்க. நாங்க இரண்டு பேரும் உங்க கூடவே இருந்துக்கறோம். இனிமே ஊர்ப்பக்கமே திரும்ப மாட்டேன்.'' - விடாப்பிடியாகச் சொல்லி, கட்டிலுக்கருகில் சப்பணம் போட்டு உட்கார்ந்து கேவிக்கேவி அழுதாள்.

''நீ சின்னப் பொண்ணு. கூடவே பச்சைக் குழந்தை வேற. நாங்க அன்றாடம் வெளியில் பிழைப்பு நடத்தற கூட்டம். வானமே எங்களுக்குக் கூரை. மழைக்காலத்திலே ஒதுங்கற துக்குக்ககூட இடம் இல்லாத ஏழை ஜனங்க...உன்னையும் இங்கே வச்சுக்கிட்டு சமாளிக்கறது நடக்காத காரியம். வீண் வம்பு எதுக்கு?''

''நாளைக்கே உன் ஊருக்கு ஓடிடு.''

''நீ இங்கே இருக்கக்கூடாது.''

''ஒருகாலும் சம்மதிக்கமாட்டோம்.''

ஆளாளுக்குச் சரமாரியாக வைதார்கள். மீனாட்சியை வலுக்கட்டாயமாகத் துரத்த முடிவு செய்தார்கள்.

"ஐயா! இதுக்கு மேலே நான் மறைக்கறது சரியில்லை. இப்போ நடந்த உண்மையை உங்ககிட்ட சொல்லிடறேன்." கண்ணீரைத் துடைத்தபடி உச்ச ஸ்தாயியில் கத்தினாள் மீனாட்சி.

அனைவரும் அமைதியாக அவளை நோக்கினர்.

"எங்க அம்மா, அப்பாவுக்கு இரண்டாவது குழந்தையும் பொண்ணாப் பொறந்ததால ரொம்ப வருத்தம். என் தங்கச்சி இராணியை விஷம் வச்சுக் கொன்னுடறதாகவும், இல்லாட்டி குப்பைத் தொட்டியில வீசிடறதாகவும் அவங்க பேசிக் கிட்டாங்க. எனக்குப் பயமாயிடுச்சு. படிச்சவங்க. அதுவும் ஓரளவுக்கு வசதியிருக்கிற பெத்தவங்களே பெண் குழந்தை யைச் சாகடிக்க முடிவு செஞ்சதை நினைச்சதும் மனசு பதறிச்சு. அவங்களுக்குத் தெரியாம, ராவோட ராவா குழந்தையைத் தூக்கிவிட்டு ரயிலேறி இங்கே வந்திட்டேன். இனிமே அங்கே போனா எங்களைக் கொன்னுடுவாங்க. அதுக்குப் பதிலா நீங்களே என்னையும் இந்தக் குழந்தையை யும் கொன்னுடுங்க. சந்தோஷமா செத்துடறோம்." - சொல்லி முடித்துத் தேம்பினாள் மீனாட்சி.

அந்தனை பேரின் முகத்திலும் ஈயாடவில்லை. வாயடைத் துப்போய்ச் சிலை போல் நின்று, மீனாட்சியை அதிசயித்து உற்று நோக்கியபடி இருந்தார்கள்.

மீனாட்சி கண்ணீரைத் துடைத்தவாறு பேச்சைத் தொடர்ந்தாள்.

"படிச்ச பணக்காரக் குடும்பத்திலே பிறந்திருந்தாலும் நானும் இராணியும் பொண் பிள்ளைகளாக இருந்ததால் எங்க நிலைமை பரிதாபமாயிடுச்சு. பள்ளிக்கூடத்துல படிக்கிற வாய்ப்பு பறிபோயிடுச்சு. அந்த நிலைமை இங்கிருக்கிற

பெண் குழந்தைகளுக்கு வரக்கூடாதுன்னு உறுதி எடுத்திருக்கேன். என் வருமானத்தில் கொஞ்சம் பணத்தை அவங்க படிப்புக்காகச் செலவு செய்ய முடிவு பண்ணிட்டேன். அவங்களுக்காவது எதிர்காலம் நல்லபடியா அமையணும்னு ஆசைப்படறேன். நீங்கதான் அதுக்கு ஒத்துழைக்கணும்.'' - சொற்கள் திணற, கையெடுத்துக் கும்பிட்டாள்.

''மீனாட்சி! இராணி! நீங்க இரண்டு பேரும் இனி எங்க குடும்பத்துப் பிள்ளைகள். நீங்க இங்கே இருந்துக்கலாம். ஊருக்குத் திரும்பிப் போக வேணாம். யார் வந்து கேட்டாலும் அவங்களைச் சமாளிச்சு, திருப்பித் துரத்த வேண்டியது எங்கள் பொறுப்பு'' - ஒருமித்த குரலில் எல்லாரும் கூறி, இருவரையும் வாரி அணைத்துக் கொண்டார்கள்.

புதிதாக இணைந்து கொண்ட அந்த இரண்டு சிறுமிகளால் சந்தோஷம் கூடிக் கொண்டே போவதை நினைத்து நெஞ்சம் பூரித்தார்கள் அனைவரும்.



# வாழ்வு இனி வசப்படும்

மேகலா சித்ரவேல்

வான மரத்தில் இருட்டுக்கல் விழுந்ததும் பொல பொலவென நட்சத்திரப் பூக்கள் கொட்டத் தொடங்கிய பின்மாலைப் பொழுது.

தன்னெதிரே நின்று கொண்டிருந்த ரவியை அப்பா என்னும் சிங்கம் வார்த்தைகளால் குத்திக் குதறிக் கொண்டிருந்தது. பார்வையில் சீற்றத்தைக் கொட்டிக் கொண்டிருந்தது அம்மா என்னும் புலி.

''வியாபாரின்னா பத்து கணக்கு எழுதத்தான் சொல்லுவான். அதைப்பத்தி நமக்கென்ன? சொன்ன வேலையைச் செய்துட்டு காசை வாங்கிட்டு வரவேண்டியது தானே? அதைவிட்டுட்டு அவன்கிட்டே சட்டம் பேசி இருக்கே. அவன் துரத்திட்டான். இனிமே என்ன செய்யப் போறே? ஒழுங்கா வேலை செய்யறவனுக்கே மூணுவேளை சோறு கிடைக்கலை. நீ ஊரு சுத்திட்டு வந்து திங்கறதுக்கு இந்த வீடு என்ன மலையடிவாரத்து மேய்ச்சல் நிலமா? போடா வெளியே...''

''எனக்குன்னு வந்து வாச்சானே தலைப்பிள்ளை; தறுதலை, பத்து ரூபாய் சம்பாதிக்க வக்ககில்லாம, தடிமாடு மாதிரி சுத்தறான். டேய்! இனிமே சோறு கொட்டிக்க வா சொல்றேன். அப்படியே ஏதாவது லாரியில அடிபட்டு சாவேண்டா...''

ரவிக்கு எள்ளளவும் வருத்தமில்லை. படி இறங்கி வெளியே வந்தான். இன்று தானா இவர் இப்படிக் கத்து கிறார்? எம்.ஏ. தேர்வு எழுதி முடித்த அன்று நிம்மதியாக நண்பர்களுடன் அரட்டை அடித்து விட்டு மெதுவாக வீட்டிற்குள் நுழைந்தபோது அப்பாவின் குரல் கேட்டது. மெதுவாகப் பதுங்கிக் கேட்டான்.

''குடும்ப பாரத்தை தனியா சுமந்து அலுத்துப் போச்சு. ரவி எப்ப பரீட்சை எழுதுவான்னு காத்துக்கிட்டிருந்தேன். இன்னிக்கு நிம்மதியா இருக்கு. கொஞ்சம் ஓய்வா இருக்கட்டும்னு அவனை விட்டுட்டா சோம்பேறியாயிடு வான். நாளைக்கு காலையில எட்டு மணிக்கு இராமசாமி கடைக்குப் போகச் சொல்லு. கணக்கு எழுதற வேலை ஏற்பாடு செய்துட்டேன். வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்துடும்படியும் சொல்லு.. கழுதை மேய்க்கிற வேலைன்னாலும் கவர்மெண்ட் கழுதையை மேய்க்கணும். என்ன நான் சொல்றது?''

ரவிக்குள் எதிர்காலத்தைப் பற்றின கனவுகள் கலைந்து போயின. நாளைக்கு கணிணி கற்றுக் கொள்ள நண்பனிடம் செய்திருந்த ஏற்பாடுகளை நினைத்தபோது வலித்தது. எப்படியாவது ஆறுமாதத்தில் வெளிநாடு செல்ல முயற்சி செய்து வந்தது தந்தையின் எதிர்பார்ப்புகளால் இடிந்து தரைமட்டமாகி விட்டது.

தந்தை என்னும் சர்வாதிகாரியின் அசுரப்பிடியில் தவிக்கும் குடும்பம் இது. இங்கு சுயமாகச் சிந்திப்பதே வீண்வேலை. தலைகுனிந்து தன்னறைக்குள் அன்று நுழைந்தவன், இன்று வரை நிமிரவில்லை.

எத்தனையோ நேர்காணல்கள், தேர்வுகள் எதிலும் வெற்றி கிடைக்கவில்லை. கணக்கு எழுதும் பணி மட்டும்

கடை மாற்றி கடை, பெரிய மனிதர் மாற்றி பெரிய மனிதர் என்று நிற்காமல் தொடர்ந்து கொண்டிருந்தது. வேலை வாய்ப்பு நிறுவனத்தின் எதிர்பார்ப்பு ஜோதியில் கலந்து கரைந்து போன கோடிக்கணக்கான குடிமகன்களில் அவனும் ஒருவனாகிப் போனான்.

தந்தைக்கு, அவன் வேண்டுமென்றே வரும் வேலை வாய்ப்புகளைத் தட்டிக் கழிக்கிறானோ என்ற சந்தேகம். அவருக்கேற்ற வாழ்க்கைத் துணைவியான தாயாருக்கு, வேலைகளை நடைபாதையில் ஏலம்·போட்டுக் கூவுவதாக எண்ணம்.

பெற்றவர்களின் வெறுப்பையும், எரிச்சலையும் உள்ளத்தாலும் உணர்வாலும் புரிந்து வேதனைப்பட்ட ரவி தனக்குள் தனித்துப் ·போனான். ஒருவிதமான துறவு நிலையில் அவனிருந்தான். சுயகவுரவமும் தன்னைப் பற்றின கர்வமும் பழங்கதையாகி உருவிழந்தன. கடலலைகள் குமுறிக் குமுறி உள்ளுக்குள்ளே அடங்கி மடிவதைப் போல அவனும் தனக்குள் மடிந்து கொண்டிருந்தான். உறவுகளை, நட்பைப் பார்த்தால் தலை தெறிக்க ஓடத் தோன்றும். ஒளிந்து கொள்ள மனம் பரபரக்கும். ஓடிஓடிக் களைத்தவனுக்கு, ஊர்க் கோடியிலிருக்கும் சுடுகாடுதான் புகலிடம் தந்தது. மண்ணுக்கும், பெண்ணுக்கும் இடையில் நடக்கிற மனித ஜீவிதம் முடிகிற மயானம் அவனுக்குள் நிம்மதியையும், ஆறுதலையும் தரும் பூங்காவாகிவிட்டது.

இன்று கூட வீட்டிலிருந்து சுடுகாட்டுக்குத் தான் வந்தான். சமாதிகளிடையே வெள்ளையிலும், இளரோசா வண்ணத்திலும் பட்டிப் பூக்கள் கொள்ளையாய்ப் பூத்துக் கிடந்தன. சில்லென்ற ஈரக்காற்று. வேப்ப மரத்தடியில் உட்கார்ந்து கண்மூடினான்.

காலையிலிருந்து ஒன்றுமே சாப்பிடாதது நினைவுக்கு வந்தது. வாய் கசந்து குமட்டி, தலையை வலித்தது. தனக்குச்

சோறு போட வேண்டும் என்பதையே அந்த வீடு மறந்து விட்டது. எதிரில் இருந்தால் மட்டும் கலந்து, கொட்டி தட்டைத் தள்ளிவிடும் அலட்சியம் இப்போது பழகிவிட்டது. உயிர் வாழ்வதற்காக அதையும் உண்ண வேண்டியிருக்கிறது.

நைந்து போன கிழிசல் காலர் சட்டை, சாயம் போன பேண்ட், பத்து நாள்களாக மழிக்கப்படாத முகம். நாலுமாதமாய் கத்திரிபடாத தலை. ரவி என்னும் அன்பான, அழகான, பண்பும், பாசமும் கொண்ட இருபத்தி ஏழு வயது குழந்தை பாலையில் கொட்டின பாலாய், பகல் நிலவாய் தனக்குள் செத்துப்போய் வெகு நாள்களாகி விட்டிருந்தது.

தூரத்தில் மூச்சை நிறுத்தி விட்ட மனிதனை வேட்டுகளுடன் பூப்பல்லக்கில் தூக்கி வருவது தெரிந்தது. செத்தவன் கொடுத்து வைத்தவன். ரவிக்குப் பொறாமையாக வந்தது. பெருமூச்சு வந்தது. வயிற்றில் மூண்டிருப்பது எரிநெருப்பா அல்லது நெஞ்சில் அணையாமலிருப்பது ஊழித்தீயா என்று உணர முடியவில்லை. எழுந்து நடந்தான்.

வீட்டில் இப்போது தொலைக்காட்சித் தொடர் பார்த்துக் கொண்டிருப்பார்கள். கதவைத் தட்டினால் வரும் வசவுகளைத் தாங்கிக் கொள்ள இன்று ஏனோ மனமில்லை. கால் போன திக்கில் போனான். பாதைக்கு முடிவுண்டா?

''ஏன்யா பார்த்து நடக்கறதில்லையா? இப்படி இடிச்சுத் தள்ளறியே...''

ரவி சட்டென நிலை பெற்றான் ''மன்னிச்சிடுங்க. கவனிக்கவில்லை...'' குற்ற உணர்வோடு குனிந்து மூட்டைகளைத் தூக்கி மீண்டும் மிதிவண்டியில் கட்ட உதவினான்.

மிதிவண்டி ஓட்டி வந்தவன் அவனையே பார்த்தான். கொஞ்ச நேரத். தடுமாற்றத்துக்குப் பின் அடையாளம் கண்டுகொண்டான்.

''நீ.. ரவிதானே? நெட்டை ரவி தானேடா.. என்னைத் தெரியலையா? நான்தான் நசீர்... உன்கூட எட்டாவது படிச்சேனே கவாத்து நசீர்.. என்னடா.. இப்படி இருக்கே? ஆளே ஏதோ பித்து பிடிச்சவன் மாதிரி. என்னடா, என்னடா, என்னாச்சுடா..'' கண் கலங்க, தொண்டையடைக்க தன் கைகளைப் பிடித்துக் கொள்ளும் நசீரை இப்போது புரிந்தது.

இராணுவ வீரனைப் போல நடைபோடும் அவனை ''பரேடு நசீர்'', ''கவாத்து நசீர்'' என்று கேலி பேசிச் சிரித்த பள்ளி நாள்கள் நினைவுக்கு வந்தன.

நசீர் தாவி அவன் கைகளைப் பிடித்துக் கொண்டான். இருவருமாக நடந்தார்கள். நசீர் சொன்னான். ''நீ'' ஒண்ணும் இப்ப பேசாதே. வீட்டுக்குப் போய், குளிச்சிட்டு சாப்பிடு. பிறகு பேசலாம்...''

நீண்ட நாள்களுக்குப் பின் பாசத்துடன் பரிமாறிய நசீர் வீட்டு ஆப்பமும், தேங்காய்ப்பாலும் வயிற்றைக் குளிர்வித்தன. மனமும், உடலும் தெம்பாகியது. நசீரிடம் மனம் விட்டுப் பேச முடிந்தது.

நசீர் தயக்கத்துடன் தன்னால் உடனடியாக வாங்கித்தர முடிந்த வேலையைச் சொன்னான். யோசித்து முடிவெடுக்கவும் அவகாசம் எடுத்துக் கொள்ளச் சொன்னபோது வானத்தை நிமிர்ந்து நோக்கினான், ரவி.

அரசாங்க வேலைக்கான அலைச்சல் ஒருபுறம்; வெளிநாட்டு வேலை மோகம் மறுபக்கம். நடுவில் உத்தியோகம் புருச லட்சணம் என்னும் கூப்பாடு. தடிமாடு, தெண்டச்சோறு, உனக்குச் சாவு வராதா என்கிற சாப விமர்சனங்கள். வேதனைகள் கண்ணீர்...

கிடைக்கும் வேலையில் மனம் ஒன்றாமல் இப்படி தன்னைப் போல எத்தனை பேர் சுடுகாட்டை நடைப்

பிணமாகவோ, பிணமாகவோ புகலிடம் அடைகிறார்கள்? மனம் வெறுத்து நாட்டுத் துரோகக் காரியத்திலோ, குண்டு கலாசாரத்திலோ ஈடுபடாமல் வேலை செய்யப் போகிறேன். இதற்கென்ன தயக்கம்? புன்னகையுடன் நசீரின் கைகளைப் பற்றிக்கொண்டான்.

மறுநாள் காலையில் வீட்டிற்குள் நுழைந்த போது எழுந்த கூக்குரல்கள் ரவி முன்பணமாகப் பெற்ற ஆயிரம் ரூபாயைக் கண்டதும் அடங்கிப் போனது. குளிக்க வெந்நீர் போட்டார்கள். தட்டு நிறையப் பலகாரம் கொண்டு வரப்பட்டது. ரவிக்கு சிரிப்பு வந்தது. தலையசைத்து வேண்டாமென மறுத்து விட்டு, தன்னறைக்குள் நுழைந்து கொண்டான்.

வீட்டில் அன்று ஆட்டுக்கறி குழம்பும், கோழிவறுவலும், மீன் சொதியும் விருந்து அமர்க்களப்படுவது தெரிந்தபோது ரவி சத்தம் போட்டுச் சிரித்தான்.

மறுநாள் அதிகாலை நசீர் வந்துவிட்டான். வேலை இடத்தில் நிணமும், ரத்தமுமாக அங்கே ஒரு வீச்சம் அடித்தது. உடைமாற்றிக் கொள்ளும்போது உடல் நடுங்கியது. கண் கலங்கியது.

முதலாமவன் தன் வேலையை முடித்து ரவியிடம் தள்ளினான். கை நடுங்க ரவி திண்டாடினான். நசீர் அவன் தோளைப் பற்றி விழிகளில் ஆறுதல் சொல்லி கர்மயோகியாய் வேலையில் இறங்கினான். மனத்தைத் திடப்படுத்திக் கொள்ள முடியாமல் மீண்டும் கண் கலைந்தது.

ஒரு வினாடி மனத்தில் தன் போராட்டம். ஆற்றாமை, இயலாமை நெஞ்சில் மின்னலடித்தன. கையில் குபீரெனப் பாய்ந்து படும் ரத்தத்தை, தன் கண்ணீரை விட சூடு குறைவாகத்தான் உணரமுடிந்தது.

இந்த நாசக்கார கபடவேட சமுதாயத்தை அவனால் நேருக்கு நேராகத் துண்டாட முடியுமா.. அல்லது தோலுரித்து அதன் சுய வடிவத்தை வெளிப்படுத்த முடியுமா? என்ன செய்ய முடியும்? தனி ஒருவனாக என்ன செய்ய முடியும்?

இதோ.. கண்ணெதிரே தனக்காகக் காத்திருக்கும் இந்த வேலை அந்த வாய்ப்பைக் கையில் கொண்டு வந்து தருவது போல வந்திருக்கிறதே கைகளில் அசாத்திய வேகம் கிளம்ப, விழிகளில் ரோசம் பீறிட, மனத்தில் வெறிகிளம்பியது. கையில் கத்தியை எடுத்துக்கொண்டான். ஒரே போடு...

இப்போதெல்லாம் ரவிக்கு வீட்டில் பெரும் மரியாதை. எதிரில் நின்று அப்பா பேசுவதே இல்லை. எதற்கெடுத்தாலும் "எங்க பெரியவனை ஒரு வார்த்தை கேட்டுட்டுத் தான் எதையும் முடிவு செய்யணும். குடும்பத்துக்கு இனிமே அவன்தானே எல்லாம்?" என்கிற கூழைக் கும்பிடு வார்த்தைகள்.

"எதிலும் அவனுக்குப் பற்றில்லை. பட்டுக் கத்திரிப்பது போல ஒரு வார்த்தைதான் பேசுவான். அதுதான் எங்களுக்கு வேதம்..." அம்மாவின் அலட்டல் பேச்சு காதில் விழும்போது ரவி சிரித்துக்கொள்ளுவான்.

அவன்தான் நன்றாக வெட்டக் கற்றுக் கொண்டானே.. அவன் கத்தரித்து எடுக்கும் ஆட்டுத் தோலில் சிறு வெட்டுக்கூட அதிகம் இருக்காது என்றும் அவன் உரிக்கும் கோழி மிகவும் சுத்தமாக இருக்கும் என்றும் அவனுடைய முதலாளி புகழத் தொடங்கியிருக்கிறார்.

இனி ரவிக்கு வாழ்வு வசப்படும்!

●

# ஒரு ஜாங்கிரி கனவு

ரத்னமாலா

''நந்தினி...!''

''எஸ்... சார்!''

''என் மனசுக்குள்ள ரொம்ப நாளா ஒர் ஆசை...ம்..!''

என்னை ரொம்ப ஆச்சரியத்தோடு பார்த்தாள் நந்தினி.

''இல்லை... வந்து..!''

''சும்மா சொல்லுங்க சார்...!''

''அதில்லை. என்னைப் பத்தி அல்பமா நெனச்சிக்க மாட்டியே..!''

''இல்லை...!''

''என்னுடைய ரொம்ப நாள் ஆசை இன்னைக்கு நிறைவேறப் போகுது...''

''அது என்ன ஆசை..?''

''எனக்கு ஜாங்கிரி சாப்பிடணும்னு ஆசை...!''

என்னை ஒரு விசித்திரப் பிராணியைப் பார்ப்பது போல நந்தினி பார்த்தாள், எதையோ சொல்ல வந்து எதையோ சொல்லிவிட்ட மாதிரி.

''இல்லை, நந்தினி! உண்மையாகத் தான்!''

''நான் ஒர் அநாதை. சிறு வயதிலிருந்து 'சிவானந்தா ஆசிரமத்தில்' தான் வளர்ந்தேன். மிகவும் சிரமப்பட்டு சிவானந்தா ஆசிரமத்தை நடத்தி வந்தார் எங்கள் குரு.

எங்களுக்கு மூணுவேளைக் கஞ்சிக்கே சிரமம். எலிசபெத் மிஷனரிதான் எங்கள் ஆசிரமத்தில் உள் அநாதைகளைத் தத்தெடுத்துக் கல்விப்பிச்சை போட்டார். திடீரென்று ஒரு நாள், கொட்ற மழையில் நனைஞ்சுகிட்டே ஒருத்தர் வந்தார். அவர் கையிலே ஏதோ ஒரு பெரிய பொட்டலம். நாங்க குளிரிலே நடுங்கிக்கிட்டு மூலைக்கொருத்தரா முடங்கிக் கிடந்தோம். வந்தவர் குரு கிட்டே பொட்டலத்தைக் கொடுத்துவிட்டுப் போய் விட்டார்.

குரு எங்களை எழுப்பி ஆளுக்கு ஒன்று தந்தார். சூடாக இருந்தது. ஜீரா சொட்டச் சொட்ட சக்கரம் சக்கரமா - அதன் பெயர் ஜாங்கிரின்னு குரு சொன்னார்.

ஒன்றை எடுத்து மெல்லக் கடிச்சேன். சூடான இனிப்பு ஜீரா என் நாக்கில் படர்ந்தது. ஆஹா! என்ன சுவை, என்ன சுவை! இது வரைக்கும் இப்படி ஒரு சுவையை நான் கண்டதே இல்லை. இனிப்பு மொறுமொறுப்பான சுவைத்துண்டு என் நாவெங்கும் வியாபித்து என்னைச் சொர்க்கத்திற்கே அழைத்துச் சென்றது. சாப்பிட்டு முடித்து இன்னொன்று கிடைக்குமா என்று நாக்கு ஏங்கியது. அதே ஏக்கத்தில் படுத்துத் தூங்கிவிட்டேன்.

மறுநாள் எழுந்த போது அந்த முதல் நாளின் இனிய அனுபவம் என் நினைவில் வந்து வாட்டியது. எங்கள் குரு குலத்தின் எதிரில்தான் அந்த ஜாங்கிரிக் கடை. எப்போதும் அங்கே கூட்டம் மொய்த்துக் கொண்டிருக்கும். ஓகோ! இது தானா சங்கதி..? சூடாக ஜாங்கிரியைப் போட்டவுடன் விநியோகித்து விட்டுக் கடையை மூடிவிடுகிறார்கள்.

அன்று முதல் என் மனசு முழுவதும் அந்தக் கஸ்தூரி ஜாங்கிரிக் கடை மீதுதான். நுழைவாசலில் நின்று ஏக்கத் தோடு பார்த்துக் கொண்டிருப்பேன். யாராவது வரமாட்டார் களா, போய் ஜாங்கிரி வாங்கித் தரமாட்டார்களா..?

சேது மாமா வந்து ஜாங்கிரி வாங்கிக் கொண்டு போவார். ''என் புள்ளைக்கு இந்தக் கடை ஜாங்கிரின்னா உசிரு. ஆபீஸ் விட்டுப் போகும்போது நாலு ஜாங்கிரி இல்லாம போனா என்னை வீட்டிலேயே விட மாட்டாள்'' என்று பெருமையாகச் சொல்லிக் கொண்டே பொட்டலத்தைப் பையில் வைத்து நடையைக் கட்டினார். எனக்கு ஒன்று தரக் கூடாதா? ம்...! 'எனக்கும் அம்மா அப்பா இருந்தா நிச்சயம் வாங்கித் தருவாங்க. கடவுளே...! நான் என்ன பாவம் செய்தேன்? எனக்கு மட்டும் ஏன் அம்மா அப்பா இல்லை?' மனசு முதன் முறையாக அம்மா அப்பாவின் முக்கியத்துவத்தை உணர்ந்தது.

பின்னால் ஒரு கை மெதுவாக என்னைத் தொட்டது. என் குரு...! ''தம்பி! மத்தவங்க சாப்பிடறதை இப்படி வேடிக்கை பார்க்கக் கூடாது. தப்புப்பா...உள்ளே வா..! உன்னுடைய ஏக்கம் எனக்குப் புரியுது. என்ன செய்ய? உன் ஒருத்தனுக்கு வாங்கித் தந்தா, மற்றவர்களுக்கும் வாங்கித் தரணும், கவலைப்படாதே. நீ பெரியவனாகி நிறைய சம்பாதிச்சு வாங்கிச் சாப்பிடலாம். ஜாங்கிரி எங்கேயும் போயிடாது. என்ன பண்றது? நீ செய்த பாவம்! அநாதையாப் பிறந்துட்டியே! உன் ஆசைகளை யார் நிறைவேற்றப் போறாங்க? காலம்தான் பதில் சொல்லணும்!''

முதன் முறையாக அநாதை என்ற வார்த்தைக்கு அர்த்தம் புரிந்தது. சின்ன சின்ன ஆசைகளைக் கூட நிறைவேற்ற ஆளில்லாத ஜென்மங்கள். சமூகத்தால் ஒதுக்கப்பட்ட பாவப் பிறவிகள். ஒரு பாவமும் அறியாதவர்கள். உலகத்தில் என்ன வேணுமானாலும் இல்லாமப் போகலாம்; அம்மா அப்பா மட்டும் இல்லாமப் போகக் கூடாது. நெஞ்சு முழுவதும் வேதனை படர்ந்தது.

''என் அம்மா அப்பா எங்கே ஐயா?''

''அவங்க சொர்க்கத்திலே இருக்காங்க.''

''சொர்க்கம்னா...?''

''எல்லாச் சந்தோஷங்களும் கிடைக்கிற இடம்.''

''அங்கே ஜாங்கிரி கிடைக்குமா..?''

அவர் பதிலேதும் கூறாமல் என்னை அழைத்துச் சென்று விட்டார்.

அப்போதிலிருந்து நான் எப்ப பெரியவனாவேன்; எப்ப வேலைக்குப் போவேன்; எப்ப என் ஜாங்கிரிக் கனவு நிறைவேறும்? அதே அலைமோதல் தான். அது இன்றைக்கு நிறைவேறப் போகுது. அதுதான் சந்தோஷம்.''

பெருமூச்சோடு என்னைப் பார்த்தாள் நந்தினி. அவள் கண்களில் ஒரு பரிதாபம். தன் சின்ன ஆசையை நிறை வேற்றிக் கொள்ள இத்தனை பாடு!

அன்று பிற்பகலில் சம்பளம் வாங்கினேன். பாக்கெட் கனத்தது. நான்கு மணி. நந்தினியை அழைத்துக் கொண்டு புறப்பட்டேன். மனத்துக்குள் ஒரு துள்ளல். இந்த அநாதையின் ஆசை நிறைவேறப் போகிறது. நேராகக் கஸ்தூரி ஜாங்கிரிக் கடைமுன் கால்கள் நின்றன. அன்று போல் இன்றும் அலைமோதும் கூட்டம். என்னைப் பார்த்த கடைக்காரன் உள்ளே அழைத்தான்.

''ஒரு கிலோ ஜாங்கிரி பார்சல்''

கடைக்காரன் கண்ணசைவில் கடையிலிருந்த பையன் பம்பரமாய்ச் சுழன்றான். சூடான ஜாங்கிரிகளை, பக்குவமாக பிளாஸ்டிக் கவரில் கட்டி, நன்கு 'பாக்' செய்து, அட்டைப் பெட்டியில் போட்டுக் கட்டி, கைகளில் கொடுத்தான். மிகப்

பூரித்துப் போனேன். ஏனோ தெரியவில்லை. கண்களில் நீர்த்துளி.

''ஆண்டவா! அடுத்த பிறவியிலாவது என்னைப் பெற்றோரோடு வாழவிடு. இப்படி அநாதையாக்கி, அல்பத்தனமாய் அலைய விடாதே.''

பணத்தைக் கொடுத்து விட்டுத் திரும்பிய என்னை ஏதோ ஓர் உணர்வு தாக்க, திரும்பினேன். நேர் எதிரே சிவானந்தா அநாதை ஆசிரமம். கம்பி கேட்டுக்கு அந்தப் பக்கம் இரண்டு கூர்மையான கண்கள் என்னைத் தாக்கின. ஏக்கப் பார்வை, சோகப் பார்வை, வேதனைப் பார்வை. சின்ன சின்ன விழிகளின் விரக்தி... வேதனை...!

சொல்லி முகம் புதைத்து அழுதிடத் தோளில்லாத சோகங்கள்...!

பகிர்ந்து கொள்ள ஆளில்லாத பரிதாபங்கள்..!

திசைகாட்டுவோரில்லாத கட்டுமரங்கள்..!

என் நெஞ்சை ஏதோ சோகம் பிசைந்தது...

''போகலாம், அந்த அநாதை ஆச்ரமத்தைப் பார்த்துக் கொண்டே ஏன் நின்று விட்டீர்கள்?'' - நந்தினி கேட்டாள். நான் பதில் பேசவில்லை. என் பார்வை அந்த ஆச்ரம நுழைவாயில் மீதே இருந்தது. அதே சோகமாக, விரக்தி நிறைந்த விழிகள்.

உள்ளிருந்து வந்த குரு ஏதேதோ சமாதானம் கூறி அந்தச் சிறுவனை அன்போடு அணைத்து அழைத்துச் சென்றார்.

என் நெஞ்சை ஏதோ சோகம் பிசைந்தது. கனத்த இதயத்துடன், கையில் கனக்கும் இனிப்புடன் நேராக என் கால்கள் சிவானந்தா ஆசிரமத்தை நோக்கி நடந்தன.

●

# சுந்தரர்... சுந்தரி

நா. ராமச்சந்திரன்

''அதோ போகிறாரே பார்த்தீர்களா?'' என்று இரைந்து கத்தினார் என்னுடன் நடந்து வந்து கொண்டிருந்த நண்பர் கந்தசாமி. நாங்கள் இருவரும் நடந்து கொண்டிருந்த இடம் திருநள்ளாறு. அவர் கை காட்டிய திசையை நோக்கி என் பார்வையைத் திருப்பினேன். நாங்கள் போய்க் கொண்டிருந்த திசையிலேயே வலப் பக்கம் ஓரமாக, கையில் ஒரு தடியுடன் சென்று கொண்டிருந்தார் அவர். அவருடைய தலையின் பின்பக்கமுள்ள ஜடாமுடியிலிருந்து அவர் சோமுப் பண்டாரம் தான் என்று எனக்கு நன்கு தெரிந்துவிட்டது. அவரைப் பார்த்துத் தான் எவ்வளவு காலமாகிவிட்டது! நிச்சயம் ஐந்து வருடங்களாவது கடந்திருக்கும்.

''ஆமாம் சோமுப் பண்டாரம் தான். வேகமாக வாருங்கள். அவரைப் போய்ப் பிடித்துவிடலாம்'' என்று நண்பரிடம் பேசிக் கொண்டே நடையைத் துரிதப் படுத்தினேன்.

''வணக்கம்...'' என்று குரல் கொடுத்தவுடன், சோமுப் பண்டாரம் என்னைப் பார்த்துத் திகைத்துப் போனார்.

''யாரு சந்துரு சாரா? என்ன சாமி சௌக்கியமா? உங்களைப் பார்த்துத்தான் எவ்வளவு காலமாகிவிட்டது? இந்தப் பண்டாரம் ஓர் ஊர் என்று இருந்தால் தானே?'' சொல்லிவிட்டுச் சிரித்தார் சோமு.

''கந்தசாமிதான் உங்களை அடையாளம் காட்டினார்...'' என்று இழுத்தேன்.

''அது சரி. ஏது இவ்வளவு தூரம்? சனிபகவான் தரிசனத்திற்கா?''

''பிறகு எதற்குத் திருநள்ளாறு வரப் போகிறேன்? கந்தசாமிக்கு மேஷ ராசியாம். ஏழரை நாட்டுச் சனி அதன் வேலையைக் காட்டக்கூடாது என்று தரிசிக்கக் கிளம்பினார். அவருடன் கிளம்பிவிட்டேன்.''

நாங்கள் மூவரும் நடந்த வண்ணம் நளதீர்த்தக் கரையை அடைந்து விட்டோம்,

''நல்ல காரியம்தான். கோயில் திறக்க இன்னும் ஒரு மணி நேரம் ஆகும். இங்கு சற்று நேரம் உட்காருவோமா?'' என்று கேட்டார் சோமுப்பண்டாரம். எனக்கு ஒரே குஷி! இன்னும் ஒரு மணி நேரம் இருக்கிறது. பண்டாரத்திடம் எப்படியும் ஒரு நல்ல கதையை வாங்கிவிட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டேன்.

''உங்கள் ஊர் சிதம்பரம் இப்போது எப்படியிருக்கிறது? ஏதோ கோயில் நகை திருட்டு என்று பேப்பரில் படித்தேன். ஒரு தீட்சிதர் பெயர் கூட அதில் அடிபட்டதே'' என்று மெதுவாகப் பேச்சை எடுத்துப் பண்டாரத்தின் வாயைக் கிளறினேன்.

''ஆமாம். ஆமாம்! நன்றாக ஞாபகம் வைத்திருக் கிறீர்களே. அம்மனின் வைர மாலை காணாமல் போய்விட்டது. அன்று காவல் காத்திருந்த தீட்சதர் மேல் கேஸ் போட்டார்கள்'' என்றார் பண்டாரம்.

''பிறகென்ன ஆயிற்று? நெக்லெஸ் கிடைத்ததா?'' எனப் பரபரப்புடன் கேட்டேன்.

பண்டாரம், ''நீங்க பேப்பர் படிக்கலையா? அந்தக் கேஸ் அஞ்சு வருஷம் நடந்தது. கடைசியிலே உச்ச நீதிமன்றத்தில் தீட்சதர் நிரபராதி என்று தீர்ப்புக் கூறி, அவருக்கு விடுதலை அளித்துவிட்டார்கள்'' என்றார் சாந்தமாக.

''அப்படியானால் வைரமாலை போனது போனதுதானா? தீட்சதர்தானே காவலாளியாக இருந்தார்? அவருக்கு தண்டனை அளிக்க வேண்டாமா?'' என்று கேட்டேன் நான்.

சோமுப்பண்டாரம் கொஞ்சநேரம் மௌனமாகக் கண்களை மூடிக் கொண்டார். பிறகு பார்வையை என் பக்கம் திருப்பிச் சொன்னார். ''சாமி! தீட்சதருக்குத் தண்டனை கொடுக்கத் தில்லை அம்பலவன் சம்மதிப்பானா? தீட்சதர் நல்ல சாத்வீகி. தில்லை நடராஜனை இருபது வருடங்கள் பூஜித்தவர். ஆண்டவனைப் பக்தி சிரத்தையோடு தீண்டி, அவருக்கு அபிஷேகம் செய்தவர்; அலங்காரம் செய்தவர். அந்தப் பக்தருக்கு ஓர் ஆபத்து, அபவாதம் என்றால் குஞ்சித பாதன் சும்மா பார்த்துக்கொண்டிருப்பாரா? சிறிது காலம் சோதனை செய்துவிட்டு அவரைக் காப்பாற்றி விட்டார்.''

''பின்பு திருடன் எங்கு போனான், வைரமாலை போன இடம் தான் எங்கே?'' என்று பரபரப்புடன் கேட்டேன் நான்.

''ஏன் சாமி டென்ஷனாகறீங்க? அவனுக்கு அது தெரியாதா? அந்தக் கயவனுக்குக் கட்டாயம் தில்லை நடராஜன் தண்டனை அளித்திருப்பான். இந்த மாதிரி ஒரு சம்பவம் தேவூரில் நடந்தது எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது'' என்று கண்களை மறுபடியும் மூடிக்கொண்டார் பண்டாரம்.

சோமுப் பண்டாரம் கதை சொல்ல ஆயத்தமாகி விட்டார் என்று எனக்குத் தெரிந்துவிட்டது.

''தேவூரில் நடந்ததென்ன? அது எங்கள் ஊர் ராதாமங்கலத்துக்குப் பக்கத்தில்தான் இருக்கிறது'' சொல்லிக்

கொண்டே நான் பண்டாரத்தின் அருகே வந்து அமர்ந்து கொண்டேன். அவரும் தேஹூரில் நடந்த விஷயத்தைச் சொல்ல முனைந்தார்.

❑ ❑ ❑

சுந்தரகுருக்கள், பெயருக்கேற்றபடி சுந்தரமாகவே இருப்பார். தலையில் கட்டுக் குடுமி; ஆஜானுபாகுவான சரீரம். சிவந்த அவர் மேனியின் கழுத்தில் அவர் அணிந்திருந்த பொன் பூணோடு விளங்கிய ருத்திராட்சக் கொட்டை எடுப்பாக இருக்கும். ருத்திராட்சத்தைச் சுற்றியோடிய சிவப்பு நிறக் கயிறு அவர் கழுத்துக்கு அழகு செய்யும். நெற்றியில் துலாம்பரமாக விளங்கிய திருநீறும், சதா சிரித்த வண்ணம் இருக்கும் அவர் முகவிலாசமும் அவரையே தெய்வமாக எடுத்துக் காட்டிக் கொண்டிருக்கும். சிக்கென்று அணிந்திருக்கும் பஞ்சகச்ச வேட்டியோடு அவர் நடமாடுவதைப் பார்த்தால், தேவ லோகத்துக் கந்தர்வ புருஷன் பூலோகத்திற்கு வந்து விட்டதைப் போன்ற பிரமிப்பே எல்லாருக்கும் ஏற்படும். நிச்சயம் சுந்தர குருக்கள் சுந்தர புருஷர் என்று தான் சொல்ல வேண்டும்.

அவர் அந்தத் தேஹூர் கோயிலுக்கு அர்ச்சகர். பரம்பரை பரம்பரையாக அவர்களுக்கு அந்தக் கைங்கர்யம். அவர் பாட்டனார், முப்பாட்டனார் அதற்கு முந்தியவர்கள் எல்லாரும் கூட இந்தக் கோயிலுக்குப் பூஜை செய்தவர்கள் தாம். அந்தக் கோயிலிலுள்ள பரமேஸ்வரனைவிட, தேவிக்கு மவுசு கொஞ்சம் அதிகம். கேட்கும் வரங்களையெல்லாம் அளிக்க வல்ல அந்தப் பர்வதவர்த்தினியை ஆராதிப்பதில் சுந்தர குருக்கள் எல்லையில்லா மகிழ்ச்சியடைவார். அம்மனுக்கு அபிஷேகம் செய்வதிலும், அலங்காரம் செய்வதிலும் அலாதியான நிஷ்காம்ய பக்தி அவருக்கு.

வெள்ளிக்கிழமைகளில் அவர் அர்ச்சனை செய்யும் காட்சியைப் பார்த்தவர்கள், பரவசமடைந்து போவார்கள். தெய்வமில்லை என்று வாதிக்கும் நாத்திகன் கூட சுந்தர குருக்கள் அம்பாளை அர்ச்சிக்கும் போது கொஞ்சம் நின்று மெய்மறந்த நிலையில் ஆன்மாவோடு ஒன்றிப் போவான்.

ஐம்பது வயதைத் தாண்டியிருக்கும் சுந்தர குருக்களுக்கு ஒரு சோதனை வந்தது!

அன்று நவராத்திரி வெள்ளிக்கிழமை. பர்வதவர்த்தினி அம்மனுக்குப் பூப்பாவாடை அலங்காரம். அம்மன் ஜகஜ்ஜோதியாய் ஜொலித்துக் கொண்டிருந்தாள். பக்தர்களின் கூட்டமும் அதிகமாக இருந்தது. சுந்தர குருக்கள் பக்தர்களின் அர்ச்சனைத் தட்டுகளை வாங்குவதும், அம்பாளுக்கு அர்ச்சனை செய்துவிட்டு அவர்களுக்குப் பிரசாதங்களைக் கொடுப்பதுமாக இருந்தார். அவர் உடல் முழுதும் வியர்வை வழிந்து அதுவே மின்சாரக் குழல் விளக்குகளில் மின்னிக் கொண்டிருந்தது. பக்தர்கள் கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து இனி ஒருவரும் இல்லை என்ற நிலை வந்தபோது சுந்தர குருக்கள் சந்நிதியின் வெளிப்புறத்திலிருந்த கடிகாரத்தின் மீது தன் பார்வையைச் செலுத்தினார்.

பளீரென்று மின்னலடிப்பது போல் ஒரு வெளிச்சம் தெரிந்தது. கையில் அர்ச்சனைத் தட்டுடனும், ஒரு பெரிய ரோஜா மாலையுடனும் சுந்தரி, அம்மன் சந்நிதிக்குள் நுழைந்து கொண்டிருந்தாள். அவளுடன் கூட அவள் தாயாரும் வந்திருந்தாள்.

சுந்தரி சுந்தரமாகவே இருந்தாள். அவளுக்காக அந்தப் பெயரா, அல்லது அந்தப் பெயருக்காக அவளா? என்ற ஆராய்ச்சியில் இறங்குவது வீண் வேலை. இரவு மறைந்து,

காலை பிறக்குமே, அப்போது வானில் தோன்றுமே ஓர் அழகு, அப்படி ஓர் அழகு, சுந்தரியின் முகத்தில் மிளிரும். நிமிர்ந்த நடையும், நேர் கொண்ட பார்வையும் அவளுடைய முகவிலாசத்தில் நிரம்பி வழிந்தன. நடுத்தர வயதை எட்டிப்பிடிக்கும் நிலையிலிருந்த அவள் உடற் கூட்டில், தொய்வே தெரியவில்லை. அகலமான அவள் கருவிழிகளும் முத்துக் கோத்தாற்போல் இருந்த பல் வரிசையும், தலைக் கேசத்தை அவள் அள்ளி முடிந்திருந்த லாவண்யமும், அதன் மேல் பல்லக்குப் போல வளைந்து நெளிந்து வைக்கப் பட்டிருந்த மல்லிகைச் சரமும் அவள் அழகுக்கு அழகு செய்து கொண்டிருந்தன என்று தான் சொல்ல வேண்டும்.

சுந்தரி சந்நிதியில் நுழைந்தவுடன் சுந்தர குருக்கள் பரபரப்படைந்தார். அவர் முகமெல்லாம் ஒரே குதூகலம் தான். சுந்தரியை ஏற்கெனவே அவர் அறிவார். தேலூருக்கு அவள் வந்து இரண்டொரு மாதங்கள்தாம் ஆகியிருந்தன. நல்ல பெரியதொரு வீட்டில் அவளும் அவள் தாயாரும் குடியிருந்தார்கள். அதற்குமேல் எந்த விவரமும் குருக்களுக்கு அவர்களைப் பற்றித் தெரியாது. அவ்வப் போது அவள் தனியாகவும், தாயுடனும் கோயிலுக்கு வந்து போவதுண்டு. அப்போதெல்லாம் சுந்தரியுடன் பேச வேண்டும் என்று குருக்கள் நினைப்பார். பக்தர்கள் கூட்டம் இருப்பதால் அவரால் அவளுடன் அதிகம் பேச முடிவதில்லை. ஆனால் சுந்தரியின் பேரில் தனக்கு, சொல்ல முடியாத-இனம் புரியாத-ஒரு மோகம் இருப்பதை அவர் அறிவார். அதற்கு என்ன பெயரிட்டு அழைப்பது என்று தான் அவருக்குத் தெரியவில்லை.

பளீரென்று மின்னல் அடித்து மறைந்து விடுவதுதானே வழக்கம்? ஆனால் சுந்தரி சந்நிதிக்கு வந்து நின்றவுடன் அந்த

மின்னல் தோன்றியது தான். மறையவே இல்லை என்பதை சுந்தரர் உணர்ந்தார்.

''வாம்மா... இன்றைக்கு ஏன் லேட்?'' என்று கேட்டு விட்டுச் சுந்தரியின் பதிலுக்காக ஆவலாகக் காத்திருந்தார் குருக்கள்.

''கூட்டம் அதிகமில்லாத நேரமாகப் பார்த்து வர வேண்டும் என்று இந்த நேரத்தை 'சூஸ்' பண்ணினேன்'' என்றாள் சுந்தரி. சொல்லிவிட்டு குருக்களை அன்பு ததும்பப் பார்த்துப் புன்னகை பூத்தாள்.

சுந்தர குருக்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. தாம் இருக்குமிடம் பூலோகம்தானா என்று புரியக் கொஞ்சம் நேரம் பிடித்தது. தாம் தினமும் வணங்கும் பர்வதவர்த்தினி அம்மன் தான் முன்னே வந்து நிற்கிறாளா? என்று ஒரு கணம் திகைத்துவிட்டார்.

''நானும் கிளம்பலாமா என்றுதான் பார்த்தேன். நல்ல வேளை நீங்கள் வந்தீர்கள். அர்ச்சனை செய்யட்டுமா?'' என்று கேட்டுக் கொண்டே கர்ப்பக் கிருகத்திற்குள் நுழைந்தார் குருக்கள். காம்போதியிலிருந்து தொடங்கி மோகனம், பிலஹரி, கல்யாணி, சங்கராபரணம் ஆகிய ராகங்களில் அவர் மந்திரங்களைச் சொல்லி அர்ச்சித்த போது, எதிரிலுள்ள அம்பாள் அவரைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருப்பதுபோல அவருக்கு இருந்தது. என்னவோ உற்சாகம், ஒரு குதூகலம், சமுத்திர அலைபோல் அவர் உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்ததை அவரால் அறிய முடிந்தது. ஆனால் இதற்கெல்லாம் என்ன காரணம் என்று தான் கண்டுபிடிக்க முடியவில்லை.

கற்பூர ஆரத்தியை வெளியே எடுத்து வந்து சுந்தரியின் எதிரே நீட்டினார். கற்பூரஜோதியைக் கண்களில் ஒற்றிக் கொண்டு அந்த ஜோதிக்கு இடையே ஒரு முறை... ஒரேயொரு முறை சுந்தர குருக்களைப் பார்த்தாள் சுந்தரி. சுந்தரர் அந்தப் பார்வையைச் சந்திக்க முடியாமல் திணறினார். ஒரு புன்னகை! மத்தாப்பு கொளுத்தியவுடன் குபுக்கென்று ஒரு வெளிச்சம் கிளம்புமே, அப்படியொரு புன்னகையை சுந்தரி வீசியது சுந்தரருக்கு மயக்கத்தைக் கொடுத்துவிட்டது. அமுதம் உண்ட தேவனைப் போல ஆகிவிட்டார்.

''எங்கள் வீட்டிற்கு நீங்கள் வந்ததே இல்லை. நல்ல நாளாக இருக்கிறது. இன்று வாருங்களேன்'' என்று சொல்லி விட்டு சுந்தரி, சுந்தரரிடம் விடை பெற்றுக்கொண்டு சந்நிதியை விட்டுக் கிளம்பினாள்.

அம்மன் சந்நிதியில் மின்சார விளக்குகள் பிரகாசமாக எரிந்து கொண்டு தான் இருந்தன. அப்படியும் சுந்தரி அந்த இடத்தைவிட்டுச் சென்றவுடன் காரிருள் சூழ்ந்து கொண்டது போலத்தான் குருக்களுக்கு இருந்தது. ஆனால் அவள் தன்னை வீட்டிற்கு அழைத்துவிட்டுப் போனாளே... அது எதற்காக இருக்கும்? அவர் உள்ளம் குதிபோட்டது. ''இன்று நல்ல நாளாய் இருக்கிறது. நீங்கள் என் வீட்டிற்கு வாருங்கள்'' என்று அவள் தன்னை அழைத்தது அவருக்குத் தேனாய் இனித்தது.

தட்டு நிறையப் பிரசாதங்களை எடுத்துக் கொண்டார் சுந்தர குருக்கள். சுந்தரியின் வீட்டுக்குள் நுழையும்போது அவள் வீணையை மீட்டிப் பாடிக் கொண்டிருந்தாள். அவள் பேசுவதே பாடுவது மாதிரி இனிக்கும். அவள் பாடவே செய்கிறாள்...அதுவும் வீணையுடன் என்றால் அதைக்

கேட்பதற்குத் தானே ஆண்டவன் தனக்குக் காதுகளை அளித்திருக்கிறார்'' என்று நினைத்துக் கொண்டார் சுந்தர குருக்கள்.

குருக்கள் உள்ளே நுழைந்தவுடன் சுந்தரி மடியிலிருந்த வீணையைக் கீழே வைத்துவிட்டு அகமும் முகமும் மலர அவரை வரவேற்றாள்.

''வாங்கோ..வாங்கோ. எங்கே வராமல் இருந்து விடுவீர்களோ என்று நினைத்து விட்டேன்'' சொல்லிவிட்டு புன்னகை செய்தாள் சுந்தரி.

குருக்கள் பாகாய் உருகிப் போனார். ''நீ ஒவ்வொரு சமயம் கோயிலுக்கு வரும்போதும் உன்னுடன் பேச வேண்டும் என்று நினைப்பேன். ஆனால் முடிவதில்லை. எதற்கும் வேளை வரவேண்டாமா?....'' என்று சொல்லிக் கொண்டே ''இந்தா பிரசாதம். இந்தக் குங்குமத்தை எடுத்து இட்டுக் கொள். இந்தப் பூவை ஜடையில் வைத்துக் கொண்டுவா. உன்னிடம் நிறையப் பேச வேண்டும்'' என்று பிரசாதத் தட்டை அவள் கரங்களில் வைத்தார்.

''வேணும் என்கிற அளவுக்குப் பேசலாம். நிறைய நேரமிருக்கிறது'' என்று சொன்ன சுந்தரி, தட்டிலிருந்த குங்குமத்தை எடுத்து நெற்றியிலே தரித்துக் கொண்டு, பூவை எடுக்கப் போனாள். எடுக்கும் போது பூச்சரமே கீழே தவறி விழுந்துவிட்டது. குருக்கள் குனிந்து அதை எடுக்கும் போது சுந்தரியும் அதே பூவை எடுக்கக் கீழே குனிந்தாள். அப்போது இருவர் தலைகளும் லேசாக மோதிக் கொள்ள, பூக்களும் இருவர் கைகளாலும் எடுக்கப்பட்டன. குருக்கள் பூக்களை விடுவதாக இல்லை. சுந்தரியும் தன் கைகளைத் தளர்த்திக் கொண்டாள். சுந்தரர் பூக்களை எடுத்து, ''சுந்தரி! நல்ல

சகுனம் தான். கொஞ்சம் திரும்பு, நானே வைத்து விடுகிறேன்'' என்றார்.

அம்பாளுக்குப் பூச்சூட்டி மகிழ்ந்த சுந்தர குருக்கள், சுந்தரிக்கும் பூச்சூட்டி மகிழ்ந்தார். நேர்த்தியாக, பிறை வடிவில் பூவை சுந்தரியின் பின் உச்சியில் வைத்தது, மூன்றாம் பிறைச் சந்திரனின் வளைவை சுந்தரிக்கு நினைவூட்டியது.

''சுந்தரி! நான் ஒன்று சொல்வேன். அதை நீ தட்டாமல் கேட்கவேண்டும். கேட்பாயா?'' என்று அவள் கரங்கள் இரண்டையும் பிடித்துக் கொண்டார் குருக்கள். அவர் குரல் கெஞ்சுவது போலவும், கொஞ்சுவது போலவும் இருந்தது.

கைகளை மெதுவாக விலக்கிக் கொண்டு, ''நீங்கள் சொன்னால் கேட்காமல் இருப்பேனா? சொல்லுங்கள்....'' என்று கொஞ்சினாள் சுந்தரியும்.

தன் இடுப்பில் செருகியிருந்த விபூதிப் பையின் சுருக்கைப் பிரித்தார் குருக்கள். அதில் மின்னிக் கொண்டிருந்த இரண்டு வைரத் தோடுகளை மெதுவாக எடுத்துச் சுந்தரியின் கைகளில் வைத்து 'இந்தத் தோடுகளை உன் காதுகளில் போட்டுக் கொண்டுவா... அப்போது உன் அழகு எப்படி இருக்கிறதென்று நான் பார்க்க வேண்டும்'' என்று கண்களை மூடிக் கொண்டார் சுந்தரர்.

தோடுகளைப் பெற்றுக் கொண்ட சுந்தரி திகைத்துப் போனாள். அவளுக்கு என்ன செய்வதென்றே தெரிய வில்லை. உயர்ந்த வைரக்கற்களைக் கொண்டு அமைந்த தோடுகள் தம் பிரகாசத்தை வீடு முழுவதும் உமிழ்ந்தன.

சுந்தரி, குருக்களிடம் ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அப்போது வீட்டு அழைப்பு மணி ஒலித்தது. அதைத்

தொடர்ந்து இரண்டு பெரியவர்கள் உள்ளே நுழைந்து கொண்டிருந்தார்கள்.

உள்ளே வந்தவர்களில் ஒருவர் ''என்னம்மா சுந்தரி! சௌக்கியமா? நீ தேலூருக்கு வந்ததை எங்களிடம் சொல்லக் கூடாதா...?'' என்று பேச்சைத் தொடங்கினார்.

''இவர் இந்த ஊர் குருக்கள்'' என்று சுந்தரரை அறிமுகம் செய்துவிட்டு, ''இவர் என் மாமா. பட்டணத்தில் இருக்கிறார்'' என்று சொன்ன சுந்தரி, மாமாவுடன் பேசத் தொடங்கி விட்டாள்.

பூஜை வேளையில் நிஜமாகவே கரடி புகுந்துவிட்டது என்றறிந்த சுந்தர குருக்கள், சுந்தரியிடம் விடை பெற்றுக் கொண்டு மெதுவாக வெளியே கிளம்பி வந்துவிட்டார்.

வாசற்பக்கம் வந்தவுடன் தான் அவர் மகிழ்ச்சியும், குதூகலமும் போன இடம் தெரியாமல் போய்விட்டன. சிலுசிலுவென்று குளிர் காற்று வீசிக் கொண்டிருந்த போதும், அவர் உடல் முழுதும் வியர்த்தது.

அவர் என்ன காரியம் செய்துவிட்டார்? ஆசை வெட்கம் அறியாது. அதுவும் நடுத்தர வயதில் உதிக்கும் காமத்திற்கு எதுவுமே தெரியாது போலும்!

சுந்தரி மீது அவர்கொண்ட மோகத்தில் பெரிய தவறு ஒன்றையல்லவோ செய்துவிட்டார்?

பர்வதவர்த்தினி அம்மனின் தாடங்கத்தை (தோடு) யன்றோ சுந்தரியின் காதுகளில் அணிவித்துப் பார்க்க வேண்டுமென்று ஆசைப்பட்டுவிட்டார்! அம்மனின் செவி களில் பிரகாசித்துக் கொண்டிருந்த தோடுகள் இரண்டையும் கழற்றி சுந்தரியிடமல்லவா கொடுத்து விட்டார்!

சுந்தரர் புலம்பிக் கொண்டே ''தப்புக் காரியம் செய்துவிட்டேனே; தப்புக் காரியம் செய்துவிட்டேனே'' என்று வீடு வந்து சேர்ந்தார். இரவு நேர சுவர்க் குருவிகளும் 'குருக்களே தவறு செய்து விட்டீர்களே, தவறு செய்து விட்டீர்களே' என்று கூவுவது போல அவருக்கு இருந்தது.

குருக்களுக்கு இரவு முழுவதும் தூக்கமே இல்லை, புரண்டு புரண்டு படுத்தார். அம்பாள் சூலத்தால் அவர் நெஞ்சைப் பிளப்பது போல இருந்தது.

மெல்லப் பொழுது விடிந்தது. விடிந்தவுடன் ஒரு பேரிடி அவருக்குக் காத்துக் கிடந்தது.

அறநிலைய அதிகாரிகள் கோயிலைப் பார்வையிடு வதற்கும், நகைகளைச் சரிபார்ப்பதற்கும் கோயில் வாசலில் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற செய்திதான் அது.

குருக்கள் செய்வதறியாது தத்தளித்தார். தண்ணீரிலிருந்து தரையில் போடப்பட்ட மீனைப் போல அவர் உள்ளம் துடித்தது. ''அம்பிகே, பர்வதவர்த்தினித் தாயே...! உன் பக்தன் நான் அறியாமல் சபலப்பட்டு விட்டேன். என்னைத் தண்டிக்காதே தாயே...'' என்று மனத்திற்குள் புலம்பிக் கொண்டே கோயிலை நோக்கி ஓடினார் குருக்கள், சாவியுடன்.

கிங்கரர்கள் போல நின்று கொண்டிருந்தார்கள் அற நிலைய அதிகாரிகள். தான் செய்த தவறு தெரியவந்தால் எவ்வளவு அவமானம்! சிறைக்குள் அல்லவோ போக வேண்டியிருக்கும்? இப்போது வெளிவந்து கொண்டிருக்கும் செய்திகள் போல தன் பெயரும் பேப்பரில் வருமே, நம் பரம்பரைக்கே இழுக்குத் தேடிவிட்டேனே...'' உள்ளூரப் புலம்பியவண்ணம் நடுங்கும் கைகளுடன் கோயிலைத் திறந்தார் குருக்கள்.

சொல்லி வைத்ததைப் போல் நேராக அம்மன் சந்நிதிக்குள்தான் முதலில் நுழைந்தார்கள் அதிகாரிகள். சுந்தர குருக்களுக்கு உடம்பெல்லாம் நடுங்கியது. வாய் உலர்ந்து விட்டது. மயங்கி கீழே விழுந்து விடுபவர் போல தள்ளாடிக் கொண்டே கருவறைக் கதவுகளைத் திறந்தார் குருக்கள். இரவு ஏற்றிய விளக்குகள், அணையவே இல்லை. பர்வதவர்த்தினி அம்பாள் சிரித்துக் கொண்டிருந்தாள். ஆனால் என்ன ஆச்சரியம்! அம்பாளின் செவிகள் இரண்டிலும் தோடுகள் மின்னிக் கொண்டிருந்தன! சுந்தர குருக்கள், தன் கண்களைக் கசக்கிக் கொண்டு மீண்டும் மீண்டும் அம்பாளின் கருணை தோய்ந்த முகவிலாசத்தைப் பார்த்தார். தோடுகள் அவள் செவிகளை அலங்கரித்த வண்ணமே இருந்தன.

''அம்பிகே! உன் மகிமைதான் என்ன? இந்த அற்பனைக் காப்பாற்ற வேண்டும் என்று நீ செய்த திருவிளையாடலா?'' என்று மெய்யுருகி ஆண்டவனின் லீலா விநோதத்தை நினைந்து நினைந்து அதில் ஒன்றிப் போனார் குருக்கள்.

அறநிலைய அதிகாரிகள் தங்களுடைய ஆய்வை முடித்துக் கொண்டு அடுத்த ஊருக்குக் கிளம்பி விட்டனர். சுந்தர குருக்களும் 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டுவிட்டு நிம்மதியடைந்தார். ''சுந்தரியிடம் தான் அளித்த தோடுகள், மறுபடியும் அம்பாளின் செவிகளுக்கு எப்படி வந்தன?'' என்ற கேள்விக்கு மட்டும் அவரால் விடை காணமுடியவில்லை.

வீட்டிற்கு வந்தவுடன் தன் மகனைக் கூப்பிட்டார். அவன் பி.காம்., கடைசி வருடம் படித்துக் கொண்டிருந்தான். கல்லூரிக்குச் செல்ல ஆயத்தப் படுத்திக் கொண்டிருந்தான். கல்லூரி திருவாரூரில் இருந்தது.

''தியாகு! இன்றைக்கு என்னை அம்பாள் காப்பாற்றி னாள்'' சொல்லி விட்டு அவனைத் தழுவிக் கொண்டார் குருக்கள். மேலும் பேச வாயெடுக்குமுன் தியாகு இடைமறித்துச் சொன்னான்.

''அப்பா! நேற்றிரவு நீங்கள் சுந்தரி மாமி வீட்டிற்குப் போனீர்களா? அங்கு அம்பாளின் தோடுகளை விட்டுவிட்டு வந்துவிட்டீர்களாம். அந்த மாமி நேற்றிரவு நம் வீட்டிற்கு வந்து 'அப்பாவை எழுப்பாதே, சாவியை எடுத்துக் கொண்டு என்னுடன் கோயிலுக்கு வா. ஏன் எதற்கு என்று கேட்காமல் உடனே வா' என்று கட்டளையிட்டாள். அம்மன் சந்நிதி திறந்தவுடன் தோடுகள் இரண்டையும் என்னிடம் கொடுத்து, 'இதை அம்பாளுக்குச் சாத்திவிட்டு வா. உங்கப்பா இதை என் வீட்டில் தவறி வைத்து விட்டுப் போய்விட்டார்' என்று சொன்னாள்.''

தியாகு மூச்சுவிடாமல் பேசினான். அவன் பேச்சில் கலவரமில்லை. குருக்கள் ஏதோ பேச எண்ணினார். ஆனால் தியாகு அங்கு நின்றால்தானே? 'காலேஜிற்கு நாழிகையாகி விட்டது' என்று அவன் சைக்கிளில் கிளம்பி விட்டான்.

சுந்தரர் ஓடினார் சுந்தரி வீட்டை நோக்கி. அவள் வீட்டு வாசலில் ஒரு பெரிய கார் நின்று கொண்டிருந்தது. சுந்தரி காருக்குள் ஏறுவதற்கும் சுந்தர குருக்கள் கார் சமீபம் வருவதற்கும் சரியாக இருந்தது. குருக்களைப் பார்த்தவுடன் சுந்தரி கீழே இறங்கி அவரை உள்ளே அழைத்துக் கொண்டு போனாள். போனவள் குருக்களுக்கு வணக்கம் செய்துவிட்டு, ''குருக்களே! என்னை ஆசீர்வதியுங்கள். ஒரு பெரிய ஆபத்திலிருந்து நான் காப்பாற்றப்பட்டிருக்கிறேன். இனி இந்த ஊரில் இருக்க எனக்கு விருப்பமில்லை. உங்கள்

நல்ல மனசை நான் சஞ்சலப்படுத்திவிட்டேன். அந்தப் பாபத்தை நான் செய்ய விரும்பவில்லை. உங்கள் மீது விழும் பழிக்கு நான் ஆளாக விரும்பவில்லை. ஏதோ பாபம் செய்து விட்டுத்தான் நான் இப்படி அபலையாக நிற்கிறேன். நான் ரொம்ப ரொம்பச் சிறியவள். உங்கள் மனத்தைச் சபலத்திற் குள்ளாக்கி விட்டுப் பெரிய பாபத்தைச் செய்யத் தூண்டி விட்டிருக்கிறேன். என்னை மன்னித்து விடுங்கள்'' என்று கூறிவிட்டு விடு விடென்று வெளியே நடந்து காருக்குள் ஏறிக் கொண்டாள்.

கதையை முடித்துவிட்டு நிறுத்தினார் சோமுப் பண்டாரம்.

''இறைவனின் விளையாட்டை யார் அறிவார்?'' என்றேன் நான்.

''சந்துரு சார்! இதிலே முக்கியமா கவனிக்க வேண்டியது சுந்தர குருக்கள் தான். முப்பது வருஷமாக அவர் அந்த அம்பாளோட பக்தியிலே ஒன்றிப் போயிருக்கிறார். அப்படி இருக்கும் போது அந்த பக்தனை அவள் காப்பாற்றாமல் என்ன செய்வாள்? சோதனையில் அகப்பட்டுக் கொண்டு வேதனையடையும்படி செய்து சுந்தர குருக்களைக் காப்பாற்றிவிட்டாள்.''

சொல்லி நிறுத்தினார் சோமுப் பண்டாரம். நேரம் ஆகிவிட்டது என்று நாங்கள் மூவரும் திருநள்ளாறு கோயிலை நோக்கி நடக்க முனைந்தோம். என் மனத்தில் விவரிக்க முடியாத சாந்தி ஏற்பட்டது.



# முதிர் பழச்சோலை

'ராஜ்'

''என்ன கிண்டல் செய்கிறீர்களா?'' அந்த இல்லத்தின் மேலாளர் சிவராமன், தன் மூக்குக் கண்ணாடியின் இடுக்கின் வழியாக எதிரே இருந்த மனிதனைப் பார்த்தபடி கேட்டார்.

அந்த ஆளுக்கு கிட்டத்தட்ட நாற்பது வயதிருக்கும். அவன் தோற்றத்தில், நடவடிக்கையில் ஏதும் விளையாட்டுத் தனம் இருப்பது போல் தோன்றவில்லை.

''இல்லை சார், நிஜமாகத்தான். நான் இங்கிருக்கும் முதியவர் ஒருவரைத் தத்தெடுத்துக் கொள்ள விரும்புகிறேன்.''

அவன் மறுபடியும் சொன்னதைக் கேட்டும் சிவராமனால் நம்பமுடியவில்லை.

''ஏம்பா, குழந்தை இல்லாதவங்கதான் சாதாரணமா அநாதை ஆசிரமத்திலிருந்து குழந்தைகளைத் தத்தெடுத்துக் கிறேன்னு வருவாங்க. இதுவோ முதியோர் இல்லம். இங்கே வந்து நான் ஒரு முதியவரைத் தத்து எடுத்துக்கறேன்னு நீ சொல்றது வேடிக்கையாகவும் நம்ப முடியாதபடியும் இருக்கே?''

அந்த ஆள் அவர் சொன்னதைக்கேட்டுச் சிறிது நேரம் மௌனமாக இருந்தான். பிறகு சொன்னான்.

''சார்! நான் எதற்கு உங்கள் முன்னால் இப்படி ஒரு வேண்டுகோளை வைக்கிறேன்னு விவரம் சொல்றேன். ஆனா கடைசியில் எல்லாவற்றையும் கேட்டுவிட்டு, உங்களால் முடியாதுன்னு மட்டும் சொல்லிவிடாதீர்கள், சார்.''

கெஞ்சலாகச் சொல்லிவிட்டு அவர் தொடர்ந்தார்.

''சார்! எனக்கு இப்போது முப்பத்தெட்டு வயதாகிறது. எனக்குக் கல்யாணமான போது வயது இருபத்தி நான்கு. சரியாகப் பதினான்கு வருடங்களுக்குப் பிறகு ஆண்டவன் ஆசியுடன் இப்போதுதான் என் மனைவி முதல் முறையாகக் கருத் தரித்திருக்கிறாள்.''

பேசிக்கொண்டே வந்தவன் இப்போது நிறுத்தினான்.

'அதனால் என்ன இப்போது?' என்பது போல் சிவராமன் அவனைப் பார்த்தார்.

''சார்! சுருக்கமாகவே சொல்லிவிடுகிறேன். என் பெற்றோருக்கு நான் ஒரே பிள்ளை. என் தந்தை ஒரு பெரும் கான்ட்ராக்டர். அவருக்கு எப்போதும் வேலை, வேலை, வேலைதான். நான் குழந்தையாய் இருந்த போது என்னை எடுத்துக் கொஞ்சவோ, சீராட்டவோ அவருக்கு நேரமே இருக்காது. என்னுடன் அவர் தன் நேரத்தைச் செலவிடுவதே மிகவும் குறைவு. என் மூன்று நான்கு வயதுவரை நான் ஒரு நாளில் கிட்டத்தட்ட பதினெட்டு மணி நேரம் என் தாத்தாவுடன் இருப்பேன். ஒரு குழந்தைக்கும், அதனுடைய தாத்தாவுக்கும் உள்ள உறவே தனியானது. அவருடைய அரவணைப்பில் நான் பெரும் சுகம் கண்டேன். என்னை மடியில் வைத்துக்கொண்டு அவர் எனக்கு இராமாயணக் கதை சொன்னார். நன்னெறி சொல்லிக் கொடுத்தார். இவை

என்னை வாழ்க்கையில் நெறிமுறையுடன் வாழ உதவின. குறிப்பாக, அவர் என் குழந்தைப் பருவத்தில் சொன்ன, ''நாம்ப தப்பு பண்ணினா சாமி கண்ணைக் குத்திடும்'' என்ற வார்த்தைகள் என் உள் மனத்தில் ஆழமாகப் பதிந்து விட்டன. இன்று நான் வாழ்க்கையில் கண்ட ஏற்றம், என்னுடைய அயராத உழைப்பினால் தானே அன்றி யாரையும் ஏமாற்றியோ, மோசம் செய்தோ அல்ல. அந்த மாதிரி என் பிள்ளையும் வளர வேண்டுமென ஆசைப்படு கிறேன். அப்படி அவனைக் குழந்தைப் பருவத்திலிருந்தே நல்வழிப்படுத்த அவனுக்கு ஒரு தாத்தா தேவை. என் தந்தையோ இன்று உயிரோடில்லை. அதனால் பிறக்கப் போகும் குழந்தைக்கு, நன்னெறி வழங்க, நல்லது சொல்லித்தர எனக்கு ஒரு பெரியவர் தேவை. அவர் எங் களுடனே இருக்கலாம். எங்களில் ஒருவராக இருக்கலாம். அப்படி ஒருவரைத்தான் நான் இங்கு தேடி வந்திருக்கிறேன். ஏன், பிறக்கப் போகும் என் குழந்தையுடன் நான் நேரத்தைச் செலவிட முடியாதா? அதற்கு நன்னெறிகள் சொல்லித்தர முடியாதா என்று நீங்கள் கேட்கலாம். இன்று நான் பல வசதிகளுடன் வாழ்ந்தாலும், வியாபாரத்தில் மேலும் தீவிர கவனம் செலுத்தவும், அதிக நேரத்தைச் செலவிடவும் வேண்டிய நிலையில் இருக்கிறேன். அதனால் தான் இப்படி ஒரு கோரிக்கையை உங்கள் முன்னால் வைக்கிறேன். ஆனால் ஒன்று, எங்களுடன் வந்து தங்கப்போகும் பெரியவர் முழு வசதியுடன் சௌகர்யமாக கார், பங்களா என்று இருக்கலாம். எனக்கு நல்லவராக ஒரு பெரியவரைத் தந்து உதவுவீர்களா?''

சிவராமன் அந்த மனிதன் சொல்வதைக் கேட்டுச் சில நிமிடங்கள் பேசாமலிருந்தார். பிறகு தொண்டையைக் கனைத்தபடி பேசத் தொடங்கினார்.

''ஆங், உங்கள் பெயர் என்னவென்று சொன்னீர்கள்?''

''மனோஜ்.''

''மிஸ்டர் மனோஜ்! உங்கள் கோரிக்கையின் சிறப்பை நான் உணர்கிறேன். ஒரு குழந்தை நல்லபடி வளரவேண்டும், அதற்கான சூழ்நிலையை உருவாக்க வேண்டுமென்ற உங்கள் நல்லெண்ணத்தை நான் பாராட்டுகிறேன். ஆனால் உங்களுக் கேற்ற பெரியவரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை உங்களிடமே விடப் போகிறேன். இதோ பாருங்கள். இந்த முதியோர் இல்லத்தில் இது சாப்பாட்டு நேரம். சாப்பாட்டிற்குப் பிறகு பெரியவர்கள் எல்லாரும் சிறிது நேரம் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பார்கள். இப்போது நாம் உட்கார்ந்திருக்கும் அறைக்குப் பக்கத்தில் இன்னோர் அறை இருக்கிறது. அதில் உட்கார்ந்து அவர்கள் பேசிக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம். கேட்கலாம். நீங்கள் என்னைப் பார்க்க வந்தவர் போல் உட்கார்ந்து பேசிக் கொண்டிருங்கள். அதே சமயம் அவர்களைக் கவனித்து உங்களுக்குப் பிடித்தமானவரை அடையாளம் காட்டுங்கள். நான், நீங்கள் சென்றபிறகு அவருடன் பேசி அடுத்த முறை நீங்கள் வரும்போது அவரை உங்களுடன் அழைத்துச் செல்லும்படி ஏற்பாடு செய்கிறேன். அதே சமயம், நீங்கள் இந்த முதியோர் இல்லத்திற்கு ஒரு நன்கொடை வழங்குவீர் களானால் அதையும் வரவேற்கிறோம்.''

மனோஜ் பார்த்தான்.

அங்கிருந்த இருபது முதியவர்களில் ஒருவர் அவன் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தார்.

நல்ல வயதானவர். தோலின் சுருக்கம் அதைத் தெளிவு படுத்தியது. ஆனால் நல்ல உரம் பாய்ந்த உடல். குரல் கணீ ரென்று இருந்தது. எதையோ சொல்லி அந்த மனிதர்

பெரிதாகச் சிரித்தார். பொக்கை வாய்ச் சிரிப்பு மனத்தைக் கவர்வதாக இருந்தது. அவர் சொன்னதைக் கேட்டு மற்றவரும் சிரித்தனர்.

மனோஜ் விரல் அவரைச் சுட்டிக் காட்டியது.

சிவராமன் அவனுடைய கையைப் பிடித்துக் குலுக்கினார். ''இங்கிருப்பவர்களில் இவர் தான் சுறுசுறுப்பானவர். சூட்டிகையானவர். பெயர் ஆறுமுகம். இவரை உங்களுடன் அனுப்பி வைப்பதில் சிக்கல் எதுவும் ஏற்பட வாய்ப்பில்லை. ஏனெனில் இங்கிருப்பவர்களில் ஏழெட்டு பேர் தங்கள் குடும்பத்தை விட்டுப் பிரிந்து வாழ்க்கையில் சேமித்த பணத்தை இல்லத்திற்குக் கொடுத்துவிட்டு இங்கு இருப்பது தான் நிம்மதி என்று மகிழ்ச்சியுடன் இருப்பவர்கள். மற்ற பெரியவர்கள் ஏதும் வசதி அற்றவர்கள். அவர்களை இந்த இல்லம் தன் பணத்தில் தான் பராமரித்து வருகிறது. அப்படி இல்லத்தின் பராமரிப்பில் வாழ்பவர் ஆறுமுகம். நான் ஆறுமுகத்திடம் பேசி வைக்கிறேன். நீங்கள் இரண்டு நாள் பொறுத்து வாருங்கள்.''

மனோஜ் முழு மகிழ்ச்சியுடன் கிளம்பினான்.

இரண்டு நாள் கழித்து அவன் அந்த முதியோர் இல்லத்தில் மறுபடியும் நுழைந்தபோது மேலாளர் சிவராமன் வரவேற்பில் உற்சாகமில்லை.

''ஐ ஆம் ஸாரி, மனோஜ். நான் பெரியவர் ஆறுமுகத்துடன் பேசிப்பார்த்தேன். அவருக்கு இந்த இல்லத்தை விட்டுப் போக விருப்பமில்லை. 'என்னை வெளியே போ, இங்கே உனக்கு இடமில்லை என்று சொல்லிவிடுங்கள், போய் விடுகிறேன். மாறாக இங்கே போ, அங்கே போ என்று கட்டாயப் படுத்தாதீர்கள்' என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார்.''

அவர் சொல்வதைக் கேட்டு மனோஜின் மனம் விழுந்துவிட்டது. அவன் எவ்வளவு ஆர்வத்துடன் வந்தான்! பிறக்கப் போகும் குழந்தைக்கு அது வளர்ந்ததும் அதற்கு நன்னெறி சொல்ல ஒரு பெரியவர் வரப்போகிறார் என்று எவ்வளவு ஆனந்தத்துடன் இரண்டு நாள்கள் இருந்தான்?

''ஐயா! தவறாக நினைத்துக்கொள்ளாதீர்கள். அந்தப் பெரியவரிடம் எல்லா சௌகர்யங்களுடன் என் வீட்டில் இருக்கலாம் என்று சொன்னீர்களா?''

''சொல்லிவிட்டேன் மனோஜ்! ஆனால் அதையெல்லாம் அவர் பொருட்படுத்தவில்லை.''

''ஐயா!'' மனோஜ் மறுபடியும் தயக்கத்துடன் கேட்டான். ''நல்லதொரு குறிக்கோளுடன் தான் நான் அவரை எங்களுடன் தங்கக் கூப்பிட்டேன் என்று சொன்னீர்களா?''

''அதையும் சொல்லிவிட்டேன். அவர் அதற்கும் அசைந்து கொடுக்கவில்லை.''

மனோஜிற்கு அதற்குமேல் என்ன சொல்வது, செய்வது என்று தெரியவில்லை. சிவராமனுக்கு நன்றி சொல்லிவிட்டு எழுந்து கொண்டான்.

''ஒரு நிமிஷம்'' என்று அவனை நிறுத்தினார் சிவராமன். ''உங்களுக்கு ஆட்சேபணை இல்லை என்றால் நானே உங்களுடன் வரத் தயார்.''

மனோஜ் இதை எதிர்பார்க்கவில்லை; சில நிமிடங்கள் குழம்பி நின்றான்.

''என்ன யோசிக்கிறீர்கள்?'' என்று தொடர்ந்தார் சிவராமன். ''நானும் இந்த முதியவர்களில் ஒருவரைப் போலத் தான். கணக்கு வழக்கு, ஆபீஸ், நிர்வாகம் எல்லாம் தெரிந்த

வனாகையால் இங்கே ஆபீஸ் மானேஜராக இருந்துகொண்டு இங்கேயே தங்கியிருக்கிறேன். நீங்கள் சரி என்று சொன்னால் நான் உங்களுடன் வர ரெடி.'' அவர் முகத்தில் ஆர்வம் தெரிந்தது.

மனோஜ் இதற்கு உடனே எதுவும் பதில் சொல்ல முடியாமல் தடுமாறினான். ''எனக்குக் கொஞ்சம் அவகாசம் கொடுங்களேன்'' என்று சொல்லிவிட்டு அந்த இடத்தை விட்டு அகன்றான்.

முதியோர் இல்லத்தில் உள்ள ஒரு பெரியவர் இப்படி ஓர் அழைப்பிற்கு மறுப்புத் தெரிவிப்பார் என்பதை அவனால் நம்ப முடியவில்லை. இல்லத்தில் ஏதோ வெந்த சோற்றைத் தின்று கொண்டிருப்பவர் ஒருவர் தினமும் விருந்துச் சாப்பாடும் பாலும் பழமும் கொடுக்கிறேன் என்று அழைத்தால் வரமாட்டேன் என்று சொல்வாரோ? அவனால் அந்த உண்மையை ஜீரணிக்க முடியவில்லை. ஒரு வேளை சிவராமன் பெரியவர் ஆறுமுகத்திடம் விஷயத்தைச் சொல்லியே இருக்க மாட்டாரோ? அவனுக்குச் சந்தேகமாக இருந்தது. அப்படி சொல்லாமலேயே இருந்தால் கூட அவனால் என்ன செய்ய முடியும்? மேலாளர் சிவராமன் அனுமதியில்லாமல் ஆறுமுகத்தைப் பார்க்க முடியாதே.

வருத்தத்துடன் வெளியே வந்தவன் முதியோர் இல்லத்திற்கு எதிரே இருந்த ஒரு பாறையின் மீது ஆறுமுகம் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான். அந்தப் பாறை ஒரு சிமென்ட் பெஞ்சு மாதிரி நீண்டிருந்தது. அவருடன் நேரடியாகப் பேசிப் பார்த்து விடலாமென்று நினைத்தவன் அப்போதுதான் ஆறுமுகத்தின் அருகில் இன்னொருவர் உட்கார்ந்து கொண்டிருப்பதையும் பார்த்தான். அவனுக்கு ஏனோ அவர்கள் என்ன பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்று

கேட்கத் தோன்றியது. பாறையின் பின்புறம் போய் உட்கார்ந்து கொண்டான். அவர்கள் பேசிக் கொள்வது அவனுக்குத் தெளிவாகக் கேட்டது.

''ஏண்டா ஆறுமுகம், கேக்கணும்னு நினைச்சேன். உள்ளே எல்லாரையும் வெச்சிக்கிட்டுக் கேக்கறது சரியா இருக்காதுன்னு தோணித்து. ஏண்டா இங்கேயே இருந்து இந்த சோத்தைத் தின்னுட்டிருக்கணும்னு தலைவிதியா என்ன? ஒரு சான்ஸ் கிடைச்சா வெளியே போக வேண்டியது தானே? ஏண்டா எங்களைத்தான் யாரும் கூப்பிடலை. சிவராமன் அவ்வளவு சொன்னானே, போக வேண்டியது தானே?''

''டே, கணேசா! நீகூட புரிஞ்சிக்காமெ பேசறயே? அந்த ஆளு எதுக்குத் தெரியுமா என்னைக் கூப்பிட்டானாம்? அவனுக்குக் குழந்தை பிறக்கப் போவுதாம். அது வளரும் போது அதுக்கு இராமாயணம், பாரதம், ஆத்திசூடி, நன்னெறின்னு சொல்லித்தரணுமாம். அப்போதுதான் அது நல்லா வளருமாம்...'

அவர் முடிக்கவில்லை. அதற்குள் கணேசா என்று அழைக்கப்பட்ட அந்தப் பெரியவர் குறுக்கிட்டார். ''அதெல்லாம் சரிதானே?...''

''சரிதான், அது யாரு இல்லைன்னா? ஆனாக்க அதைச் சொல்லித்தருபவங்களுக்கு எவ்வளவு நாளைக்கு முக்கியத் துவம் இருக்கும்னு நெனைக்கிறே? அது அந்தக் குழந்தை பள்ளிக்கூடம் போற வரைக்கும்தான். பிறகு அந்தக் குழந்தைக்கு டியூஷன் கிளாஸ், பாட்டு கிளாஸ், டான்ஸ் கிளாஸ்னு வந்துடும். அந்தக் குழந்தைக்கு நேரமும் இருக்காது. இவுங்க அழைச்சிட்டுப் போற தாத்தாவுக்கு

வேலையும் இருக்காது. அவரை இனிமே வேணாம்னு தூக்கியெறிஞ்சுடுவாங்க. அப்புறம் அந்தத் தாத்தா கதி அதோகதிதான். அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்ட கதை தான்...''

''ஆமா, நீர் சொல்றது சரிதான். நான் இதைப்பத்தி யோசிக்கவே இல்லையே?''

''நீ எதைப்பத்தி யோசிச்சிருக்கே? அதுமட்டுமில்லை. இதிலே இன்னொரு பிரச்சனையும் இருக்கு. நான் போற இடத்திலே அவுங்க என்ன ஜாதியோ, அதுலே நான் ஐக்கியப் படணும். அல்லது அவுங்க பழகு முறையிலே, பார்வையில வேறுபட்டவனாப் போயிடுவேன். இங்க பாரு இந்த முதியோர் இல்லத்தில நமக்குள்ளே ஜாதி வித்தியாசங்கள் இல்லை. இங்கே நாம்ப எல்லாருமே ஆதரவு இல்லாத கிழவங்கன்னு ஒரே ஜாதி. இதப்பாரு நீ ஐயரு. நீ மொதல்லெ போனா உனக்கு நான் கொள்ளி போடணும்னு நீ கேட்டிருக்கே. அதே மாதிரி எனக்கு நீ பண்ணனும்னு நான் சொல்லியிருக்கேன். அது மாதிரி நாம்ப போற இடத்திலே நடக்கக் கூடுமா சொல்லு. இவுங்க என்னை ஜாதி பாக்காமெ ஏத்துக்கிட்டாலும், இவுங்க உறவுக்காரங்க என்னை அதுமாதிரி ஏத்துக்கணுமே?''

'ஆமாம்' என்பது போல் கணேசன் தலையாட்டினார்.

''இரு. இன்னமும் இருக்கு. என்னைத் தேடிவந்த ஆள் அவுரு தாத்தாகிட்டெ நிறைய நீதிக் கதைகள் கேட்டிருக் காராம். அதனாலெ அவரு வழிமுறையுடன் இன்று வாழறா ராம். அந்தத் தாத்தா ஸ்தானத்தை அவருக்குப் பொறக்கப் போற குழந்தைக்கு நான் நிரப்பணுமாம். இது சிவராமன் சொன்னது. அதுக்கு நான் திருப்பிக் கேட்டேன். பிறக்கப்

போகும் குழந்தைக்குத் தாத்தா தான் இல்லை. ஆனால் அப்பா? அதாவது என்னைத் தேடி வந்த ஆள் அவரு இருக்காரே? அவருக்குத்தான் எல்லாம் தெரிஞ்சிருக்கே? அவரே அந்தக் குழந்தைக்குச் சிறு வயதிலேயே நல்லது கெட்டது சொல்லி வளர்க்கலாமேன்னு சொன்னேன். அதுக்குச் சிவராமன் என்ன தெரியுமா சொன்னான்? அந்த ஆளுக்கு நேரமில்லையாம். பணம் சம்பாதிக்கறதிலேயே நேரத்தைச் செலவிட வேண்டியிருக்காம். அதுக்குத்தான் கூலிக்கு ஆள் தேடறாராம். இது எப்படியிருக்கு? தன் குழந்தைக்குச் செலவிட நேரமில்லை, ஆனா பணம் பண்ணத் தான் நேரமிருக்குன்னு சொல்ற ஆள் எப்படிப்பட்ட ஆளா இருப்பான்? அதனாலே தான் நான் முடியாதுன்னுட்டேன்.''

அவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த மனோஜிற்கு பளீரென்று அறை விழுந்தது போலிருந்தது. அவன் மெதுவாக எழுந்து தன் காரை நோக்கி நடந்தான்.

அவன் காரை நெருங்கும் சமயம் ஒரு பழைய சைக்கிளைத் தள்ளிக்கொண்டு சிவராமன் எதிரே வந்தார். ''என்ன சார், நீங்க இன்னமும் கிளம்பலையா?'' என்றார்.

''இதோ புறப்பட்டுகிட்டே இருக்கேன். நல்ல வேளை உங்களைப் பார்த்தேன். இப்ப நான் செய்த முடிவை உங்ககிட்டெ சொல்லலாம்னு நினைக்கிறேன். பிறக்கப் போகும் என்னுடைய குழந்தைக்கு நானே அப்பாவாகவும் தாத்தாவாகவும் இருக்கிறதாத் தீர்மானிச்சுட்டேன். நீங்க இதுவரை செஞ்ச ஒத்தாசைக்கெல்லாம் ரொம்ப தாங்க்ஸ்.''

அவன் கிளம்பினான்.



# தரிசனம்

லக்ஷ்மி ரமணன்

கோயில் வாசலில் கூட்டம் தெரிந்தது. ''சார் இந்தப் பக்கமா வாங்க.'' மொஹந்தி, முரளியின் கையைப் பிடித்து இழுத்தார். அவனையும், மனைவி தீபிகாவையும், மகன் செந்திலையும் கோயிலுக்குள் அழைத்துச் சென்று ஜெகந்நாதரைத் தரிசனம் செய்வித்து வெளியே அழைத்து வந்து விடுகிற பொறுப்பை ஏற்றிருந்தார் மொஹந்தி. அதை நிறைவேற்ற அவர் கேட்ட தொகை முந்நூறு ரூபாய். முரளி அவருடன் விவாதித்து அந்த விலையைப் பாதியாக இறக்கியிருந்தான்.

''அம்மா! பை வாங்கிக்கங்க.''

அவர்கள் கோயிலை நெருங்குகையில் சிறுவன் ஒருவன் குறுக்கிட்டான்.

அவனுக்குப் பத்து வயதிருக்கும். கைகளிலும் தோள் பட்டையிலும் பைகளின் சுமை. சின்னக் கண்கள், சுறுசுறுப்பான முகம்.

''வேண்டாம்ப்பா. வீட்டிலே நிறையப் பை இருக்கு.''

''இருக்கலாம். உங்க வீட்டிலே சாமி இருக்கு. இருந்தாலும் இங்கே சாமி கும்பிட வரலையா? வாங்கிக்கங் கம்மா... ப்ளீஸ்.'' சிறுவன் இந்தியில் கெஞ்சினான்.

''வாங்கம்மா போகலாம். இப்படித்தான் இவனுக தொந்தரவு பண்ணுவாங்க.'' மொஹந்தி அவசரப்பட்டார்.

''ப்ளீஸ்... ஒண்ணாவது வாங்கிக்கிட்டு போணி பண்ணுங்க. இன்னிக்குக் காலையிலேருந்து வியாபாரமே ஆகலைங்க.''

''படிக்கப் போகலையா தம்பி?'' தீபிகா கேட்டாள்.

''நான் படிக்கப் போனால் குடும்பப் பொறுப்பை யார் சுமப்பாங்க? அப்பா இல்லை; தம்பி சின்னவன்.''

''இப்படிப் பை விற்று நீ பிழைக்க முடியுமா?''

''முடியாது... எனக்குத் தெரியும். ஃபாக்டரியிலே பன்னிரண்டு மணி ஷிப்டிலே வேலை செய்யறேன். சாயந்தரம் ஹோட்டல்லே சர்வரா இருக்கேன்.''

''பெயர் என்ன?''

''கிஷோர்.''

குருவி தலையில் பனங்காய் என்பார்கள். கிஷோருக்கு அத்தனை சின்ன வயதில் எத்தனை பொறுப்புகள்! அதை நிறைவேற்ற அவன் தன்னைப் பல வேலைகளில் ஈடுபடுத்திக் கொண்டிருந்த விதம் தீபிகாவைக் கவர்ந்தது.

''ஒரு பை என்ன விலை?''

''பதினைந்து ரூபாய்.''

''அநியாயமா விலை சொல்லுவான். இதுக்குத்தான் வேண்டாம்னு சொன்னேன். நீங்க வாங்கம்மா'' இது மொஹந்தி.

''இதுலே இருக்கிற பூ வேலைப்பாட்டைப் பாருங்க. முழுதும் என் அக்கா கையால் போட்டது. ஜிப்வேறு வைச்சுத் தைச்சிருக்கு. ஒவ்வொரு பூவிலும் எனக்கு அக்கா முகம் தான் தெரியறது. விலையைக் குறைக்காதீங்க... ஒரு பையாவது வாங்கிக்கிட்டீங்கன்னா, நீங்க கோயிலுக்குப்

போய் வருகிற புண்ணியத்தோடு இந்தப் புண்ணியமும் சேரும்.''

கிஷோர் எத்தனை அழகாகப் பேசுகிறான் என்று நினைத்த தீபிகா ஆறு பைகளைத் தேர்ந்தெடுத்தாள்.

''நூறு ரூபாய்க்குச் சில்லறை இருக்கா?'' என்றாள்.

''கொடுங்க.''

பைகளும் மீதிப் பணமும் கை மாறின.

கோயிலுக்குள் நுழைந்ததுமே மொஹந்தி அவர்கள் மூவரின் கைகளையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டு இழுக்காத குறையாக முன்னே நடந்தார்.

வழியில் நின்ற பண்டாக்கள் இரண்டு மூங்கில் குச்சி களால் அவர்கள் முதுகுகளில் தட்டிவிட்டுக் காசுக்காகக் கைநீட்டினார்கள். மொஹந்தி முறைத்ததும் விலகினார்கள். அப்படித் தட்டினால் வந்தவர்களை ஆசீர்வதிப்பதாக ஐதீகமாம். 'ஆசீர்வாதத்திற்குக் கூட விலையா?' கேட்கவந்த தீபிகா நாக்கைக் கடித்துக் கொண்டாள்.

''பலபத்ரர், சுபத்ரா, கிருஷ்ணர். வேறெந்தக் கோயி லிலும் இந்த மூணு விக்ரகங்களையும் சேர்த்துப் பார்க்க முடியாது. மூலவர் விக்கிரகம் உயர்ந்த ரக மரத்தால் ஆனது என்பது இந்தக் கோயிலின் இன்னொரு சிறப்பு. கீழே பார்த்து காலை வைச்சு நடங்க. இல்லாட்டி ரொம்பவுமே வழுக்கும்'' மொஹந்தியின் குரலை அங்கே நிலவிய இரைச்சல் அடித்துக் கொண்டு போயிற்று.

மூலவர் இருந்த மேடையில் சிரம் வைத்துத் தொழுது கரம் குவிக்க அனுமதித்தார்கள்.

அங்கேயும் தெய்வத்தைவிட அதைக் கட்டிக்காத்த மூன்று பண்டாக்களின் ஆதிக்கமே மேலோங்கியிருந்தது. ஆளுக்குப்

பத்து ரூபாய் என்று கணக்குப் போட்டு முரளி கையில் எடுத்து வைத்திருந்த முப்பது ரூபாயை முதலில் நின்றிருந்த பண்டா பறித்துக்கொள்ள, மற்ற இருவரும் கை நீட்டிவிட்டு ''எங்கே எங்கள் தட்சிணை?'' என்று முணு முணுத்தவாறு முறைத்தார்கள்.

மொஹந்தி முன்பே சொல்லி வைத்திருந்தார். ''கோயிலுக்குள்ளே மட்டும் தப்பித் தவறிக்கூட பர்ஸை வெளியே எடுத்துடாதீங்க. பிறகு அது உங்களுடையதாக இருக்காது,'' என்று எச்சரித்திருந்தார்.

அதனால் அவன் கையாலாகத்தனத்துடன் அங்கிருந்து நகர்ந்தான்.

மனசுக்குள் முள் குத்தினாற் போல் இருந்தது.

'அண்ணா!' பின்னால் யாரோ ஒரு பெண் தன் அண்ணனை அழைத்தாள்.

மனோவின் குரல் மாதிரி இருக்கே! அவன் சட்டென்று திரும்பிப் பார்த்தான். கூட்டம் அவனை அமுக்கியது. மனோ எப்படி அவனை அழைக்க முடியும்? அவள்தான் இல்லையே... இந்த உலகத்திலேயே இல்லையே!

முரளி கல்கத்தாவில் ராஷ்பிஹாரி அவென்யூ வாசி. பிரபல கார் டயர் கம்பெனியில் அவனுக்கு வேலை. அவன் தங்கை மனோ பி.ஏ. முடித்து விட்டு நகைக்கடை ஒன்றில் சேல்ஸ் கேர்ள் ஆக இருந்தாள்.

அங்கே தன் அக்கா கலியாணத்துக்காக நகை வாங்க வந்த வட இந்திய இளைஞன் நவீனுடன் பழக்கம் ஏற்பட்டது. நட்பு, காதல் என்று நிறம் மாறியது. முரளி தனக்கு ஆட்சேபணை இல்லை என்றான். நவீனின் அம்மாவும் சம்மதம் கொடுத்து விட்டு மனோவுடன் வரவேண்டிய

சாமான்களின் பெரிய பட்டியலை நீட்டினாள். அதோடு லட்ச ரூபாய் வரதட்சணை கேட்டாள்.

''இதில் ஒண்ணுகூட நீங்க வாங்கக்கூடாது. காதல் என்கிற வார்த்தைக்கே அப்புறம் அர்த்தமில்லாமே போயிடும்'' மனோ கோபப்பட்டாள்.

''அமைதியாக இரு மனோ! உன் சந்தோஷம்தான் எங்களுக்கு முக்கியம். முடிஞ்சதை இப்போ வாங்குகிறோம். அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாய்...''

''நோ... நோ...'' மனோ உறுதியாகச் சொல்லிவிட்டு நவீனைப் பார்க்கப் போனாள். போன வேகத்திலேயே திரும்பியும் வந்து சோர்ந்து உட்கார்ந்தாள்.

''என்னாச்சு மனோ?''

''எனக்கு இந்தக் கல்யாணம் வேண்டாம் அண்ணா!''

''ஏம்மா?''

''கோழைகள் காதலிக்கக்கூடாது. நவீன் ஒரு கோழை.''

''மனோ?''

''உங்கம்மா இத்தனை பெரிய லிஸ்ட் கொடுத்திருக்கிறாளே. கல்யாணம் பண்ணிக்கிட்டு நாம் என்ன கடையா திறக்கப் போகிறோம்னு கேட்டா, அதுக்கு அந்த நவீன் என்ன சொல்றான் தெரியுமா? 'நம் காதலைத் தடுக்காமே இந்த அளவுக்கு அம்மா கல்யாணத்துக்கு சம்மதிச்சதே பெரிசு... உங்க அண்ணன்கிட்ட சொல்லி முடிஞ்ச அளவுக்கு எல்லாத்தையும் வாங்கிடச் சொல்லிடு' என்கிறான்... சுத்தக் கோழை.''

''அவன் சொல்றதும் சரிதானே?''

''என்ன சரிதானே...? இவனுங்களுக்கெல்லாம் காதலுக்கு அர்த்தம் தெரியுமா அண்ணா? அதனாலே நான்

சொல்லிட்டேன் . 'போடா போ... உங்கம்மா குடுக்கிற லிஸ்ட்டோடு அவங்க சொல்ற பொண்ணையே கல்யாணம் பண்ணிக்க'ன்னு. நான் காசு கொடுத்துக் காதலனை வாங்க மாட்டேன் அண்ணா!''

''மனோ!''

''மனித உறவுகளைக் காசால் நிர்ணயிக்கிற குடும்பத்தில் நான் வாழ்க்கைப்பட விரும்பவில்லை.''

மறுநாள் மனோவின் மேஜைமீது இந்தக் குறிப்புதான் இருந்தது.

அவள்... தூக்க மாத்திரைகளை விழுங்கி...

விளைவு... முரளி பாசமுள்ள சகோதரியை இழந்த சோகத்தைத் தன் மூச்சில் இழையோட விட்டுக் கொண்டு நிற்கிறான். அந்தச் சோகத்தைச் சில நிமிடங்கள் பகிர்ந்துகொள்ளக் கூட நவீன் வரவில்லை.

ஒரே மாதத்தில் மனசிலிருந்த நினைவுகளை எல்லாம் அழித்து விட்டு நகரத்தின் பிரபல தொழிலதிபர் மகளை நவீன் மணந்து கொண்ட செய்தி தினசரிகளில் புகைப்படத்தோடு வெளியாயிற்று.

மனோ அவனை மணந்திருந்தால் தினம்தினம் செத்திருப் பாளோ? அல்லது சாகடிக்கப்பட்டிருப்பாளோ?

''போகலாமா?'' என்றார் மொஹந்தி.

''ம், சரி''

கோயிலுக்கு வெளியே வந்த போது...

''சார்... சார்'' பை விற்ற பையன் துரத்தினான்.

''மறுபடியுமா?... இப்பத்தானே வாங்கினோம். வேண்டாம்'' என்றாள் தீபிகா.

''நான் பை விற்க வரலைங்க. நீங்க பணம் கொடுத்தபோது நூறு ரூபாய் நோட்டுக்குப் பதில் ஐந்நூறு ரூபாயைக் கொடுத்துட்டீங்க. நீங்க போனபின்தான் அதை நான் கவனிச்சேன். இதை எடுத்துக்கிட்டு நூறு ரூபாய் நோட்டு கொடுங்க மேடம்! மீதி பத்து ரூபாயை நான் ஏற்கெனவே கொடுத்துட்டேன்'' என்றான் கிஷோர்.

முரளியின் மனம் துணுக்குற்றது. பையன் சொல்லியிரா விட்டால் அவர்கள் அதைக் கவனித்திருக்கப் போவதில்லை. கல்கத்தாவுக்குத் திரும்பிய பிறகு எங்கே செலவழித்தோம் என்று குழம்பிப்போய் இருப்பார்கள்.

அவன் கண்களில் படர்ந்த திகைப்பைப் பார்த்த கிஷோர் ''ஏன் சார் அப்படிப் பார்க்கறீங்க? நமக்குச் சொந்தமில்லாத பத்து காசைக் கூட நாம் திருப்பிக் கொடுத்துடணும், வச்சுக்கக் கூடாதுன்னு எங்கப்பா சொல்லுவார்.''

''உனக்குப் பணம் எவ்வளவு தேவைப்படுது? நீயே இதை வைச்சுக்கிட்டிருக்கலாம் இல்லையா?'' தீபிகா வேண்டுமென்றே கேட்டாள்.

''எனக்குப் பணம் தேவைதான்.. ஆனால் மனசாட்சின்னு ஒரு வேலி இருக்கில்லையா? பணத்துக்காக அந்த வேலியைத் தாண்டிக் குதிக்க மாட்டேன் மேடம்!''

முரளி நோட்டைப் பெற்றுக் கொண்டு நூறு ரூபாயைக் கொடுத்த போது, கோயிலுக்குள்ளே கிடைத்த தெய்வ தரிசனத்தைவிட இப்போது ஏதோ ஒன்று இதம் தந்தது!

●

# மதர்ஸ் டே

விமலா ரமணி

தீபிகா இவன் அருகில் வந்தாள்.

''நான் போயிட்டு வரேன்'' என்றாள். இவன் தீபிகாவைப் பார்த்தான்.

தீபிகா இவன் மனைவி. அழகு மனைவி. இன்பப் பெட்டகம். அழகு ராணி. அதுவும் இந்தப் புதுப் புடைவையில் அழகாகவே இருக்கிறாள்.

தீபிகாவிற்கு அழகுணர்ச்சி ரொம்ப அதிகம். எந்த நேரத்திலும் அழகாகவே இருப்பாள். தன்னை அசிங்கமாக ஒரு நாளும் வெளிப்படுத்தி இவன் பார்த்ததில்லை.

சமையல் அறையில் இருக்கும்போது கூடக் கண் மை அழியாமல், மெலிதான 'மேக்அப்' கலையாமல்தான் சமைத்துக் கொண்டிருப்பாள்.

சில கதைகளில் எழுதுவார்களே -

புடைவையை மேலே செருகி இருந்தாள். நெற்றியில் வியர்வைத் துளிகள். கையிலே மாவு - என்று. இவளை அந்த மாதிரிக் கோணத்தில் ஒரு நாள் கூடப் பார்த்த ஞாபகம் இல்லை இவனுக்கு.

'பாபி' படத்தில் ரிஷிகபூர், டிம்பிள் கபாடியாவை முதன் முதலாக மாவு வழியும் கரத்துடன் பார்த்த காட்சி இவன் நினைவில் அடிக்கடி வரும்.

இவன் முதன் முதலாகப் பார்த்தபோதும் சரி, முழுமையாகப் பார்த்தபோதும் சரி. தீபிகா அலங்காரம் குலையாத மனைவியாகிப் பத்தாண்டுகள் ஆகிவிட்டன. இன்னமும் அந்த அழகு குலையவில்லை.

குழந்தை பிறக்கவில்லை. ஒருவேளை தன் அழகு குலைந்து விடாமல் இருப்பதற்காகத்தான் இவள் பிள்ளை பெற்றுக் கொள்ளவில்லையோ என்றுகூட இவன் நினைத்திருக்கிறான். ஆனால் அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. கடவுள் தந்த வரம்தான் இது!

தீபிகாவின் அண்ணன் மாதவன் இதே ஊரில்தான் இருக்கிறான். பெற்றோர் தனியாக இதே ஊரில்தான் இருக்கிறார்கள். என்றாவது விசேஷம் என்றால் இருவருமாக வந்து மகளைப் பார்த்துவிட்டு, அல்லது சீர் ஏதாவது செய்துவிட்டுப் போய் விடுவார்கள். யாருக்கும் தொந்தரவு தராதவர்கள்.

அவர்களுக்கென்ன? வயதானாலும் பணம் இருக்கிறது. தனி ப்ளாட் ஒன்றில் கிழவனும், கிழவியும் ஆள்காரர்கள் போட்டுக் கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இப்போது கூடப் பொங்கலுக்கு முன் இருவருமாக வந்து தம் மகளைப் பார்த்துவிட்டுப் பொங்கல் சீர் என்று புடைவை, மஞ்சள் கொத்து, பழவகைகள், கரும்பு என்று வாங்கிக் கொடுத்துவிட்டுத்தான் போயிருக்கிறார்கள்.

தீபிகா, இப்போது கட்டியிருக்கும் இந்தப் புடைவை பொங்கல் சீர் புடைவைதான்.

''என்ன... அப்படி யோசனை? அம்மாவைப் போய்ப் பார்த்துட்டுப் பொங்கல் நமஸ்காரம் பண்ணிட்டு வந்துடலாம். வர்றீங்களா?''

''இல்லை தீபிகா! நீ ஃமட்டும் போய்ட்டு வா. என் பிரண்ட் ஒருத்தன் வரேன்னு சொல்லியிருக்கான்.''

தீபிகா ...ம்பினாள்.

''நான் போய்ட்டு வரேன்...'' என்றாள்.

''இந்தப் புடைவையிலே நீ ரொம்ப அழகா இருக்கே!''

- சொல்லலாமா, வேண்டாமா? உடனே தீபிகா தன் பிறந்த வீட்டுப் பெருமையைக் கூறத் தொடங்கிவிடுவாள். போன வருடம் என்ன சொன்னாள்?

''பின்னே? எங்கம்மா எனக்காகப் பார்த்து வாங்கின புடைவை நல்லா இல்லாம எப்படி இருக்கும்? புதுப் புடைவை வாங்கித் தந்தவங்களுக்குப் போய் நமஸ்காரம் பண்ணிட்டு வந்துடறேன்.''

வழக்கமாக வருடம்தோறும் நடைபெறுவதுதான் இது. பொங்கலன்று மாலை தீபிகா தன் பெற்றோரைப் பார்த்து நமஸ்கரித்து விட்டு வந்து விடுவாள். மறுநாள் நாலு வகை சாதங்கள் பிசைந்து காக்காய்களுக்கு உணவு படைப்பாள். கூடப் பிறந்தவர்கள் நன்றாக வாழவேண்டுமாம். இது சம்பிரதாயமாம்.

சில வருடங்களுக்கு முன் தெரியாமல் இவன் கேட்டு விட்டான்:

''தீபிகா! உன் அம்மாகிட்டே போய் நமஸ்காரம் பண்ணிட்டு வர்ற மாதிரி என் அம்மா கிட்டேயும் போயிட்டு வரலாம் இல்லையா? பாவம் அவங்க ஆஸ்ரமத்துலே தனியாத்தானே இருக்காங்க?''

தீபிகா சிரித்தாள்.

''என்ன இது... சம்பிரதாயம் தெரியாமத் தத்துப்பித் துன்னு பேசறீங்க? பண்டிகை, பருவம்னு வந்தா சுமங்கலிங்க கிட்டே ஆசீர்வாதம் வாங்கிக்கறதுதான் மரபு. தவிர, என் உடன் பிறந்தானுடைய நலனுக்கு நான் வேண்டிக்கிறேன். உங்க நலனுக்கு உங்க தங்கை வேண்டிக்கணும். ஆமாம்... அமெரிக்காவிலே இருக்கிறவங்களுக்குப் பொங்கலாவது போகியாவது?''

அன்று இவன் வாங்கிய அடிதான்.

அதன் பின் பேசவே இல்லை.

இவன் தாய் விதவை! அந்த விதவைதான் இவனை வளர்த்தவள்!

அவள் பொட்டிழந்தவள். அந்த வெறுமை நெற்றிக்காரி தான் இவன் வெறுமையைப் போக்கித் துணையாக இந்த தீபிகாவை இணைத்தவள்.

அமங்கலிதான்.

அந்த அமங்கலிதான் இவன் வாழ்வில் மங்கலத்தைத் தந்தவள்! கல்யாணம் ஆன புதிதில் தீபிகா தன் விரோதத்தை அதிகம் காட்டவில்லை.

அதன்பின் -

''நான் கோயிலுக்குப் போகக் கிளம்பும்போது உங்கம்மா எதிரில் வராங்க. கொஞ்சம் தள்ளி நிற்கச் சொல்லுங்க...''

''பூஜை முடிந்ததும் முடியாததுமாகத் தீபாராதனை எடுத்துக்க இந்தக் கிழவிக்கு என்ன அவசரம்? எங்கம்மா வும், மன்னியும் எடுத்துட்ட பிறகு எடுத்துக்கக் கூடாதா? சஷ்டி பூஜை... குழந்தை வேணுங்கறதுக்காகப் பண்ற பூஜை. அதுலே இவங்க...

''எங்கண்ணாவும் மன்னியும் புதுசா கல்யாணமான தன் பொண் மாப்பிள்ளையைக் கூட்டிட்டு வராங்க. இந்தக் கிழவி வந்து நிக்கப் போறா. கொஞ்சம் சொல்லி வையுங்க...''

தீபிகா இந்த நூற்றாண்டில் வாழ்பவள்தானா? அவளுள் எப்படி இப்படி வக்கிரமான எண்ணங்கள்? தொடக்கத்தி லிருந்தே தன் பிறந்த வீட்டினரால் மனத்துள் ஆணி அறையப்பட்ட எண்ணங்கள்.

ஒருநாள் அம்மா இவன் எதிரில் பெட்டி படுக்கையுடன் வந்தாள்.

''என்னம்மா இது? எங்கே கிளம்பிட்டே? எங்கேயாவது க்ஷேத்திராடன ப்ரோக்கிராமா?''

''இல்லைப்பா... வரவர என்னால தீபிகாவுக்கு உதவியா இருக்க முடியவில்லை. முந்தி ஏதோ கூடமாட வீட்டு வேலைக்கு உதவி செய்துட்டு இருந்தேன். இப்போ சுத்தமா உடம்பு சொன்னபடி கேக்கறதில்லை. என் தேகத்தைத் தூக்கிண்டு நடக்கறதே சிரமமா இருக்கு. அதனால...''

''அதனால...?''

''அதனால ஓல்ட் ஏஜ் ஹோம் ஒண்ணு வடவழியிலே இருக்காம். அதைப் பாத்துக்கற ராஜம்கிறவாளை எனக்கு நல்லாத் தெரியும். நீ ஏதோ கொடுக்கறதைக் கொடு. நான் அங்கே போய் இருந்துக்கறேன். உனக்கு ஒண்ணும் பிரச்னை வராது. நான் ராதா கல்யாண உற்சவம் நடத்தற மோகனா கோஷ்டியோட முன்பு கூடப் பாடியிருக்கேன். அதாவது சுமங்கலியா இருந்த போது! அவங்க உதவி பண்றதா சொல்லி யிருக்காங்க. உன் தங்கை அமெரிக்காவிலே இருந்து போன் பேசினா விவரம் சொல்லிடு.''

இவன் பேச்சையோ, பதிலையோ அம்மா எதிர்பார்க்க வில்லை. ஆட்டோவில் கிளம்பிப் போய் விட்டாள்.

''நீ அடிக்கடி வந்து பார்த்தாதான் எனக்குப் பிரச்னை. ஏதோ நீ தர்ற பணத்தை அந்த ஹோமுக்கு டொனேஷனாத் தந்துடு. அது போதும். அப்புறமா ஏதாவது நடந்தா அங்கே யிருந்து தகவல் வரும். அவங்களே எல்லாம் பாத்துப்பாங்க. நீ சும்மா வந்து நின்னாப் போதும். இஷ்டமிருந்தா கொள்ளி போடலாம். இல்லைன்னா ஹோம்காரங்களே அதையும் செய்துடுவாங்க.''

இவனுக்கு அழுகை வந்தது.

ஆனால் இவனால் எதுவும் செய்ய முடியவில்லை.

எங்கோ வெளியில் போய்விட்டு வந்த தீபிகா கேட்டாள்.

''அம்மா எங்கே?''

விஷயத்தைச் சொன்னான் இவன்.

''கோயிலுக்குப் போயிட்டு வந்தேன். வந்தவுடனே பிரசாதம் கேட்பாங்க உங்கம்மா. அதான் விபூதியைத் தனியா எடுத்து வைச்சேன். சரி. சரி.. இனி விபூதிப் பொட்டலத்தை உங்கம்மாவுக்குன்னு தனியா பத்திரமா வைச்சிருக்க வேண்டாம்.''

பாவி! பாவி! உன் உடம்புக்கு இருக்கிற அழகு உன் மனத்துக்கு இல்லையே?

நீ உன் அலங்காரத்துக்குக் காட்டும் சிரத்தையை நீ அன்புக்குக் காட்டவில்லையே!

எந்தவிதப் பாதிப்பும் இல்லாமல் தீபிகா வளைய வந்தாள். இவனால்தான் அப்படி இருக்க முடியவில்லை.

தனக்குள் நத்தைக்கூடாய் இவன் ஒடுங்கிப் போனான். அவ்வப்போது ஆஸ்ரமத்துக்குப் போய் அம்மாவைப் பார்த்துவிட்டு வருவான். ஹோமில் ஏதாவது நிகழ்ச்சி என்றால் இவன் அலுவலகத்திற்குப் போன் வரும். இவன் தன்னால் முடிந்த மட்டும் அங்கிருக்கும் அத்தனை பேருக்கும் சாப்பாட்டுப் பொட்டலங்கள், இனிப்புகள், பலகாரங்கள் வாங்கிப் போவான்.

இவன் சிந்தனைகள் கலைந்தன.

திடீரென்று தோன்றியது.

'இன்று காணும் பொங்கல் தினம். இன்று ஏன் என் தாயைப் போய்க் கண்டுவிட்டு வரக்கூடாது?'

''நாலு சாதம் பிசைந்து காக்காய்க்குப் போட்டா உடன் பொறந்தவன் க்ஷேமமா வாழ்வானாம். எங்கம்மா சொல்லுவாங்க...''

தீபிகா சொன்னது நினைவுக்கு வந்தது.

நேரே இவனுக்குத் தெரிந்த 'கேட்டரிங்' செய்யும் நண்பர் ஒருவரின் வீட்டுக்குப் போனான்.

நான்கு வகைச் சாதங்கள். புளியஞ்சாதம், தேங்காய்ச் சாதம், சர்க்கரைப் பொங்கல், தயிர் சாதம் என்று நான்கு வகைப் பொட்டலங்களை ஐம்பது பேருக்குக் கட்ட ஏற்பாடு செய்தான். எப்படியும் தீபிகா தன் அம்மா, அண்ணி என்று பேர் பேராகப் பார்த்துவிட்டு, நமஸ்காரம் செய்துவிட்டு, ஏகப்பட்ட ஆசீர்வாதங்களுடன் வீடு திரும்ப மாலை ஆகிவிடும்.

அதற்குள் 'ஹோம்' போய் இந்தப் பொட்டலங்களை அனைவருக்கும் விநியோகித்துவிட்டு வீடு திரும்பி விடலாம். அதுதான் சரி.

காக்காய்களுக்குச் சாதம் போட வேண்டுமாம்.

இவர்களும்... இந்த அநாதைகளும் காக்காயைப் போன்றவர்கள்தான்!

இந்தச் சமூகத்தினரால் விரட்டப்பட்டவர்கள். துரத்தி யடிக்கப்பட்டவர்கள்!

அந்தக் காக்கைக்காவது சனீஸ்வர வாகனம் என்ற ஒரு மரியாதை உண்டு. காகத்திற்கு அன்னம் படைக்கும் சம்பிரதாய மரியாதை உண்டு!

இவர்களுக்கு எந்த மரியாதையும் இல்லை. சூ... சூ... என்று விரட்டப்பட்டவர்கள்.

காக்கை நிறத்திலேகூட நந்தலாலாவின் கரிய நிறத்தைக் கண்ட பாரதி இன்று இல்லை.

இவர்கள் நிறமற்றவர்கள்!

இவர்கள் அனைவரும் 'அநாதைகள்' - என்கிற ஒட்டுமொத்தமான முத்திரை குத்தப்பட்டவர்கள்.

காக்கைகள் தம் உணவை அத்தனைக் காக்கைகளுடனும் பகிர்ந்து உண்பதைப் போல், இவர்கள் தம் உணர்வுகளைத் தமக்குள் பகிர்ந்து உண்ணத் தெரிந்தவர்கள்.

இவன் இரண்டு மணி நேரத்திற்குள் பொட்டலங்கள் தன் வீட்டிற்கு வர வேண்டும் என்று 'ஆர்டர்' கொடுத்துவிட்டு வீடு வந்து சேர்ந்தான்.

மனம் ஏனோ கசந்தது. சர்க்கரைப் பொங்கல் சாப்பிட்ட வாய் கசந்தது.

இவனுக்குச் சிறு வயதில் கையில் சாதம் போட்டுக் கதை சொன்னவள் இவன் தாய்.

அந்தத் தயிர் சாதத்துடன் வடுமாங்காயையும், வத்தல் குழம்பையும் ஒவ்வொரு வாய்க்கும் அளவாக விட்டு இவனை அன்புடன் பார்த்தவள் இவன் தாய்.

'புரை' ஏறிக்கொண்டால் இவன் தலையில் தட்டித் தண்ணீர் தந்தது -

''யாரோ உன்னோட பிரண்டு இப்போ உன்னை நினைச்சுக்கறாங்க'' - என்று சொன்னவள் இவன் தாய்.

இவனுடன் சாப்பிடும் இவன் தங்கை வீணா கூடக் கேலி செய்வாள்.

''ஏன் பரக்காவெட்டி மாதிரி அவசரம் அவசரமா சாப்பிடறே? மெல்லச் சாப்பிடு'' என்பாள்.

இவனுக்குத்தான் தெரியும் அந்த அமுதின் ருசி. அம்மாவின் திருக்கரங்களிலிருந்து இன்னும் இரண்டு பிடி அமுதை அதிகம் சாப்பிட்டுவிட வேண்டும் என்கிற அவசரம்தான் இவனுக்கு. அந்த வேகம்தான் இவனுக்கு!

ஆனால்... ஆனால்... எல்லாம் தலைகீழாய் மாறியது எப்படி?

''எங்கப்பா... அம்மாவைப் பாருங்க... யாருக்கும் தொந்தரவு கூடாதுன்னு தன் பிள்ளையோட கூட இல்லாம தனியா வீடு எடுத்துட்டு அங்கே இருக்காங்க.''

தீபிகா அடிக்கடி சொல்லும் வாசகம் இது.

'காலிங்பெல்' சப்தம்.

இவன் சிந்தனைகள் கலைந்தன.

அதற்குள் பொட்டலச் சாதம் தயாராகி வந்து விட்டதா என்ன?

இவன் கதவைத் திறந்தான்.

வந்தவள்...?

இவன் தாய்!

சிரித்தபடி வாசலில் காத்திருந்தாள்.

''அம்ம்... மா...''

''நாங்க எல்லாம் ஒரு வேன்ல கோயிலுக்கு வந்தோம். நான் தான் பர்மிஷன் வாங்கிட்டு உன்னைப் பார்க்க வந்தேன். இன்னிக்கு எங்க ஹோம்லே சர்க்கரைப் பொங்கல் செய்தோம். நான் தான் செய்தேன். அதான் கொடுத்துட்டு...''

அம்மாவை அப்படியே அணைத்தபடி டைனிங் ரூமுக்குக் கூட்டிப் போனான் இவன்.

''அம்மா! உன் கையால சாப்பிட்டு எத்தனை நாளாச்சு? போடும்மா. நீயே உன் கையால சாதம் போடு...''

அம்மா பொட்டலம் பிரித்து இவன் கையில் சாதம் போட்டாள்.

நெய்யும், ஏலக்காய் மணமும் நாசியைத் துளைக்க... அந்த ருசி இவன் நாவில் இனிக்க... அம்மா சமையலைச் சாப்பிட்டு எத்தனை நாளாச்சு?

''அம்மா... அம்மா...'' என்று மனம் ஆயிரமாயிரம் முறை கூவ... இவன் அழுதபடி சாப்பிட்டான்.

புரை ஏறிக் கொண்டது.

''தீபிகா இல்லையா?''

''அவ...''

''ஓ! பிறந்த வீட்டுக்குப் போயிருப்பா. இந்தா தண்ணி குடி. அவதான் உன்னை நினைச்சிருப்பா. அதான் இப்படி புரை ஏறுது...''

அம்மா தண்ணீரைத் தந்தபடி பேசினாள்.

இவன் கை கழுவிய பின் தன் தாயை நமஸ்கரித்தான்.

''நல்லா இருப்பா.''

இதுதான் பொங்கல்... காணும் பொங்கல். தன் தாயை இவன் கண்ட பொங்கல். இல்லை.. இல்லை... தரிசித்த பொங்கல்...

அம்மா வந்த ஆட்டோ கிளம்பியது.

இவன் உள்ளே திரும்ப நினைத்தபோது...

'கேடரிங்' வேன் வந்து நிற்க. அதில் ஏறப் போன இவன், ஒரு பைக் தன் வீட்டின் அருகே வந்து நிற்பதைப் பார்த்து சற்று நிதானித்தான்.

வந்தவன்...

தீபிகாவின் அண்ணன் மாதவன்.

''மாப்பிள்ளை... அவசரம்... என்னோட அப்பாவை ஆஸ்பத்திரியிலே சேத்திருக்கு. மைல்ட் ஹார்ட் அட்டாக். தீபிகா அழுதுட்டே ஆஸ்பத்திரிலே இருக்கா. என் ஒய்ஃபும் ஊரிலே இல்லை. பிறந்த வீடு போயிருக்கா. அம்மா தனியா திண்டாடிட்டு இருக்காங்க. நான் இப்போ அர்ஜண்டா ஆபீஸ் விஷயமா எம்.டி.யோட கிளம்ப வேண்டியிருக்கு. எல்லா ஏற்பாடும் பண்ணியிருக்கேன். நீங்க... நீங்க அங்கே போய்க் கொஞ்சம் இருந்தா... ரொம்ப ஹெல்ஃபுல்லா இருக்கும் இப்பவே வரதா இருந்தா நானே டிராப் பண்ணறேன். கிளம்புங்க... மாப்பிள்ளை.''

இவன் பார்த்தான்.

காத்திருக்கும் 'கேடரிங்' டிரைவரிடம் 'ஓல்ட் ஏஜ் ஹோம்' விலாசம் சொல்லி அனுப்பி வைத்தான்.

பைக்கின் பின் ஏறி அமர்ந்தான்.

''மாப்பிள்ளை! கூடவே ஒரு கிளாட் நியூஸ். நீங்க அப்பா ஆகப் போறீங்க. தீபிகாவுக்கே இப்பத்தான் விஷயம் தெரிஞ்சது. இந்த சந்தோஷத்தை அனுபவிக்கறதுக்குள்ளே அப்பாவுக்கு இப்படி...''

இவனால் இந்த மகிழ்ச்சியை ஏற்கவும் இயலவில்லை. புறக்கணிக்கவும் இயலவில்லை. பைக் போய்க் கொண்டிருந்தது.

சில வருடங்களுக்குப் பிறகு..

''டாடி'' - அன்புடன் தன்னை அழைத்த தன் குழந்தையைப் பார்த்தான் இவன்.

''என்னம்மா?'' என்றான் இவன்.

''டாடி... 'மதர்ஸ்டே'ன்னா என்ன டாடி? இன்னிக்கு 'மதர்ஸ் டே' யாமே?''

குழந்தை கேட்டாள்.

நாம் நாள்களை மட்டும்தான் கொண்டாடுகிறோம். நம்பினவர்களைக் கொண்டாடுவதில்லை.

தீபிகா உள்ளே வேலையாக இருந்தாள்.

வாசல் கதவு திறந்து கையில் கோயில் பிரசாதத்துடன் உள்ளே நுழைந்தவள்...?

இவன் மாமியார்.

தீபிகாவின் தாய்!

அவள் நெற்றியின் வெறுமையை இவன் கண்கள் பார்த்தன.

தன் கணவன் இறந்த அன்று அவள் கதறி அழுததும் தீபிகா தன் தாயைத் தேற்றியதும் நினைவுக்கு வந்தது.

''நான் இருக்கேம்மா. உன்னோட மகள். நீ கவலைப் படாதே. உன்னை நானும் அண்ணனும் பாதுகாப்போம்... அழாதேம்மா...''

அண்ணன் அமெரிக்கா போய்விட, கைப் பெட்டியுடன் தன் வீடு தேடி வந்த அந்தத் தாயை இவன் துரத்தவில்லை.

இவளும் ஒரு தாய்.

இவன் தாய்? அதோ அந்தப் புகைப்படத்தில் சுவரில் மாலையுடன் சிரிக்கிறாள்.

பிறந்த தன் பெண் குழந்தைக்குத் தன் தாயின் பெயரை 'அகிலா' என்று இவன் சூட்டினான். ஆண் குழந்தை பிறந்திருந்தால் தன் அப்பாவின் பெயரை வைக்கச் சொல்லி யிருப்பான்.

இதோ இதோ... இவன் கொண்டாடிக் கொண்டிருப்பது தான் உண்மையான 'மதர்ஸ் டே.'

''அகிலா இங்கே வாம்மா! இந்தா கோயில் பிரசாதம். மாப்பிள்ளை! நீங்களும் பிரசாதம் எடுத்துக்குங்க.''

தன் மாமியார் தந்த கோயில் விபூதிப் பிரசாதத்தை இவன் பெற்றுக் கொண்டபோது, ஒரு தாயின் ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொண்டதைப் போல் உணர்ந்தான் - மனம் நெகிழ்ந்தது.

●

# இலக்கியத்தின் விலை

கலைமாமணி விக்கிரமன்

''அப்பனே! அம்பலவாணா...! நடராசப் பெருமானே...'' என்று கூறிக் கொண்டே, படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்தார் சங்குப் புலவர். தன் இரு கைகளையும் தேய்த்துக் கண்ணைத் திறந்து உள்ளங்கைகளைப் பார்த்தார்.

திருவாசகப் பாடல்களை மனத்திற்குள் முணுமுணுத்துக் கொண்டார். அவ்வப்பொழுது வாயிற்கதவைத் திரும்பிப் பார்த்தார். 'செம்பொற் கபாடம் திறமினோ' என்று ஒரு முறை பாடக் கூட எண்ணினார்.

அந்த வீட்டுக் கதவு காலை ஐந்து, ஐந்தரைக்குத்தான் திறக்கப்படும். வீட்டுக்காரர் 'லொக் லொக்' என்று இருமிக் கொண்டே கையில் பால் கார்டு, பால் புட்டி சகிதமாக வெளியே வரும்போது தான் அந்தப் பத்தாம் நம்பர் வீட்டு வெளிவாயில் கதவு 'கடக் கடக்' என்ற ஒலியுடன் திறக்கப்படும்.

''என்ன சங்குப் பிள்ளைவாள்! நல்லாத் தூங்கினீங்களா...? வரீங்களா கார்டு எடுத்துண்டு?'' என்று வீட்டுக்காரப் பெரியவர் கூப்பிடுவதும் சங்குப் புலவர் பாயைச் சுருட்டிக் கொண்டு உள்ளே சென்று, ''காந்தி, காந்தி... பால் கார்டைக் கொடுக்கிறியா...?'' என்று தன் மருமகளைக் கேட்பதும் நாள்தோறும் நடைபெறும் நிகழ்ச்சிகள்.

''இந்தப் பட்டணத்திலே பாலுக்கு ஆலாய்ப் பறக்கலாச்சே, அம்பலவாணா!'' என்று சங்குப் புலவர் முணுமுணுத்துக் கொள்வார். உம்... பாலுக்கும் புலவருக்கும் எப்பொழுதுமே ரொம்பத் தொலைவு. குழந்தைக்குப் பால் இல்லை என்று பசு மாடு கேட்க அரசரிடம் சென்ற பண்டையப் புலவரின் கதையை எண்ணி மனத்தை அவ்வப்போது சாமாதானம் செய்து கொள்வார்.

மருமகள் காந்தி தூக்கக் கலக்கம் தெளிந்தும் தெளியாமலும் எழுந்து, தள்ளாடியபடி பாட்டிலையும் கார்டையும் எடுத்து மாமனாரிடம் கொடுத்தபடி, ''ராவே கார்டையும் புட்டியையும் எடுத்துத் திண்ணையில் வைத்துக் கொள்ளக் கூடாதா? நல்லாத் தூக்கம் வர்ற சமயம். ராவெல்லாம் சின்னப் புள்ளை தூங்க விடலை...'' என்று சலித்துக் கொள்வாள்.

சின்னப் புள்ளையா தூங்க விடவில்லை? எல்லாம் சங்குப் புலவரின் இரண்டாம் மகன்தான். சீட்டாடிவிட்டோ, இரண்டாம் காட்சி பார்த்துவிட்டோ வீடு வந்து படுத்தபிறகு தன் மனைவி காந்தியிடம் மீதி நேரத்திற்குச் சல்லாபம் தொடங்க வேண்டுமென்றால் எப்படி அவளால் சீக்கிரம் எழுந்திருக்க முடியும்?

''சரிம்மா காந்தி! திண்ணையில் கார்டையும் சீசாவையும் வைத்துக் கொண்டு தூங்கினால்... இது பட்டணம் பாரு; யாராவது களவாடிண்டு போயிட்டா..? ஒரு மாடு கட்டக் கொட்டில் இருந்தா ஊரிலேருந்து பசு ஓட்டியாந் துடுவேன்...'' என்று சொல்லிக் கொண்டே பால் வாங்கச் செல்வார்.

இந்தப் 'பட்டினக் கரை'யின் மீது அவருக்கு எப்பொழுதும் வெறுப்பு உண்டு. காவிரிக் கரையிலுள்ள

நமச்சிவாயபுரத்தில் வாழ்நாளின் பெரும்பகுதியைக் கழித்த சங்குப் புலவருக்கு, சென்னையில் ஐந்து ஒண்டுக் குடித்தனங் களுக்கிடையே இயந்திர வாழ்க்கையை நடத்துவதென்பது எள்ளளவும் பிடிக்கவில்லைதான்; ஆனால் என்ன செய்வது? ஆதியில் ஏதோ சுகப்பட்டாச்சு; இப்பொழுது சாண் வயிற்றைக் காப்பாற்ற வேண்டியிருக்கிறதே...

சங்குப் புலவர் தமிழ் படித்த பரம்பரையில் வந்தவர். சோழ வளநாட்டு ஆதீனங்களின் பாராட்டுதலைப் பெற்றவர். உள்ளூரிலிருந்த உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகத் தனது நாற்பதாண்டுகளையும் கழித்து, தமிழ் தனது மூச்சு என்று வாழ்ந்து வருபவர். தமிழ் சோறு போடாது என்று சொல்ல முடியாது. இரண்டு மகன்களையும் படிக்க வைத்தார். ஒரு மகளை நல்ல இடத்தில் திருமணம் செய்து கொடுத்து விட்டார். இவை எல்லாம் 'தமிழ்' அளித்த பலன் இல்லாமல் வேறென்னவாம்?

முதல் மகன் டில்லியில் அரசாங்க இலாகாவில் பணி யாற்றுகிறான். இரண்டாவது மகனுக்கு ஏதோ ஒரு கம்பெனி யில் வேலை. அவனைப் பற்றித்தான் புலவருக்குக் கவலை. கலியாணமான நான்கு வருடத்தில் மூன்று குழந்தைகளைப் பெற்றுக் கொண்டு விட்டான். குழந்தைகள் 'தாத்தா தாத்தா' என்று தாத்தாவைச் சுற்றிச் சுற்றி வருவார்கள்.

''என்னடாது! காலங்கார்த்தாலே தாத்தா மடியிலே போய் உட்கார்ந்து கொண்டு..? தாத்தாவுக்கு வெளியே போக வேண்டாமா?'' என்று காந்திமதி கடிந்து கொள்வாள். அவள் கவலை அவளுக்கு. அவர் நான்கைந்து புத்தகங்களைத் தூசி தட்டி எடுத்துக் கொண்டு நாலு இடத்துக்குப் போனால்தானே மறுநாளையச் செலவுக்கு உதவும்?

''தாத்தா, இது என்ன புத்தகம்?'' என்று ஐந்தாவது படிக்கும் பேரன் கேட்பான்.

சங்குப் புலவர் ஒவ்வொரு புத்தகமாகத் தூசி தட்டி, ஒவ்வொரு புத்தகமாகப் பிரித்துப் பார்த்து துணிப் பையில் எடுத்து வைத்துக் கொள்வார்.

'திருவள்ளுவர் தரும் வாழ்க்கை விளக்கம்' என்ற அந்த நூலை அவர் பத்தாண்டு காலம் படாத பாடுபட்டு எழுதியிருக்கிறார். எழுதி முடித்த பிறகு, அதை வெளியிட அவர் பட்டபாடு... தன் வாழ்நாளில் அந்த நூல் வெளிவராது என்ற முடிவுக்கும் வந்து விட்டார். தன் வாழ்நாளுக்குப் பிறகு அந்த நூல் அச்சிட்டு வெளியாகுமானால் அதன் லாபம் முழுவதும் இரண்டாவது மகன் இராசசேகரனையே சேர வேண்டும். தன் மூத்த மகனுக்கும், மகளுக்கும் இதைத் தெரிவித்தும் விட்டார். தன் இரண்டாவது மகன் மீது அவருக்கு அவ்வளவு பிரியம் என்பதை விட கவலைதான் அதிகம். அவனுக்கு எப்படியாவது உதவ வேண்டும் என்பது தான் இரவு - பகல் சிந்தனை அவருக்கு.

'வாழ்க்கை விளக்கம்' நூல் கையெழுத்துப் பிரதி அச்சாகாமல் பெட்டியில் இரண்டாண்டுகள் உறங்கியது. பிறகு தான் சிங்கப்பூரிலிருந்து அவரது பால்ய நண்பர் ஒருவர் நமச்சிவாயபுரம் கிராமத்திற்கு வந்து சேர்ந்தார். சகல வசதிகளும் சௌபாக்யங்களும் நிறைந்த அந்தச் செல்வருக்குத் தமிழ் இலக்கியங்களைப் படிக்க வேண்டும் என்ற பேராவல். நாள்தோறும் ஒரு மணி நேரம் சங்குப் புலவர் தமிழ் இலக்கிய இன்பம் வழங்க வேண்டும் என ஏற்பாடு செய்தார்.

இரண்டாண்டு காலம் அந்தப் பணி இனிது நடந்தது. புலவரும் இலக்கிய இன்பம் வழங்கியதற்குப் பிரதிபலன்

எதிர்பார்க்கவில்லை. அந்த சிங்கப்பூர் புரவலரும் காசு பணம் பற்றி இடையில் ஏதும் மூச்சு விடவில்லை. திடீரென்று சிங்கப்பூருக்குப் புறப்பட ஏற்பாடு செய்துகொண்டிருந்த அவர் புலவரைப் பார்த்து, ''உங்களுடைய இலக்கிய இன்பத்தில் இவ்வளவு நாள்கள் திளைத்தேன். அதற்கொரு மரியாதையும் நான் செய்யவில்லை. உங்களுக்கு என்ன வேண்டுமானாலும் கேளுங்கள்; தருகிறேன்'' என்றார்.

ஆயிரம் பத்தாயிரம் என்றால் கூடக் கொடுத்திருப்பார். சங்குப் புலவர் அப்படியெல்லாம் பணத்தாசை பிடித்தவரல்லர். 'திருவள்ளுவர் தரும் வாழ்க்கை விளக்கம்' கையெழுத்துப் பிரதியைத் தூசி தட்டி எடுத்து வந்து சிங்கப்பூரார் முன்பு வைத்தார். ''இந்த நூலை அச்சிட்டுத் தந்தால் போதும். இதுவே என் வாழ்க்கையின் விளக்கம்'' என்று ரத்தினச் சுருக்கமாக வேண்டுகோளை முடித்துக் கொண்டார்.

புரவலர் சிரித்தார். ''இதற்கென்ன ஐநூறு ரூபாய் ஆகுமா? ஆயிரம் ஆகுமா சங்கு? உம்... நீ கேட்கிறாய்...'' என்று கூறியவண்ணம் கையெழுத்துப் பிரதியைப் பக்கம் பக்கமாகப் புரட்டினார்.

''இதற்கு ஆகும் செலவு பெரிதன்று; ஆனால் இந்த நூல் வெளிவந்து தமிழ்நாட்டிற்குப் பயன்படுவதை, கற்றவர்களும் மற்றவர்களும் படித்துப் பாராட்டுவதைக் கண்டு என் உள்ளம் மகிழ்வது ஒன்றே போதும்'' என்று உறுதியாகக் கூறிவிட்டார்.

அன்றே சங்குப் புலவரைத் திருச்சிக்கு அழைத்துச் சென்று நல்ல அச்சுக்கூடத்தை ஏற்பாடு செய்து, நல்ல முறையில் அச்சிட்டு ஆயிரம் பிரதிகளைச் சங்குப் புலவரிடம் ஒப்படைக்குமாறும், அதற்காகும் செலவுத் தொகையைத் தாம் தருவதாகவும் சிங்கப்பூர் சீமான் கூறிவிட்டார்.

'திருவள்ளுவர் தரும் வாழ்க்கை விளக்கம்' குறிப்பிட்ட தேதியில் வெளிவந்து விட்டது. தமிழ்நாட்டில் உடனே பெரும் பரபரப்பு ஏற்பட்டு விடவில்லை. பத்திரிகை அலுவலகங்களுக்கு மதிப்புரைக்கு அனுப்பி, ஒவ்வொரு நாளும் அதைப் பற்றிய பாராட்டுரை வரும் என்று எதிர் பார்த்ததும் வீணாயிற்று. ஒரு பிரதி கூட விற்பனையாக வில்லை. நல்ல காகிதம், நல்ல அச்சு, சிறந்த அமைப்பு, உயர்தரமான பைண்டிங், முப்பது ரூபாய் விலை மிகக்குறைவு என்றே அனைவரும் கருத்துத் தெரிவித்தனர்.

சங்குப் புலவர் தாம் எழுதி அருமையான முறையில் வெளியிட்ட புத்தகத்தை எடுத்து வைத்துத் தமக்குள்ளேயே மகிழ்ந்து போனார். புகழ்ச்சியும் சுய மகிழ்ச்சியும் சோறு போடுமா? கிராமத்திலே தன்னந்தனியராய் இருந்து தாமே சமைத்துச் சாப்பிட்டு எவ்வளவு நாள் காலந் தள்ள முடியும்? மூத்த மகன் இருநூறு ரூபாயும், இளைய மகன் ஐம்பது ரூபாயும் செலவுக்கு அனுப்பி வைத்தனர். இளைய மகனால் தொடர்ந்து அனுப்ப முடியவில்லை. தன் இயலாமையைப் பற்றி எழுதி விட்டான். ஆனால் ஒரு வேண்டுகோள் விடுத் திருந்தான். கிராமத்திலே தன்னந் தனியாய் இருப்பதைவிடச் சென்னைக்கு வந்து தன்னுடன் தங்குவது நலம் என்று எழுதியிருந்தான்.

சங்குப் புலவர் சிந்தித்தார். ஆம்; சென்னை சாலச் சிறந்த இடம். பல பெரிய மனிதர்களைக் கண்டு பேசித் தொடர்பு கொள்ளலாம். பல பெரிய இடங்களில் தமிழ் படிக்க விரும்பினால் அவர்களுக்குக் கற்றுத் தந்து பொருளீட்டலாம் என்று மனத்தில் திட்டம் வகுத்தார்.

சென்னைக்கு வந்த புலவருக்குச் சில நாள்கள் எல்லாமே பிரமிப்பாக இருந்தன. பிறகு வேதனையும்

சோர்வும் சேர்ந்தன. காலையில் காவிரியில் நீராடியவருக்குக் குழாய்த் தண்ணீருக்குத் தவம் கிடப்பது அதிர்ச்சியைத் தந்தது.

மருமகளுக்குச் சிரமம் கொடுக்கக் கூடாது என்பதற்காகத் தாமே குழாயடியில் நின்று பல குடித்தனக்காரர்களுடன் மல்லுக்கு நின்று தண்ணீர் பிடித்து வருவார். கடைக்குச் சென்று வருவார். பேரக் குழந்தைகளைக் கொஞ்சுவார். சரி, பணம் இருந்து விட்டால் எல்லாமே நன்றாக நடக்குமா...?

தன் மகன் வருமானம் போதாமல் மிகவும் சிரமப்படு கிறான் என்பதைப் புரிந்து கொண்ட புலவர் தம்மால் ஏதாவது உதவி செய்ய முடியுமா என்று யோசிக்கலானார். அந்த யோசனையின் விளைவாய் எழுந்ததுதான் தாம் வெளியிட்ட நூலை எப்படியாவது விற்பது, என்பது. கிராமத்திற்குச் சென்று எல்லாப் பிரதிகளையும் பெட்டியில் இட்டு ரயில் மூலம் ஏற்றிக்கொண்டு வந்தார். குடியிருக்கு மிடத்தில் பாதியை அந்தப் புத்தகங்கள் அடைத்துக் கொண்டன.

காந்திமதி ஒரு புத்தகத்தை எடுத்துப் பிரித்தாள். தன் மாமனார் புத்தகம் வெளியிட்டிருக்கிறார் என்ற பெருமை இருந்தது. நல்ல நாவலாக இருக்கும் என்று பிரித்தவள் ஒன்றும் புரியாமல் புத்தகத்தை அப்படியே வைத்து விட்டு மாமனாரை நோக்கி, ''இதென்ன புத்தகமுங்க...?'' என்று கேட்டாள்.

''திருவள்ளுவருடைய திருக்குறளுக்குப் புதுமுறையில் விளக்கம் எழுதியுள்ளேன்.''

''இதை யார் படிப்பார்கள்?''

''ஏன்? யார் வேண்டுமானாலும் படிக்கலாம்...''

''படித்தால் என்ன பிரயோசனம்?''

''பிரயோசனமா? காந்திமதி! நீ படித்த பெண்; நீயே இப்படிக் கேட்கலாமா? திருவள்ளுவர் சொல்லாதது எது? வீட்டைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். குழந்தைகளைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். பெண்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். கற்பைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்...''

''பணத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறாரா? சூதாட்டத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறாரா? கணவரது கடமையைப் பற்றி எழுதியிருக்கிறாரா?'' - இதைக் கேட்கும்பொழுது காந்திமதிக்குச் சற்று எரிச்சல் இருந்தது. அவளது கணவனின் போக்கு சில மாதங்களாகச் சரிவர இல்லை. வீட்டிற்கு வேண்டிய பொருள்களை வாங்கிப் போடுவதில்லை. ஒவ்வொரு மாதச் சம்பளத் தேதியன்று ஒவ்வொரு விதமான கற்பனைகளைச் சொல்லிப் பணம் இல்லை என்று கை விரிப்பான். பிறகு அங்கு இங்கென்று கடன் வாங்கி வந்து ஒன்றும் பாதியுமாகக் குடும்பம் நடத்தக் கொடுப்பான். அவன் கடன் வாங்காத இடமில்லை. வீட்டிற்கு வருகிறவர்களுக்குக் காந்திமதியே சமாதானம் சொல்ல வேண்டியிருந்தது. அந்த எரிச்சலை மேலும் வீட்டிற்குப் பாரமாக வந்த மாமனார் மீது அவ்வப்பொழுது புலப்படுத்தினாள். பணம், காசுதான் இல்லை; தாராளமாகப் புழங்குவதற்கு இடமிருக்கிறதா? - அதற்கும் இடையூறாகப் புத்தகக் கட்டு வந்து விட்டதே என்ற ஆத்திரத்தை அந்தப் புத்தகத்தின் மீது காட்டினாள்.

''என்ன இப்படிக் கேட்டு விட்டாய் காந்தி! வள்ளுவர் சொல்லாதது எது? சூதாட்டத்தின் தீமையைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். இல்லத்துத் தலைவனது கடமையைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்...நீ படித்துப் பார் காந்தி! இந்தப்

புத்தகத்திற்கு முப்பது ரூபாயே குறைவு...'' - சங்குப் புலவர் உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார்.

காந்திமதி மிக அலட்சியமாகச் சிரித்தாள். திடீரென்று எங்கோ சென்றாள். திரும்பி வரும்பொழுது கனமான ஒரு புத்தகம் இருந்தது. அதைக் கையில் தூக்கிப் பிடித்து, ''இந்தப் புத்தகம் என்ன தெரியுமா?'' என்று கேட்டாள்.

சங்குப் புலவர் கண்களை அகல விரித்து, ''தெரியாதே. இனிமேல்தான் புதுப் புதுப் புத்தகங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும். கொடு பார்க்கலாம்'' என்று அந்தப் புத்தகத்தை வாங்கிக் கொண்டார். பக்கங்களைப் புரட்டினார். அட்டையைப் பார்த்தார். விலையைப் பார்த்தார்.

''இது என்ன அச்சுப் பிழையாக இருக்குமோ?'' என்று கேட்டார்.

''எதைச் சொல்கிறீர்கள்...?''

''விலையை... ஐந்து ரூபாய் என்று விலை போட்டிருக்கிறதே...''

''ஆமாம்; ஐந்து ரூபாதான்... என்ன சுவாரசியமான நாவல் தெரியுமா? ஆசிரியர் சுகுமாரன் எழுதியது. சுகுமாரனைத் தெரியுமா?''

''கிரைம் நாவலா? கிரைம் நாவலைப் படிக்கக் கூடாது. காந்திமதி! அந்தக் காலத்தில் ஆரணி குப்புசாமி முதலியார், வடுவூர் துரைசாமி அய்யங்கார் எழுதிய துப்பறியும் நாவல்களைப் பள்ளிக்கூடப் பசங்கள் விழுந்து விழுந்து படிப்பார்கள். நான் கண்டிப்பேன்... இப்பொழுது என்னவென்றால்...''

''இப்பொழுதும் துப்பறியும் நாவல்களை நாங்கள் படிப்பதில்லை. 'பயங்கரக் கொலை', 'ஓடிப் போனவள்',

'உட்கார்ந்தவள்' என்றெல்லாம் நாவல்கள் வருகின்றன. அவற்றையெல்லாம் தொட்டுக்கூடப் பார்க்க மாட்டோம். சுகுமாரன், மலையரசன், சுரேஷ்குமார், நாராயணபுத்ரி போன்றவர்கள் எழுதிய நாவல்களைப் படித்துப் பார்த்தால் தெரியும். கிட்டத்தட்ட இருநூறு பக்கங்கள் - ஐந்து ரூபாய். எவ்வளவு சுவாரசியமான கதை தெரியுமா? கதையைச் சொல்லட்டுமா?'' - காந்திமதி வேகமாகப் பக்கங்களைப் புரட்டி ஒரு பக்கத்தை எடுத்துப் படித்தாள்.

''கடற்கரையருகே உள்ள தென்னை ஓலையால் வேயப்பட்ட குடிசைக்குள் நீச்சல் உடையுடன் கூடிய ஷீலா வேகமாக நுழைந்தாள். கோபமாகவும் இருந்தாள். சேகரன் அங்கே கட்டிலில் சோகமாகப் படுத்திருந்தான். 'வாட் சேகர்! ஸ்விம்மிங்கிற்கு வரல்லையா? டுடே மூன் ரைஸ் ப்ரில்லியண்டாக இருக்கும்' என்று ஷீலா அவனருகே உட்கார்ந்தாள்'' - காந்திமதி திரும்பிப் பார்த்தாள். சங்குப் புலவர் திண்ணைக்குப் போய்விட்டார், சைவ சித்தாந்த வினா-விடை என்னும் புத்தகத்தை எடுத்துக் கொண்டு.

காந்திமதி தொடர்கதை போல் வாசலுக்கும் வந்தாள். அங்கே காத்திருந்தான் மளிகைக்கடைப் பையன் மாணிக்கம்.

''மாதம் பிறந்து பத்துப் பதினைந்து தேதிக்கு வரச் சொன்னேனே. இன்றைக்கே ஏன் வந்து விட்டாய்?'' என்று சீறினாள்.

''இன்றைக்குத் தேதி என்னங்க?'' கடைக்காரப் பையன் மெல்லப் பல்லிளித்துக் கொண்டே கேட்டான்.

''பதினைந்து.. அடுத்த மாதம் வரச் சொன்னேன்...'' என்று கூறிப் பதில் பேசாமல் உள்ளே போய் விட்டாள்.

சங்குப் புலவர் என்ன நினைத்தாரோ, எழுந்து உள்ளே வந்தார். புத்தகக் கட்டிலிருந்து ஐந்து புத்தகங்களை எடுத்து ஒரு பையில் வைத்துக் கொண்டார்.

''காந்தி! கதவைத் தாளிட்டுக்கோ. நான் வெளியே போய் வரேன்'' என்று பதிலைக் கூட எதிர்பாராமல் புறப்பட்டார்.

அன்று தொடங்கிய பழக்கம். தினமும் காலை ஏழு, ஏழரை மணிக்கே புறப்பட்டு விடுவார். தினமும் ஐந்து பேரைச் சந்திப்பது என்று திட்டமிட்டுக் கொண்டார். யார் யாரைச் சந்திப்பது, தமிழ் நூல்களைப் படிப்பவர்கள் எவர் எவர் என்று ஒரு பட்டியலைத் தயாரித்தார். பள்ளித் தமிழாசிரியர்கள், வெளியீட்டாளர்கள், மேடை ஏறித் தமிழில் முழங்குவோர், தமிழ் ஆள வேண்டும் என்று ஊர்வலம் நடத்துபவர்கள், திரைப்படக் கவிஞர்கள், தமிழ்த் துரோகி களை எதிர்த்துப் பாத்திரங்களைப் படைக்கும் கதாசிரி யர்கள்... அப்பாடி... அப்பாடி! இந்தப் பட்டியலே நூற்றுக் கணக்காகச் செல்கிறதே. நம்மிடமிருப்பது தொள்ளாயிரம் பிரதிகள் இருக்குமோ, எண்ணூறு இருக்குமோ?

ஒவ்வொரு நாளும் ஐந்து பேர். அவர்கள் அலுவலகம் செல்லுமுன் அவர்களை வீட்டில் சந்திப்பார். அலுவலகம் சென்று விட்டால் அலுவலக முகவரியைத் தெரிந்து கொண்டு அலுவலகம் செல்வார்.

துவைத்த வேஷ்டி; மேலே ஒரு ஜிப்பா; ஒரு துண்டு. நெற்றியில் பளிச்சென்று விபூதி; அதில் சந்தனப் பொட்டு; நடுவே குங்குமம். அவரைப் பார்ப்பவர்கள் பணிவுடன் எழுந்து பதில் சொல்லாமலிரார். தமிழைப் பற்றிச் சில இடங்களில் பேச்சு திரும்பும். அரை மணி, முக்கால் மணி என்று 'இலக்கியப் பூங்காவில், இனிய மணம்' நுகர்ந்த பிறகு இந்த நாளுக்குத் திரும்புவார்கள்.

''என்ன ஸார் எழுதுகிறார்கள்... இந்தக் காலத்தில் சொல் வளமில்லை; நடைச் சிறப்பில்லை. ஹூம்... தமிழ் எப்படித்தான் வாழப் போகிறதோ?'' என்று அங்கலாய்த்துக் கொள்வார்கள். நேரமோ ஆகிக் கொண்டிருக்கும். சங்குப் புலவருக்குப் பசி காதை அடைக்கும். தான் வந்த விஷயத்தை எடுத்து எப்படிச் சொல்வது என்று யோசிப்பார். மெல்லப் பையிலிருந்து புத்தகத்தை எடுப்பார். தொண்டையைக் கனைத்துக் கொண்டு, ''இதோ பாருங்க... நான் ஒரு புத்தகம் வெளியிட்டிருக்கேன்... திருவள்ளுவரைப் புதிய கோணத்தில் ஆராய்ந்து எழுதியது'' என்று கூறிக் கொண்டே அந்தப் புத்தகப் பிரதியை நீட்டுவார்.

''ஆகா... நீங்கள் எழுதிய புத்தகமா? இந்தக் காலத்தில் இப்படிப்பட்ட புத்தகங்கள் யார் எழுதுகிறார்கள்? உங்களைப் போன்ற தமிழன்பர்கள்தான் எழுதுவார்கள். எனக்குத் தெரிந்து திரு.வி.க. எழுதியிருக்கிறார். அடுத்தபடி நீங்கள் தான்!'' என்று ஒரேயடியாய்ப் புகழ்ந்து கொண்டே, ''ஆமாம்; உங்களுக்கு என்னை எப்படித் தெரியும், இலக்கியத்தின் மீது எனக்கு மிக ஆசை என்று..?'' என்று கேட்பார் அந்த இலக்கிய ரசிகர்.

சங்குப் புலவர் சிரிப்பில் அசட்டுத்தனம் இருந்தது என்று சொல்லத்தான் வேண்டும். ''அதுவா? உங்களைப் பற்றி ஒரு நண்பர் சொன்னார். 'அவர் தமிழ்ப்பற்று மிக்கவர்; அவரிடம் சென்றால் இந்தப் புத்தகத்தின் ஒரு பிரதியை வாங்கிக் கொள்வார்' என்றார். இந்தப் புத்தகத்திற்கு நூறு ரூபா கூட விலை வைத்திருக்கலாம். ஆனால் அடக்க விலைக்குக் கொடுக்க வேண்டும் என்ற என் நெடுநாள் ஆசையை நிறைவேற்ற விரும்பினேன்'' என்று சங்குப் புலவர் கூறினார். அவரும் வியாபாரம் கற்றுக் கொண்டு விட்டார்!

திடீரென்று ஷாக் அடித்தவரைப் போல் உணர்ந்தார் இலக்கிய ரசிகர். முகக் களையே மாறியது. இவ்வளவு நேரம் ஊர்க்கதையெல்லாம் பேசிக் கொண்டிருந்தவர் சட்டென்று எழுந்தார். ''அடடா... 'பாஸ்' கூப்பிடுகிறார் போலிருக்கிறது. அப்புறம் பார்க்கிறேன். அடுத்த மாதம் உங்களுக்கு முடிந்தபோது வாருங்களேன்'' என்று சொல்லிக் கொண்டே பதிலைக்கூட எதிர்பாராமல் ஓடி ஒளிந்து விடுவார்.

அப்படியும் ஒரு நபர்! மற்றொருவர் பதில் பேசாமல் வந்த விஷயத்தைக் கேட்டு ''சலுகை உண்டல்லவா? என்று இருபது ரூபாயை நீட்டிப் புத்தகத்தை வாங்கி வைத்துக் கொண்டு கும்பிடு போட்டு அனுப்பிவிட்டார்.

முதல்நாள் - அவர் புத்தக விற்பனைத் தொழிலைத் தொடங்கிய அன்று - ஒரு புத்தகம் விற்றது. சங்குப் புலவருக்குப் பெரும் மகிழ்ச்சி.

மூவாயிரம் ரூபாய் கிடைத்தது போல் மிகுந்த மகிழ்ச்சி யுடன் வந்தார். வாசல் திண்ணையில் பேரக் குழந்தை விளை யாடிக் கொண்டிருந்தான். அவன் கையில் இருபது ரூபாயைக் கொடுத்து, ''அம்மாவிடம் கொண்டு போய்க் கொடுடா கண்ணு'' என்று கூறித் திண்ணையிலே உட்கார்ந்தார்.

காந்திமதி வெளியே வந்தாள். ஐந்து புத்தகங்களை அவர் எடுத்துப் போனது தெரியும். ஐந்தும் விற்றதா அல்லது நான்கு மட்டுமே விற்பனையானதா என்று பார்ப்பதற்காக வந்தாள். பதில் ஏதும் பேசவில்லை. அவர் சாப்பிட்டாரா என்றுகூடக் கேட்கவில்லை; ''ஒருபடி அரிசி, உப்பு, மிளகாய், கடுகு, பருப்பு இவையெல்லாம் இருபத்தைந்து ரூபாய்க்கு'' என்று பட்டியலை அடுக்கினாள். தான் கொண்டு வந்த ரூபாய்க்கு மறுநாள் பொழுது ஓடப் போகிறது என்று

அறிந்த அவர் உள்ளத்தில் ஒரு பக்கம் மகிழ்ச்சியும், மறுபக்கம் வேதனையும் சேர்ந்தன. பையை எடுத்துக் கொண்டு மளிகைக் கடைக்குப் புறப்பட்டார்.

காலையில் காபி சாப்பிட மாட்டார். மோர் இருந்தால் போதும். கொடுத்தால் குடிப்பார்; இல்லாவிடில் புத்தகப் பையை எடுத்துக் கொண்டு புறப்பட்டு விடுவார். எல்லாம் நடைதான். ரொம்பவும் பசித்தால் ஐம்பது பைசாவுக்கு வேர்க் கடலை; குழாய்த் தண்ணீர்.

ஒவ்வொரு நாள் இரண்டு மூன்று புத்தகங்களும் விற்றுவிடும். சில நாள்களில் ஒன்றுகூட விற்காது. பசி மயக்கத்துடன் தள்ளாடி வந்து திண்ணையில் சாய்வதுதான் மிச்சம்.

இரண்டு நாள்களாக நல்ல மழை. இடி - புயல் இவற்றுடன், புலவரால் வெளியே புறப்பட முடியவில்லை. திண்ணையிலேயே ஒண்டிக் கொண்டு வானம் வெளுக்காதா என்று பார்த்துக் கொண்டிருந்தார். உள்ளே வீடு ஆங்காங்கே ஒழுகியது.

''இந்தச் '...' வேறு காப்பாத்தித் தொலைக்கணும்'' என்று புத்தகக் கட்டின் மீது மழை நீர் கொட்டாமல் கோணியைப் போட்டு மூடிக் கொண்டிருந்தாள் காந்தி. மழையில் நனைந்துவிட்டால் அவளுக்குத் தானே நஷ்டம்! புலவர் உள்ளே வந்தார்.

''ஏங்க... இந்த அடைசல் எப்போ தீரும்?'' என்று கேட்டாள் காந்திமதி.

'அடைசலா... ஆ! அடைசலாகவா காட்சியளிக்கிறது, திருவள்ளுவரின் எழுத்து?' என்று வேதனைப்பட்டுக்

கொண்டே புலவர், ''இரண்டு நாள்களாக இப்படி வானம் பொத்துக் கொண்டதுபோல் கொட்டுகிறதே... தினம் ஒண்ணு இரண்டு போனாக் கூட ஒரு வருடத்துக்குள்ளே தீர்ந்துடும்...'' என்று வேதனை மிகக் கூறினார்.

மழை விட்டது. வெயில் வழக்கம்போல் சுள்ளென்று அடிக்கத் தொடங்கியது. தேங்கியிருந்த மழைத் தண்ணீர் 'ஜிவ்'வென்று சூரியனால் உறிஞ்சப்பட்டது. தார் ரோடு கொதித்தது. மக்கள் 'உச்உச்' என்று வெயிலுக்கு வேதனைப் பட்டனர். ஐஸ் விற்பனை அதிகமாகியது. புலவரின் மகன் வழக்கம்போல் நேரங்கழித்து வந்தான். அவனைத் தேடிக் கடன் கொடுத்தவர் கால் தேய நடக்கலானார்.

தவணைக் கடன்காரன் ஒருவன் மிகக் கண்டிப்பாய்ப் பேசிவிட்டுப் போய்விட்டான். ''நாளை மறுநாள் வருவேன். தராவிடில் மானம் மரியாதை போய்விடும்!'' என்று எச்சரித்துச் சென்று விட்டான்.

சங்குப் புலவர் பையைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டார். அன்று எப்படியும் ஐந்து புத்தகங்களையாவது விற்பனை செய்து விட வேண்டும் என்ற உறுதி அவர் உள்ளத்தில் எழுந்தது. காலையில் வயிற்றுக்கு ஏதும் 'ஈயப்'படவில்லை.

அவரிடம் படித்த கமலநாதன் என்பவர் இப்பொழுது பெரும் தொழில் அதிபராக இருப்பதைக் கேள்விப்பட்டிருந் தார். அவரது முகவரியைக் குறித்து வைத்திருந்தார். காந்தி நகரில் உள்ள அவரது வீடு தேடி நடந்தே புறப்பட்டார்.

புலவர் போய்ச் சேரும் பொழுது ஒன்பது மணியாகி விட்டது. மாளிகை போன்ற அவர் வீட்டு வாயிலை அடைவதற்குச் சில கணம் முன்பே பெரிய கார் வெளி வாயிலைக் கடந்து சென்றது.

நெற்றி வியர்வையை மேல் துண்டினால் துடைத்துக் கொண்டு வெளியேயுள்ள வாயில் காப்போனை நோக்கி, ''ஐயா உள்ளே இருக்கிறாரா?'' என்று தூய தமிழில் வினவினார்.

இமயமலைச் சாரலில் உள்ள நேபாள பூமியைத் தன் சொந்த ஊராகக் கொண்ட அந்த கூர்க்கா, விபூதி, சந்தனத்துடன் கூடிய புலவரை ஏற இறங்கப் பார்த்துத் தன்னுடைய கொச்சைத் தமிழில், ''ஐயா இப்போத்தான் போச்சு. நீ பார்க்கலையா?... காரு இப்பப் போச்சே'' என்றான். தமிழை அவன் கொலை செய்வது வேதனையாயிருந்தது!

இடுப்பைப் பிடித்துக் கொண்டார் புலவர். ''மீண்டும் எப்பொழுது வருவார்?'' என்று ஆவலுடன் கேட்டார் புலவர்.

''ஒரு மணி, ஒரு மணி...'' என்று கைவிரலைக் காட்டினான் கூர்க்கா.

ஒரு மணி - அதுவரை என்ன செய்வது? அருகே தமிழன்பர் எவராது இருக்கின்றனரா என்று பார்க்கலாம் என்று சென்றார் புலவர். வெயில் சுள்ளென்று அடித்தது. தலையைச் சுற்றித் துணியைப் போட்டுக் கொண்டு சாலை ஓரமாக நடந்தார்.

எங்கே செல்வதென்று தெரியவில்லை. அடையாறு ஆலமரத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தார். அதன் நிழலில் சற்று இளைப்பாறலாம் என்று நடந்தார்.

தெள்ளிய ஆலின் சிறு பழம் கீழே பாய் விரித்தாற் போல கிடக்க, புலவர் களைப்பு நீங்க அமர்ந்தார். இனிய காற்று அவருக்குச் சாமரம் வீசியது. ஆலம் விழுதுகள் கொலு மண்டபத் தூண்களைப் போல் திகழ்ந்தன. மரத்திலமர்ந்திருந்த பறவைகள் இனிய கீதம் பாடின. புலவர் கண்ணயர்ந்து விட்டார்.

திடீரென்று விழித்துக் கொண்டார். பகல் ஒரு மணி ஆகியிருக்கும் என்பதை உணர்ந்து வேக வேகமாகக் கமலநாதன் வீட்டை நோக்கி நடந்தார்.

புலவர் அங்கே செல்வதற்கும் காரிலே கமலநாதன் பங்களாவுக்குள் செல்வதற்கும் சரியாக இருந்தது. வீட்டிற்குள் வந்தவுடனேயே போகக் கூடாது என்ற எண்ணத்தில் வெளியே சற்றுக் காத்திருந்து, பங்களாவுக்குள் நுழைந்தார் சங்குப் புலவர்.

அரச மாளிகையைப் போல் கம்பீரமாக இருந்த அந்த வீட்டின் முன்புறப் போர்ட்டிகோவில் கார் நின்றிருந்தது. டிரைவர் காரைத் துடைத்துக் கொண்டிருந்தான். குசேலர் கிருஷ்ண பகவான் வீட்டிற்குள் சென்றது போல் அடியெடுத்து வைத்துத் தயங்கித் தயங்கிச் சென்றார் புலவர். வீட்டு வாயில் முகப்பில் பனி படர்ந்த ஆல்ப்ஸ் மலைச் சிகர ஃபோட்டோ மாட்டப்பட்டிருந்தது. நுழைந்தவுடன் பெரிய கூடம். அதை வர்ணிக்க அவருக்கு அப்பொழுது சக்தியில்லை.

''யார் நீங்க?'' என்று கேட்டுக் கொண்டு பணியாள் வந்தான். ''கார்டு இருந்தாக் கொடுங்க. உள்ளே கொடுக்கிறேன். ஐயா இப்பத்தான் வந்தாங்க... ரெஸ்ட் எடுத்துக்கறாங்க...'' என்றான்.

அவரிடம் கார்டு ஏது? கவரேது? ''சங்குப் புலவர் வந்திருப்பதாகச் சொல்லு'' என்று மெல்லிய குரலில் கூறினார்.

'சிங்கப் புலவரா?' என்று கேட்ட பணியாளைத் திருத்தி 'சங்குப் புலவர்' என்றார்.

பணியாள் செய்தி அறிவிக்க மாடிக்குச் சென்றான். சங்குப்புலவர் இன்னும் போர்டிகோவில் படிக்கட்டருகே தான் நின்றிருந்தார். உள்ளேதான் இருளா? அல்லது

கண்ணை இருட்டிக் கொண்டு வருகிறதா? இல்லை, இல்லை - வெயிலில் வந்ததால் இருட்டாய்த் தெரிகிறது.

மாடியினின்று யாரோ இறங்கி வரும் ஓசை கேட்டது. கமலநாதனைப் பார்த்து ஆறு, ஏழு வருடங்களுக்கு மேலாகியிருக்கும். செல்வத்தின் செழிப்பு அவர் மேனியெங்கும் வியாபித்திருந்தது.

''வாங்கோ... வாங்கோ! சங்குப் புலவர்வாள்... வாங்கோ... எப்பொழுது வந்தாப்பலே? நல்ல வெயிலில் புறப்பட்டுட்டீங்களே... சொல்லியனுப்பியிருந்தால் காரை அனுப்பியிருப்பேனே...'' என்று உற்சாகத்துடன் பேசி, புலவரைக் கையைப் பிடித்து அழைத்துச் சென்று நடு ஹாலில் உள்ள சோபாவில் உட்காரச் சொன்னார். மின்சார விசிறி சுழலத் தொடங்கியது.

கமலநாதன் உரத்த குரலில், மாடியை நோக்கி, ''ஏ ப்ரமீளா... சங்கர்.. சுண்டு.. உமா.. லட்சுமி.. இங்கே வாங்க...'' என்று ஏதோ பெரும் ஆச்சர்யத்தைப் பங்கு போட்டுக் கொள்பவர் போல் கூவினார்.

மறுகணம் தடதடவென்று ஓசை. ப்ரமீளா என்ற இருபது வயதுப் பெண்; சங்கர் எனும் டீன் ஏஜ் பையன்; சுண்டு. எனும் எட்டு வயதுப் பையன்; லட்சுமி எனும் இருபத்தைந்து வயது மருமகள்... எல்லாரும் வந்தனர்.

''லட்சுமி, உன் அம்மா எங்கே..? புலவர் வந்திருக்கார்... ஸாரைத் தெரியுமோ?'' என்று உற்சாகக் குரலில் கேட்டார்.

சங்குப்புலவரை அவர்களுக்கு எப்படித் தெரியும்? அந்த வீட்டிற்கு யார் யாரோ தொழிலதிபர்கள், தொழிலாளர் தலைவர்கள் தனித்தனியே பேரம் பேச வருவார்கள். காவி ஏறிய நான்கு முழம் வேஷ்டியும், மேலே ஒரு கைத்தறித் துணியால் ஆன ஜிப்பாவும், வியர்வையால் நனைந்த

துண்டும், வாடிய முகமும், வறுமை பீடித்ததால் சுருக்கம் விழுந்த நெற்றியும், கையில் பையும் கொண்ட அவரை அந்தக் குடும்பத்தவருக்கு எப்படித் தெரியும்? தெரியாது என்று சொல்வது மரியாதையாகாது என்பதாலோ என்னவோ, ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

''யார் டாடி இவர்?'' என்று மெல்லக் கேட்டான் சுண்டு.

''என்ன இது... சங்குப் புலவரைத் தெரியவில்லையா? நேற்றுக்கூட நாம் அவரது 'திருவள்ளுவர் தரும் வாழ்க்கை விளக்கம்' நூலைப் படித்து ரசிக்கவில்லையா?'' என்று சற்று அதட்டினாற்போல் கேட்டதும் அனைவர் உதடுகளும் ஐஸ் சாப்பிட்டதுபோல் 'இஸ்' என்றனர்.

ப்ரமீளா துணிந்து, ''ஆமாம்...மேரேஜ் பிரஸன்டேஷனுக்கு நம்ம லைப்ரரியிலிருந்து ஒரு புத்தகம் கொடுக்க விரும்பித் தேடினோம். வாழ்க்கை விளக்கம் தானே கிடைத்தது...ஓ! அந்தப் புத்தகம் எழுதிய சங்குப்புலவர் இவர்தானா?'' என்று கீச்சுக் குரலில் கூறி, ''வணக்கம் ஐயா'' என்றாள்.

''இவள் என் மருமகள்; பிள்ளை மேற்படிப்பிற்கு சிகாகோ போயிருக்கிறான். ப்ரமீளாவுக்குத் தமிழ் என்றால் உயிர்'' என்று அவர் அறிமுகப்படுத்தினார்.

''லட்சுமிக்கு மட்டும் தமிழ்ப் பற்றுக் குறைவோ? பி.ஏ.வில் தமிழ்ப் பாடம்தான் சிறப்பாக எடுத்துக் கொண்டுள்ளாள் லட்சுமி. புலவர் ஐயா திருவாசகம் சொல்லணும்; கேட்கணும்... எங்கே நமக்கு இப்போதெல்லாம் அவகாசம்? தொழிலை விரிவுபடுத்தினால் நாமும் இயந்திரம்தான். புலவர் ஐயா நமச்சிவாயபுரத்தில் தானே இருக்காங்க..?'' என்று அன்பு ததும்பக் கேட்டார்.

''இல்லை; புரசைவாக்கத்தில் இருக்கிறேன். பெருமாள் கோயில் தெரு, ஐந்தாம் எண்'' என்றார் புலவர்.

''புலவரய்யா! சென்னையின் விசித்திரம் பார்த்தீர்களா? புரசைவாக்கம், சேத்துப்பட்டு, ஒட்டேரி, சூளைமேடு போன்ற பெயர்கள் சென்னைக்கருகிலுள்ள மாவட்டத்தில் உள்ள பல ஊர்களின் பெயர்கள். அங்கிருந்து அந்த நாளில் சென்னையில் வந்து குடியேறியவர்கள் தங்கள் ஊர் அபிமானத்தை மறக்காமல் குடியேறிய பகுதிக்கு இட்டார்கள்'' என்று கமலநாதன் தன் சரித்திரப் புலமையைப் புலப்படுத்திக் கொண்டார்.

''ஏம்பா... அமிஞ்சிக்கரையா? அமைந்தகரையா? எது சரி?'' என்று உமா கேட்டாள்.

''புலவரய்யா, நீங்கள் சொல்லுங்கள்...'' என்றார் கமலநாதன்.

''அமிஞ்சிக்கரை என்பதுதான் சரியாகும். அமிஞ்சி என்ற சொல்லுக்கு இனாமாக - கூலி இல்லாமல் என்று பொருள். அந்தக் காலத்திலே கூவம் நதிக்குக் கரை அமைக்க இனாமாக வேலை செய்தவர்கள் நினைவாக அப்பெயர் வந்தது'' என்றார் புலவர். பசி அவர் சிறுகுடலைத் தின்னத் தொடங்கியது.

''புலவர் ஐயாவைப் பார்த்து நாள் ஆகிறது. திருச்சதகத்தில் மெய்யுணர்தல் பாடலைச் சொல்வீர்களே...ராகமிட்டு! ஒரு தடவை சொல்லுங்களேன்...'' என்றார் கமலநாதன்.

குடும்பத்தவர் நெருங்கி வந்தனர். நிமிர்ந்து உட்கார்ந்தார். புலவருக்கு மயக்கம் வரும்போல் தோன்றியது. தண்ணீர் வேண்டும் என்று ஜாடை காட்டினார்.

''அடாடா.. தாகத்துக்கு என்ன வேண்டுமென்றே கேட்காமல் பேசிக் கொண்டிருந்து விட்டேனே...ஏ...

பாய்..ப்ரிஜ்ஜிலிருந்து கூலா ஏதாவது கொண்டா...'' என்று உத்தரவிட்டார்.

புலவர் கையசைத்தார். ''குளிர்ந்த நீர் போதும்'' என்றார். ''ஆமாம்...ஆமாம்...புலவர் தம் வீடு தவிர வேறெங்கும் தண்ணீர் தவிர எதுவும் சாப்பிட மாட்டார். நல்ல ப்ரின்ஸிபிள்'' என்றார் கமலநாதன்.

புலவர் டம்ளரிலிருந்த தண்ணீரை வாங்கித் தூக்கிக் குடித்து மேலெல்லாம் வழிய விட்டுக் கொண்டு, துண்டால் துடைத்துக் கொண்டபின், கணீரென்ற குரலில்,

**''பாட வேண்டும் நான் போற்றி!**
**நின்னையே பாடி, நைந்து நைந்து உருகி, நெக்கு**
**- நெக்கு**
**ஆட வேண்டும் நான்; போற்றி! அம்பலத்து**
**ஆடும் நின் கழல் போது நாயினேன்**
**கூட வேண்டும் நான்; போற்றி! இப்புழுக்**
**கூடு நீக்கு எனை; போற்றி! பொய் எலாம்**
**வீட வேண்டும் நான், போற்றி! வீடு தந்து அருள்**
**போற்றி! நின் மெய்யர் மெய்யனே''**

என்று பாடினார். திறந்த வாய் மூடாமல் அனைவரும் ரசித்த வண்ணமிருந்தனர்.

டெலிபோன் மணி ஒலித்தது. சங்கர் எழுந்து சென்று ஃபோனில் பேசிவிட்டு வந்தான். ''அப்பா உங்களுக்கு ஃபோன்..'' என்றான்.

புலவர் நெற்றியைத் துடைத்துக் கொண்டார். பையிலிருந்த புத்தகத்தை எடுப்பதா வேண்டாமா என்று தயங்கிக் கொண்டிருந்தார். மெல்ல ஒரு புத்தகத்தை எடுத்தார். அதற்குள் கமலநாதன் போன் பேசி வந்தவர் பரபரப்புடன்,

''உடனே தொழிற்சாலைக்குச் செல்ல வேண்டும். அயல் நாட்டுத் தூதுவர்கள் சிலர் தொழிற்சாலையைப் பார்க்க வருகிறார்களாம்... புலவரே! இன்னொரு நாள் சாவகாசமாய்ப் பேசுவோம். விருந்து நம் வீட்டில்...'' என்றார். புலவர் ஏதோ பையிலிருந்து எடுப்பதைப் பார்த்து, ''என்ன புத்தகம் அது? திருவள்ளுவர் வாழ்க்கை விளக்கமா... கொண்டு வந்தீர்களா? என்ன அன்பு! ப்ரமீளா... உனக்கு ஒரு புத்தகம். லட்சுமி, உனக்கு ஒன்று. உமா, இதை உன் நூல் நிலையத்தில் வைத்துக் கொள்'' என்று கூறி மூன்று புத்தகங்களை எடுத்துக் கொண்டார்.

மூன்று முப்பது தொண்ணூறு ரூபாய் என்று மனத்திற்குள் கணக்கிட்டுக் கொண்டார் புலவர்.

கமலநாதன் புறப்படும் வேகத்தில், ''லட்சுமி! ஒரு தட்டில் பழம் வெற்றிலை வைத்துப் புலவரிடம் கொடு'' என்று கூறி, அவள் காதருகே ஏதோ சொன்னார்.

''புலவரய்யா! அப்போ நான் புறப்படுகிறேன். பிறகு சந்திக்கிறேன்'' என்று கூறி விட்டுக் காரை நோக்கி விரைந்தார்.

புலவர் எழுந்து நின்றார். தட்டில் இரண்டு சாத்துக் கொடிப் பழம், வெற்றிலை பாக்குடன் மூன்று பத்து ரூபாய் நோட்டுகளும் காட்சியளித்தன. மூன்று முப்பது என்று எப்படிக் கேட்க முடியும்?

புலவர் மெல்ல பங்களாவை விட்டு வெளியே வந்தார். மணி மூன்றிருக்கலாம். தாகம் அவ்வளவாக இல்லை. பசி மயக்கம் இலேசாகத் தலையைச் சுற்றியது. இரண்டு பழங்கள் இருந்தன. ஒன்றைச் சாப்பிட்டு விட்டு மற்றொன்றை எடுத்துச் செல்வோம் என்று நடந்தவாறு பழத்தின் தோலை உரித்தார்.

கூர்க்கா பலமாக ஒரு ஸல்யூட் அடித்து இராஜ மரியாதை செய்தான்.

'இன்று எப்படியாவது நூறு ரூபாயாவது சம்பாதிக்க வேண்டும் என்று நினைத்ததற்கு பத்து ரூபாய் கிடைத்தது. பழைய மாணவன். மறக்கவில்லை. எவ்வளவு அன்பு! ஆகா, பெரும் பாக்யம்தான்! ஆனால் வீட்டிற்குச் சென்றால் கடன்காரனுக்குக் காந்திமதி பதில் சொல்லாமல் தவிப்பதை எப்படித் தவிர்ப்பது? உம்... இந்தக் கஷ்டம் எவ்வளவு நாள் நீடிக்குமோ அம்பலவாணா...' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டார்.

புலவர் மெல்ல நடந்து சென்றார். பஸ்ஸில் செல்லலாமா, நடந்து செல்லலாமா என்ற யோசனையில் சற்றுத் தயங்கி நின்றார்.

'எப்படியும் இரண்டு ரூபாய் பஸ் டிக்கெட் செலவாகி விடும். பத்து ரூபாயை மாற்றினால் சில்லறையாகச் செலவாகி விட்டால்... கூடாது... கூடாது... கூடவே கூடாது... முழுசாகக் காந்தியிடம் கொண்டு கொடுப்போம்' என்று தனக்குத்தானே பேசிக் கொண்டே வந்தார்.

''என்ன பிள்ளைவாள்! உங்களை எங்கெங்கே தேடுவது?'' என்று கூறி யாரோ முதுகில் தட்டவும், புலவர் திடுக்கிட்டுத் திரும்பினார். சீதாராமன் நின்று கொண் டிருந்தார். புலவருக்கு அறிமுகமான ஒரு பதிப்பகத்து நிர்வாகி அவர்.

''வாங்க...வாங்க... சீதாராமய்யர் அவர்களே..எங்கே உங்களைச் சந்திக்க முடிவதேயில்லையே...'' என்று புலவர் முகத்தில் புதுத் தெம்பையும் மகிழ்ச்சியையும் வரவழைத்துக் கொண்டு பேசினார்.

''என்னையா சந்திக்க முடியவில்லை? உங்களைத்தான் கண்ணிலேயே காணவில்லை. இரண்டு நாள்களாக உங்களைத்தான் தேடுகிறேன்... புலவர் ஏறே! உம்மைத் தேடி அதிருஷ்ட தேவதை வந்திருக்கிறாள் ஐயா!''

''என்ன சொல்கிறீர்? அதிருஷ்ட தேவதை இந்த ஏழைப் புலவரைத் தேடி வருமா? ஏதோ கேலி பேசுகிறீர்'' என்றார் புலவர், நெற்றியைத் துடைத்துக் கொண்டு.

''புலவரே! உமக்குள்ள வறுமையெல்லாம் ஓடிப் போய் விடப் போகிறது. நல்ல வாக்கு நான் சொல்கிறேன்; எனக்கு நீங்கள் என்ன கொடுப்பீர்கள்?'' -சீதாராமன் உற்சாகமாகப் பேசினார்.

''அந்தக் காலத்தில் நல்ல செய்தி சொல்லும் பணியாட்களுக்கு அரசன் முத்து மாலையைக் கழற்றிக் கொடுப்பானாம். என்னிடம் முத்து மாலை ஏது? ருத்திராட்ச மாலைதான் இருக்கிறது'' என்று மெல்லச் சிரித்தார் புலவர்.

''எனக்கு மாலையும் வேண்டாம், பரிசும் வேண்டாம் புலவரே! இப்பொழுது காபி வாங்கிக் கொடுங்கள். பிறகு உங்கள் உசிதம் போல் பணம் கொடுங்கள். வாருங்கள், காபி சாப்பிடலாம்'' என்று கூறி அருகேயிருந்த ஓட்டலுக்கு அழைத்தார் சீதாராமன்.

''நான் காபி சாப்பிடுவதோ ஓட்டலுக்குப் போவதோ இல்லை. சீதாராமய்யரே! பிராமணனாகப் பிறந்த நீங்கள் ஓட்டலுக்குப் போகலாமா?'' என்று பல்லைக் காட்டினார் புலவர்.

''சரிதான்யா... இந்த ஜெட் யுகத்தில் ஓட்டலை மறந்திருக்கும் மனிதருண்டோ? நீர் சாப்பிட மாட்டீர்... ஆனால் நான் சாப்பிடுவேன். வாரும், நல்ல செய்தி

சொன்னதற்கு அச்சாரமாகக் காபி, பலகாரம் வாங்கித் தாரும்.''

''என்ன செய்தி என்றே சொல்லவில்லையே.''

''அதுதான் ஓட்டலில் உட்கார்ந்து பேசுவோம்...''

புலவரால் மறு பேச்சுப் பேச முடியவில்லை. சீதாராமனை அழைத்துக் கொண்டு ஓட்டலுக்குள் நுழைந்தார். ஏதோ செய்யக்கூடாத ஒன்றைச் செய்வதைப் போன்று முகத்தில் அருவெறுப்பு.

''புலவரே! நீங்கள் எழுதிய, திருவள்ளுவர் தரும் வாழ்க்கை விளக்கம், நூலை மத்திய அரசாங்கத்தார் பாராட்டி, உடனடியாக ஆயிரம் பிரதிகளை விலைக்கு வாங்கிக் கொள்ள உத்தரவிட்டிருக்கிறார்கள். எவ்வளவு பிரதிகள் உமது கைவசம் இருக்கின்றன...?''

''எண்ணூற்றைம்பது இருக்கும்...''

''நல்ல வேளை... இருபத்தைந்தாயிரம் ரூபாய்க்குக் குறையாமல் கிடைக்கும்...'' என்றார் சீதாராமன், பாதாம் அல்வாவைச் சாப்பிட்டுக் கொண்டு.

''வேறென்ன சூடாக இருக்கிறது? ரவா தோசை போடுங்க. அது வரதுக்குள்ளே பொட்டெட்டோ போண்டா கொடுங்கோ. முந்திரிப்பருப்பு இருக்கிறதா? ஒரு பிளேட்'' என்று சீதாராமன் ஸர்வரிடம் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது, புலவர் தனக்கு வரப் போகும் இருபத்தைந்தாயிரம் ரூபாயைப் பற்றிய திட்டத்தை வகுப்பதில் ஈடுபட்டிருந்தார்.

நல்ல வேளையாக ''ரவா தோசை நேரமாகும். பொட்டேட்டோ போண்டா இல்லை'' என்று சர்வர் கூறிவிட்டார்.

''சரி, காபி போதும்'' என்றார் சீதாராமன்.

''என்ன சீதாராமய்யரே! மெய்யாகத்தான் சொல்கிறீர்களா? எல்லாப் புத்தகங்களையும் அரசாங்கத்தார் வாங்கிக் கொள்ளச் சொல்லி உத்தரவிட்டிருக்கிறார்களா?'' -புலவர் சந்தேகத்தை நிவர்த்தித்துக் கொள்ள மீண்டும் ஒருமுறை கேட்டார்.

''ஆமாம் புலவரே! ஆமாம்... சந்தேகமாயிருந்தால் இதோ பாரும். மற்றொருவருக்கு வந்திருக்கும் உத்தரவு. அதன் அடியில் இதுபோல் மற்றும் எவரெவர் புத்தகத்தை வாங்க வேண்டும் என்ற குறிப்பு சரிதானா? நீங்கள் செய்ய வேண்டியது என்ன தெரியுமா? உடனே வீட்டிற்குச் சென்று எவ்வளவு பிரதிகள் இருக்கின்றன எனக் கணக்கெடுங்கள். அவற்றை வண்டியிலேற்றி இந்தக் கடிதத்தில் கண்டுள்ள முகவரியில் கொடுத்துக் கையெழுத்துப் பெற்றுக் கொள்ளுங்கள். ஒரு வாரத்தில் பணம் கிடைத்து விடும்.''

சீதாராமன் டிபனை முடித்துக் கொண்டார். ஸர்வர் பில்லைக் கொண்டு நீட்டினார். பில் இருபத்தைந்து ரூபாய். புலவருக்கு ஏனோ அடிவயிற்றைக் கலக்கியது. முப்பது ரூபாயில் இருபத்தைந்து ரூபாய் செலவு என்றால் தாங்குவாரா? எனினும் 'இருபத்தைந்தாயிரம்' ரூபாய் எனும் மகிழ்ச்சியில் திளைத்தவராய் வேகமாக நடந்தார்.

வீட்டை அடையும்பொழுது, பொழுது சாயத் தொடங்கி விட்டது. கால்கள் பின்னித் தள்ளாடின. பேரக் குழந்தைகள் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தனர். காந்திமதி தலையை வாரியபடி பக்கத்துக் குடித்தனக்காரியுடன் பேசிக் கொண்டிருந்தாள்.

மகிழ்ச்சியான செய்தி ஒன்றைச் சொல்ல வேண்டும் என்ற எண்ணத்தில் கூடத்துத் தூணில் சாய்ந்து கொண்டு, ''காந்தி, மோர் இருந்தாக் கொடுக்கிறயா?'' என்றார்.

ஏதாவது சுருக்கென்று பதில் சொல்லும் காந்தி ஒன்றுமே பேசாமல் மோரைக் கொண்டு வந்தாள்.

''ஏன் காந்தி! சில்லறையா நமக்கு எவ்வளவு கடன் இருக்கும்?'' என்று புலவர் கேட்டார்.

''நமக்கிருக்கும், தீர்க்க முடியாத கடன்! உங்கள் பிள்ளை என்று சூதாட்டத்தை ஒழிக்கிறாரோ அன்றைக்குத்தான் விடிவுகாலம். நான் எவ்வளவோ நல்லா வாழ்ந்தேன். இந்த ஒண்டுக் குடித்தனத்தில், நான் வாய்க்கும் வயிற்றுக்கும் எட்டாமல் வாழ்க்கை நடத்துவது ஒரு வாழ்க்கையா? இன்னிக்கு நம்ம சின்னப் பிள்ளையைத் தேள் கொட்டிடுச்சு...'' என்று அழாக் குறையாகச் சொல்லிக் கொண்டு போன காந்திமதியை இடைமறித்து, ''என்ன! தேளா கொட்டிடுச்சு..?'' என்று பதறினார் புலவர்.

''ஆமாம்.. இங்கேயிருந்த புத்தகக் கட்டிலிருந்து வந்து கொட்டிடுச்சு...''

புலவர் அப்பொழுதுதான் கூடத்து மூலையைப் பார்த்தார். இடம் வெறிச்சோடியிருந்தது. ''புத்தகக் கட்டிலிருந்து தேள் கொட்டியது என்கிறாயே. இந்தப் புத்தகக்கட்டு தான் இருபத்தைந்தாயிரம் ரூபா தரப் போகுது..'' என்று கூறிவிட்டு எழுந்து நின்று புத்தகக் கட்டுகள் இருந்த இடத்தைப் பார்த்தார். இருந்த இடம் இப்போது விசாலமாகக் காட்சியளித்தது.

''தேள் கொட்டியதா? தேளை அடிப்பதற்காக உங்கள் பிள்ளையும் நானும் கட்டுகளை எடுத்து அப்புறப்

படுத்தினோம். எனக்கு ஓர் ஐடியா தோன்றியது. அப்படியே பழைய பேப்பர்க்காரனுக்கு எடைக்குப் போட்டால்.. மளிகைக் கடைக்காரன் எச்சரித்துப் போய் விட்டான். உங்கள் பிள்ளையிடம் சொன்னேன். அவர் உடனே பழைய பேப்பர்க் கடைக்காரனை அழைத்து வந்தார். அவன் ஒரு நோட்டம் பார்த்து விட்டு எடுத்துக் கொள்கிறேன் என்றான். ஆனால் கனமான அட்டையுடன் எடுத்துக் கொள்ள மாட்டேன் என்றான். உடனே எல்லாருமாகச் சேர்ந்து அட்டையை ஒரு மணி நேரத்தில் கிழித்தோம்!'' -காந்திமதி பெருமையாகச் சொன்னாள்.

''தாத்தா! நாங்கள்லாம் சேர்ந்து அட்டையை வேகவேக மாகக் கிழிச்சோம்!'' என்றான் சின்னப் பெயரன்.

''பாவம், குழந்தைகள் என்னமா வேலை செய்ததுங்க! நிறுத்துப் போட்டோம். ஐநூறு ரூபா வந்தது. கடைக் காரனுடன் பேரம் செய்து ஐநூற்றிப்பத்து வாங்கினோம். மளிகைக் கடன்காரன் தலையைச் சுத்தி முன்னூறு ரூபாயை வீசி எறிந்தோம். உங்கள் பிள்ளைக்கும் புத்தி வந்தது. இனிமேல் சூதாட்டம், ரேஸ் என்று போக மாட்டேன் என்று சொல்லி விட்டார். முழுசா நூறு ரூபா நோட்டுகளை இப்பத்தான் பார்த்தேன்...'' என்று கூறிக் கொண்டே போனாள் காந்திமதி.

'திருவள்ளுவர் தரும் வாழ்க்கை விளக்கம்' எழுதிய சங்குப் புலவர் தூணின் மீது சாய்ந்தபடி இருந்தார். அவர் கண்களிலிருந்து அருவி போல நீர் பெருகியது.

●

# நான் மரம், நீ இலை!

வாதூலன்

ஆராய்ச்சி முடியும் தருணத்தில், 'டெக்னிகலாக'த் தெரிந்த ஒரு திருப்பத்தினால் ஏற்பட்ட மகிழ்ச்சி. அந்த வெற்றியைக் குறிப்பாக உணர்த்துவதற்காகவோ என்னவோ, நண்பரிடமிருந்து வந்த செய்தி... அதனால் முளைத்த திருப்தி - எல்லாமே வீட்டுக்கு வந்து அப்பாவின் சிநேகிதரைப் பார்த்ததும் வடிந்து விட்டன. சட்! சரியான கழுத்தறுப்பு. அதுவும் கொஞ்ச காலமாகப் பழைய நினைவுகள் போதா தென்று... கவிதை, பக்திப் பாடல் என்று சொல்லி அலுப்பு ஊட்டுகிறார்.

ஏதாவது காரணம் சொல்லி வண்டியைத் திருப்பி விடலாமா என்று கூட எண்ணினான் புரொபசர் நிரஞ்சன். (பெயரைத் தொடர்ந்து வரும் பட்டங்களை எழுதி மாளாது.)

வேறு வழியில்லை. கார் சப்தம் கேட்டதும், எதிர்ப்பட்டு விட்டார் நண்பர். ''இப்பத்தான் உன்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருக்கிறேன். ரிஸர்ச், ரிஸர்ச்சுன்னு மூழ்கி வீட்டையே கவனிக்கிறதில்லையாமே?'' என்றார். அவர் கையில் ஏதோ புத்தகம்... அதைக் கவனித்தவன் செயற்கையான ஆர்வத்தை வரவழைத்துக் கொண்டு, ''என்ன இது? புத்தகம் புதுசா இருக்கு? வழக்கமாக ஸ்லோகம், தாயுமானவர் பாட்டு மட்டும் தானே இருக்கும்?''

''இது புதுக்கவிதை... ஞானக்கூத்தன்.''

'புஸ்தகம், உணவு, விளையாட்டு எல்லாமே மாறுகிறது. கிழங்கள் நீங்கள் மட்டும் மாறவே மாட்டீர்கள்!' என்று நினைத்துக் கொண்டான்.

''நீ வரவர வீட்டையே கவனிப்பதில்லையாமே?'' என்று மறுபடி உரிமையோடு புகார் செய்தார் அப்பாவின் நண்பர்.

''கவனிக்காமலென்ன? கரெக்டாக அப்பாவுக்கு டாப்லெட் வாங்கித் தரேன். முதல் தரமான சமையல்காரா 'டேஸ்ட்'டுக்கு ஏற்ற மாதிரி...''

''அதெல்லாம் சரிதான்! மகாலட்சுமி மாதிரி வீட்டுக்கு விளக்கேற்றப் பெண் வேண்டாமோ? நடந்தது நடந்து போச்சு...''

''த்ஸூ...'' நிரஞ்சன் சூள் கொட்டினான். திருமணம். அதிகமான செல்வச் செழிப்பினால் மனைவியின் பிடிவாதம். டிவொர்ஸ்... எல்லாப் பழைய பக்கங்களையும் கிழித்து, புதிய அத்தியாயம் எழுதத்தானே உலகம் அதிசயிக்கும்படி புது ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறோம். ஆராய்ச்சியும் வெற்றி முனையை எட்டி...

மற்றவர் பேச்சைத் திருப்புவதற்காக, ''நிரஞ்ச். தாயு மானவர் படிச்சிருக்கையோ? கைலாசம்! அந்த வரியைச் சொல்லேன்...''

''யோசிக்கும் வேளையில் எல்லாம் உண்பதும் உறங்குவதுமாக முடியும்...'' என்றார் கைலாசநாதன்.

''வெரி குட். இப்ப பாரு. எந்த வியாதிக்கும் முதல்லே சாப்பாடு அளவைக் குறைக்கவோ, கூட்டவோ சொல்றார். வலியை மறக்கத் தூக்க மாத்திரைகள்...''

''வயசாகிறது எனக்கும். திரும்பத் திரும்ப மாத்திரை. சாப்பாடு அலுத்துப் போச்சு. நிரஞ்சனுக்கு இன்னொரு

பெண்ணைப் பார்த்து...'' கைலாசநாதன்தான் மறுபடியும் பேச்சைத் தொடங்கினார்.

''உங்களுக்கு என்ன குறைச்சல்? எழுபது வயசிலும் திடமாகத் தானே இருக்கிறீர்கள்? நான் மறுமணம் செய்து கொண்டால் உங்கள் வயசு குறைஞ்சு விடுமா என்ன?'' என்று நிரஞ்சன் கேட்டான்.

''போடா போ... வயசானால் இருக்கப்படாது மண்ணுக்குப் பாரமா!''

நிரஞ்சனின் முகம் வினோதமாக மாறியது. மனம் குறுகுறுவென்றது. தகப்பனாரை ஒரு பார்வை பார்த்தான். ''நான் மாடி ரூமுக்குப் போறேன்.''

நாற்காலியில் சாய்ந்து கொண்டான். கண்களை மூடினான். ஏதோ ஒரு பானத்தை மடக் மடக்கென்று விழுங்கினான்.

''இருக்கப்படாது பூமிக்குப் பாரமா!'' - அப்பாவின் குரல் மனத்தில் எதிரொலி செய்தது.

உள்ளபடிக்கே, இப்போது நிரஞ்சன் செய்து வருகிற ஆராய்ச்சிக்கு அடிப்படையே வயசானவர்கள்தாம். அதுவும் 70, 75 வயசுக்கு மேற்பட்டவர்கள், தனக்கும் பாரமாகப் பிறருக்கும் உதவியில்லாமல் அவர்கள் வீணே வாழ்நாளைக் கழிப்பதன் அர்த்தம்தான் என்ன?

நாலு வருடம் முன்பு கோவை போயிருந்த சமயம் மிகத் தற்செயலாக ஒரு சிநேகிதனைச் சந்தித்தான். ரொம்ப நாளாயிற்று பார்த்து, ஓட்டலில் காபி குடித்துக் கொண்டிருந்தபோது அவனிடம், ''நாளைக்கு வரேன். சினிமா போகலாம்'' என்றான்.

''ஓ யெஸ் வரேனே.'' என்றவன் சில நிமிடங்கள் பொறுத்து. ''ஸாரி இன்னொரு நாள் பார்ப்போம்,'' என மறுத்தான்.

''நோ... நாளைக்கு ஊருக்குப் போறேனே'' என்று நிரஞ்சன் வற்புறுத்தலாகச் சொன்னான்.

''இட்ஸ் டிராப்டு'' என்றான் நண்பன். ''மாமியைப் பார்த்துக்கணும். டாக்டரிடம் அப்பாயின்ட்மென்ட்.''

நிரஞ்சனுக்குச் சிறுவயசு முதலே அவன் பழக்கமானவன். குடும்பச் சரித்திரமே தெரியும். மாமிதான் இந்த நண்பனை வளர்த்து ஆளாக்கியவர்.

''உன் மனைவியைக் கூட்டிக்கொண்டு போகச் சொல்.''

''முடியாது. நானேதான் கூட்டிப் போகணும். மாமிக்குப் பயங்கர காம்ப்ளெக்ஸ். அவள் டாக்டரிடம் சரியா விசாரிக்க மாட்டாளாம்.''

கேட்க அதிசயமாக இருந்தது. நிரஞ்சனுக்கு உடனடியாக பிளேன் டிக்கெட் கிடைக்கவில்லையாதலால், நண்பன் வீட்டுக்குப் போனான். அப்போது அவன் தன் மாமியிடம் 'சிரமப்படுவதை'க் கண்கூடாகப் பார்க்க நேர்ந்தது.

உப்பு அதிகம் சேர்க்கக் கூடாது. இரவு ஏழு மணிக்கோ, எட்டு மணிக்கோ சுடச் சுடத் தோசையோ, வேறு பலகாரமோ செய்து போட வேண்டும். குளிக்கையில் தண்ணீர் மிதமான சூட்டில் அளவாக இருக்க வேண்டும். எங்கே போனாலும் பையனையோ, பெண்ணையோ காவல் மாதிரி வைத்து விட்டுத்தான் செல்ல வேண்டும்...

''மை காட்! எப்படிச் சமாளிக்கிறே?''

''உனக்கே தெரியும். பிறந்ததுலேர்ந்து வளர்த்தவ ளாச்சே.''

'சட்! நம் அப்பா இத்தனை தொந்தரவு தரவில்லை!' என்று எண்ணினான். ஆனால் சென்னை திரும்பிய பின்னரும் கூட ஞாபகம் வந்து கொண்டேயிருந்தது அந்தக் கிழவியின் தொந்தரவு. வயசும், இயலாமையும் சேர்ந்து பிறரைத் துன்புறுத்தும் தன்மை... இக்கட்டில் தவிக்கும் நண்பன்...

எல்லாம் உறுத்திக் கொண்டே இருந்தன. யோசித்துக் கொண்டே இருந்தான்.

அவன் 'ஆராய்ச்சி மூளை' வேறுவிதமாக யோசனை செய்தது.

எதற்காக இந்த மிக முது பிராயத்தவர்கள் உயிர் வாழ வேண்டும்? என்ன பிரயோசனம் இவர்களால்? அதுவும் வேறொரு வீட்டில், மூளை லேசாகப் பாதிப்பு அடைந்து, வேட்டி அவிழ்வதுகூடத் தெரியாது, பிரமித்து விழிக்கும் வயதான ஒரு மனிதரைக் கண்டதும் அவன் உறுதியே பூண்டான்.

என்ன பலன் இவர்களால்? இருப்பவர்களுக்கும், உற்றார் உறவினர்களுக்கும் வெறுப்பு பிறக்கக் காரணமாயிருக் கிறார்கள். நிஜமாகவே சகலருக்கும் சுமையாக...

திடீரென்று ஓர் ஆங்கில இதழில் கருணைக் கொலை பற்றின கட்டுரை படித்தது ஞாபகம் வந்தது. கொலை வேண்டாம். மரணம்... இயல்பான அனாயாச மரணம். குறிப்பிட்ட வயதுக்கு மேல் மூளை மற்றும் பிற 'செல்'கள் பாதிப்பு அடைவது அவனுக்குத் தெரியும். நினைவின்மை, நடை தள்ளாமை எல்லாமே அதனால்தான் ஏற்படுகின்றன. அந்த வகை 'செல்'களைச் சேதப்படுத்தி, நினைவு இழப்பு... பிறகு மூச்சுத் திணறல் போல் வரச் செய்தால்...? இயற்கையான மரணம் என்று சொல்லலாமே...?

'பல்மனரிஈடிமா', 'திராம்போஸிஸ்' என்று எத்தனை மருத்துவச் சொற்கள் இருக்கின்றன!

ஆராய்ச்சியைத் தீவிரப்படுத்தினான். திமிரான மனைவி விலகியதன் விளைவாக முளைத்த தனிமை, அவன் ஆராய்ச்சிக்கு உறுதுணையாக இருந்தது. டாக்டர் நண்பரிடம் போன் மூலம் தொடர்பு கொண்டான். அவ்வப்போது அவரிடம் வரும் வயோதிக நோயாளிகளின் நிலைமையை அறிந்து கொள்ளலானான். முதியோர் இல்லத்துக்குச் சென்று வயோதிகர்களிடம் நிலவிய பொது பலவீனத் தன்மையைப் புரிந்து கொண்டான்.

அந்தக் குறிப்பிட்ட பலவீனத்தை அதிகப்படுத்த மருந்து மாத்திரைகளைக் கண்டுபிடித்தான். டாக்டர் மூலம் கேள்விப் பட்ட ஒரு கேஸ் அவனைக் கவர்ந்தது. பெண், பையன், பேரன், பேத்தி, உற்றார், உறவினர் யாருமே இல்லை. யாரோ தூரத்து உறவினர் வீட்டில் பணம் தந்து, இருந்து கொண்டிருக்கிறார். நோயைப் பரிசோதிக்கிற மாதிரி பாவனை செய்து தன் கண்டுபிடிப்பை 'உட்கொள்ள' ஏற்பாடு செய்தான்.

நேற்று மாலை செய்தி கிடைத்தது. 'நோயாளி' மரண மடைந்து விட்டாராம். மார்பை என்னவோ செய்கிறதே என்றாராம். ஓர் அரைமணிப் பொழுதில் சகலமும் முடிந்து விட்டதாம்...

புரொபசர் நிரஞ்சனின் மனம் ஏன் துள்ளாது? ஆராய்ச்சி பலன் தரத் தொடங்கி விட்டால் எந்த விஞ்ஞானி மனம் மகிழாமல் இருப்பான்? அதுவும் நாட்டையே, ஏன் உலகையே கூட அதிசயப்பட வைக்கும் அற்புத ஆராய்ச்சி...

திடீரென்று நிரஞ்சனின் மனம் குறுகுறுத்தது குற்ற உணர்வினால். சமாதானம் செய்து கொண்டான். சட்!

இதனால் என்ன? காலம் வேகமாக மாறுகிறது. 21-ஆம் நூற்றாண்டு தொடங்கிவிட்டது. உடல் உறவே இல்லாது பிறக்கும் சிசுக்கள்... இன்ன தேதியில், இன்ன வேளையில், இன்ன நட்சத்திரத்தில் பிறக்க வேண்டும்... என உத்தரவு போட்டு வரவழைக்கப்படும் புதுப் பிரஜைகள்...

எதுவுமே இன்று அதிசயமில்லை. சொந்த நலன் என்று வரும்போது மதக் கோட்பாடுகள், பழைய நம்பிக்கைகள், தீவிரக் கொள்கைகள் யாவும் வற்றிப் போகிற குளத்து நீர் மாதிரி மறைந்து விடுவதைக் கவனித்துக் கொண்டு தானே வருகிறோம்?

பிறப்பதில் புது விதம். மண வாழ்வில் நவீன நியதிகள். ஏன் இறப்பதில் மட்டும் கூடாது?

அவனுக்கு இன்று கிடைத்த செய்தி மிகுந்த தைரியத்தை அளித்தது. எல்லா வயதானவர்களையும் இல்லை... 75க்கு மேல் நடமாட முடியாமல், புலன்கள் இற்றுப்போய், குடும்பத் துக்கே சுமை மாதிரி ஆனவர்கள் மட்டும்...

அதுவும் எப்படி?

நோய் நொடி இல்லாமல், படுக்கையில் விழாமல், அனாயாச மரணம்! ''மூச்சுத் திணறல்னு படுத்தவர்தான். எழுந்திருக்கவே இல்லை!'' என்று எல்லாராலும் மெச்சும் படியான மரணம்...

வெளிநாட்டு டாக்டரிடம் மறுபடியும் தொடர்பு கொள்ள வேண்டும். ஆண்களுக்கென்றே 'தயாரிக்கப்பட்ட' மாத்திரை யைப் பெண்களுக்கும்கூடப் பொருந்தும்படிச் செய்ய வேண்டும் - சில மாறுதல்களுடன். அதுவும் பெண்களுக்கு வயது ஆகி, முதுமை தோன்றுகையில் இயற்கையாகவே நேரும் உடல் மாறுதல்... அதற்கேற்ற மாதிரி...

மலேசிய டாக்டர் சொன்னாரே...? ஏதோ புது ரசாயன வகை. முயன்று பார்க்க வேண்டும்.

வயதான பெண்மணிகள்தான் ரொம்பக் கஷ்டம்!

நிரஞ்சனுக்கு அந்த வெளிநாட்டு டாக்டரிடமிருந்து பாராட்டு வந்தது. ஏலாது படுத்துக் கிடக்கும் வயதான வர்களை மனத்தில் கொண்டு குறிப்பிட்ட மாத்திரை மருந்தை, விதிகளை மீறாது, விளம்பரம் செய்வதற்கான ஓர் ஏற்பாடு பற்றி யோசனை கேட்டிருந்தார்.

வேலை சரியாக இருந்தது. 'கண்டுபிடிப்பில்' சிறிது மெருகேற்ற வேண்டிய நிலை. மருந்து விளம்பரத்துக்கான சட்டங்கள் உள்ளதால், வல்லுநர்களிடம் யோசனை...

பிஸி ஆகிப் போனான். டெலிபோன் அழைப்புகள், ஈமெயில்கள்...

இருக்கிற உற்சாகத்தில். ''கல்கத்தாவிலிருந்து ஒரு பெண் போட்டோ வந்திருக்கிறதே? பதில் போடலாமா?'' என்று கேட்ட தகப்பனாரிடம். ''ஓகே... நம்ம பேமிலி டீடெய்ல்ஸ் அனுப்புங்கள்'' என்றவன் சில நிமிடங்கள் பொறுத்து, ''என்னுடைய சிங்கப்பூர் 'டிரிப்'க்குப் பிறகுதான்'' என்றான்.

வாரக் கடைசியில் சிங்கப்பூர் கிளம்பினான். மிகப் பெரிய நிறுவனத்திலிருந்து வந்த அழைப்பு. எப்படி தட்ட முடியும்? புதிய கண்டுபிடிப்பைப் பற்றி நண்பர் ஒருவரிடம் நேரில் கேட்க வேண்டிய நிலைமை...

''சீக்கிரம் திரும்பிடுவேன். பிறகுதான் கல்யாணப் பேச்சு'' என்றான் தகப்பனாரிடம்.

இன்று அவன் திரும்பி வரவேண்டிய நாள்.

கைலாசநாதன் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந் தார். பிளேன் வருகிற அட்டவணைகள் மனப்பாடம் அவருக்கு. நேரம் கிறுகிறுவென்று ஏறிக்கொண்டிருந்தது. ஏன் இன்னும் வரக் காணோம்? சாதாரணமாகப் பிளேன் வந்ததுமே விமான நிலையத்திலிருந்தே பேசிவிடும் சுபாவம். இன்று ஏன் போன் வரவில்லை?

விசாரித்தார். குறித்த நேரத்திற்கு சிங்கப்பூர் ஃப்ளைட் வந்தாகி விட்டதாம். கைலாசநாதன் கடிகாரத்தை நோக்கி னார். என்னதான் நெருக்கடியான போக்குவரத்து என்றாலும் இன்னும் அரை மணியில் வந்து விடுவான், வந்ததும் கல்கத்தாவுக்கு என்ன பதில் போடவேண்டுமெனக் கேட்க வேண்டும்.

ஆனால் நிரஞ்சன் வரவில்லை. ஒருவேளை வேறு 'பிளைட்'டில் வருகிறானோ? இருக்க முடியாதே... என்ன மாறுதல் இருந்தாலும் தெரிவித்து விடுவானே?

சொல்ல முடியாது. நிரஞ்சன் புரொபசர்... அதுவும் சமீபகாலமாகத் தீவிர ஆராய்ச்சியில் மூழ்கியிருக்கிறான். வெளியே வருவதும், டெலிபோனில் பேசுவதுமாக... நிறைய வேலைப் பளு. அதனால் மறதி ஏற்படுவது சகஜம். சமாதானம் செய்து கொண்டார்.

ஆனால் பிற்பகல் நெருங்கி, எந்தத் தகவலும் வராத நிலையில் அவரைக் கலக்கம் சூழ்ந்தது. சிங்கப்பூருக்கு போன் செய்யலாமா? தெரிந்தால் திட்டுவான். ''நான் சின்னப் பாப்பாவா?''

பரவாயில்லை. பேசிவிட்டால் பதற்றம் குறையும். மேசை அருகிலிருந்த குட்டிப் புத்தகத்தை எடுத்துத் தேடினார். மெதுவாக ஐ.எஸ்.டி. எண்களை ஒற்றியெடுத்தார்.

அப்போது இன்னொரு போன் மணி அடித்தது.

கைலாசநாதன் ஓடி எடுத்தார். செய்தி கேட்டு, ''ஓ! கடவுளே!'' என்று அவர் மயக்கமுற்று விழுவதற்கும், அவர் நண்பர் உள் - ா நுழைவதற்கும் சரியாக இருந்தது.

இன்றுதான் எல்லாக் காரியங்களும் முடிந்தன.

''சிங்கப்பூர் ஏர்போட்டுக்கு வருகிற வழியில் ஒரு கார் ஆக்ஸிடெண்ட்... ஆஸ்பத்திரியில் அட்மிட் ஆகி அரை மணி...'' என்று சொல்லிச் சொல்லியே, அவருக்குத் தொண்டை கட்டிவிட்டது. ''இராமாயணத்திலே வருமே... இராவணன், இந்திரஜித்துக்கு நீர்க் கடன் செய்கிற மாதிரி'' என்று நண்பரின் கையைப் பிடித்துக் கொண்டு விசும்பினார்.

''என்ன செய்யறது சொல்லு? அணையறதுக்கு முன்னாலே பிரகாசமா எரிகிற விளக்கு மாதிரி, இப்பத்தான் நிரஞ்சன் இரண்டாவது கல்யாணப் பேச்சிலும் உற்சாகமா யிருந்தான்...'' என்றார் அவர். ''சரி, வரியா? மாடியில் அவனோட ரிஸர்ச் பேப்பர்ஸ் பார்க்கலாமா? நிறையப் பேர் கேட்கிறார்களே...?''

''நீ போய்ப் பாரு. என்னாலே முடியாது'' என்றார் கைலாசநாதன் குரல் கம்ம.

சிநேகிதர் படி ஏறி மெதுவாக நிரஞ்சன் அறைக்குப் போனார். நிறையக் கோப்புகள். புரியாத ரசாயன விளக்கங்கள். அவனுக்கு வந்த கடிதங்கள்.

பிரித்துப் பார்த்து அடுக்கி வைத்தார்.

சட்டென்று 'முக்கியம்' என்று போட்டிருந்த ஒரு கோப்பு அவர் கண்ணில் பட்டது. இது என்ன? 'வயதானவர்களின்

இயற்கை மரணம்...' கண்களை ஓடவிட்டார். சில பாராக்களைப் படித்தார். நண்பருக்கு என்னவோ செய்து கொண்டுவந்தது. மனசில் பல்வேறு எண்ணங்கள் எழுந்து அலைக்கழித்தன. புண்படுத்தின.

பொத்தென்று சாய்வு நாற்காலியில் சாய்ந்தார். ஏதும் ஓடவில்லை.

அரை மணி நேரம் ஆகியும் ஓசை எதுவும் கேட்காததால் கைலாசநாதன் மேலே வந்தார். நண்பரைப் பார்த்து, ''ஐயோ, என்ன ஆச்சு உனக்கு? இதற்குத்தான் நான் வேண்டாம்னு சொன்னேன்.''

''ஊம்'' என்று கண்களைத் துடைத்துக் கொண்டார்.

''உன் பையனே போயாச்சு. இந்த ரிஸர்ச் குப்பை யெல்லாம் எதற்கு? எரிய விட்டுடலாம்.''

கைலாசநாதனின் கண்கள் மேசைக்குத் தாவின. ''அட... இங்கே கலந்து விட்டதா புத்தகம்... தேடினேனே?''

ஞானக்கூத்தன் கவிதைகள்!

நண்பர் வாங்கிப் பார்த்தார். பிரித்த பக்கத்தில் 'ஐந்து கவிதைகளில்' ஒன்று தெரிந்தது. படித்தார். ''மரமே அறியும் இலைகளில் எவ்வெவ் இலைகளை உதிர்க்கலாம் அன்றைக்கென்று...''

அவரால் கண்ணீரை அடக்கிக் கொள்ள இயலவில்லை. சப்தமிட்டு அழுதார்.

''நோ... நோ! நிரஞ்சனின் ஆராய்ச்சி பயன்படா விட்டால் என்ன?'' என்று கைலாசநாதன் மற்றவரைத் தேற்றினார்.

●

# அவளுக்கும் உரிமை உண்டு

ரா. வேங்கடசாமி

சாந்தி அவனைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள். அவள் சுந்தரத்தை மிகவும் நேசித்தாள்.

இதை தினமும் ஒரு முறையாவது அவனிடம் சொல்லாமல் இருக்க மாட்டாள்.

இன்று கேட்டாள்...

''நம் திருமணத்திற்கு நீங்கள் ஏற்பாடு செய்ய மாட்டீர்களா?''

''நீ இப்படி அவசரப்பட்டால் எப்படி முடியும் சாந்தி? நம் திருமணம் ஏன் நடக்கவில்லை என்பதற்கான காரணம் உனக்குத் தெரியாதா?''

''இதே பதிலை நீங்கள் பலமுறை என்னிடம் சொல்லி விட்டீர்கள். ஏதாவது வழியொன்றைக் கண்டுபிடிக்க வேண்டியதுதான்!''

''ஒரே வழி கொலைதான்! ஆனால் நான் அதற்குத் தயாராக இல்லை.''

''உங்களை யார் கொலை செய்யச் சொன்னார்கள்?''

''இல்லை என்றால் எப்படி சாந்தி அவளை நமது வழியிலிருந்து அகற்ற முடியும்? அவள்தான் சுமுகமான வழி

எதற்கும் வர மறுக்கிறாளே... தொல்லையில்லாமல் விவாகரத்து கொடுத்து விட்டால் பிரச்னையில்லை... அவள்தான் அதற்கு மறுத்து விட்டாளே..''

சில நிமிடங்கள் மௌனம்.

''நம் தொடர்பைப் பற்றி அறிந்து கூடவா அவள் விவாகரத்துக்கு இசையவில்லை?''

''எப்படியோ தொலையுங்கள்... அவளை இந்த வீட்டிற்கு அழைத்து வராவிட்டால் சரி என்று சொல்லி இதற்கு முடிவுரை எழுதி விட்டாளே...அவளே விவாகரத்து கோருவதற்குரிய ஏராளமான விஷயங்களை நான் கொடுத்தேன். அவற்றையெல்லாம் அலட்சியப்படுத்தி விட்டு அமைதியாக இருந்தே என் நிம்மதியைக் குலைக்கிறாள்...''

''தாலி கட்டிய மனைவியாயிற்றே... அவ்வளவு எளிதில் விட்டுக் கொடுப்பாளா?''

''கழுத்தில் தாலி இல்லையென்றால் நான் ஏன் இப்படி குழம்புகிறேன்? அழகில்லாத மனைவி என்றேன். அடக்க மில்லாதவள் என்றேன். அடித்துப் பார்த்தேன். வீட்டிற்குப் போகாமலும் இருந்தேன். இவ்வளவையும் அவள் தாங்கிக் கொண்டுதான் இருக்கிறாள்.''

''என் கழுத்தில் ஒரு தாலி ஏறிவிட்டால் நானும் இப்படித்தான் இருப்பேன்...''

''அவளிடம் நடந்து கொள்வது போல நான் உன்னிடமும் நடந்து கொள்ள முடியுமா என்ன?''

''மாட்டீர்கள்... அவள் கை நிறையச் சம்பாதிக்கிறாள். தனியாகப் போனாலும் கவலை இல்லை. இதற்கெல்லாம் மேலே அவளுக்குக் குழந்தைகள் இல்லை.''

''இவையெல்லாம் எனக்குத் தெரியாத காரணங்களா? பலமுறை அவளிடம் சுட்டிக்காட்டி விட்டேன்...சாந்தி!

பெண்களுக்கு, கணவனை விட்டால் வேறு நாதியே இல்லை என்று சொல்லி அவள் என்னை அடக்கி விட்டாள்.''

''அவள் வாதமும் நியாயந்தானே? தனியாகப் போய்விட்டால் பிறர் பேச இடம் ஏற்படும். அவள் காதுபடவே பல விஷயங்களைப் பேசுவார்கள். தனியாக இருப்பவள் தானே என்று சிலர் நெருங்கியும் பார்ப்பார்கள்... தொட்டுப் பழக முயலுவார்கள். இவற்றைத் தவிர்க்கத்தான்... 'நீங்கள் என்னமோ செய்யுங்கள். நான் இப்படியே இருந்து கொள்கிறேன்' என்கிறாள்.''

''சரி! இதற்கு மேல் நான் என்ன செய்ய முடியும்? நீயே சொல்!'' என்றான் சுந்தரம்.

''ஒரே ஒரு வழி இருக்கிறது!''

''கொலையைத் தவிர வேறு வழி இருந்தால் சொல்...''

''கொலை... கொலை... இதே பேச்சுத் தானா? நான் சொல்லாவிட்டால் கூட நீங்களே செய்து விடுவீர்கள் போலிருக்கிறதே... அதற்குப் பிறகு யார் நிம்மதியில்லாமல் நாள்களைத் தள்ளுவது? நான் உங்களுக்கு இந்த யோசனையைத் தரவில்லை.''

''எனக்குத் தெரியாததை நீ என்ன புதிதாகச் சொல்லி விடப் போகிறாய்?''

''புதிய யோசனைதான்! என் சிநேகிதி ஒருத்தி சொன்னாள்... அவளுக்குத் தெரிந்த ஒரு வக்கீல் இருக்கிறாராம். கணவன் - மனைவியைப் பிரித்து வைப்பதில் அவர் மிகவும் கை தேர்ந்தவராம். சட்டரீதியாகவும்.. தனிப்பட்ட முறையிலும் அவர் தொழில் செய்கிறாராம்!''

''விவாகரத்து என்று போனால் தானே நாம் அந்த வக்கீலிடம் போக முடியும் சாந்தி?''

''அதற்குத்தான் வழியே இல்லையே! நான் அதைச் சொல்லவில்லை. அவரிடம் போய், நமது நிலையைச் சொல்லி விட்டால் போதும்... இருவரும் பிரியத் தேவை யான காரணத்தை அவரே தயார் செய்து விடுவாராம்!''

''அது எப்படி முடியும் சாந்தி? அவள் தான் எல்லா வற்றையும் பொறுத்துக் கொள்கிறேன் என்கிறாளே! ஒரே வீட்டில் கணவன் - மனைவி என்று வாழ்ந்தால் போதும் என்பதுதானே அவள் முடிவு!''

''சொல்லி விட்டுப் போகட்டும். தயவுசெய்து மேலும் மேலும் மறுப்புச் சொல்லாமல் நீங்கள் அந்த வக்கீலைப் போய்ப் பாருங்கள்... உங்கள் மனைவியைப் நீங்கள் பிரிய அவர் ஏற்பாடு செய்வார்.''

பிடிவாதமாக அவனை, அவள் அனுப்பி வைத்தாள்.

இன்றைய அவலங்களில் இதுவும் ஒன்று!

நாகரிகத்தின் தாக்கம் என்று இதை நிச்சயம் சொல்ல முடியாது.

ஒழுங்கான பாதையிலிருந்து விலகிப் போக மன விவகாரம் கொடுக்கும் ஊக்கம்... தைரியம்! எங்கோ ஒன்று இதைப் போல் நடக்கிறது என்றால் ஒதுக்கி விடலாம்... ஆனால்..!

ரேவதி அவன் மனைவி. நன்றாகப் படித்தவள். ஒரு வங்கியில் வேலை செய்கிறாள். பெரியவர்கள் உயிருடன் இருந்தபோது செய்த ஏற்பாடு இது.

ரேவதி அழகானவள் இல்லை என்பது உண்மை... ஆனால் அசிங்கமானவள் அல்லள்.

அவளிடம் அடக்கம் இல்லை... கணவனுக்கு அடங்கி நடப்பது என்பது மட்டும் அவளுக்குப் பிடிக்காத விஷயம். கொஞ்சம் 'இண்டிபெண்டன்ட்' டைப்..படுக்கை அறையில் நுழையக் கூட அவளது அனுமதி தேவை.

இதனால் அவர்களுக்குள் விரிசல் தோன்றத் தொடங்கிற்று. சுந்தரமும் எவ்வளவோ விட்டுக் கொடுத்துப் பார்த்தான்.

ரேவதி திருந்தவில்லை. சண்டை போட அவர்கள் எடுத்துக் கொண்ட நேரத்தில் பாதியைக் கூட அவர்கள் சந்தோஷமாக இருக்க எடுத்துக் கொள்ளவில்லை. இதனால் தான் என்னவோ, அவர்களுக்குக் குழந்தை பாக்கியம் இல்லை.

அவளுக்குத் தேவை பெயரளவில் ஒரு கணவன்.

சுதந்தரமாகத் திரிய வேண்டும்...அலங்கரித்துக் கொண்டு வேலைக்குப் போய் வர வேண்டும்...கணவன் ஒரு பாதுகாப்பு - இந்த நிலையில் தான் ரேவதி இருந்தாள்.

அதனால்தான் கொஞ்சம் சுதந்தரமாகவே அவன், அவளிடமிருந்து விலகி நடந்து கொள்ளத் தொடங்கிய போது கிடைத்த சிநேகம்தான் சாந்தி!

அவள், அவன் அலுவலகத்தில் வேலை பார்த்தாள். தனியாக இருந்தாள்... அழகாகவும் இருந்தாள்... இவர்களின் உறவு நெருக்கமான போதுதான் முதல் மனைவியுடன் விவாகரத்து என்கிற பேச்சே எழுந்தது.

சுந்தரம் வக்கீலைத் தேடிப் போனான். அவரது பெயர் நேசமணி. அவரிடம் ஏராளமான வக்கீல்கள் வேலை பார்த்தனர். ஒரு மணி நேரம் காத்துக் கொண்டிருந்த பிறகு அவனை வக்கீல் அழைத்தார்.

தன் விஷயத்தை சுந்தரம் அவரிடம் விவரமாகவே சொன்னான்.

''அதாவது உங்களைப் பிரிய உங்கள் மனைவிக்கு ஏராளமான காரணங்கள் இருந்தும்...அதை அவர்கள் உபயோகப்படுத்திக் கொள்ளவில்லை. நீங்கள் அவர்கள் மீது விவாகரத்து வழக்கு போட்டு வழக்காட உங்களுக்கு எந்தவிதமான சந்தர்ப்பமும் கொடுக்காமல் நடந்து கொள்கிறார்கள், இல்லையா?''

சுந்தரம் 'ஆமாம்' என்பதுபோல் தலையை ஆட்டினான்.

''நீங்கள் சுமுகமாக விவாகரத்து பெற்றுக் கொண்டு உங்களது தற்போதைய காதலியை மணந்து கொள்ள வேண்டும், இல்லையா?''

''அதற்கு நீங்கள் உதவ வேண்டும்...''

''உதவுகிறேன்.''

''நன்றி!''

''நான் கேட்கும் சில விவரங்களை மட்டும் சொல்லுங்கள்...''

வக்கீல் நேசமணி ரேவதியின் உயரத்தையும் எடையை யும் கேட்கவில்லையே தவிர...மற்ற எல்லா விவரங்களையும் கேட்டு விட்டார்.

வக்காலத்து பாரத்தில் கையெழுத்து போட்டுக் கொடுத்தான்.

அவனுக்கென்னவோ அப்போதே விவாகரத்து வழக்கில் வெற்றி பெற்றுவிட்டது போன்ற மன நிறைவு!

எண்ணி இரண்டே மாதங்கள்!

வக்கீல் நேசமணி, தாம் ஒரு சாதாரண வக்கீல் அல்லர் என்பதை நிரூபித்து விட்டார்.

ரேவதியின் மீது சுந்தரம் வழக்குப் போட்டான்.

காரணம்...

பல காரணங்களைச் சொன்னாலும் அதில் மிகவும் முக்கியமானது, ரேவதி வேறொரு நபருடன் தொடர்பு வைத்திருந்ததுதான்.

அந்த நபருடன் ரேவதி சுற்றித் திரிந்தது... ஓட்டலுக்குப் போனது...சினிமாவுக்குப் போனது போன்ற புகைப்படங்கள் கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டன.

ரேவதியின் வக்கீல் மிகவும் திறமையாகத்தான் வாதாடினார். இருந்தாலும் சுந்தரத்தின் மீது ரேவதி கூறிய எந்தப் புகாரையும் நிரூபிக்க முடியவில்லை.

அதே சமயத்தில் ரேவதியின் காதலனாக இருந்தவன் கோர்ட்டில், தான் ரேவதியின் காதலன்தான் என்று பகிரங்கமாக ஒப்புக் கொண்டான்.

அவள் விரும்பினால், அவளை விவாகம் செய்து கொள்ளவும் தயார் என்றான். ஆனால் ரேவதி மறுத்து விட்டாள்.

அவளுக்கே தெரியாமல் இப்படி ஒரு காதலன் எங்கிருந்து முளைத்தான் என்பதுதான் அவளுக்கு வியப்பளித்த விஷயம்!

ரேவதி அழுதவாறே கோர்ட்டை விட்டுப் போனது சுந்தரத்தின் மனத்தை என்னவோ செய்தது.

வக்கீல், கேஸ் ஜெயித்து விட்ட காரணத்திற்காக நிறையவே பணத்தை வாங்கிக் கொண்டார். அவனுக்கு ஒரு சந்தேகம்.

காதலனாக நடித்தவன்...உண்மையிலேயே காதலனா?

வக்கீலிடம் கேட்டான்.

''அது தொழில் ரகசியம்...கேட்க வேண்டாம்...'' என்று சொல்லிவிட்டார்.

ஆனால் ரேவதி சொன்னது உண்மை...

''இவனை எனக்கு யாரென்றே தெரியாது!''

சாந்தி சொன்னாள்...

''அவன் நிச்சயம் ரேவதியின் காதலனாகத்தான் இருக்க வேண்டும்...அவளுக்கு ஒரு துணை தேவைதானே? இல்லையென்றால் அவ்வளவு தைரியமாகக் கோர்ட் படியேறி சாட்சி சொல்வானா?''

ஆனால் இதை மட்டும் சுந்தரம் நம்பவே இல்லை... அதற்குப் பிறகு எல்லாமே துரித கதியில் நடந்தன... குறிப்பிட்ட சில நண்பர்களை மட்டும் அழைத்து அவர்கள் முன்னிலையில் சுந்தரம் சாந்தியை மனைவியாக ஏற்றுக் கொண்டான்.

திருமணத்திற்கு ரேவதி வந்து கலந்து கொண்டதுதான் எல்லாருக்கும் வியப்பை அளித்தது.

சுந்தரத்திடம் அவள் தனியாகச் சொன்னாள்...

''அடிக்கடி இங்கே வந்து போய்க் கொண்டிருங்கள். விவாகரத்து பெற்றுக் கொண்டால் மட்டும் என்ன? நீங்கள் கட்டிய தாலி இன்னும் என் கழுத்தில்தான் இருக்கிறது.. நீங்கள் இன்னும் என் கணவன்தான்.''

''நிச்சயம் வருகிறேன்'' என்றான். அவன் மனம் நெகிழ்ந்தது உண்மை.

புதிய தம்பதியைப் பொருத்தவரையில் முதல் ஆறு மாதம் எப்படி ஒடியது என்றால், அவர்களுக்கே சொல்லத் தெரியாது. ஆனந்தமாகக் கழித்தார்கள். இருவரும் வேலைக்குப் போய்ச் சம்பாதித்தார்கள். வாழ்க்கையை அனுபவித்தார்கள்.

ஆறு மாதத்திற்குப் பிறகு சாந்தி தன் குழந்தையைச் சுமக்கவில்லை என்பதை சுந்தரம் அறிந்தபோது அவள் சொன்னாள்...

''இப்போதென்ன அவசரம்? இன்னும் சிறிது காலம் போகட்டுமே!''

''வேண்டாம்'' என்று சொல்ல அவனுக்குத் தைரியம் வரவில்லை.

ஏதோ ஒரு விஷயத்தில் விரிசல் லேசாகத் தெரிந்த போதே அதைச் செப்பனிட்டிருக்க வேண்டும்.

செய்யவில்லை.

காதலியாக இருந்தபோது இனித்தவள்... மனைவியான வுடன் கசக்கத் தொடங்கினாள்.

''ரேவதியாக இருந்தால் இப்படிச் செய்ய மாட்டாள்!''

- சுந்தரம் இதை அடிக்கடி சொல்லத் தொடங்கினான்.

''நான் ரேவதியில்லை...சாந்தி.'' என்பாள் இவள் பதிலுக்கு.

அவனுக்கு இந்தப் பதில் திருப்தியளிக்கவில்லை.

வேலை முடிந்தவுடன் வீட்டிற்கு நேராக வந்து கொண் டிருந்தவள் இப்போது இரவில் நேரம் கழித்து வந்தாள்.

விடுமுறை நாள்களில் வீட்டில் தங்குவதே இல்லை. இவன் கேட்டு மட்டும் என்ன பயன்? சரியான பதில் கிடைத்தால்தானே?

சுந்தரம்தான் மிகவும் அனுசரித்துப் போனான்.

நிச்சயமாக ரேவதி இப்படி இல்லை.

இப்போது ரேவதி அடிக்கடி அவன் நினைவில் வந்தாள்.

ஒருமுறை சுந்தரமே அவளைத் தேடிக் கொண்டும் போனான்.

''எப்படி இருக்கிறாய்?'' என்று கேட்டவனை நன்றாக உபசரித்து அனுப்பினாள்... திணறிப் போனான்.

இவள் காதலன் என்று சந்தேகப்பட்ட நபரை அதன் பிறகு சுந்தரமும் ஒருமுறை கூடச் சந்திக்கவே இல்லையே, அது எப்படி?

இது அவன் மனத்தைக் குடைந்த ஒரு விஷயம்!

இந்த சமயத்தில்தான் சாந்தி, தன் வங்கிக் கணக்கிலிருந்து ஒரு பெரிய தொகையை எடுத்திருப்பது சுந்தரத்திற்குத் தெரிந்தது.

அப்படி என்ன அவளுக்குச் செலவு?

கேட்டால் சரியான பதில் கிடைக்கப் போவதில்லை.

சொல்லப் போனால் இப்போதெல்லாம் அவளிடம் பேசவே அவன் பயந்தான்.

அந்த அளவுக்கு அவள் மாறியிருந்தாள்.

வெளியில் சொல்ல முடியாத வேதனை. யாரிடமும் போய்ச் சொல்லி ஆறுதல் தேட முடியாத நிலை.

தடுமாறிக் கொண்டிருந்தான்.

அப்போதுதான் வந்தாள் மின்னல் போன்ற அந்த அழகி...மாடலாகப் பல படங்களில் அவளைப் பார்த்த ஞாபகம் அவனுக்கு...

ஒருமுறை லிப்டில் அவனைப் பார்த்துச் சிரித்தாள். இன்னொரு முறை ஓட்டலில் அவன் இருந்த டேபிளில் வந்து அமர்ந்து மெதுவாகப் பேச்சு கொடுத்தாள்... யாரோ அவர்களைப் போட்டோ எடுப்பது போன்ற பிரமை... யோசித்தபோது மின்னலெனத் தோன்றியது மனத்தில் ஓர் எண்ணம்!

நேராக வக்கீல் நேசமணியிடம் ஓடினான். கேட்டான்...

''ஏன் ஸார், நீங்கள் பெண்கள் கொண்டு வரும் விவாகரத்து வழக்குகளையும் ஏற்றுக் கொள்வீர்களா?''

''ஓ! இதிலென்ன ஆண் - பெண் வித்தியாசம்? கணவனை வேண்டாம் என்று சொல்லும் மனைவிகளும் இருக்கத்தானே செய்கிறார்கள்? அவர்களுக்கும் நாங்கள் உதவ வேண்டாமா?''

அவனுக்குப் புரிந்தது... தயங்கியபடி கேட்டான்....

''ஏன் ஸார் என் மனைவி சாந்தியும் உங்கள் கட்சிக்காரி ஆகி விட்டாளா?''

கெஞ்சும் பாவனையில் கேட்டான்.

''அதை வெளியே சொல்வதற்கில்லை...சொன்னால் நாகரிகமாகாது.''

''பணம் கொடுத்தால் சொல்வீர்களா?''

யோசிக்காமல் இப்படி ஒரு கேள்வியைக் கேட்டு விட்டான்.

''மன்னிக்க வேண்டும் மிஸ்டர் சுந்தரம்! எங்கள் கௌரவத்தைப் பாதிக்கக் கூடிய கேள்வியைக் கேட்டு விட்டீர்கள். மிகவும் தவறு. எங்களை நீங்கள் தொழில் ரீதியாக உபயோகப்படுத்திக் கொள்ளலாமே தவிர... விலைக்கெல்லாம் வாங்க முடியாது. எங்களது மாஜி கட்சிக்காரர்

என்பதால் உங்களை இப்போது எச்சரிப்பதோடு நிறுத்திக் கொள்கிறேன். நீங்கள் போகலாம்!''

சுந்தரத்திற்கு அதற்கு மேல் பேச்சு ஓடவில்லை.

வக்கீல் மறுத்துப் பேசாததால் உண்மை நன்றாகவே அவனுக்குப் புரிந்தது.

வெளியே வந்தான்... ரேவதி அவனை ஒருபோதும் சந்திக்கு இழுத்ததில்லையே!

வீட்டிற்குப் போக ஆட்டோவை கூப்பிட்டான். ஆட்டோவில் ஏற்கெனவே யாரோ ஒரு பெண் இருந்தாள்.

''நானும் அந்த வழியாகத்தான் போகிறேன்... வாடகையை இருவரும் பங்கிட்டுக் கொள்ளலாமா?''

''அப்படியே செய்யுங்கள் ஸார்...'' என்றான் ஆட்டோக்காரன், புன்னகையோடு.

எதிர்காலத்தில் அவனும் ஒரு சாட்சியாக இருக்கலாம்.

அவன் அவளை நன்றாக நிமிர்ந்து பார்த்தான்.

அதே மாடல் அழகி!

அவனை எங்கு போனாலும் துரத்தும் பெண்!

சுந்தரம் என் காதலன்தான் என்று அடித்துச் சொல்லப் போகும் பெண்!

சுந்தரம் மிகவும் நிதானமாகப் பதில் சொன்னான்...

''நான் என் முதல் மனைவியின் வீட்டிற்குப் போகிறேன்... நீ அங்கே வர முடியாது!''

இப்போது அவன் பயணம் ரேவதியின் வீட்டை நோக்கி இருந்தது.



# ஊருக்கெல்லாம் ஒரு பெண்

புஷ்பா தங்கதுரை

ரத்னா என்ன ஆனாள்?

பலகாரக் கடை மாது, சரக்கு மாஸ்டர் சபேசனிடம் அணுகி, - ''மாமா! ரத்னாவைக் காணல்லை!'' என்றான்.

- போடா மடையா! இதுதான் நியூஸா? என்று எரிந்து விழுந்தார்.

காலையில் பலகாரக் கடையில் வேலை கிடையாது. மாது வாசலில் உட்கார்ந்தான்.

தெருக்கோடியிலே விளக்குக் கம்பம் இருக்கிறதே. அதன் பக்கத்தில்தான் ரத்னாவின் வீடு. ரத்னா ஒரு வாரமாய் வெளியில் காணவில்லை. அது மாதுவின் கவலை.

மாதுவுக்கு வயசு இருபத்து நாலு. ஆள் நோஞ்சான். மாவு பிசைவதற்கென்றே மாஸ்டர் அவனை வைத்திருந்தார்.

சாப்பாடு போக மாசம் இருநூறு ரூபாய் சம்பளம். நூற்றி ஐம்பதைப் பிடித்து மாதுவின் அப்பாவுக்கு அனுப்பி விடுவார். மீதி ஐம்பது மாது கைக்கு வரும்! மாதுவின் சினிமாவுக்கு அது பற்றாது. மாது ஒரு வாரமாய்க் கவனித்து வருகிறான். ரத்னாவைக் காணவில்லை.

வீடியோ வீராசாமி சுருள் பக்கோடாவுக்கு காலையில் வந்தார். மர பெஞ்சில் உட்கார்ந்து ஒரு பொட்டலம் ஆர்டர்

கொடுத்தவுடன், மாது சொன்னான் - ''ஸார், ரத்னாவைக் காணல்லை.''

- போய் அவ... (மட்டமாய் இரண்டு வார்த்தை. உங்களால் ஜீரணிக்க முடியாது.)

அப்புறம் சப் போஸ்ட் மாஸ்டர் செல்லதுரை வந்தார். - ''ஸார்! ரத்னாவை ஒரு வாரமாக் காணவில்லை!''

- போய், அவ...

அதன் பிறகு போன் பூத் பூதபாண்டி, ஆரம்பப்பள்ளி வாத்தியார் ஆராவமுது, சைக்கிள் கடை சுட்டி, பொடிக்கடை பொன்னரசு எல்லாரும் வந்தார்கள்.

- ''சார்! ரத்னாவைக் காணவில்லை.''

- ''போய்...!''

(ஒருத்தருமே ஜீரணிக்கும்படியாய் ஒரு வார்த்தை சொல்லவில்லை)

மாதுவுக்கு வருத்தம்! மேலே பேச்சை நிறுத்தி விட்டான். வாசல் பெஞ்சில் உட்கார்ந்தான். ரத்னாவுக்கு என்ன நடந்திருக்கும் என்று யோசனை.

தினம் வாசலில் அவள் வருவதைப் பார்க்காவிட்டால் அவனுக்கு மனசில் ஏதோ போல் இருக்கும். ஒரு நாளா, இரண்டு நாளா? அவளை இரண்டு வருஷமாய்ப் பார்த்து வருகிறான்.

சமயத்தில் ரத்னா காலையில் நடந்து வருவாள். போஸ்டாபீசுக்குப் போவதானால் பலகாரக் கடையைத் தாண்டிப் போக வேண்டும். ஒய்யாரமாய் நடப்பாள். 'கிணுங் கிணுங்' என்று கொலுசு ஒலிக்கும். தலைப்பூ ஜாலியாக முதுகில் லாலி இடும். இழுத்து மாட்டிய ரவிக்கை

சுருக்கமில்லாமல் விறைப்பாகத் தெரியும். உள்ளே பாடி வெள்ளை சின்னப் பட்டையாகத் தெரியும். மழுமழு மழுவென்று இடுப்பு தெரியும். புன்னகை என்றால் மோகனப் புன்னகை! ஜோக்குப் பொடி வீசும்!

கிராமங்கள் இரண்டு மூன்று சேர்ந்து பெரிதாகிய சின்ன நகரம்.

இன்னும் கிராம வாடை போகவில்லை.

சமீப காலமாய் ஒரு மில் வந்ததிலிருந்து கொஞ்சம் மாறுதல்.

புதுசு பண்ணிய தனி வீட்டில் ரத்னா தங்கியிருந்தாள்.

ஊரில் ரத்னாதான் மிகச் சிறந்த அழகி. மாதுவின் தீர்மான முடிவு! காலிலிருந்து தலை வரை அவளை ரசித்திருக்கிறான். அவளைப் போல ''ஆத்துக்காரி'' அமைய வேண்டும் என்று ரொம்ப நாளாய் ஆசை.

போன வருஷம். திருவாதிரைக்கு வெளியூர் போய் மாது திரும்பி வந்தான். ரயிலிலிருந்து இறங்கியதும் முதல் வகுப்புப் பெட்டியிலிருந்து ரத்னா இறங்குவதைப் பார்த்தான். எங்கேயோ 'கிராக்கி'க்குப் போய்விட்டு வந்திருப்பாள். அப்படித்தான் சரக்கு மாஸ்டர் சொல்லுவார்.

அதனால் என்ன?

அப்படி அவள் போவதைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. அவனுக்கு நினைவு ஒன்றுதான். யாருக்கு இவள் கிடைக்கிறாளோ அவர்கள் அதிர்ஷ்டசாலிகள்.

ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் நடந்து அன்று வாசலைத் தாண்டும் போது 'மாது' என்று குரல். திரும்பினான். ரத்னா அழைத்துக் கொண்டிருந்தாள். உதடும், மூக்குத்தியும் புன்னகை கொட்டின.

- ''என்ன வேணும்?''

மாது குழைந்து நின்றான்.

- ''வீடு வரை இதை எடுத்துக்கிட்டு வர முடியுமா? வண்டியில்லை.''

- ''ஓ, ரெடி.''

ஒரு பெரிய கூடை, ஒரு பெட்டி இரண்டையும் எடுத்துக் கொண்டான். அவள் முன்னால் நடந்து வீட்டை அடைந்தான். கதவைத் திறந்ததும் நுழைந்தான். உள்ளே ஹாலில் 'கும்' என்று வாசனை. 'குளுகுளு' என்று ஒரு நிழல். சுற்றி வர சோபா, நாற்காலிகள், பெரிய நிலைக்கண்ணாடி. தேவ லோகம் போலிருந்தது.

பெட்டி, கூடைகளை வைத்ததும் அவள் புன்னகையோடு திரும்பினாள். ஒரு பார்வை பார்த்தாள். என்ன மாதிரிக் கண்கள்! ஆளைச் சுழித்து உள்ளே இழுத்துவிடும். அவள் மூச்சு விடும் போது மார்பு ஏறி இறங்கி அதன் மீதுள்ள கல் நகைகள் ஜாலம் செய்ய,

- ''இந்தா!'' என்று இருபது ரூபாயை நீட்டினாள்.

- ''ஊஹூம்! வேண்டாம்!''

- ''பரவாயில்லை, எடுத்துக்கோ''

திரும்பிப் பார்க்காமல் வெளியில் வந்தான். கடையில் வந்து உட்கார்ந்ததும் மனம் பட பட என்று அடிக்கிறது. சுற்றி வாசனை அடிக்கிறது. உடம்பில் என்னவோ பரவசம் அலைமோதுகிறது. 'அப்பா!' என்று ஆனந்தமான ஒரு பெருமூச்சு.

- ''ஏன் மாமா! ரத்னாக்கு என்ன வயசிருக்கும்?''

மாஸ்டர் அவனை முறைத்துப் பார்த்தார்.

- ''ஏண்டா அது, உனக்கு இப்போ?''

- ''இல்லை, கேட்டேன்.''

- ''பெரிய மைனர் போலக் கேக்கறியே? அவள் கிட்டே போறதுக்கு உன்கிட்டே பணம் இருக்கா?''

- ''அதுக்குக் கேக்கலை மாமா!''

- ''வேறே எதுக்குக் கேக்கிறே? வயசு முப்பத்தாறு அவளுக்கு! தெரிஞ்சுக்கோ! முப்பத்தாறாவா தெரியறா? பதினெட்டு மாதிரி ஜிலுஜிலுன்னு வீசறா. ஹூம்! எதுக்கும் உலகத்திலே கொடுத்து வைக்கணும்டா, மாது!''

ராத்திரி மாது தூங்கவில்லை. ரத்னா பேசிய பேச்சும் அழகும் மனத்தில் இன்னும் கூட மணம் வீசின.

அன்றிலிருந்துதான் அவளைத் தினமும் பார்க்க வேண்டுமென்று ஆசை! வாசல் பெஞ்சில், காலையில் உட்கார்ந்து விடுவான். வெங்காயம் நறுக்கிக் கொண்டே தெருக் கோடியை உற்றுப் பார்ப்பான். ரத்னா வெளியே வந்து விட்டால் போதும், மெய்யெல்லாம் மறந்து (கையை நறுக்கிக் கொண்டாலும்) அவளையே பார்ப்பான்.

இரவுகளில் ஒன்பது மணிக்குப் பலகாரக் கடையை மூடுவார்கள். ஊரிலுள்ள மாரியம்மன் கோயிலை நோக்கி அவன் ஓட்டம் பிடிப்பான். அங்கே ரத்னா அன்ன நடையில் வருவாள். எட்டத்தில் பூக்கடையில் பேசிக் கொண்டே மாது நோட்டம் இடுவான். அப்படி அவள் தரிசனம் கிடைத்தாலே போதும். இல்லாவிடில் தவித்து விடுவான்.

சில நாள்களில் அவள் தென்பட மாட்டாள். கிராக்கி கிடைத்திருக்கும் என்று நினைப்பான்.

மனத்தில் அப்போது ஒரு தாபம் எழும். அந்த பாக்யசாலி யாரோ என்று நினைப்பான். ரத்னாவுடன் ஒரு

நாள் முழுதும் பேசிக் கொண்டிருக்க வேண்டும் போல் விருப்பம் தோன்றும். ஆமாம், நாள் முழுதும் பேச வேண்டும். அதுக்கு மேலே வம்பு தும்புக்குப் போக வேண்டாம். மாது, மாது என்று அவள் என்னைக் கூப்பிட வேண்டும். வெற்றிலைப் பெட்டியை எடு, அதை எடு, இதை எடு என்று ஏவ வேண்டும். பிறகு என்னைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு ஏதாவது ஊர்க் கதை பேச வேண்டும். பிறகு, மாது, உன்னை எனக்கு ரொம்பப் பிடிக்குது என்று சொல்லி என் கையை எடுத்துக் கொள்ள வேண்டும். ஆசையோடு அணைத்துக் கொள்ள வேண்டும். அப்பா! அந்த இனிமைக்கு ஈடேது? போதும், அது போதும்! அவ்வளவு போதும்!

ஹுக்கும்! உன்னைத்தான் கட்டிக்கப் போறாளாக்கும்? அவள் கை படறதுக்கு எத்தனையோ பேர் தவங் கிடக்கிறாங்க. உன்னைச் சீண்டப் போறாளாக்கும்? அவள் எது செஞ்சாலும் அது வியாபாரம்! பேசினா வியாபாரம்! சிரிச்சா வியாபாரம்! உன்கிட்டே பணம் இருக்கா சொல்லு? பேசுவா, சிரிப்பா, அணைப்பா...

- ''ஏன் மாமா! அவளுக்குப் பணம் எவ்வளவு?'' என்று கேட்டான் ஒரு நாள் சரக்கு மாஸ்டரிடம்.

- ''அவ்வளவுக்கு வந்துட்டியாடா?'' என்றார் கையில் சல்லடைக் கரண்டியைத் தூக்கிக் கொண்டு.

- ''இல்லை, மாமா! சும்மா கேட்டேன்.''

- ''பேசறதுக்கே ஐநூறு ரூபாய் கேட்பா, போ!''

- ''அவ்வளவா?''

- ''அதுவும் கேட்பா. அதுக்கு மேலும் கேட்பா.''

மாதுவுக்கு என்னவோ அன்றிலிருந்து வெறி வந்து விட்டது. எப்படியும் அவளிடம் ஓர் இரவு முழுதும் பேசிவிட வேண்டும். ஐந்நூறு தானே கேட்பாள்? கொடுத்துவிட்டால் போகிறது.

எப்படிக் கொடுப்பது? மாதம் கிடைக்கும் ஐம்பதில் ஒரு ரூபாய் கூட மிஞ்ச மாட்டேன் என்கிறதே! சரி! எல்லாச் செலவையும் நிறுத்து!

பணத்தை மிச்சப்படுத்தினான். சினிமாவை நிறுத்தி விட்டான். ஹேர் ஆயில், பவுடர் எல்லாவற்றையும் நிறுத்தி விட்டான். எக்ஸ்ட்ரா செலவழிப்பு ஒன்றுமில்லை.

மொத்தம் ஐந்நூறு ரூபாய் சேருவதற்குப் பதினாறு மாதம் இழுத்துவிட்டது. பர்ஸில் ஐநூறு இருப்பதை எண்ணியதும் ஒரே குஷி. ரத்னா அந்தப் பணத்தின் ஊடே சிரிப்பது போல் தோன்றியது.

ஒரு செவ்வாய்க்கிழமை. வார விடுமுறை. சாயங்காலம் குளித்து, தலையை நன்றாகச் சீவிக் கொண்டான். இஸ்திரி போட்ட சட்டையை மாட்டிக் கொண்டு வெளியே புறப் பட்டான்.

நேராக ரத்னா வீட்டுக்குப் போகவில்லை. ஊரைச் சுற்றிவிட்டு இருட்டும் வேளையில் அங்கே வந்தான். அக்கம் பக்கம் பார்த்து விட்டு விருட்டென்று அவள் வீட்டுக்குள் நுழைந்துவிட்டான்.

கதவை மெதுவாகத் தட்டினான். யாரென்று குரல். - ''நான் தான்!'' என்றான்.

கதவு திறந்தது. உள்ளே போனான்.

உடம்பு நடுங்கியது. ரத்னா புன்னகையோடு அவனைப் பார்த்தாள். பார்வை சுழித்து மயங்கியது.

- ''என்ன, மாது?''

மாது பேசவில்லை.

- ''என்ன மாது?''

- ''இல்லை... இல்லை... உங்ககிட்டே பேசறதுக்காக வந்தேன்.''

- ''பேசு! என்ன சமாசாரம்?''

மாதுவுக்கு அதற்கு மேலே ஓடவில்லை. ஒரே பரபரப்பு. மேலே பார்த்தான். கீழே பார்த்தான். பேச வாயெடுத்தான். பேசவில்லை. வியர்த்துவிட்டது. பைக்குள் கையை விட்டான். ஐந்நூறு ரூபாய்த் தாளை வெளியே எடுத்தான். அவளிடம் அதை நீட்டும்போதே பயந்து கீழே போட்டு விட்டான்.

- ''இதென்ன, ஐந்நூறு?''

அவள் அதை எடுத்தாள். அவன் பேசவில்லை. திரு திரு என்று விழித்தான்.

ஹஹ்ஹஹ்ஹா! அவள் சிரித்தாள்; சிரித்தாள் நிற்க வில்லை. பெரிதாக வாயெல்லாம் திறந்து சத்தம் போட்டுச் சிரித்தாள். விஷயம் புரிந்து விட்டது. குலுங்கிக் கொண்டு சிரித்தாள். கல் நகையெல்லாம் சிரித்தது. புடைவைச் சரிகை யெல்லாம் சிரித்தது.

- ''இதை நீயே வச்சுக்கோ, மாது!'' என்று சிரித்தவாறே பணத்தை அவன் கையில் கொடுத்தாள்.

- ''நீ என் தம்பி மாதிரி!'' என்று சொல்லித் தோளைத் தட்டினாள். உள்ளே போனாள்.

- ''இந்தா! இன்னொரு ஐந்நூறு வச்சுக்கோ. ஆயிரம் ஆச்சு. இன்னும் சேரு! தனியா ஒரு பலகாரக் கடை வை! சம்பாதி! சந்தோஷமா வாழு!'' என்றாள்.

மாதுவுக்குக் கண்ணில் நீர்! முகத்தைக் குனிந்தான். பேசாமல் நின்றான். கண்களைத் துடைத்தான். விருட்டென்று வெளியே போனான்.

அன்றிலிருந்து அவளை நேரில் பார்க்க இஷ்டமில்லை. அவளைத் தேடிக் கோயிலுக்குப் போகவில்லை. எங்கேயாவது எதேச்சையாகப் பார்த்துவிட்டால் அவள் புன்னகை புரிந்தாள். அது ஒன்றே போதும்.

இப்போது....

ஆறு மாசமாக அவனுக்கு எப்போதாவது கிடைக்கும் தரிசனமும் நின்று விட்டது. ரத்னா வெளியே வருவது குறைந்துவிட்டது. அவளுக்கு உடம்பில் வியாதி என்றார்கள். 'மில் ஓனர்' கார் அதற்கு முன் அடிக்கடி அவள் வீட்டு வாசலில் தென்படுமே. இப்போது தென்படுவதில்லை. ஊரில் மளிகை பங்காருவும், தறி முதலாளி தியாகுவும் உரிமையோடு பட்டப் பகலில் அங்கே போவார்களே, இப்போது நின்றுவிட்டார்கள். வேலைக்காரக் கிழவி மருதி கூட போன வாரம் நின்று விட்டாளாம்.

மாதுவுக்கு ஒரே கவலை.

ரத்னாவை யார்தான் கவனிப்பார்கள்?

அன்று காலையிலிருந்து இந்த நினைவுகள்தான் அவனைக் குடைந்து கொண்டிருந்தன.

ஒரு வாரமாக ரத்னாவை சுத்தமாகக் காணவில்லை.

அவனுக்கே பதற்றம்!

சரக்கு மாஸ்டரும் அவளைப் பற்றிப் பேசினால் எரிந்து விழுகிறார். யாரும் அவளைப் பற்றி அக்கறை காட்டவில்லை.

நேரம் போகப் போக மனம் தவித்தது.

மத்தியானம் ஒரு மணி.

திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தான்.

கடையிலிருந்து வெளியே குதித்து நடக்க முற்பட்டான்.

ரத்னாவின் வீட்டை நோக்கி நேராக நடந்தான். திக்திக் என்று மனம் அடித்தது. வீட்டுக் கதவு லேசாகச் சாத்தியிருந்தது. அங்கும் இங்கும் பார்த்தான். பிறகு விருட்டென்று அதைத் தள்ளி உள்ளே நுழைந்தான்.

- மேடம்! மேடம்! என்று அழைத்தான். மூச்சில்லை. பேச்சு இல்லை. உள்ளே ஓர் அறை திறந்திருந்தது. அடி வைத்துப் போனான்.

கட்டிலைப் பார்த்துத் திடுக்கிட்டான். ரத்னா அதில் கிழிந்த நாராகப் படுத்திருந்தாள். அவள் உருவம் இவ்வளவு மாறி இருக்கும் என்று நினைக்கவில்லை.

- "ரத்னா!"

பதில் இல்லை. அருகில் போய்ப் பார்த்தான். அவன் ரத்தம் குப்பென்று ஏறியது. ரத்னாவின் கண்கள் திறந் திருந்தன. அவள் இறந்து கிடந்தாள். இரண்டு நாளாகி இருக்கும். நெடி வந்துவிட்டது.

மாதுவின் கண்ணில் நீர் வந்தது. துடைத்துக் கொண்டான். வீடே காலியாக இருந்தது. சோபா, அலமாரி, பாத்திரம் பண்டம் எதுவும் தென்படவில்லை. துடைத்து விட்டாற்போல் இருந்தது. எல்லாம் கடனுக்குப் போயிருக்குமோ?

வெளியே வந்தான். மனம் பொறுக்கவில்லை. வீடியோக் கடை வீராசாமியிடம் போனான். - "சார்! ரத்னா இறந்து விட்டாள்!"

- "அதை ஏன் என்கிட்டே சொல்றே? நோய் வந்துடுத்து. கிராக்கி எல்லாம் போயிடுத்து. பணம் எல்லாம் போயிடுத்து. ஏன் சாகமாட்டா?"

நேராக சப் போஸ்ட் மாஸ்டர் செல்லதுரையிடம் போனான். - ''சார்!.......''

- ''போய்ட்டாளா? நினைச்சதுதான். அதை ஏன் எங்கிட்டே சொல்றே?''

போன் பூத் பூதபாண்டியிடம் போனான். - ''சார்!......''

- ''போகட்டும், போகட்டும்! இருந்து என்ன பிரயோசனம்?''

மாலை நான்கு மணிக்குள் தெரு முழுதும் சொல்லி விட்டான். யாரும் அசைந்து கொடுப்பதாக இல்லை. அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. உடலைத் தகனம் பண்ண வேண்டாமா? யாரும் காதில் போட்டுக் கொள்ளவில்லையே?

திரும்பி வந்து கடையில் உட்கார்ந்தான்.

- ''என்னடா, ரத்னா செத்துப் போயிட்டாளா?'' என்று கேலியாக துக்கம் விசாரித்தார் 'மாமா'.

- ''போய்ட்டா, மாமா!''

- ''யாரும் அவளுக்குக் கிடையாதே! உடம்பை யார் எடுப்பாங்க?''

- ''முனிசிபாலிடிக்குத் தெரிஞ்சா எடுத்துட்டுப் போய் புதைச்சுடுவாங்களாம்.''

- ''செய்யட்டும்!'' என்றார் சரக்கு மாஸ்டர்.

- ''இல்லை மாமா! ரத்னா அநாதை மாதிரியா போறது?''

- ''அதுக்கு நாம்ப என்ன செய்யலாம்?''

- ''உடம்பைக் காட்டுக்கு எடுத்துட்டு போகப் போறேன் மாமா!''

- ''நீயா?''

எழுந்தான் மாது. கையில் பணம் இருந்தது. நேராக மார்க்கெட்டுக்குப் போனான். ஒரு கைவண்டியை

வாடகைக்குப் பேசினான். தெருவில் இழுத்து வந்தான். ரத்னா வீட்டு வாசலில் நிறுத்தினான்.

தெருவில் எல்லாரும் எட்டிப் பார்த்தார்கள்.

மாது பயப்படவில்லை. தலையில் முண்டாசு கட்டிக் கொண்டான். ஒரு கூலி ஆளை அழைத்துக் கொண்டான்.

ரத்னாவின் வீட்டினுள்ளே போனான். அவளது உடலைப் பாயோடு சேர்த்துத் தூக்கினான். வெளியே கொண்டு வந்து கட்டை வண்டியில் வைத்தான். அதை ஒரு துணியால் மூடினான்.

பிறகு கூலியாள் தள்ள, வண்டியைத் தைரியமாக இழுத்துக் கொண்டு மயானத்தை நோக்கி நடந்தான்.

ஊருக்கு வெளியே மயானம்! பணத்தைக் கொடுத்து வெட்டியானிடம் எல்லா ஏற்பாடுகளையும் செய்யச் சொன்னான்.

கூலிக்காரன் ஒத்தாசை செய்ய, காரியங்கள் நடந்து கொண்டிருந்தன. இடையிடையே மாது நிமிர்ந்து பார்த்த போது, ஒவ்வொருவராக உதிரியாக ஆட்கள் வருவது தெரிந்தது. ஒன்று, இரண்டு என்று தென்பட்டவர்கள் கொள்ளி வைக்கும்போது பத்து, பதினைந்து என்று ஆகிவிட்டார்கள். எல்லாரும் ஊர்க்காரர்கள்தான்.

எல்லாம் முடிந்ததும் குளத்தில் குளித்துவிட்டுக் கூட்ட மாகப் புறப்பட்டார்கள். மாது ஒரு ஹீரோ போல் நடந்தான். மற்றவர்கள் குறுகியவாறு நடந்தார்கள். இருட்டி விட்டது.

- ''செல்லதுரை, சார்! நீங்க ஏன் வந்தீங்க?'' என்றான் மாது கம்பீரமாக. இதுவரை அவன் அப்படிப் பேசியதில்லை.

- ''அதுவா! ஒரு தரம் ஆபீஸ்லே இரண்டாயிரம் ரூபாயைக் கையாடிட்டேன். இன்ஸ்பெக்டர் வந்துட்டான். அப்போ இந்த ரத்னாவைப் போய்ப் பணம் கேட்டேன்.

மறுக்காம இரண்டாயிரம் கொடுத்தா! திருப்பிப் பணத்தைக் கேட்கவே இல்லை. அந்த நன்றிக் கடனுக்காகத்தான்.''

- ''நீங்க?'' என்றான் வீராசாமியை நோக்கி.

- ''கடைக்கு மூணு மாச வாடகை பாக்கி! சொந்தக்காரன், அடியாளோட வந்துட்டான். ரத்னா அப்போ அங்கே வந்தா. நிலைமை தெரிஞ்சு மூவாயிரம் கொடுத்தா. ஐந்நூறு தான் திருப்பிக் கொடுத்தேன். பாக்கியைக் கேட்கவேயில்லை. அந்த நன்றிக் ...''

- ''நீங்க?'' என்றான் பூதபாண்டியை நோக்கி.

- ''மனைவி பிரசவத்துக்குக் கையிலே பணம் இல்லை. வேலைக்காரி மூலமா இவள்கிட்டே கேட்டு விட்டேன். மூவாயிரம் உடனே கொடுத்துட்டா. அந்த நன்றிக்...''

- ''நீங்க?'' என்றான் ஆராவமுதுவை நோக்கி.

- ''கோயில்லே நவராத்திரி விழா நடத்தினோம். கோயிலுக்கு வந்தா! செலவிலே துண்டு விழுதுன்னேன். செக் ஏழாயிரத்துக்கு எழுதிக் கொடுத்தா... அந்த நன்றிக் ...''

அதற்கு மேல் அவன் கேட்காமலே ஒவ்வொருத்தரும் ஒவ்வொன்று சொன்னார்கள். எல்லாருக்கும் ஏதோ வகையில் ரத்னா உதவி புரிந்திருந்தாள்.

மாதுவுக்கு அழுகை வந்தது. கீழே குனிந்தவாறே கண்ணைத் துடைத்தான்.

கூட்டத்தில் ஒருவர் அவனை அணுகினார்.

- ''நீ எதுக்கப்பா இதெல்லாம் செய்தே?'' என்றார். மாது தலை நிமிர்ந்தான்.

- ''நான் அவ தம்பி!'' என்றான் மாது உணர்ச்சியோடு.

●

# பார்வையின் மறுபக்கம்

**ஜூலியட் ராஜ்**

ஒன்பது மணியிருக்கும். கோகிலா வீடு திறந்திருந்தது. வெளியே ஸ்கூட்டர் நின்றிருந்தது. டி.வி. ஓடும் சப்தம் கேட்டது.

ஆட்டோவுக்கு பணம் கொடுத்தனுப்பிவிட்டு கேட்டருகே வந்தேன்.

கேட் திறக்கும் சத்தம் கேட்டு திரைச்சீலையைத் தள்ளிக்கொண்டு வெளியே வந்தார், கோகிலாவின் கணவர். என்னைக் கண்டதும் ஒரு வினாடிபோல் யோசித்து ''வாங்க'' என்றார். மெல்ல அருகில் வந்து வெளிச்சத்தில் பார்த்து, ''கோகிலாவின் சிநேகிதிதானே நீங்க.. ம்.. மைதிலிதானே? வாங்க வாங்க.''

''அப்பாடா.. கண்டுபிடிச்சிட்டிங்களா? நான்தான். எப்படியிருக்கீங்க? கோகிலா எப்படி இருக்கா?''

''நல்லாயிருக்கோம். கோகிலா இல்லைங்களே, உள்ளே வாங்க..''

அடடா, இப்போ என்ன செய்யலாம்? பதில் பேசத் தோன்றாமல் உள்ளே நுழைந்தேன்.

நாற்காலியை இழுத்துப்போட்டு ''உட்காருங்க..'' என்றார்.

தோள்பையை மடியில் வைத்துக்கொண்டு நாற்காலியில் அமர்ந்தேன்.

''என்னங்க, இந்த நேரத்தில் தனியா வந்திருக்கீங்க?'' என்றார் எதிரில் அமர்ந்தபடி.

''ஸாரிங்க... ஒரு போன் செய்துட்டு வந்திருக்கலாம்.. சர்ப்ரைஸாக இருக்கட்டுமேன்னு வந்தேன். என்கூட வேலை செய்யற பெண்ணுக்கு இங்க நெய்வேலியில் கல்யாணம். காலையில் முகூர்த்தம். நாளைக்குப் பாண்டியிலே பஸ் ஸ்டிரைக், பெட்ரோல், டீசல் விலை குறைக்கச் சொல்லி, அதான் இப்போதே கிளம்பி வந்துட்டேன். ஆமாம், கோகிலா எங்கே போயிருக்கா?''

''அவ அம்மாவோட ஆறுபடை வீடு டூர் போயிருக்கா. நைட்டே வந்திடணும். இனிமேல் எப்போ வேணா வரலாம்'' உதடு பிதுக்கி சிரித்தார்.

நான் என்ன செய்வது? இங்கேயே தங்கி விடலாமா? அல்லது வெளியே போய்த் தங்கிக் கொள்ளலாமா? இந்த நேரத்தில் வெளியே போய்த் தங்குவது சாத்தியமா?

இங்கேயே தங்கிக் கொள்ளவும் தயக்கமாயிருக்கிறது. என்ன நினைப்பார் இவர்? நினைப்பதற்கேதுமில்லை என்றாலும் எப்படி கேட்பது?

''காப்பி கலந்து தரட்டுமா? டிபன் ஏதாவது செய்யட்டுமா?''

''அய்யய்யோ அதெல்லாம் வேண்டாங்க. நான் கிளம்பறேன். பாவம் உங்களுக்குத் தொந்தரவு கொடுக்கறேங்க. நாளைக்குக் கல்யாணம் முடிந்ததும் திரும்பவும் வர்றேன்.''

''இந்த நேரத்தில் எங்கே போய்த் தங்குவீங்க? எதுவும் நினைக்காதீங்க. இங்க சாயங்காலம் வரை நல்ல மழை. ஒரு வேளை கோகிலா இப்போதே வரலாம். பயப்படாதீங்க..''

எல்லாமே உண்மைதான். ஆனால் எப்படி தனிமையில் இவரோடு... வேறு வழியில்லை. கோகிலா நல்லவள். ஏன்டி என் புருஷன் மேல் நம்பிக்கையில்லையா? என்று கோபிப்பாள்.

வெளியே மீண்டும் மழைபெய்தது. நான் தங்கிக் கொள்வதென்று முடிவு செய்தேன்.

''கோகிலா தான் வந்துடுவாளே..'' என்னை நானே சமாதானம் செய்யும் வகையில் சொல்லிக் கொண்டேன்.

என்னை இருக்கச் சொல்லி வற்புறுத்தாதது அவர்மேல் நல்லெண்ணம் கொள்ளச் செய்தது.

''மாவு இருக்குங்க.. தோசை போடவா? இட்லிப் பொடியுமிருக்கு.''

''இல்லைங்க, காப்பி மட்டும் போதும். கொஞ்சம் பொறுத்து நானே கலந்துக்கறேன்.''

''சரி, சொல்லுங்க. உங்க வீட்டுக்காரர் எப்படியிருக்கார்?''

''ரொம்ப நல்லாயிருக்கார். இப்போ டிரைனிங்குக்காக டில்லி போயிருக்கார். அடுத்த வாரம்தான் வருவார். அவர் இருந்தால் தனியா வரமாட்டேன். பிள்ளைங்க என்ன படிக்கிறாங்க?''

''சின்னவ உமா யூ.கே.ஜி. படிக்கறா, பெரியவ ஹேமா செகன்டு படிக்கிறா...''

''இப்போதான் கோகிலா காலேஜ் முடிச்ச மாதிரியிருக்கு. அவளுக்கு இரண்டு பிள்ளைகள். ஆமாம் கோகிலா எப்படியிருக்கா?''

''நல்லாயிருக்கா... ஆனா அடிக்கடி சைனஸ் பிராப்ளம்.''

வீடு சின்னதுதான். ஒரே பெட்ரூம். சின்ன ஹால். எங்கே படுப்பது?

''பாண்டியில மழையா?''

''கிளம்பும்போது மழையில்லை. ஆனா பஸ்ஸில் வரும்போதுதான் தூறல்...''

''சாரிங்க... நான் வந்ததிலிருந்து பேசிக்கிட்டேயிருக்கேன். நீங்க டாய்லெட் போறதுன்னா போயிட்டு வாங்க. முகம், கை, கால் கழுவிட்டு வாங்க'' என்று எழுந்துபோய் வண்டியை உள்ளே தள்ளிவைக்க முற்பட்டார்.

முகம் கழுவும்போதெல்லாம் யோசிப்பாகவேயிருந்தது. திடீரென்று யாராவது வந்தால் என்ன நினைப்பார்கள்? கோகிலாவே வந்துவிட்டால் என்னைப்பற்றித் தவறாக நினைப்பாளா?

ச்சீ.. நான்தான் வேண்டாத நினைவுகளில் மூழ்கிப் போகிறேன். இதே நேரம் இவர் என் வீடு தேடிவந்தால் நான் உபசரித்து தங்கச் சொல்லமாட்டேனா... என் கணவர் இல்லை என்றால் வெளியே துரத்திவிடுவேனா?

முகம் துடைத்து உள்ளே வந்தேன்.

பால் பாக்கெட் எடுத்து ப்ரிட்ஜ் மீது வைத்தார்.

''நான் காப்பி கலந்து தரவாங்க?''

''இல்லைங்க.. நான் கலந்துக்கறேன்.''

தயங்காமல் சர்க்கரை, காப்பித்தூள் எடுத்துக் கொடுத்தார்.

''காப்பி நல்லாயிருக்குங்க'' என்று சம்பிரதாயமாகச் சொல்லாமல் என்னோடு சேர்ந்து காப்பி குடித்தார்.

''ஏதாவது சீரியல் பார்க்கறீங்களா? கோகிலா எந்த சீரியலையும் விடமாட்டா.. டீ.வி. பார்த்துக்கிட்டேதான் என்கிட்ட பேசுவா.. யாருக்குடி பதில் சொல்றேன்னு கேட்கணும்.''

''பேசறாளே, அதுவே அதிகம். போன மாதம் என் நாத்தனார் வீட்டுக்குப் போனேன். அதை ஏன் கேட்கறீங்க? விளம்பர இடைவேளையிலதான் பேசறாங்க. எல்லா வேலையையும் டீ.வி. சீரியலை முன் வைத்துத்தான் முடிச்சுக்கறா'' சிரித்தோம்.

தூக்கம் வருகிறது. எப்படி சொல்வது? இவர் எங்கே படுப்பார்? சமையலறை முழுவ்தும் பொருள்கள். பெட்ரூமில் ஒரே கட்டில். வெளியே மழை. டீ.வி.யில் ஒரு பெண் வாங்கிய காசுக்கு வஞ்சனையில்லாமல் அழுது கொண்டிருந்தாள். கோகிலா சீக்கிரம் வந்துவிடேன். உன் கணவர் நல்லவர்தான். நான்தான் எதற்குமே தயங்குகிறேன். இது பயமா?

''வீரப்பனைப் பிடிச்சிடுவாங்கன்னு நினைக்கிறீங்களா?'' என்றார்.

''பிடிக்கணும்னு நினைக்கிறேன்'' சிரித்தேன். என்னை மீறி கொட்டாவி வந்தது. மணி பத்தரையாகியிருந்தது. தூங்க வேண்டுமென்று எப்படி சொல்வது?

''நீங்க ரூம்லபோய் கட்டில்ல படுத்துக்கோங்க. நான் இங்கேயே சோபாவ்ல படுத்துக்கறேன்'' என்று எழுந்தார்.

''அலாரம் ஏதாவது வைக்கணுமாங்க.. பெட்ஷீட் அந்த அடுக்கில இருக்கு. எடுத்துக்கோங்க'' என்றார்.

''கதவைத் தாழ் போட்டுக்கோங்க'' என்று சொல்லி விட்டுப் படுத்துக்கொண்டார்.

தாழ் போடக்கூட எனக்குத் தோன்றவில்லை. அத்தனை மதிப்பு எனக்கு அவர்மேல் ஏற்பட்டிருந்தது.

தூக்கம் சுத்தமாய் ஓடிப் போயிருந்தது. என் கணவரிடம் இவர்பற்றிச் சொல்ல வேண்டும்.

என் டைரியின் பக்கங்களில் இவர் நிச்சயம் இடம்பிடிப்பார், நான் சந்தித்த கண்ணியமானவர்களில் இவரும் ஒருவர் என்று.

நாளை கோகிலாவிடம் சொல்ல வேண்டும். உன் கணவரைப்போல் உயர்ந்தவர் சிலரே என்று பாராட்ட வேண்டும்.

நான்தான் மிகைப்படுத்துகிறேனோ? இது சாதாரணமான விஷயந்தானோ? ஆணும், பெண்ணும் ஒரு ரூமில் தனித்திருந்தால் பயம்தான் கொள்ளவேண்டுமா.. பண்பை எதிர்பார்க்கக்கூடாதா?

எப்போது தூங்கினேனோ, காப்பி மணம் என்னை எழுப்பியது.

சட்டென்று எழுந்து கொண்டு, தலையைக் கொண்டை போட்டுக் கொண்டு போர்வையை மடித்து அடுக்கி வைத்தேன். சேலையை உதறிக் கட்டும்போது பார்வை வெளியே போனது.

எவ்வளவு அழகான தோட்டம்! இரவில் வந்ததால் கவனிக்காமல் விட்டு விட்டேன். நடுவில் பச்சைப்பசேல் என்று புல் வளர்ந்திருந்தது. சுற்றிலும் மஞ்சளும், சிவப்புமாய்ப் பூச்செடிகள். நேற்று பெய்த மழையில் செடிகள் நனைந்து பிரசவித்த பெண்போல் களைத்து, பூரித்து நின்றது.

புல்லின்மீது மழைத்துளி பட்டு, குளித்து வந்த குழந்தைபோல மினுமினுவென்றிருந்தது.

கதவைத் தள்ளிக்கொண்டு வெளியே வந்தேன்.

''காப்பி குடிக்கறீங்களா.. நல்லாத் தூங்கினீங்களா?'' என்றார் நேராக கண்களைப் பார்த்து. எனக்குப் பிடித்தது இப்படி நேர் பார்வை பார்த்துப் பேசுவதுதான்.

''நல்லாத் தூங்கினேங்க, ரொம்ப தேங்க்ஸ்.'' எதற்கு என்று அவரும் கேட்கவில்லை. எதற்குச் சொன்னேன் என்று எனக்கும் புரியவில்லை.

குளித்து, துணி மாற்றி என் துணிகளைப் பையில் வைத்தேன். தலை சீவி, பவுடர் அடித்து, பொட்டு வைத்துவிட்டு வெளியே வந்தேன். பக்கத்து வீட்டுக்காரரிடம் பேசிக் கொண்டிருந்தவர் என்னைக் கண்டதும் உள்ளே வந்தார்.

டூரிஸ்ட் பஸ் வந்து நிற்க, கோகிலா தன் பிள்ளைகளோடு இறங்கி வந்தாள்.

''ஏய் மைதிலி.. எப்ப வந்த? நல்லாயிருக்கியா? பாருடி. நேற்று நைட்டே வரவேண்டிய பஸ் இப்போதான் வந்தது. ஆறுபடை வீட்டுக்குப் போறதுக்கு பதில் அறுபதுபடை வீட்டுக்கு போனமாதிரி டயர்டாயிருக்கு,'' என்று சலித்தபடி உள்ளே நுழைந்தாள்.

''உமா, ஹேமா எப்படியிருக்கீங்க?'' என்று சிரித்து பிள்ளைகளை அழைத்தேன். கோகிலாவிடம் அவள் கணவர்பற்றிப் பாராட்ட வேண்டும்.

''சொல்லுடி எப்போ வந்தே?''

''இப்போ தான் கோகிலா வந்தாங்க, ஏதோ கல்யாணத்துக்குப் போகணுமாம்'' என்றார் அவள் கணவர்.

ஏன்? ஏன் இப்படி சொல்கிறார்... என்று அவரைப் பார்க்கையில், என் பார்வையைச் சந்திக்க விரும்பாமல், வேறு பக்கம் பார்வையை விரட்டினார். முகம் சோர்ந்து போயிருந்தது.

கடவுளே! ஏன், இவர் இப்படி பயப்படுகிறார்? நான் இவரை எத்தனை உயரத்தில் வைத்திருந்தேன். அது மடமடவென்று சரிந்து பாதாளத்தில் விழுந்தது.

''நல்லவேளை நேற்றே வராமல் இருந்தாய். இரவு இவர் மட்டும்தான் இருந்திருப்பார்'' என்றாள்.

ஓ.. அவர் பொய்யின் காரணம் இதுதானா? இவள் என் சிநேகிதி என்று நினைக்கும்போதே மனம் கூசிப் போனது. நிமிர்ந்து அவரைப் பார்த்தபோது என்னைப் புரிந்துகொள்ளேன் என்றன அவர் கண்கள்.

●



# ஒரு மகாமனிதனின் கதை

ஜெயரதன்

பதின்மூன்று நாட்கள் காரியங்கள் நடந்து முடிந்தன. அப்பா அமரராகிப் போனார்.

''இன்னும் இரண்டு மாசம் இருந்திருந்தா, தொண்ணூறு வயசு முடிஞ்சிருக்கும் அப்பாவுக்கு.''

கடைசிப்பெண் கல்யாணியின் குரலில் துயரத்தின் சாயல் மலிந்திருந்தது. கடைசிப் பெண் என்று அவள்மீது அப்பாவுக்குப் பாசம் அதிகம். கல்யாணி பிறந்த போது அவருக்கு வயது ஐம்பது. உடலின் மிடுக்கு சரியத் தொடங்கிவிட்டது. மாடிப்படியேறி இறங்கினால் மூச்சு வாங்கிற்று. இருந்தாலும் அவளைத் தூக்கிக் கொண்டே இருப்பார்.

''எந்தக் கொழந்தையையுமே இப்படித் தூக்கிக் கொஞ்சினதே இல்லை அவர். பாத்துச் சிரிக்கறதோட சரி - அதென்னமோ, இந்தக் கல்யாணியை இப்படித் தூக்கிச் சுமக்கறார்'' என்று பெருமிதம் பொங்க அம்மா சொல்லுவாள்.

''வயசாகிக் குழந்தை பொறந்தாலே, பாசம் ஜாஸ்தியாத்தான் இருக்கும்.... பாசத்தைக் காட்டறதுக்கும் ஒரு பக்குவம் வரணும் போலிருக்கு...''. காலை நீட்டிக் கொண்டு அமர்ந்திருந்த அத்தை சொல்வாள். சோடா பாட்டில்

கண்ணாடிக்குப் பின்னால் பூதம் காட்டும் கண்களில் நீர் திரையிட்டு விடும். பேசுகிற போதே குரல் தழைகிற உணர்ச்சிப் பூர்வ மனசு அவளுக்கு.

அப்பாவும் அப்படித்தான் இருந்தார். பேசுகிற போதே குரல் கசிந்து கண்ணீர் மல்கி விடும். துயரங்களைத் தாங்காத பூ மனம் அவருக்கு. பசிக்கிறவர்களுக்குச் சாதம் போட்டு அவர்கள் சாப்பிடுகிற வேகத்தைப் பார்த்துச் சுகித்துப் போவார்.

'பழைய சாதத்தை நாய்க்குப்போடு. அது சாப்பிடட்டும். பாவம். ரொம்ப நாழியா வாசல்லேயே உக்காந்திருக்கு, ரொம்பப் பசி போலிருக்கு...''

அம்மா கொண்டுவந்து போட்டதும் ஒரு பாய்ச்சலாய்ப் பாய்ந்துவந்து சாதத்தைச் சாப்பிடும் நாயையே பார்ப்பார்.

''இந்த சாதத்துக்கு, இதைவிட உசந்த உபயோகமே இல்லை... பார்வதி'' என்று மனைவியிடம் சொல்கிற போதே கண்ணீர் பெருகி விடும். மேல்துண்டால் கண்களை ஒற்றிக் கொள்வார்.

''ஏம்பா அழறே?'' என்று மடியில் உட்கார்ந்து தான் கேட்டது நினைவுக்கு வந்தது கல்யாணிக்கு.''

''அப்பாவுக்கு ரொம்ப இரக்க சுபாவம்...''

கல்யாணி சொன்னதை ஆமோதித்தான் தேவராஜன். மூத்த பிள்ளை அவன். கல்கத்தாவில் ஒரு தனியார் நிறுவனத்தில் உயர் பதவி வகிப்பவன். அடுத்த வருஷம் ஓய்வு பெறும் வயது. அடுத்து சரசுவதி. பாட்னாவில் பிள்ளையுடன் இருக்கிறாள். கணவன் ஓய்வு பெற்று மூன்றாண்டுகள் ஆகிவிட்டன. அடுத்து வரிசையாய் இராமன், சுந்தரம், வாசுதேவன் என்று மூன்று பிள்ளைகள். எல்லாருக்கும் நல்ல 'உத்தியோகம்.' பின்னர் சரோஜா. பம்பாயில் இந்தியன்

ஆயில் கார்ப்பொரேஷனில் வேலை பார்க்கிறாள். அவள் கணவனுக்கும் அதில் வேலை. கடைசியாய்க் கல்யாணி. ஹைதராபாத்தில் கல்லூரிப் பேராசிரியரின் மனைவி.

''அப்பாவுக்கு ரொம்ப கன்டென்டட் லைஃப்... திருப்தியா வாழ்ந்தார்... எல்லாரும் நன்னா இருக்கிறபோது போறார்... ஹி லிவ்டு எஃபுல் லைஃப்...''

''வாஸ்த்துவம்... அம்மா இல்லேங்கறதைத் தவிர ஒரு குறையில்லே அவருக்கு... ரொம்ப டிஸிப்ளின்ட் வாழ்க்கை அவருது...'' என்றான் இராமன். வாசுதேவன் மட்டும் சம்மதிக்கவில்லை.

''கண் தெரியாமப் போயிடுத்து... கண் தெரியாமக் கஷ்டப்படறாப்பலே என்ன பாவம் பண்ணினார் அப்பா?...'' அதை நெனைச்சாத்தான் தாங்கல்லை...''

பாதி பேசிக் கொண்டிருந்த போதே கல்யாணியின் குரல் உடைந்தது. அப்பா மாதிரி அவளும் உணர்ச்சி பூர்வமான பெண்.

ஆமாம். அப்பாவுக்கு முப்பது வருஷமாய்க் கண் தெரியவில்லை. வேலையிலிருந்து ஓய்வு பெற்ற சில மாதங்களில் கண் பார்வை மங்கத் தொடங்கிற்று. மாலை வந்துவிட்டாலே இடறத் தொடங்குவார். இரவில் அரைப் பார்வை, கால் பார்வை என்று நாளடைவில் பார்வை முழுவதுமாய் அற்றுப் போயிற்று.

பிள்ளைகள் பதறினார்கள். பெண்கள் தவித்தார்கள். அம்மா அழுதாள்.

''எனக்கு வைத்தியம் பார்த்துக் கொள்ள இஷ்டமில்லை. இப்படியே இருந்துட்டுப் போறேன். பழகின வீடுதான். நானே நடமாட முடியும்.''

அப்பா செய்து காட்டினார். சுவரைப் பிடித்துக் கொண்டு கிணற்றடிக்குப் போனார். கணுக்கால் வரை, ஒரு நூலளவு விடாமல் கால் அலம்பிக் கொண்டார். சாப்பாட்டு அறைக்கு வந்து தன் இடத்தில் அமர்ந்து கொண்டார். சிந்தாமல் சிதறாமல் சாப்பிட்டார். பூஜை அறையில், இலக்குத் தவறாமல் பூக்களை சுவாமி படத்தில் அர்ச்சித்தார். கால்நடை யோசையை வைத்தே யார் வருகிறார்கள் என்று துல்லியமாய்க் கூறினார். விழுந்த ஓசையைக் கேட்டே. கீழே விழுந்தது நாலணாவா, எட்டணாவா என்று சரியாகச் சொன்னார். குரலின் ஏற்றத் தாழ்வை வைத்தே மன ஓட்டத்தைக் கச்சிதமாகக் கணித்தார்.

கண்களை விட்டுப் போன பார்வை, மற்ற அங்கங் களுக்குள் அவற்றின் சக்தியாய்ப் பரிணமித்தது மாதிரி, மற்ற அங்கங்கள் மகா தீட்சண்யமாய்ச் செயலாற்றின.

பார்த்தவர்கள் பிரமித்தாலும், டாக்டரிடம் காட்டிக் கொள்ளாமல் பிடிவாதம் பிடிப்பதை ஏற்கவில்லை.

'அப்பா... இப்பல்லாம் சையின்ஸ் ரொம்ப டெவலப் ஆயிடுத்துப்பா... உங்களுக்கு ரொம்ப ஈஸியாக் குணப் படுத்தலாம்... கல்கத்தாவுலே பெரிய ஸ்பெஷலிஸ்ட்கள் இருக்காப்பா... மெட்ராஸ்லே டாக்டர் ராம்நாத், உலகத்தி லேயே பெரிய கண் டாக்டர்னு பேர் வாங்கினவர்... அவரை எனக்கு நன்னாத் தெரியும். அவர் கிட்டக் காட்டலாம்பா... நான் உங்களைப் பத்திச் சொன்னப்போ, எப்ப வேணும்னாலும் அழைச்சிண்டு வரச் சொன்னாருப்பா...''

பிள்ளை தேவராஜன் அழாத குறையாய்க் கெஞ்சினான். மற்றபிள்ளைகள் ஆர்வத்துடன் அப்பாவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அழுகையோடு அம்மா

கையைப் பிசைந்துகொண்டு நின்றாள். சம்மதிக்க வேண்டுமே என்ற கவலை அவள் முகத்தில் பரபரத்தது.

சற்று நேரம் மௌனமாய், ஒளியிழந்த கண்களால் அந்தரவானத்தில், ஒளியைத் தேடுகிறவர் மாதிரிப் பார்த்தார். ஒருவாரத் தாடி, மீசை முகத்திற்கு அலாதி சோபையளித்தது. ஆதுரத்துடன் தேவராஜனின் கையைத் துழாவிப் பற்றிக் கொண்டார்.

''... தேவா!... நீ சொல்றது வாஸ்த்துவம்... இருந்தாலும் எனக்கு வைத்தியம் வேண்டாம்... இப்படியே இருந்துட்டுப் போறேன்... அதுதான் சரின்னு தோணுறது... ஏதோ காரணத்துக்குத்தான் கண்பார்வை போயிருக்கு... இதை நான் அனுபவிச்சுட்டுப் போறேன்... இதிலே எனக்குத் துளிக்கூடக் கஷ்டமோ வருத்தமோ இல்லை...''

அவன் கைகளைத் தட்டிச் சமாதானப்படுத்தினவர் கட்டிலில் படுத்துக் கொண்டார். பார்வை கூரை முகட்டை வெறித்தது. முகம் கண்டிப்பைக் காட்டிற்று.

பிறகு யாரும் அவரிடம் அதுபற்றிப் பேசுவதில்லை. அவருக்குக் கண் பார்வையில்லை என்கிறதே மறந்து போய் விட்ட மாதிரி நடந்து கொண்டார்கள்.

அம்மா மட்டும் அடிக்கடி, அப்பா காதில் கேட்கா வண்ணம் புலம்புவாள். புலம்பிக் கொண்டே ஒரு நாள் கண்களை மூடினாள்.

'அப்பா ஏன் வைத்தியம் பண்ணிக்க மாட்டேன்றார்?''

சரசுவதியின் நியாயமான கேள்வியை வாசுதேவன் ஆமோதித்தான்.

''அப்பாவுக்குப் பிடிவாதம் அதிகம்...'' என்று சுந்தரம் சொன்னதை மற்றவர்கள் ரசித்ததாகத் தெரியவில்லை.

அந்தப் பெட்டியில் அப்படி என்னதான் இருக்கும் 'என் மகளை வரை யாரும் பார்க்கக்கூடாது' என்று சொல்வானேன்? பிறர் துயரம் தாங்காது கண்கலங்கும் அப்பாவின் வாழ்க்கையில் அப்படியென்ன ரகசியம் இருக்கும்? அம்மாகூட அந்தப் பெட்டியில் என்ன இருக்கிறது என்று தெரியாது என்றுதானே சொன்னாள்? ஏதாவது வைரம், வைடூர்யம் என்று உள்ளே இருக்குமோ? அப்பாவுக்குப் பணஆசையும் கிடையாதே!

பரபரப்புடன் தேவராஜன் அந்தப் பெட்டியைத் திறக்கலானான். அனைவரும் சுற்றி நின்று கொண்டு, பேரார்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தனர்.

'கிறீச்' என்ற ஒலியுடன் பெட்டி திறந்தது.

அகலவாட்டில் மடிக்கப்பட்டிருந்த வீட்டுப்பத்திரங்கள், சில கடிதங்கள். மக்கிப் போன கவரில் பென்சிலால் எழுதப்பட்ட கடிதங்கள். அதன் பின்னர், திரும்பி வந்த இரண்டு கடிதங்கள். இரண்டும் அப்பா 'கற்பகம்' என்ற பெயருள்ள பெண்ணுக்கு எழுதி 'விலாசதார் இல்லை' என்ற குறிப்புடன் திரும்பி வந்த கடிதங்கள். எல்லாம் ஐம்பது அறுபது வருஷங்களுக்குமுன் எழுதப்பட்ட கடிதங்கள். ஆங்கிலேய அரசரின் படம் போட்ட தபால் தலைகள். தபால் வில்லைகள். மக்கிப்போன காகிதங்கள். எல்லாவற்றிற்கும் கீழே நிறம் புரியாத ஒரு கவரினுள் ஒரு பழைய புகைப்படம். மஞ்சள் குளித்த புகைப்படம். 'போட்டோவுக்கு நிற்கிறேன். என்னை ஓர் அந்நியன் கண் கொட்டாமல் பார்க்கிறான்' என்கிற அச்சமும் எச்சரிக்கை உணர்வும் மலிந்த முகபாவத்துடன், கழுத்துவரை இழுத்துப் போர்த்திய ஒரு பெண்ணின் படம். தகங்கிப் போன இரண்டு தங்க வளையல்கள்.

''என்ன இதெல்லாம்?... யாரோட போட்டோ அது? வளையலா?... எத்தனை பவுன்?...''

மூச்சைப் பிடித்துக் கொண்டு கல்யாணி கேட்டாள். வாசுதேவனும், சரோஜாவும் ''யாரண்ணா, இந்த கற்பகம்?'' என்று தேவராஜனைக் கேட்க, மற்ற பிள்ளைகள், தவிப்புடன் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

மெதுவாய் அந்தப் புகைப்படத்தை எடுத்தான் தேவ ராஜன். அழுந்தப் பிடித்தால் தூளாகிவிடும் போல் இருந்த படத்தைக் கூர்ந்து பார்த்தான். மற்ற எல்லாரும் முண்டியடித்துக் கொண்டு பார்த்தார்கள்.

''யாரு கற்பகம்?''

சரசுவதியையும் சுந்தரத்தையும் கூர்ந்து பார்த்த தேவராஜன், ஆமோதிப்புடன் அவர்கள் பார்வையின் கேள்விக்குப் பதிலாய்த் தலையசைத்தான்.

''அப்பாவோட ஃபர்ஸ்ட் வொய்ஃப்.''

''பெரியம்மாவா?...''

''அவளா?...''

எல்லா வினாக்களுக்கும் ஒரே பதிலாய்த் தலையசைத் தான்.

''உனக்கு எப்பிடிண்ணா, அவ பேரு தெரியும்?''

''அம்மா ஒரு முறை வாய் தவறிச் சொல்லியிருக்கா... அப்பாகிட்ட மூச்சு விட்டுடாதேடா... என்னைக் கொன்னுடுவார் அப்பிடின்னு சொன்னா...''

எல்லாரும் பிரமிப்புடன் உட்கார்ந்திருந்தனர்.

''கடிதங்களையெல்லாம் படியேன்...'' என்று சரசுவதி பரபரக்க, தேவராஜன் ஒவ்வொன்றாய்ப் படிக்கலானான்.

கடிதத்தின் தேதியைப் பார்த்து, ''இது நான் பொறக்கற துக்கு முன்னாலே, பெரியம்மாவோட அப்பா, நம்ம தாத்தா

வுக்கு அதான் அப்பாவோட அப்பாவுக்கு - எழுதின கடிதம்...'' என்ற தேவராஜன் படிக்கலானான்.

''சம்பந்தி அவர்களுக்குக் கல்யாண சாஸ்திரி அநேக கோடி நமஸ்காரம் செய்து தண்டனிட்டு எழுதிக் கொள்வது. தங்கள் கிருஹத்தில் எல்லாரும் சௌக்யம் என்று நம்பு கிறேன். தங்களுக்குப் பல கடிதாசுகள் போட்டுத் தொந்தரை செய்துவிட்டேன். தேவரீர் பெரிய மனசு பண்ணி க்ஷமிக்க வேண்டும். இப்பவும் சௌ. கற்பகம் அழுத கண்ணீரும் சிந்திய மூக்குமாய் இருக்கிறாள். சுவாமி படத்தின் முன்னால் அமர்ந்து சதா அழுது கொண்டிருக்கிறாள். பெரிய மனசு பண்ணி அவளை ஏற்றுக் கொள்ளவேண்டும். அவள் செய்தது மஹாத்தப்புதான், இருந்தாலும் சின்னக் குழந்தை அவள்.

தன் அண்ணாவின் கல்யாணத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆசையில், தங்கள் உத்தரவையும் மீறி பிறந்தகம் வந்துவிட்டாள். கல்யாணம் ஆனபின், புக்ககம் தான் எல்லாம், பிறந்தவீடு அன்னியம்தான் என்று புரிந்து கொள்ளாத வயசு.

கற்பகம் கல்யாணத்தின் போது பத்துப்பவுன் இரட்டை வடம் சங்கிலி போடுவதாகச் சொல்லி, வசதிப்படாததால் பிறகு போடுவதாகச் சொன்னேன். தாங்களும் பெரிய மனசு பண்ணி, கற்பகத்தை ஏற்றுக்கொண்டீர்கள். அதற்குப்பின் குடும்பத்தில் அடுத்தடுத்து வந்த கஷ்டங்களால் என்னால் செய்து போடமுடியவில்லை. தவறு என்னுடையதுதான்.

அந்தக் கோபத்தினால்தான் என் பிள்ளையின் கல்யாணத் திற்கு வரமுடியாது, கற்பகத்தையும் மாப்பிள்ளையையும் கூட அனுப்ப முடியாது என்று தாங்கள் கூறினீர்கள். தவறு என்று நான் சொல்லவில்லை. வார்த்தை தவறிய என்னைத்

தண்டிக்கத் தங்களுக்குச் சகல உரிமையும் இருக்கிறது. இந்தத் தர்ம நியாயங்களை அறியாத சிறு பெண் கற்பகம், அண்ணாவின் கல்யாணத்திற்கு வரவேண்டும் என்கிற ஆசையால், தங்கள் உத்தரவை மீறிப் பிறந்தகம் வந்து விட்டாள்.

அந்தக் கோபத்தால், தாங்கள் கற்பகத்தை ஏற்றுக் கொள்ள முடியாது என்று கூறிவிட்டீர்கள். நான் பரம ஏழை. என்ன செய்வேன்? என் ஓட்டு வீட்டை விற்றாவது பத்துபவுன் நகையைப் போட்டுவிடுகிறேன். எப்படியாவது என் பெண்ணை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று தங்களது பாதாரவிந்தங்களில் விழுந்து கதறிக் கேட்டுக் கொள்கிறேன். இப்படிக்கு, கல்யாண சாஸ்திரி... பி.கு: தாங்கள் கற்பகத்தை ஏற்றுக் கொள்ளாவிட்டால், பாழுங்கிணற்றில் அவளைத் தள்ளி விட்டுவிட்டு, என் குடும்பத்துடன் நானும் விழுவதைத் தவிர, வேறு வழியில்லை...''

மயான அமைதி நிலவிற்று.

எல்லாரும் வாய்திறக்கத் தெரியாதவர்கள் மாதிரி, அதிர்ந்து போய் அமர்ந்திருந்தார்கள்.

''அப்பாவா இப்படிப் பண்ணினார்?.... அப்பாவாலே எப்படி இப்படி நடந்துக்க முடிஞ்சுது?... இப்படி ஓர் அநியாயம் நம்மாத்துலே நடந்திருக்கா?...''

சரசுவதி புலம்பினாள். பதில் பேசாமல் எல்லாரும் தேவராஜனையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

''மத்த கடிதங்களையும் படி...''

ஒவ்வொன்றாய் எடுத்துப் படித்தான், தேவராஜன். எல்லாம் கல்யாண சாஸ்திரி எழுதிய கெஞ்சல் கடிதங்கள். படித்தாலே மனம் துடித்துப் போயிற்று.

அப்பாவா இப்படிச் செய்தார்? கருணையும் இரக்கமும் மலிந்த அப்பாவா இதற்கு உடந்தை? அஸ்திவாரம் கலைந்த கோபுரம் கலகலக்கிற மாதிரி, அப்பாவைப் பற்றிய உயர்ந்த அபிப்ராயம் சரியத் தொடங்கிற்று.

''இதுவந்து பெரியம்மாவே தன் கைப்பட அப்பாவுக்கு எழுதின கடிதம்'' என்று ஒரு கடிதத்தைப் பிரித்தான் தேவராஜன்.

பென்சிலால் குண்டு குண்டாய் எழுதப்பட்ட கடிதம்.

''... நான் அபலை. எதுவும் படிக்காதவள். அண்ணாவின் கல்யாணத்தைப் பார்க்கும் ஆசையில் அப்பாவின் பேச்சை மீறி பிறந்த வீட்டிற்கு வந்துவிட்டேன். தவறுதான். அப்போது அது தெரியவில்லை. தீக்ருச்சியால், புடைவையைப் பற்றவைத்துக் கொள்கிற மாதிரி, இவ்வளவு பெரிய தீயாய் அது ஆகிவிடும் என்று எனக்குத் தெரியாது.

... தாங்கள் பெரியவர். காலேஜுக்குப் போய்ப் படித்தவர். இந்த அபலை செய்த பிழையை மன்னிக்கக் கூடாதா? என்னை வீட்டிற்குள் கூடச் சேர்க்க வேண்டாம். புழக்கடையில் ஒரு மூலையிலாவது உட்கார அனுமதிக்கக் கூடாதா? தாங்களே நிராகரித்தால், பொம்மனாட்டி அதிலும் ஓர் அட்சரம் கூட படிக்காத அபலை, எங்கே போவேன்? குளம், குட்டையில் மிதப்பதைத் தவிர வேறு எனக்கு என்ன வழி?... அடியாள் கற்பகம்.''

படிக்கிற போதே தேவராஜன் குரல் உடைந்தது. கண்களில் கண்ணீர் பொங்கிற்று.

கல்யாணி கேவிக்கேவி அழத் தொடங்கினாள்.

''இதைப் படிச்சபிறகுமா அப்பா மனசு மாறல்லை? அப்பாவா இப்படி?... எப்படி இவ்வளவு கொடூரமா அப்பா இருந்தார்...? எப்படி இருக்க முடிஞ்சது?...''

சரோஜா புலம்பினாள்.

குற்றவாளிகளைப் போல் மற்ற பிள்ளைகள் தலைகுனிந்து அமர்ந்து கொண்டிருந்தனர்.

அப்பா என்னும் மலைச்சிகரம் உடைந்து நொறுங்கி மண்ணோடு மண்ணாய், அவர்கள் மனத்துக்குள் சிதறிக் கொண்டிருந்தது.

''இல்லை... இல்லை. அப்பா மேலே தவறில்லை'' என்று உரத்துக் கூவிய தேவராஜன், அப்பா எழுதித் திரும்பி வந்த கடிதத்தைக் காண்பித்தான்.

'விலாசதார் இல்லை' என்ற குறிப்புடன் திரும்பி வந்த கடிதம்.

''சௌ. கற்பகத்திற்கு அநேக ஆசீர்வாதம். எல்லாவற்றை யும் பார்த்து நான் அதிர்ச்சியடைந்தேன்... நான் வயசில் உன்னைவிடப் பெரியவன். இருந்தாலும் உன் மன்னிப்பைக் கோருகிறேன்...

சுவாமி சத்தியமாய்ச் சொல்லுகிறேன், எதுவும் எனக்குத் தெரியாது. உன் அப்பா எழுதின கடிதங்களோ, நீ எழுதின கடிதங்களோ எதுவுமே எனக்குத் தெரியாது. என் அப்பா எல்லாவற்றையும் மறைத்து விட்டார்.

உன் அண்ணா கல்யாணத்திற்கு நீ போனாய். அப்பா சொல்லியும் நீ மற்ற சொந்தக்காரர்களுடன் போனாய். அதை நான் பெரிதாய் எடுத்துக் கொள்ளவில்லை. அப்பா இவ்வளவு கோபிப்பார் என்று நான் நினைக்கவில்லை.

'ஏம்பா கற்பகம் இன்னும் வரல்லை?... நான் போய் அழைச்சிண்டு வந்துடவா?' என்று அப்பாவிடம் கேட்டேன். 'நீ போகப்படாது. நான் போய்க் கூட்டிண்டு வரேன்' என்று போனவர் மறுநாள் திரும்பி வந்தார். வந்தவர் கொல்லைப்

பாதையாகச் சென்று கிணற்றில் இரண்டு வாளியை இழுத்துத் தலையில் கொட்டிக் கொண்டார். என்னையும் வரச் சொல்லித் தலையில் இரண்டு வாளித் தண்ணீரைக் கொட்டினார். 'கற்பகத்துக்கு ஸ்நானத்தைப் பண்ணு...' என்று கத்தினார்.

'பெண்ணை அனுப்ப மாட்டாராம். நாமள்ளாம் காட்டு மிராண்டிகளாம். அவன் பெண்ணைப் பாடாய்ப் படுத்தறமாம். அவளைப் படிக்க வச்சு வேலைக்கு அனுப்பப் போறானாம்... வாயிலே வராததையெல்லாம் பேசறான்'' என்றார்.

எனக்கு எதுவுமே புரியவில்லை. அப்பாவை மீறிச் சிந்திக்கக் கூடத் தெரியாது எனக்கு.

அதே வேகத்தில் பார்வதியை எனக்குத் திருமணம் செய்வித்தார். கல்யாணமானவுடனேயே வேலை மாற்றலாகி நான் அசலூருக்குப் போய் விட்டேன். அப்பா கூறியது எல்லாமே நிஜம் என்று நம்பிக் கொண்டிருந்தேன்.

ஆனால் சில வருஷங்கள் கழித்து அப்பா காலமானதும் பழைய கடிதங்களைப் படித்துத் துடித்துப் போனேன்.

அப்பா எல்லா விஷயத்தையும் மறைத்து, தன் ஈகோவுக்கு என்னையும் உன்னையும் இரையாக்கி விட்டார்.

என் தவற்றை உணர்கிறேன். பார்வதி நீ நல்லவள். உடனே புறப்பட்டுவா. நாம் எல்லாரும் ஒன்றாக இருக்கலாம்... ஆசீர்வாதம்.''

தேவராஜன் படித்து முடித்ததும் மற்றவர்கள் முகத்தில் பிரமிப்பு பரவிற்று.

''பின்னே ஏன் வரல்லை....?''

''கடிதாசுதான் போய்ச் சேரவே இல்லையே? திரும்பி வந்துடுத்தே?''

''அப்பா நேர்லே போய்ப் பாத்திருக்கலாம். பாவம்டீ பெரியம்மா.''

சரசுவதியின் கூற்றை அனைவரும் ஆமோதித்தனர்.

''உள்ளே இன்னொரு பேப்பர் இருக்கு. அதிலே என்னமோ எழுதியிருக்கு'' என்று அவசர அவுசரமாய் எடுத்தான் தேவராஜன்.

அது அப்பாவின் எழுத்து, கண் பார்வை அநேகமாய்ப் போன பின்னர் எழுத்துகளைக் கோத்துக் கோத்து எழுதிய டைரி...

''... எனக்குக் கண்பார்வை போனது நியாயம் தான். சுவாமி யாரையும் அனாவசியமாகத் தண்டிப்பதே இல்லை. அவனது தீர்ப்பில் நியாயத்தைத் தவிர, தர்மத்தைத் தவிர வேறெதுவும் இருப்பதில்லை.

கற்பகத்துக்கு இழைக்கப்பட்ட கொடுமை அதீதமானது. எல்லா தர்மங்களையும் மீறியது. அப்பா என்னைத் தன் ஈகோவிற்குப் பலி வாங்கி விட்டார். அந்தப் பெண்ணை அப்படி மறுப்பது என்ன நியாயம்? ஆண் என்பதால், எதுவேண்டுமானாலும் செய்து விடுவதா? இது அக்கிரமம் இல்லையா? எனக்குத் தெரியாது என்றாலும் பொறுப்பு என்னுடையதுதான். அந்த அபலையைக் கண்ணீர் விடச் செய்த மகாபாவி நான். எனக்கு எந்த தண்டனையும் தகும். கற்பகத்தை மீண்டும் சேர்த்துக் கொள்ளக் கடிதம் எழுதினேன். அது இரண்டு முறை திரும்ப வந்து விட்டது. பிறகு நானே நேரில் சென்றேன். அவள் அப்பா காலமாகி விட்டதாகவும், அவர்கள் அவமானம் தாங்காமல் பட்டணத்திற்கு, யாரோ சொந்தக்காரர்களை நம்பிப் போய்விட்டார்கள் என்றும் அறிந்து துடித்துப் போனேன்.

கற்பகம் என்ன பாடுபடுகிறாளோ? எவ்வளவு அவமானப்படுகிறாளோ? எல்லாவற்றிற்கும் காரண கர்த்தா நானல்லவா? என் புத்தியில்லாத்தனம் அல்லவா அவளை இவ்வளவு பாடுபடுத்திற்று? அப்பாவை மீறிச் செயல் பட்டிருக்க வேண்டாமா, நான்?

அந்தப் பாவம் தான் என் கண்களைப் போக்கிற்று. கற்பகத்தின் வாழ்க்கையை இருட்டாக்கிய நான், இருளில் தடுமாறுவதுதான் நியாயம். தர்மம். என் தவற்றுக்கு அதுதான் சரியான தண்டனை. நான் வைத்தியம் செய்து கொள்ளப் போவதில்லை. தண்டனையை நான் அனுபவிப்பேன்.

ஆண்டவனே! எனக்கு நீண்ட ஆயுளைக் கொடு. நான் கண் தெரியாமல் நீண்ட நாள் இருந்து என் பாவத்தைக் கழுவ வேண்டும்.. கற்பகம்! என்னை மன்னிச்சுடு.. தயவு செய்து என்னை மன்னிச்சுடு.. எவ்வளவு சாபம் வேணும்னாலும் எனக்குக் கொடு.. நான் இருந்து எல்லாத்தையும் அனுபவிச்சுடறேன்..

என் குழந்தைகளை நான் பண்ணின பாவம் பாதிக்கக் கூடாது. அதுக்காக நான் நீண்ட நாள் இருந்து, கண் தெரியாமக் கஷ்டப்படணும்...''

கிறுக்கலாய் கோத்துக் கோத்து எழுதியிருந்தார்.

ஏழு 'குழந்தைகளும்' மகாமனிதனாக வாழ்ந்து மறைந்த தங்கள் தந்தை மறைந்த தினத்தில் அழுததைவிட, அதிகமாய் விக்கி அழலானார்கள்.

●

# சரயு

ஜெயா வெங்கட்ராமன்

அவளுக்கு ஏன் இத்தனை கோபம்? நிலை கொள்ளாமல் தவிக்கிறாள். ஒரு புறம் அடக்க முடியாத துக்கம், வேதனை. அவள் வேதனைக்கும், துக்கத்திற்கும் காரணம் உண்டு. கடைசியில் அந்தப் புண்ணிய புருஷன் -

உலகம் உள்ள அளவும் வணங்கப்படப் போகும் ஓர் அவதாரம் -

அப்படிப்பட்ட ஒரு புனிதனின் முடிவு அவளால் ஏற்பட வேண்டுமா?

அதுதான் அவள் வேதனையின் காரணம்.

உலகமே ஒரு முடிவுக்கு வந்ததுபோல அப்படி ஒரு சீற்றம்.

மண்ணில் உதித்தவை எல்லாம் மண்ணை விட்டு அகலாமல் ஒரு நாள் மண்ணுக்குள்ளேயே முடிந்துபோக வேண்டும் என்ற அசைக்க முடியாத, மறுக்க முடியாத நியதியை நினைவூட்டுவதாகவும் இருக்கலாமல்லவா?

நான் இங்கே பிறந்தேன் -

எனவே என் முடிவும் பூமியிலேயே நிகழ வேண்டும் என்பதை உலகுக்கு உணர்த்தவா?

பூமித்தாய் பெற்ற பிள்ளைகளில் அவளும் ஒருத்தியல்லவா? இழப்பு அவளுக்கு மட்டும் இல்லையா?

மரம், செடி கொடிகள், புல் பூண்டுகள், புழு, பூச்சிகள் உட்பட பிறந்ததும் மண்ணில் -

முடிவதும் மண்ணில்தான். கோபம் கொண்ட கற்பரசி கடைசியில் பூமித் தாய்க்குள்ளேயே அடக்கம் ஆனாள்.

அவள் மண்ணின் மகள் -

விரக்தி மேலிட இனிமேல் எதற்காக, யாருக்காக வாழ வேண்டும் என்று பூமியைப் பிளந்து கொண்டு போனாள் மைதிலி.

மிதிலை அரசன் ஜனகனின் ஒரே செல்வமகள் மாபெரும் தவத்தினால் தங்கக் கலப்பையால் உழும்போது ஒரு பெட்டியில் கிடைத்தவள். அவள் பிறப்பிற்குப் பூமியைத் தவிர வேறு யாரும் சொந்தம் கொண்டாட முடியாதென்று மண்ணுக்குள்ளேயே போனாளா? ஏன்? எப்படி என்று ஆத்மவிசாரணை செய்யும் நேரம் இதுவன்றுதான்.

இலங்கேஸ்வரனின் தனிமைச் சிறையில் வாழ்வின் வசந்தங்களைத் தொலைத்தாகிவிட்டது. குற்றுயிரும் குறை உயிருமாக, நொந்து போய் வந்தவளை,

ஊருக்கும் உலகுக்கும் புனிதமானவள் என்று நிரூபிக்க ஓர் அக்னிப் பிரவேசம் -

பட்டாபிஷேகம் முடிந்த பின்பாவது நிம்மதியுண்டா?

யாரோ பெயர் தெரியாத, முகந்தெரியாத ஒரு குடிமகன் சொன்னான் -

எந்த விதமான ஆதாரமும் இல்லாமல், நாக்கில் நரம்பில்லாமல் ஒரு பத்தினியைக் குறை சொன்னான் என்பதற் காக -

நிறைமாத கர்ப்பிணியை -

எந்த விதமான ஆதரவும் இல்லாமல் மீண்டும் ஒரு வனவாசத்திற்கு அனுப்ப எப்படி மனம் வந்தது? கடமை, நீதி என்று வரும்போது மனங்கூடக் கல்லாகி விடுமோ? யாரைச் சந்தேகித்தாலும், வாழ்வில் எந்தச் சுவையையுமே கண்டறியாத ஓர் உத்தமியையா சந்தேகிப்பது?

ரகுராமா!

அவளை எத்தனை முறை அக்னிப் பிரவேசம் செய்யச் சொல்லுவாய்? அக்னி பகவானுக்கே வெறுப்பு வருமள வுக்கு -

அவனுக்கே கோபம் வரும் அளவுக்கு. இரண்டாவது அக்னிப் பிரவேசம் செய்யச் சொல்லுவாய்.

உனக்கென்று ஆயிரம் நியதிகள் இருக்கலாம். அதற்காகப் பலியிட அவள்தான் கிடைத்தாளா?

சரயுவின் வெள்ளத்தோடு போட்டியிடும் அளவிலான மனக் குமுறலுடன் சரயு நதிக்கரைக்கு இளவலோடு வந்தடைந்தான் அந்த அவதார புருஷன்.

இனி என்ன இருக்கிறது?

எல்லாமே முடிந்து போய் விட்டன.

எனக்கும் ஒரு முடிவு வேண்டுமல்லவா?

எத்தனை எத்தனை போராட்டங்கள்!

மண்ணில் உதித்ததற்கான வேலை முடிவடைந்து விட்டது. இனி எஞ்சியது என்ன?

''லக்ஷ்மணா! முதலிலிருந்து கடைசி வரை என்னுடன் இருப்பவன் நீ ஒருவன் மட்டுமே! என் கையில் இருக்கும்

கோதண்டம் போல - தம்பி! உனக்கென்று தனியாக ஆசை என்று எதுவுமே இருந்ததில்லையா? நீ எவ்வளவு பெரிய தியாகி, உத்தமன்? நாம் இருவரும் ஒரே வயிற்றில் பிறக்காமல் இருந்தும் கூட என்மீது உனக்கென்ன அப்படிப்பட்ட கண்மூடித்தனமான பாசம்? அல்லது பக்தியா? குருகுல வாசம் முதல் இந்த நிமிடம் வரை நீ ஒருவன்தான் என்னை விட்டுப் பிரியாதவன்.''

''அண்ணா! நிழல் என்றாவது நிஜத்தைவிட்டுப் பிரியுமா? நிழல் போல உங்களைத் தொடர்வதை விட எனக்கு வேறு பேரின்பம் என்ன இருக்க முடியும்? நீங்கள் இல்லாத நான் ஒளியில்லாத வெறும் விளக்கு மட்டுமே! இனி வரப் போகும் தலைமுறைகள் நம்மை இராம - லட்சுமணன் என்றுதான் அழைக்கப் போகிறார்களே தவிர, லட்சுமணன் என்ற என் பெயருக்குத் தனியாக என்ன மரியாதை? ரகுகுல வம்சத்தின் சூரியன் நீங்கள். கண்ணைக் கூசும் உங்கள் ஒளியின் இரவல் நான். எனவே நீங்களே இல்லாத இந்தப் பூமியில் எனக்கு மட்டும் என்ன வேலை?''

''உண்மைதான் லட்சுமணா! நீ என் நிழல்தான். தாயே கட்டளையிட, தந்தை வழிமொழிய, வனவாசம் போகச் சொன்னது என்னை மட்டும்தான். ஆனால் நீ நிழலாக இல்லாவிட்டால் நீ மட்டும் ஏன் என்னைத் தொடர்வாய்? இளவலே! என்னைப் போலவே, எனக்குத் திருமணம் ஆனபோதுதானே உனக்கும் திருமணம் நடந்தது? நான் மட்டும் மனைவியோடு வனவாசம் புகுந்த போது, நீ மட்டும் இனியவள், உனது புதிய மனைவி ஊர்மிளையைப் பிரிந்து வந்தாயே, அதற்கு உனக்கு எப்படி மனம் வந்தது? உன் அண்ணியைவிட எனக்கு ஊர்மிளைதான் உயர்ந்தவளாகப் படுகிறாள். உன்னோடு அவள் சேர்ந்து வாழ்ந்த நாள்கள் எத்தனை? உனக்காக அவள் அத்தனையும் தியாகம் செய்து விட்டாள்.

''சித்திரகூடத்தில் நீ எங்களுக்குக் காவலாக இருந்தாய். அப்போது தானே மிகக்கசப்பான, நடக்கக்கூடாத நிகழ்ச்சி நடந்தது? பொய் மானுக்காக சீதை ஆசைப்பட, அதைத் தேடிக் கொண்டு நான்போக, மாயாவி மாரீசனின் குரல்கேட்டு, சீதையின் வற்புறுத்தலால் நீ அவளை விட்டுச் சென்றாய்.

''அப்போதே உன் மனத்தில் ஏதோ கெட்ட சகுனம் தோன்றியதால் நீ கோடு போட்டுவிட்டு அதைத் தாண்டிப் போக வேண்டாம் என்று சீதையிடம் சொல்லிவிட்டுச் சென்றாய். எவ்வளவு பெரியவர்களாக இருந்தாலும் விதியிலிருந்து தப்ப முடியாமற் போய்விட்டது.''

லட்சுமண ரேகையைச் சீதை தாண்டினாள். இராவணன் சிறை எடுத்தான். விளைவுகளைச் சந்தித்துத்தானே ஆக வேண்டும்?

இராமபிரானும், லட்சுமணனும் முழங்கால் அளவு நீரில் சரயுவில் நின்று கொண்டிருக்கிறார்கள். சரயு துடிக்கிறாள். ''எத்தனை எத்தனையோ பழிகளை வேண்டுமானாலும் நான் சுமக்கத் தயார். பிரபோ! கடைசியில் உன் முடிவுக்கு நான் காரணமாக வேண்டுமா?''

அண்ணலின் சிந்தனை நீண்டு கொண்டே போகிறது -

''தந்தை தவமிருந்து, புத்ரகாமேஷ்டி யாகத்தின் பலனால் பிறந்த பிள்ளை நான். விஸ்வாமித்திரனின் வேண்டுகோளுக் கிணங்க, தந்தை என்னைப் பிரிய நேர்ந்தது. பதினாறாவது வயதில் எனக்கு முடிசூட்டிப் பார்க்க ஆசைப்பட்டார். அவருக்கு நான் என்ன சுகத்தை அளித்தேன்? அவருடைய அந்த ஆசையே அவருடைய முடிவுக்குக் காரணமானது! என்னதான் ஊழ்வினை என்று சொன்னாலும், அவருக்குச்

செய்ய வேண்டிய கடமைகளைக் கூட நான் செய்ய இயலாமற் போய்விட்டதே! மூத்த மகனாக இருந்தும் அவருக்குக் கொள்ளி போட்டு, கடைசி யாத்திரைக்கு வழியனுப்பக் கூட எனக்குக் கொடுத்து வைக்கவில்லையே!

சீதையைத் தேடி அலையும் போது வாலியின் நட்பைப் பெற்று அவன் உதவியைப் பெற்றிருந்தால் சீதையை மிக எளிதாகப் பெற்றிருக்கலாமே! வாலியின் பெயரைக் கேட்டால் இராவணன் என்ன? ஈரேழு உலகங்களும் நடுங்கும். அதைத் தவிர்த்து மதங்க ரிஷியின் ஆஸ்ரமத்தில் தஞ்சம் புகுந்திருந்த சுக்ரீவனுக்கு இழந்த நாட்டையும், மனைவியையும் மீட்டுக் கொடுக்க, மறைந்திருந்து வாலியைக் கொல்ல நேரிட்டது. எதிரில் நின்று போர் செய்தால் தன் பலத்தில் பாதி வாலிக்குப் போய்விடும் என்பதாலன்றோ மறைந்திருந்து பாணத்தைப் போட்டுக் கொல்ல நேரிட்டது?

வாலி அடுத்தவனின் மனைவியை அபகரித்தவன். ஒருவனுக்கு ஒருத்தி என்று ஒழுக்க சீலனாக வாழ வேண்டிய பண்பை வலியுறுத்த அவதரித்த நான், பிறன் மனையாளைக் கவர்ந்தவனின் ஆதரவை நாடி என் மனைவியை மீட்டுக் கொடு என்று எப்படிக் கேட்பது? பழியைச் சுமந்தாலும் பாதகமில்லை என்றுதானே நான் மறைந்திருந்து வாலியைத் தாக்கினேன்? நான் மறைந்திருந்து தாக்குவேன் என்பதைக் கனவிலும் எதிர்பார்க்காத வாலி, பாணத்தில் என் பெயர் பொறித்திருந்ததைக் கண்டு அதிர்ந்து போனான். அயர்ச்சியும் ஏமாற்றமும் அடைந்தான். என் மனைவியை மீட்க இப்படி ஓர் அவப் பெயர் சுமக்க நேரிட்டதே? அவனுக்கு நான் என்ன ஆறுதல் சொல்ல முடிந்தது?''

சரயுவின் நீர்மட்டம் ஸ்ரீராமனின் மார்பைத் தொட்டது. ''ஹே ராமா! நான் எப்படி உன் உயிரைக் குடிப்பேன்?

பலரின் தாகத்தைப் போக்கப் படைக்கப்பட்ட நான், இப்போது என் தாகத்திற்கு உன் உயிரைக் குடிக்க நேரிட்டதே! பெற்ற தாயினும் சிறப்பாகச் சிலாகிக்கப்பட்ட நதியான நான் உன்னையும் சுமக்க வேண்டுமா?''

''தம்பி! நான் எவ்வளவுதான் வேதனைகளைச் சுமக்க நேரிட்டாலும் உன்னைப் போன்ற ஓர் இளவலும், தன்னலம் கருதாத, கண்மூடித்தனமான பக்தியும் கொண்ட அனுமனின் நினைவும் எனக்குப் பாலை நிலத்தில் சோலையாகவும், இருளில் ஓர் ஒளி விளக்காகவும் தென்படுகிறீர்கள். அனுமனின் உதவியில்லாவிட்டால் அந்த மாபெரும் யுத்தத்தில் அனைவரையும் முறியடித்து வெற்றி பெற்றிருக்க முடியுமா?''

''உண்மைதான் அண்ணா! காலம் உள்ள அளவும் உங்களை நினைக்கும் போதெல்லாம் அனுமனையும் நினைவு கொள்ளும்படி எதிர்காலச் சரித்திரத்தில் இடம் பெற்று விட்டார்.''

''யுத்தம் முடிந்து அசோக வனத்திலிருந்து சீதையை மீட்டுக் கொண்டு வந்தபோது சீதையை அக்னிப் பிரவேசம் செய்யப் பணித்தபோது அனுமனுக்குத் தான் எத்தனை கோபம்! அவனுக்கு என் மீது இருந்தது, குருட்டுத்தனமான, கண்மூடித்தனமான பக்தி இல்லை என்பதைக் காட்டவும், அவனுக்குச் சுயசிந்தனை உண்டு என்பதை நிரூபிக்கவும், 'அன்னை அனலில் அழிந்தால் நான் உன்னையும் கொல்லுவேன்' என்று எச்சரிக்கவும் தயங்கவில்லை.

''நான் வெறும் இராமனாக, சிறுவனாக இருந்தபோது என் பாதம் பட்டு அகலிகைக்குச் சாப விமோசனம் கொடுக்க முடிந்தது. தவறிப் போன அகலிகையைக் கல்லாகப் போகும்படி சபித்த கௌதம முனிவரின் சாபத்திற்கு என்னால் விமோசனம் கொடுக்க முடிந்தது. ஆனால் ஒரு பாவமும்

அறியாத அபலையான சீதையைத் தீக்குளிக்கச் செய்த செய்தியைக் கேட்டு அகலிகைக்குக் கூட என் பேரில் கோபமும் ஏற்பட்டிருக்கலாம்.

''அரசன் எவ்வழி, மக்கள் அவ்வழி. அரசன் நீதி தவறாது, நேர்மையுடன் அரசு புரிய வேண்டும் என்றால் முதலில் அவன் தன்னளவில் தூய்மையானவனாக, சொந்த பந்தம், விருப்பு வெறுப்பற்ற நேர்மையாளனாக இருக்க வேண்டும். அகலிகைக்குச் சாபவிமோசனம் கொடுத்தபோது நான் வெறும் சிறுவன் மட்டும்தான். சீதையைத் தீக்குளிக்கச் சொன்னபோதெல்லாம் நான் அயோத்தியின் பாரம்பரியம் மிக்க, பொறுப்பான சக்ரவர்த்தி. சத்யசீலன் அரிச்சந்திரனின் வம்சாவளியில் வந்தவன். எனவே சீதையை என் மனைவி என்று மாத்திரம் ஒரு போதும் நினைத்துப் பார்க்கவில்லை. அவள் சாதாரணப் பிரஜையாக இருந்திருந்தால் என் எண்ணங்கள் வேறாக இருந்திருக்கும். அவளுடைய துரதிருஷ்டமா, அல்லது எனது துரதிருஷ்டமா தெரியவில்லை, அவள் என் மனைவியானாள். எனவே அவளை நான் அக்னிப் பரீட்சைக்கு அனுப்ப வேண்டியதாகியது. என் முன்னோர் அரிச்சந்திரன், உண்மையை நிலை நாட்ட, சத்தியத்திற்காக, நாடு, நகரம், மனைவி, மகன், அத்தனையும் இழக்கவில்லையா? ஓ! அவன் அல்லவா மன்னன்!

''சீதை பூமியைப் போலப் பொறுமையானவள். அவள் பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டல்லவா? ஒரு முறை அவளைத் தீக்குளிக்கச் செய்தேன். இரண்டாவது முறை யாரோ ஒரு குடிமகன் பொறுப்பில்லாமல் சீதையைக் குறை சொன்னான் என்பதற்காக, நிறைமாத கர்ப்பிணியைக் காட்டில் விட்டு வருமாறு உன்னிடம் சொன்னேன். லவகுசர்களோடு மீண்டும் திரும்பி வரும்போது மீண்டும் அவளைத் தீக்குளிக்கச் சொன்னபோது -

''எத்தனை முறைதான் அவளைச் சீண்டிக் கொண்டே இருப்பது? கடைசியில் அவளது தன்மானம் வென்றது. பெண்மையைச் சீண்டிவிட்டு அவளை மீண்டும் மீண்டும் சோதிக்க நேர்ந்தால் அதன் முடிவு எதில் போய் முடியும் என்பதற்கு சீதையே சாட்சி. மண்ணின் புதல்வி மண்ணுக்குள் ளேயே போனாள். இனி அவளே போன பின்பு எனக்கு மட்டும் என்ன வேலை?''

சரயுவின் நீர்மட்டம் உயர்ந்து கொண்டே போனது. இராமனின் வாயை எட்டியது.

''ஹே ராமா! எனக்கு ஏன் இப்படி ஒரு தண்டனை? சீதாப் பிராட்டியைப் போல நீயும் பூமிக்குள் போயிருக்கலாமே! உன் முடிவுக்குக் கடைசியில் இந்த சரயுதான் கிடைத்தாளா? ஹே பரமாத்மா! இது யாருடைய சாபம்? கடைசியில் நீ என்னுள் மூழ்க வேண்டும், அதிலிருந்து நீ இந்த உலக பந்தங்களிலிருந்து விடுபட வேண்டும் என்ற நியதியை யார் ஏற்படுத்தியது?''

''தம்பி! இவையெல்லாவற்றிற்கும் மேலாக எனக்கு இன்னும் ஒரு வேதனை. நான் மனைவியைப் பிரிந்தேன். அது ஊழ்வினை. இராவணன் பெண் மோகம் கொண்டோ, அல்லது தங்கை சூர்ப்பநகைக்கேற்பட்ட அவமானத்தைத் துடைக்கவோ சீதையை அபகரித்துச் சிறையெடுத்தான். ஆனால் அதன் விளைவாக யுத்தம் தவிர்க்க முடியாததானது. யுத்தம் காரணமாக எத்தனை ஆயிரம் பேர் இரு தரப்பிலும் உயிரிழக்க நேரிட்டது? சிறந்த சிவபக்தன் இராவணன் மடிந்தான். அவனுக்கு ஓர் அற்புதமான மைந்தன், தவமிருந்து பெற்றாலும் கிடைக்காத மகன் இந்திரஜித் கொல்லப்பட்டான். எனக்கு நீ எப்படியோ அது போல இராவணனுக்கு அவன் இளவல் கும்பகர்ணன். அண்ணன் செய்வது தவறு என்று எடுத்துரைத்தும்கூட அண்ணனைத்

திருத்த முடியவில்லை. எனவே ஆற்று வெள்ளத்தோடு போவதுதான் சிறந்தது என்று செஞ்சோற்றுக் கடன் தீர்க்க உயிரை விட்டான். எப்பேர்ப்பட்ட உத்தமனின் உயிர் இந்த யுத்தத்திற்குத் தேவைப்பட்டது? கும்பகர்ணன், இந்திரஜித் இருவரின் மரணமே இராவணனைப் பாதி கொன்று விட்டது. மீதியை மட்டும் நான் கொன்றேன்.

''தம்பி! உன்னைவிட உயர்ந்த ஒருவன் இனி தோன்ற முடியாது. தம்பி என்ற உறவுக்கு இலக்கணம் வகுத்தவன் நீ! எனவே மனம் வெறுத்து, வேதனைப்பட்டு உனக்கு இதைச் சொல்கிறேன்.

''யுத்தம் மிகவும் கொடுமையானது! ஒவ்வொரு யுகமும் முடியும் போதும் ஒரு யுத்தம் தவிர்க்க முடியாததாகிறது.

''ஆனால் அதனால் ஏற்படும் நஷ்டம்...?''

''மனிதகுலத்திற்கு ஈடு செய்ய முடியாத நஷ்டம். லட்சுமணா! இனி அடுத்து த்வாபரயுகத்திலும் இதுபோன்ற ஒரு யுத்தம் உறவினர்களிடையே, பங்காளிச் சண்டை காரணமாக நடைபெறும். அந்த யுத்தம் மிகப் பெரியதாகக் கருதப்படும். அதனால் ஏற்படும் இழப்புகள், அதில் உபயோகப்படும் ஆயுதங்கள் கணக்கில் அடங்காமல் இருக்கும்.''

''அதற்குப் பின்...?''

''அதுவே கடைசி யுத்தமாக இருந்துவிட்டால் மனிதகுலம் தழைக்கும். இனி ஒரு யுத்தத்தை பூமி தாங்காது. அதுதான் இந்த பூமியின் கடைசி யுத்தமாக இருக்கும். அந்த யுத்தத்திற்குப் பின்பு உலகில் புல், பூண்டுகள் கூட மிஞ்சுமா என்பது சந்தேகமே!''

''மக்கள் ஏன் ஒருவருக்கொருவர் பகைமை பாராட்டு கிறார்கள்? ஆதிக்க வெறிபிடித்தே அலைகிறார்கள்?

ஒவ்வொரு யுகத்தின் முடிவும் ஒரு யுத்தத்தின் மூலமாகவே இருக்கும். கலியுகத்திலும் யுத்தம் தவிர்க்க முடியாததாகி விடும்.''

சரயுவின் வெள்ளம் மேலே ஏறியது -

சரயு அலறினாள் -

''இராமா! எனக்கு ஒரு வழி சொல்லிவிட்டுப் போ!''

லட்சுமணன் சொன்னான்:

''சரயு - பிரியமானவளே! உனக்கு ஒன்று சொல்வேன். உன்னை எந்தப் பழியும் பாவமும் அணுகாது. ஏனென்றால் நீ புனிதமானவள். நீ உன் கடமையைச் செய்கிறாய். உலகில் உள்ள உயிர்களை உய்விக்கப் பிறந்தவள் நீ! அம்மா! குழந்தைக்குத் தாய்ப்பால் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் நீ! மனிதர்கள் பிறப்பார்கள், இறப்பார்கள், ஆனால் நீ மட்டும் உன் பணியை விடாது தொடர்ந்து செய்து கொண்டிருப்பாய்.

காலங்கள் மாறலாம். பெயர்கள் மாறலாம். ஆனால் நீ இல்லாமல் உலகில் உயிர் வாழ முடியாது. பஞ்ச பூதங்களில் ஓர் அம்சம் நீ!

பகவான் இராமச்சந்திரபிரபு வாழ்வில் சுமக்காத பழிகளா? அத்தனை பழிகளையும், மனித குலத்தை உய்விக்க, மேம்படுத்த அவர் சுமந்தார். அதுபோலத்தான் நீயும். கசப்பையே சுவைத்துச் சுவைத்து இந்த அவதாரத்தில் அவருக்கு இனிப்பானது. உங்களுக்காக அவர் பாரம் சுமந்தார் -

ஹே சரயு -

உன் சீற்றத்தின் காரணம் புரிகிறது. அமைதி கொள். உன் சீற்றத்தினால் எத்தனை அழுக்குகள், விலங்குகள், மனித

உடல்கள் எல்லா உயிரினங்களையும் சுமந்து வருகிறாயே! அதனால் உனக்கு எந்தப் பாதிப்பும் இல்லை. ஏனென்றால் நீ புனிதமானவள். உன் பணி தொடரட்டும்.

அண்ணல் சொன்ன வார்த்தைகளை இந்த உலகுக்குப் பறைசாற்று. இனி ஒரு யுத்தம் வேண்டாம்.

சரயு! இனியவளே! உனக்கு மனவேதனை, துக்கம் ஆகியன வரும்போதெல்லாம் இராம நாமத்தைச் சொல். உருக்கப்பட்ட பொன், தட்டித்தட்டிப் புடம் போடப்படுவது போல் வாழ்வில் அதிகபட்சமான துக்கங்களைச் சுமந்த இராமபிரானின் நாமம் உலகை உய்விக்கும். இராம நாமத்தைச் சொன்னால் உலகில் உள்ள அத்தனை பாவங்களும் விலகி விடும். உங்களுக்காக அத்தனை துக்கங்களையும் அவரே சுமந்து விட்டார். இனிவரும் சமுதாயத்தை, இராமநாமம் உய்விக்கும்.''

சரயுவின் வெள்ளம் இராம - லட்சுமணர்களின் தலைக்கு மேல் போனது - இராம நாமத்தின் ஒலி அந்தப் பிரதேசம் முழுவதும் எதிரொலித்தது.

சரயுவின் சீற்றம் தணிந்தது. அமைதி அடைந்தாள். இராமநாமத்தால் அவளுடைய துக்கம் நதியோடு கரைந்து போனது. அத்தனை துக்கத்தையும் விழுங்கிக் கொண்டு அமைதியாக சரயு ஓடிக் கொண்டிருந்தாள்.




●

# கவரிமான் கணவரே!

ஜோதிர்லதா கிரிஜா

இப்படி ஓர் இக்கட்டு வரும் என்று சாந்தி கனவு கூடக் கண்டதில்லை. திரைப்படங்களிலும் ஏட்டுக்கதைகளிலும் வரும் போக்கிரிகள் மெய்யான வாழ்க்கையிலும் உள்ளனர் என்பது அவளுக்குத் தெரியுந்தானென்றாலும், அப்படி ஒரு பொல்லாதவன் தன் வாழ்க்கையிலேயே குறுக்கிட்டபோது அவளுக்கு நேர்ந்த அச்சத்தை விடவும் திகைப்பு அதிகமாக இருந்தது. அவளால் நம்பவே முடியவில்லை.

ஒரு முறை ஏதோ ஒரு கற்பனைக் கதையில் ஒரு மருத்துவரைப் பொல்லாதவனாக அதன் ஆசிரியர் சித்திரித்தபோது மருத்துவர்களின் உலகம் பொங்கி எழுந்தது அவளுக்கு ஞாபகம் வந்தது. கெட்டவர்களும், பிறரின் சங்கடங்களைக் காசாக்கப் பார்க்கும் நயவஞ்சகர்களும் எந்தத் தொழில் செய்பவர்களிடமும் தான் இருக்கிறார்கள். ஆனால், அந்தத் தொழிலாளியை ஒரு டாக்டராகவோ, ஆசிரியராகவோ ஓர் எழுத்தாளன் காட்டி விட்டால் மட்டும் அவர்களுக்கு மூக்குக்கு மேல் சினம் பொத்துக்கொண்டு வந்து விடுகிறதே. என்னவோ அந்தத் தொழிலில் உள்ள அனைவருமே பத்தரை மாற்றுத் தங்கங்கள் போலவும், அவர்களில் அயோக்கியர்களே இல்லை என்பது போலவுமன்றோ துள்ளிக் குதித்து ஆர்ப்பாட்டம் செய்யத் தொடங்கி விடுகிறார்கள்? ஆனால்

இப்போது அவளது வாழ்க்கையில் குறுக்கிட்டுள்ள இக்கட்டுக்கு இவர்கள் என்ன சமாதானம் சொல்லப் போகிறார்கள்? அதிலும் இப்படி ஒரு சங்கடம் நேர்ந்துள்ளது என்று நாலு பேரிடம் சொல்லிக் கொள்ளும்படியான சங்கடமா அது? அட ஆண்டவனே! நான் எப்படி இதிலிருந்து மீண்டு வரப் போகிறேன்? 'கணவனா, கற்பா' என்று பட்டிமன்றமே வைக்கிற அளவிலான சிக்கலில் அல்லவா மாட்டிக் கொண்டுள்ளேன். சாந்தியின் கண்கள் கலங்கிக் கொண்டே இருந்தன.

புரண்டு படுத்துக் கண்விழித்துப் பார்த்த சிங்காரவேலு கன்னங்களில் உருண்டு விழத் தயாராக அவளது இமை விளிம்புகளில் நின்ற கண்ணீரைக் கண்டதும் வாடிப் போனான்.

''சாந்தி'' - மிக மெதுவாக ஒலித்த அவனது குரல் அவள் எண்ணங்களைக் கலைக்க, அவள் தன் விழிநீரைப் புடைவைத் தலைப்பால் ஒற்றித் துடைத்துக் கொண்டாள்.

அவன் தன் கையை நீட்டி மெல்ல அவளது தொடையைத் தொட்டான்.

''கடவுள் அருளால் எல்லாம் சரியாயிடும், சாந்தி! அதான் பணத்துக்கு ஏற்பாடு பண்ணிட்டேன்னு சொன்னயில்ல? அழுவாதே. நான் பிழைச்சு வந்ததும், என் சக்திக்கு ஏத்த ஏதாச்சும் அலட்டிக்க வேண்டாத வேலை செய்து சம்பாதிச்சுக் கடன் மொத்தத்தையும் அடைச்சுடலாம், சாந்தி. ஏதோ, இந்த மட்டும் பணம் கிடைச்சுதேன்னு சந்தோஷப் படுவியா? அதை விட்டுட்டு இப்படிக் கண்ணீரும் கம்பலையுமா உக்காந்துட்டிருக்கியே?''

சாந்தி பதில் சொல்லாமல் தலையைத் தாழ்த்திக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளால் அவன் கண்களை நேருக்கு

நேராகப் பார்க்க இயலவில்லை. இனி வெந்து மடிகிற வரையில் அவன் விழிகளைக் குற்ற உணர்வின்றித் தன்னால் சந்திக்கவே முடியாது என்று தோன்றியதில் அவள் விழிகளில் மறுபடியும் ஈரம் படர்ந்தது.

''நீ அழுதா என்னால தாங்க முடியாதுன்னு தெரியுமில்ல? அதான் பணம் கிடைச்சிடுச்சே? முந்தாநாள் வரையில் நாம இரண்டு பேரும் எவ்வளவு டென்ஷன்ல இருந்தோம்? அந்த டென்ஷன் இப்ப இல்லையே! அதை நினைச்சுப் பாரு. பணத்தை எப்படியாச்சும் திருப்பிக் கட்டிடலாம். ஆபரேஷன் முடிஞ்சதும் முதல் வேலையா நானே உங்க மேனேஜரை வந்து பார்த்துப் பேசறேன்... எப்படியாச்சும் கடனைத் திருப்பிக் கொடுத்துடுவோம்னு நானும் அவரைச் சந்திச்சுச் சொன்னா அவருக்கும் நம்ம மேல ஒரு நம்பிக்கை விழுமில்லையா?''

சாந்தியின் முகம் கணத்துள் வெளிறிவிட்டது. ''வேணாங்க, நீங்க ஒண்ணும் அவரையெல்லாம் வந்து பார்த்துப் பேசவேணாம். அதான் என்னோட சம்பளத்துல கழிச்சுக்கறேன்னிருக்காரே! மொத்தமாகக் கொடுக்கற துன்னா நீங்க வந்து அவுரு கிட்ட கெஞ்சணும், அதெல்லாம் வேணாம்'' - அவளது படபடப்பும் சொற்கள் ஒன்றன் மீதொன்று வந்து விழுந்த வேகமும் சிங்காரவேலுவின் புருவங்களை உயர்த்தின. 'எதற்காக இவள் இவ்வளவு படபடக்கிறாள்?''

''எதுக்கு சாந்தி, படபடங்கறே? சம்பளத்துல பெருந் தொகையாப் பிடிச்சுட்டா என்ன செய்யிறதுன்னு கவலைப் படறியா? அதை அப்ப பார்த்துக்கலாம்...''

சாந்தி இதற்கும் பதில் சொல்லாதிருந்தாள்.

''முக்கியமா அதுக்குத்தான் நான் வந்து உங்க மேனேஜரைப் பார்த்துப் பேசறேங்கறேன். அவருக்கு தாங்ஸ் சொன்ன மாதிரியும் இருக்கும். அப்படியே பெருந்தொகையாப் பிடிக்காதீங்கன்னும் கேட்டுப்பேன்.''

''அதெல்லாம் வேணாங்க. அப்புறம் புருஷனைப் பிச்சைக்காரன் மாதிரி அனுப்பி வெச்சிருக்காள்னு எங்க கம்பெனி முழுக்கப் பேசுவாங்க. தயவுசெஞ்சு அதுமட்டும் வேணாம்.''

''உன்னிஷ்டம்.''

'கடவுளே! இவர் எங்க கம்பெனிக்கு வந்து தொலைக்காம இருக்கணுமே! மேனேஜர் கிட்ட ஒரு வார்த்தை எதுக்கும் முன் கூட்டி சொல்லி வெச்சுடலாமா? கம்பெனியிலதான் இருபத்தஞ்சாயிரம் போலக் கடன் வாங்கியிருக்கிறதா புருஷன் கிட்ட சொல்லியிருக்கேன். அவரு வந்து கேட்டாருன்னா ஆமாம்னு சொல்லிடுங்கன்னு முதல் வேலையாச் சொல்லி வெச்சுடணும்... ஆனா அந்த மேனேஜர் என்னைப்பத்தி என்ன நினைப்பாரு? நியாயமான வழியில புரட்டின பணமாயிருந்தா புருஷன்காரன்கிட்ட எதுக்குப் பொய் சொல்லணும்கிற சந்தேகம் அவருக்கு வருமே? வந்தா என்னவெல்லாம் கற்பனை பண்ணுவாரோ?...'

''என்ன சாந்தி இது? முந்தா நாள்லேருந்து நேத்து சாயந்தரம் வரைக்கும் சிரிச்சுகிட்டு எனக்குத் தைரியம் சொல்லிட்டிருந்த நீ இப்படி திடீர்னு முகம் கறுத்துப் போய் உட்கார்ந்திருக்கியே? திடீர்னு உன் முகம் இப்படிக் கறுத்துக்கிடக்குதே?''

சிங்காரவேலு தன்னை மிகவும் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தது விழிகளை உயர்த்திப் பார்க்காமலே புரிய,

சாந்தியின் இதயம் மேலும் படபடப்புக்கொண்டு தாளந்தப்பித் துடிக்கலாயிற்று. தொண்டைக் குமிழ் ஏறி இறங்குவதைத் தடுத்துச் சமாளிக்க முடியவில்லை. சில நொடிகளுக்குப் பிறகு ஒரு வழியாக வாய் திறந்தாள்.

''என்னங்க. இப்படிக் கேக்கறீங்க? எவ்வளவு பெரிய ஆபரேஷன் இது? டாக்டர் என்னதான் தைரியம் சொன்னாலும் அது முடிஞ்சு நீங்க வீடு திரும்புற வரையில் எனக்கு ஏதுங்க நிம்மதி?''

'அதற்குப் பிறகும் நிம்மதிக்குறைவு இருக்காது என்பது தான் என்ன நிச்சயம்? ராஜேஷ்குமாரின் கதையில் வருவது மாதிரி அந்தப் பொறுக்கி டாக்டர் என்னை நிரந்தரமாகத் தொந்தரவு செய்ய மாட்டான் என்று எப்படி நம்புவது?... 'உன் கணவனோடு நீ வீட்டுக்குப் போனபிறகு, நீ யாரோ, நான் யாரோ?' என்று அவன் வாக்குக் கொடுத்திருக்கிறான் என்றாலும், கொடுத்த வாக்குப்படி நடந்து கொள்ளுவான் என்பதும் தான் என்ன நிச்சயம்? அட கடவுளே!''

அவளது முகம் மேலும் இருண்டதைக் கவனித்த சிங்கார வேலு, இன்னும் அதிகமான ஆதரவுடன் அவளது தொடையில் தனது கையை அழுத்த, சாந்தியின் துயரம் தீவிரமுற்றது. அவள் சட்டென்று நொறுங்கிப் போய் அழத் தொடங்கினாள். 'தன்னுடனான உறவைத் தொடர்வதற்காக அந்தப் பொறுக்கி டாக்டர் இவருடைய நர்ஸிங்ஹோம் தங்குதலை நீட்டிப் பானோ? கடவுளே! இவருக்குத் தெரிய வந்தால்...?'

அப்போது அவ்வறையின் கதவு தள்ளப்பட்டு உள்ளே டாக்டர் பலராமன் சிரித்த முகத்துடன் தாதிப்பெண் பின் தொடர வந்து, ''என்ன, மிஸ்டர் சிங்காரவேலு? இராத்திரி நல்லாத் தூங்கினீங்களா?'' என்று விசாரித்தவாறு சாந்தியை

ஓர விழிகளால் ஏறிட்டார். சாந்தி மரியாதைக்காக எழுந்து நின்றாள்.

''சிட் டவுன், மை கேர்ள்.'' என்ற பலராமன் அன்பு தெரிய அவள் தோளில் தட்டினார். அந்தத் தட்டல் அளவுக்கு மீறிய அழுத்தத்துடன் இருந்தது. முந்திய இரவை ஞாபகப் படுத்தும் அசிங்கம் அந்த அழுத்தமான தொடுகையில் வெளிப்பட்டது அவளுக்கு மட்டுமே புரிய சாந்தியின் முகம் சிறுத்தது. நாற்பத்தைந்து வயதை விழுங்கிய சாக்கில், ஒரு தந்தை மகளைத் தொடுவதாக நாலு பேரை நினைக்க வைக்கும் தொடுகையாக அது தோன்றினாலும் - அவள் கணவனும் அதைத் தவறாக எடுத்துக்கொள்ள மாட்டானென்றாலும் - அவருக்கும் அவளுக்கும் மட்டுமே புரிந்த அதன் விரசம் அவளுள் தாங்கமுடியாத எரிச்சலை ஏற்படுத்தியது.

நாடி, மார்புத் துடிப்பு இரண்டையும் பார்த்துப் பின் சில கேள்விகள் கேட்டதன் பிறகு, ''நாளைக்கு வச்சுக்கலாம்.'' என்றவாறு பலராமன் திரும்பி சாந்தியை ஒரு பார்வை பார்த்தார். சாந்தியின் உதடுகள் துடித்தன. 'கடவுளே என்னை ஏன் படைத்தாய்? என்ன மோசமான இக்கட்டு இது? நான் செய்தது சரிதானா?... எல்லாம் நடந்து முடிந்த பிறகு இப்படி ஒரு கேள்வியை நான் கேட்டுக் கொள்ளுவது எப்பேர்ப்பட்ட முட்டாள்தனம்... நடந்தது தெரிந்தால்... இவர் என்ன சொல்லுவார்?... அவருக்குத் தெரியத்தான் வேண்டுமா?...'

''என்னம்மா ஒரு மாதிரி இடிஞ்சு போய் நிக்கறே? இதை விடப் பெரிய பெரிய ஆபரேஷனெல்லாம் செஞ்சிருக்கேன். இது சுண்டைக்காய் ஆபரேஷன். ஒண்ணும் பயப்படாதே; எல்லாம் சரியாயிடும்... குழந்தையை உங்கம்மாகிட்ட விட்டிருக்கேன்னு சொன்னேயில்லையா? அது படுத்தாம இருக்குதாமா?''

''...ம்...'' என்று சாந்தியிடமிருந்து ஒரு முனகலே பதிலாக வந்தது.

அந்த முகமலர்ச்சியற்ற முனகலில் ஒரு மரியாதைக் குறைவும் அலட்சியமும் தென்பட்டதாகத் தோன்றியதில் சிங்காரவேலு அவளை வியப்புடன் பார்த்தான். 'என்ன ஆயிற்று இவளுக்கு? மனத்துள் ஆயிரம் கவலைகள் இருந்தாலும், இப்படியா வேண்டா வெறுப்பாகப் பேசுகிற தொனியில் பதில் சொல்லுவது! டாக்டர் எவ்வளவு கவலைப்பட்டு விசாரிக்கிறார்!'

'... குழந்தையை உத்தேசித்துத்தானே உன்னுடைய அக்கிரமச் செயலுக்கு உடன்பட்டேன்? அதிலும் மூன்று வயதுப் பெண் குழந்தை! பையனாக இருந்தால், இப்படி உன் அயோக்கியத்தனத்துக்கு உடன்பட்டதற்குத் தற்கொலை செய்து கொள்ளுவேன் - இவரை வீட்டுக்குக் கொண்டு போன பிறகு... பெண் குழந்தையாக இருப்பதால் என்னால் அதைச் செய்ய முடியாது... இது மாதிரியான சங்கட நிலைகளைத் தானே உன்னைப் போன்ற நரிகள் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள்....'

'கவலைப்படாதே, மை கேர்ள்...' என்று மறுபடியும் டாக்டர் பலராமன் செய்த அந்தச் சொற்பிரயோகம் அவளுள் மேலும் ஆத்திரத்தைக் கிளர்த்தியது. 'மை கேர்ள்'... தகப்பனுக்கு ஆகிற வயதைப் பயன்படுத்திக் கொண்டு அந்தப் போர்வையில் இப்படியெல்லாம் அக்கிரமம் புரியும் அநியாயக்காரர்கள்... 'மை கேர்ள்...' அதுதான் நேற்று ஆக்கிக்கொண்டு விட்டாயேடா, பாவி?

சில மருந்துகளை எழுதிக் கொடுத்த பிறகு பலராமன் யாரும் அறியாமல் அவளைப் பார்த்து ஒரு நமட்டுப் புன்னகை புரிந்துவிட்டு வெளியேறினார். அந்தப்

புன்னகைக்குப் பின்னால் புலப்பட்ட அசிங்கங்கள் அவள் நெஞ்சின்மீது நெருப்பை அள்ளிக் கொட்டின.

கதவு மூடிக்கொண்ட பிறகு, ''என்ன, சாந்தி, இது? நம்ம மனசுல ஆயிரம் கவலைகள் இருக்கும். அதுக்காக டாக்டர் கிட்ட ஏனோதானோன்னு இருக்கணுமா? எவ்வளவு அக்கறையா விசாரிச்சாரு! என்னமோ, வேண்டா வெறுப்பா உம்னு முனகினியே? அவரு என்ன நினைச்சுப்பாரு?'' என்ற சிங்காரவேலு, அவள் பதில் கூறாதிருக்கவே, ''பணத்தை யெல்லாம் பத்திரமா வெச்சிருக்கியா?'' என்றான்.

''நகைகளை அடகு வெச்சதுல இருபத்தஞ்சு, கம் பெனியில் கடன் வாங்கினதுல இருபத்தஞ்சு... மொத்தம் ஐம்பதாயிரம் ரூபாயிலே முப்பதாயிரத்தை நர்சிங் ஹோம்ல கட்டியாச்சு. மீதி இருபதாயிரம் ஆபரேஷன் முடிஞ்சதும் கட்டச் சொல்லியிருக்காங்க.''

''எவ்வளவு நல்ல டாக்டர்! லட்சம் வாங்கற ஆபரேஷ னுக்கு அம்பதாயிரம் குறைச்சு வாங்கிக்கிறாருன்னா எப்பேர்ப் பட்ட இரக்க சுபாவம் உள்ளவரு! கடவுள் அவரை நல்லா வைக்கட்டும்.''

'மூஞ்சி! மீதிப் பணத்துக்குப் பதிலா நான் கொடுத்த விலை தெரியுமா உங்களுக்கு? தெரிஞ்சா என்ன பாடு படுவீங்க!' சாந்தி மறுபடியும் பொங்கிய கண்ணீரை உள் வாங்க முயன்றபடி முகத்தைத் திருப்பிக்கொண்டு கைப்பையில் எதையோ தேடினாள்...

அறுவைச் சிகிச்சை முடிந்து சிங்காரவேலு வீடு திரும்பியாகிவிட்டது. இரண்டு நாள்கள் போல் அவனுக்குப் பணிவிடை செய்தபின் அரை மனத்துடன் சாந்தி அலுவலகத் துக்குப் புறப்பட்டுப் போனாள். அவர்கள் இருந்தது ஒண்டுக்குடித்தனமாதலால் பக்கத்துக் குடித்தனக்காரர்களிடம்

கொஞ்சம் அவ்வப்போது கணவனை எட்டிப் பார்த்துக் கொள்ளச் சொல்லியிருந்தாள். கடந்த ஓராண்டுக்காலமாக நிறைய விடுப்பு எடுத்துவிட்டதால் இனிமேலும் விடுப்பில் இருந்தால் சம்பள இழப்பு என்கிற நிலை. இதனால் அவள் போயே ஆக வேண்டிய கட்டாயம். குழந்தையை அவள் அம்மா - அமிஞ்சிக் கரையில் இருந்தவர் - பார்த்துக் கொண்டார்...

அன்று பிற்பகலே டாக்டர் பலராமனிடமிருந்து அவளுக்குத் தொலைபேசி அழைப்பு வந்தது. சாப்பாட்டு வேளையாகப் பார்த்துப் பேசியது திட்டமிட்ட செயல் என்று தோன்றியது. 'பக்கத்துல யாரும் இல்லையே?' என்பதுதான் அவர் கேட்ட முதல் கேள்வி. இருக்காங்க என்று பொய் சொல்லத்தான் முதலில் எண்ணினாள். ஆனால் அழைப்புத் தொடரும். எனவே அதற்கு ஒரு முடிவு கட்டும் நினைப்புடன், ''யாருமில்லை, சொல்லுங்க,'' என்றாள்.

அது இணைப்பகத்தின் மூலமாக வராத நேரடித் தொலைபேசி அழைப்பு. எனவே துணிச்சலுடன், ''உன் நினைப்பாவே இருக்கு, சாந்தி! மறுபடியும் எப்ப...?'' என்றார்.

நோய்வாய்ப்பட்ட கணவனைக் காப்பாற்றுவதற்காகத் தன்னை அந்த டாக்டருக்கு விலையாகக் கொடுத்திருந்த சாந்திக்கு இப்போதைய அவரது பேச்ச அருவருப்பைத் தந்தது. உடம்பு முழுவதும் கரப்பான் பூச்சிகள் மேய்வது போன்ற வெறுப்புச் சிலிர்ப்பில் அவளது உடல் அதிர்ந்தது. என்னென்னவோ சொல்லித் திட்ட நினைத்தாலும், வாயிலிருந்து ஒரு சொல் கூட உதிரவில்லை. அப்படியே உட்கார்ந்து போனாள்.

''என்ன, பேசாம இருக்கே? மவுனம் சம்மதம்னு வச்சுக்கலாமா?''

சாந்தி சுதாரித்தாள். ''இதோ பாருங்க. என்னோட வீட்டுக் காரருக்குத் தெரிய வந்தா உங்க உசிரு உங்களுடைய தில்லை. எங்களுக்குக் கல்யாணம் ஆன புதுசுல எவனோ ஒரு தெருப்பொறுக்கி எம்மேல இடிச்சதுக்காகக் கையிலிருந்த பேனாக்கத்தியால அவனைக் குத்திட்டு ஒரு வருஷம் ஜெயில்ல இருந்துட்டு வந்தவரு. அவரோட எதுவும் வச்சுக்கிறது உங்களுக்கு நல்லதில்லை.'' சொன்னது பொய்யானதால் அவளுள் ஒரு நடுக்கம் பரவியது.

''நான் வச்சுக்க நினைக்கிறதெல்லாம் உன்னோட தானே?''

''சீ பொறுக்கி, வைடா.''

நெற்றியில் துளிர்த்திருந்த வியர்வைத் துளிகளைக் கையால் தேய்த்தவாறு அவள் தொலைபேசித் தொடர்பைத் துண்டித்தாள். அவள் கால்கள் தரையில் பாவாது அதிர்ந்து கொண்டிருந்தன.

தொலைபேசி மறுபடியும் கூப்பிட்டது. எரிச்சலுடன் எடுத்து ''யெஸ்'' என்றாள்.

''என்னம்மா அவ்வளவு கோபம் உனக்கு? நீ சொல்ற நாள், இடத்துல...''

''நோ. எம் புருஷன் உசிருக்குப் பணயமா நீங்க கேட்டதை நான் குடுத்தாச்சு. இனி அது நடக்காது. நானே அவர்கிட்ட சொல்லிடப் போறேன். இவ்வளவு பெரிய சுமையை மனசுல வச்சுக்கிட்டு என்னால இனிமே நிம்மதியா வாழ முடியாது. அதனால் எனக்கு என்ன ஆனாலும் சரி. ஆனா என் புருஷன் ஒரு கிரிமினல்ங்கறது மட்டும் ஞாபகம் இருக்கட்டும். உங்க உசிரோட விளையாடாதீங்க...''

மறு கணம் மறுமுனை மவுனமாயிற்று. இரண்டு கணங்கள் கழிந்த பின் ஒலிவாங்கி கிடத்தப்பட்ட ஓசை கேட்க,

'நம்பிட்டான்னு தோணுது' என்று எண்ணியபடி சாந்தி இருக்கையில் சாய்த்தாள்...

எழுதிக் கொடுக்கப்பட்ட மாத்திரையை நாள்தோறும் மூன்று வேளைகள் தொடர்ந்து சாப்பிட்டு வருமாறும், நெஞ்சுவலி வந்தால் மட்டும் திரும்பி வந்தால் போதுமானது என்றும் சொல்லப்பட்டிருந்ததால், சாந்தி கொஞ்சம் நிம்மதியாக இருந்தாள். அப்படி நேர்ந்தாலும் சிங்கார வேலுவை வேறு டாக்டரிடம் கூட்டிப் போக வேண்டியதுதான் என்றும் முடிவு செய்தாள். ஏற்கெனவே மருத்துவம் செய்த டாக்டர்தான் பார்க்க வேண்டும் என்று கணவன் பிடிவாதம் செய்தால் என்ன காரணத்தைச் சொல்லுவது என்று திகைத்தாள்.

''என்ன விஷயம், சாந்தி? இப்பல்லாம் நீ பழைய மலர்ச்சியோடவே இல்லை. சாகக்கிடந்த புருஷன் பொழைச்சு வந்ததுல எந்தப் பொண்ணுக்கும் இயற்கையா வர வேண்டிய சந்தோஷம் உங்கிட்ட இல்லாத மாதிரி தெரியுது. ஏதோ பிரச்னையில மாட்டிக்கிட்டு நீ தவிக்கிற மாதிரித் தெரியுது... டாக்டர் வெச்ச கெடு இன்னும் ஒரு வாரத்துல முடியப் போகுது. அதுக்குப் பிறகு...'' - தொடங்கியதை முடிக்காமல் அவன் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

ஒரு திடீர் உந்துதலில், ''உங்ககிட்ட ஒரு விஷயம் சொல்லணுங்க. நீங்க எப்படி எடுத்துப்பீங்களோ? ஆனாலும் எனக்கு ஒரே உறுத்தலா இருக்கு. என்னைக்காவது சொல்லிடு வேன். அதை இன்னைக்கே சொல்லி விடலாம்னு''... என்றாள்.

''என்ன, சாந்தி?''

''இத்தனை நாளும் நான் உங்ககிட்ட மறைச்சதே தவறுதான்... ஆனா, உங்க உடம்பு தேறணும்னு தோணிச்சு. அதான் ஒத்திப் போட்டுக்கிட்டே வந்தேன்.

கண்கள் நிறையக் கண்ணீருடன் அவள் அவனை நோக்கி னாள். 'அழும்போது கூட இவள் எவ்வளவு அழகு!' என்கிற பிரமிப்புடன் அவன் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''பீடிகையைக் கேட்டா விஷயம் ஏதோ ரொம்பப் பெரிசாயிருக்கும் போல இருக்கே. ஆனா எதுக்கு இப்ப அழறே? என்னதான் நடந்திச்சு? நர்சிங் ஹோம்ல என்னைச் சேர்த்ததுலேருந்தே நீ சரியாயில்லை...''

''நீங்க நினைக்கிறது சரிதாங்க...'' என்ற சாந்தி திக்கித் திணறி நடந்ததைச் சொன்னாள். சொல்லி முடித்தபின், ''எனக்கு என்ன செய்யிறதுன்னே தெரியலைங்க. கம்பெனி யில் கடன் தரமாட்டேன்னுட்டாங்க. நஷ்டத்துல ஓடிக் கிட்டிருக்குன்னு கையை விரிச்சிட்டாங்க. கொஞ்சம் ரேட்டைக் குறைச்சுக்கிட்டு ஒரு தர்ம காரியமா நினைச்சு உதவுங்க டாக்டர்னு கேட்டதுக்குத்தான். அந்தப் பாவி நீங்க நர்சிங்ஹோமை விட்டுப் போகிற வரையில்... அவனோட இஷ்டத்துக்கு இணங்கணும்னுட்டான்... உங்க உசிரு எனக்குப் பெரிசாத் தெரிஞ்சிச்சு... அதனால...''

''அடிப்பாவி.''

''பாவிதாங்க. நான் அதுக்கு இணங்கலைன்னா நீங்க செத்துடுவீங்க. எல்லாத்தையும் விட எனக்கு நீங்க பெரிசாத் தெரிஞ்சீங்க.''

''அதுக்காக?''

''உங்க மேல உள்ள பிரியத்தால அதுக்கு மனசே இல்லாம ஒத்துக்கிட்டேங்க. என்னை மன்னிச்சிடுங்க. எனக்கு வேற எந்த வழியும் தெரியல்லை.''

கண்ணீரூடே அவள் பார்த்த சிங்காரவேலு முற்றும் புதிய ஆளாய்த் தெரிந்தான். அவன் முகம் சற்றுக் கறுத்துச் சுருங்கி இருந்தது. கண்களில் வெறுப்பு தெரிந்தது.

''ரொம்ப சரி... நீ பண்ணினது சரின்னே வச்சுக்குவோம். ஆனா, என்னைக் காப்பாத்தினதுக்குப் பிறகு, நீ ஒரு மானமுள்ள பொம்பளையாயிருந்தா, உசிரை விட்டிருக்க வேணாமாடி? எவ்வளவு மோசமான - மானங்கெட்ட - பொம்பளையாயிருந்தா இப்படி எதுவுமே நடக்காதது மாதிரி வளைய வந்துக்கிட்டிருப்பே? ஏண்டி?...''

சாந்தியை அவன் 'டீ' போட்டுப் பேசியதே இல்லை. அவளுக்கு அதிர்ச்சியாகவும் வியப்பாகவும் இருந்தது. அவளைக் காதலித்துக் கைப்பிடித்தவன். 'கடைசியில் இந்த மனிதர் காதலித்தது இந்த வெற்று உடம்பைத் தானா?'

''என்னடி அப்படிக் கண்கொட்டாம விழிக்கிறே? செய்யக்கூடாததைச் செஞ்ச, சரி, போகுது. அதுக்கு அப்புற மாவது நீ உசிரை விட்டிருக்கணுமில்ல? ஒரு பொண்ணுக்கு மானந்தாண்டி பெரிசாத் தோணும். மத்ததெல்லாம் அப்புறந் தான். இந்த மாதிரி மானத்தை வித்துட்டு உசிரை வெச்சுக்கிட்டிருக்கிறதைவிட விஷத்தைக் குடிச்சுட்டுச் சாகலாம்டி.''

''எனக்குப் பிறகு உங்களைக் கவனிக்க யாரும் இல்லைங்கிறது ஒரு காரணம். நம்ம மூணு வயசுக் குழந்தை பத்தின கவலை. இந்த இரண்டும் இல்லாம இருந்திருந்தா உங்களைக் காப்பாத்தினதும் நான் உசிரை விட்டிருப்பேன்.''

''அதெல்லாம் வீண் பேச்சு. நீ ஒரு மானங்கெட்டவதான். இப்படிச் செய்தது எந்தக் காரணத்துக்காக இருந்தாலும் அது மானங்கெட்ட காரியந்தான்.''

சாந்தி விருட்டென்று எழுந்து உள்ளே போனாள். இரண்டே நிமிடங்களில் திரும்பிய அவள் கையில் மூட்டைப் பூச்சி மருந்துக் குப்பி இருந்தது. அதை அவள் அவன் கட்டிலுக்கு அருகே இருந்த குட்டை மேசைமீது வைத்தாள்.

அவன் அதிர்ந்து போய் அவளையும் அந்தக் குப்பியையும் மாறி மாறிப் பார்த்தான்.

''என்ன பார்க்கிறீங்க? கொண்டு வந்தது உங்களுக்குத் தான். குடிங்க. பொண்டாட்டி தன்னோட மானத்தை வித்துப் புருஷனைக் காப்பாத்தினது மானங்கெட்ட செயல்ங்கிறதும் அதுக்காக அவ உசிரை விட்டுடணும்கிறதும் சரின்னா, பொண்டாட்டி தன்னோட மானத்தை வித்துக் கொண்டு வந்த பணத்துல உயிர் பொழைச்சு வாழ்ந்துக்கிட்டிருக்கிறது அதை விடவும் பெரிய மானங்கெட்ட செயல் இல்லையா?''



# புதுயுகம்

அனைத்து இந்தியத்
தமிழ் எழுத்தாளர்கள் சங்க
உறுப்பினர்களின் சிறுகதைகள்
தொகுதி – 1